

ஸ்ரீ செல்வச்சந்நிதி

# வேலழகன் பாமலர்

## சந்நிதியான்

## கூட்டுப்பிரார்த்தனை மலர்

**ஸ்ரீசெல்வச் சந்நிதி வேலழகன் பாமலர்**
**சந்நிதியான் கூட்டுப்பிரார்த்தனை மலர்**
**சத்ரு சம்ஹார சந்நிதி கவசம்**

**உ**

**ஸ்ரீசெல்வச் சந்நிதி வேலழகன் துணை**

**சமர்ப்பணம்**

இறைவனைத் தொழுதெழ எண்ணிறைந்த வழிகள்
பக்தி யோகம் - மந்திரப் பூசைகள் , மௌனப் பூசைகள் ,
அபிஷேகங்கள் , அர்ச்சனைகள் , ஆராதனைகள் ,
கடும் விரதங்கள் , நேர்த்திக் கடன்கள் ,
ஆகம விதிகள் , அதற்கு அப்பாற்பட்டவைகள் ,
இப்படி எத்தனையோ விதங்கள் - அத்தனையும்
சினமடக்கி , மனமடக்கி , சிந்தையில் தெளிவூட்டி
சிதானந்த நிலைக்கு இட்டுச் செல்ல . . .
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் ! . . . எந்த வழி வந்தாலும்
தந்த சுகம் , தரும் சுகம் , இனி வரும் சுகம்
வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டவை !
சிதறு தேங்காயில் ஆணவம் சிதறலாம்
கற்பூர ஒளியில் சிந்தை கரையலாம்
தரும் திருநீற்றால் மனமாயை தெளியலாம்
திருவமுதும் , வேற்கரணித் தீர்த்தமும் , பூவரசும்
நோயையும் , கர்ம வினையையுமே மாற்றலாம் .
எண்ணும் சுகங்கள் வரும் . ஏகாந்த வாழ்வு வரும் .
மாயையின் பிடியிலே சுயநலத்தின் இறுக்கத்திலே
திரிந்தாலும் தொண்டைமானாற்றம் கரை அமைந்த
சந்நிதி கோவில் மணலில் கால் பட்டதுமே
வாழ்வு வளர்கின்றது ! தாழ்வு அகல்கின்றது .
மந்திரப் பூசையை விரும்பும் வேலழகன்
சந்நிதியில் மௌனப் பூசையை ஏற்கின்றான் !
ஏசியும் பேசியும் துதிப்பவர்க்கு ஓர் தனி இடம் !
பக்தி நெறியின் பிரதிபலிப்பு இங்கே ஓர் விதம் .
இவற்றுள் எனக்கு இட்ட பணி பாடிப் பணிவதே !
அதற்கு சிந்தையிலே பா இதழ்களைத் தர
கவியாக்கிப் பாட ராகமும் தர
பாடிக்கொண்டே இருக்கின்றேன் - என் பாட்டில்
அனைத்தும் வேலழகன் பொற்பாதக் கமலங்களில்
சமர்ப்பணம் !

வேலன் அடிமை
சிவ . ஆறுமுகம்

## ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலழகன் பாமலரும் சந்நிதியான் கூட்டுப்பிரார்த்தனை மலரும்

பூவரச மரத்தடியில் என்னை இருத்த முயல்கிறேன்! முயல் வேகத்தில் முயற்சிக்கின்றேன்- முயற்சி திருவினையாக்கும்! மனம் ஆமை வேகத்தில் அடங்குகிறது . . . . ஊமையாகிறதோ! சும்மா இருக்க முயல்கிறேன் . . . முயற்சிக்கிறேன்! புண்ணியனார் ஜீவ சமாதியில் அமர்ந்ததால் அமிர்தங்கள் பொழிகின்றன!அவை மொட்டாய், மலராய், காயாய், கனியாய், இலையாய், தளிராய் இன்னும் எத்தனை ரூபங்கள் / அரூபங்கள் . . .பொழிகின்றன! அத்தனையும் பிரார்த்தனைக்கு உகந்ததென்று கூட்டிப் பெருக்குகின்றேன் . கூட இருந்து பாடுதற்கோ கூட்டி வைத்துப் பாடுதற்கோ! பாமலர் பூக்க என்றால் நாமகள் நாவிடை நர்த்தனம் நல்லிசையோடு! கூட்ட இயலாதவற்றை பொறுக்குகிறேன் பொறுமையாய்! எச்சத்தை சொச்சத்தை கண்ணிலே ஒத்தியும் எடுக்கின்றேன்! எடுத்தவை, கொடுத்தவை, வந்தவை, தந்தவை யால் இந்து சமயத்தின் ஓராறு கிளைகளின் பெருமையை எல்லாம் சந்நிதியான் மூலம் வெளியிட்டால் அதுவே கூட்டுப்பிரார்த்தனையாகும்!

ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலழகன் பாமலர் சந்நிதியான் கூட்டுப் பிரார்த்தனை மலராகும் விந்தையை எடுத்துரைக்க வார்த்தைகளைத் தேடுகின்றேன்! இந்து சமயத்தின் ஓராறு கிளைகளின் பாடல்களையும், ஈராறு கரங்களால் ஏற்று, மூவாறு கண்களால் கருணையைப் பொழிய,அவையெல்லாம் அமிர்தங்களாக மாறும் விந்தையை எடுத்துரைக்க, வார்த்தைகளை அவன் தானே தரவேண்டும் - அருணகிரிக்கும் கச்சியப்ப சிவாச்சாரியாருக்கும் தந்தது போல!

" வேதம் நான்கிலும் மெய்ப்பொருள் ஆவது நாதன் நாமம் நமச்சிவாய . . ." என்ற வேதாந்த தேவாரப் பொருளாரத்தையும், சச்சிதானந்தமாய் வியாபித்த வித்தே சத்தாகிய சிவமும், சித்தாகிய சக்தியும், ஆனந்தமாகிய முருகனும் ஆகிய சோமாஸ்கந்த மூர்த்தமும் தான் என்ற சிவஞானச் செம்மல்களின் சித்தாந்த சிந்தனைச் சிதறல்களையும், உள் நோக்கினால் கடந்து நிற்பது

ஒன்றே - சிதம்பர ரகஸ்யம்! சித் அம்பலத் திருவிளையாடல்- பொன்னம்பலப் புதுமைத்துவம்! ஒன்று பலவாகிறது -என்றோ முடிந்தது! இறைமை மனம் என்பதை தன்னுடன் இணைத்தவுடன் மனிதன் ஆகிறது. பின் மனத்தால் எண்ணத் தொடங்கியதும் புலன்களையெல்லாம் அடிமையாக்கி, தானும் உணர்ச்சிகளுக்கு அடிமையாகி, எது சரி எது பிழை என்பதைக்கூட பிரித்துப் பார்க்காமல் மனச்சாட்சியை மறைத்து பிரபஞ்சத்தில் இயங்கத் தொடங்குகிறது! மனத்தின் மாயாஜாலம்தான் எண்ணங்கள்! அவை மலை மலையாய் வியாபித்து எண்ணுபவனையே என்றோ ஓர் நாள் எரித்துவிடும் - சரித்துவிடும்! இந்த எண்ணங்களைக் குறைப்பதற்கு எத்தனையோ வழிகளை வேதாந்திகளும் சித்தாந்திகளும் வகுத்தாலும் தொகுத்தாலும், அவற்றுள் பாலாகும் மனத்தில் பக்தி என்ற உறையிட்டு, உணர்வுகளால் சூடேறி பின் உண்மைகளால் குளிரான உள்ளம் தயிரானதும், கர்ம பக்தி ஞான யோகம் என்ற மத்தால் கடைந்தால் வெண்ணெய் தோன்றும்! வெண்ணையை நெய்யாக்கி வேலனுக்கு அபிஷேகம் செய்து பூவரச மரத்தடியில் தோன்றும் அமிர்தங்களால் வேலனை அடியரோடு கூட்டாகச் சேர்ந்து அர்ச்சித்தால் அது வேலழகன் பிரார்த்தனையாகும்!

அப்போ ஸ்ரீ செல்வச் சந்நிதியில் வேலவன் கூடவே நிற்பான்! வேண்டுவன எல்லாம் தருவான்! தாண்ட வழி தந்து வேண்டாமை நிலையும் தருவான்!

மனிதனிடம் உள்ள அகந்தையும் மமகாரமும் அவனை ஆண்டவன் நாமத்தை உச்சரிக்க விடுவதில்லை. ஆனால் அவன் ஆறறிவில் தோன்றும் மனச்சாட்சி என்ற மெய்யுணர்வு அவனுக்கு ஆண்டவன் பெருமையையும், நாமத்தின் மகிமையையும் குத்திக் காட்டாமல் இருப்பதில்லை! ஆகவே இந்த இரண்டு நிலைகளுக்கும் இடையே சிக்கித் தவிக்கும் மனிதனுக்கு கிடைத்த நல்ல மார்க்கம் தான் கூட்டுப்பிரார்த்தனை! கூட்டாகப் பாடும்போது தனி மனிதனுடைய குரல் வளம் புரியாது - கூச்சங்கள் மறைந்துவிடும்! நாவின்மேல் நாமாவளியை ஏற்றி வாய் விட்டுச் சொல்லிவிட்டால் அகந்தை அகன்றுவிடும்! பாடல்களைப்

பாடிவிட்டால் மமகாரம் மடிந்துவிடும்!
நாவின்மேல் ஏற்றிச் சொல்லிப் பாடுவது கர்ம யோகம்! அதை அன்பாலே உருகி மனதாரச் சொல்வதும் பாடுவதும் பக்தி யோகம்!
இதனால் இறைவனை அறிய வருவது ஞான யோகம்!
அறிந்த இறைவனை உணர்வது தியான யோகம்! இதைத்தான் மகான்களும் சித்தர்களும் யோகியரும் சொல்லாமல் சொல்லி நின்றார்.
நாவினிக்க மனமினிக்கப் பாடும்போது இறைவன் இதயத்தைச் சுத்தமாக்கி பத்திரமாக அங்கே பவனி வருவான்!
அப்போ யோகங்களில் மேலான ராஜ யோகம் கைகூடும்!
இதைத்தான் சந்நிதி வேலன் " **நீ படுத்துக் கொண்டே பாடினால் நான் இருந்து கொண்டும், நீ இருந்து கொண்டே பாடினால் நான் நின்று கொண்டும், நீ நடந்து கொண்டே பாடினால் நான் ஆடிக் கொண்டும் உன் பின்னாலே வருவேன் . . .**" என்று சொன்னது!
சந்நிதி வேலவனின் சொர்ண மலைகளின் அதிபதிகளாகி அவன் உவந்தளிக்கும் இகபர சுகங்கள் அனைத்தும் பெற்று இன்பமாக வாழுங்கள்! கூட்டுப்பிரார்த்தனைகளில் எழும் நாத அலைகளின் சங்கமம் ஈட்டும் சக்தி அணுவை விடச் சக்தி வாய்ந்தது! அது அகிலத்தைக் காக்கட்டும்!

******************

## பூவரச மரத்தடியில் புண்ணியனார் சமாதிமேல்!
## கூட்டுப்பிரார்த்தனை-தனித்துவமும் மகத்துவமும்

யானைச் சாபம் நீங்கிய ஓர் கந்தர்வனாம் ஐராவசுவை நோக்கி " ஸ்ரீ செல்வச் சந்நிதி என்று எனக்கோர் ஸ்தலம் வடக்கே உண்டு . நீ அங்கே போய் முருகநாகர் என்ற பெயரிலே எனது பூசையின் சிறப்பையெல்லாம் அறிந்த பின்னே சமாதி நிலை அடையாய் " என்று முருகன் திருவாய் மலர்ந்ததற்கு அமைய அந்தப் புண்ணியனார் ஜீவசமாதியின் மேலே பூவரசம் தோன்றி

ஸ்தலவிருக்ஷமாக மாறியது . " அதன் அருகே நான் வேலாக வீற்றிருப்பேன் "என்றான் முருகன் . அந்த இடத்தின் மகிமையை உணர்ந்தவர்கள் அங்கே முருகனுக்கு காலம் காலமாய் பாமாலை சூட்டி வருகின்றனர். அங்கிருந்து எழும் நாதஒலியிலே, சப்த சுரங்களின் சங்கமிப்பிலே சந்நிதி வேலனின் அருட்பிரவாகம் ஆறாக ஓடி கடலாக மாறுகிறது. அடியரின் குறைகளெல்லாம் நிறைவாகும் விந்தையை விளக்க வார்த்தைகளுக்கு எங்கு செல்வேன்? அங்கே அரங்கேறும் கூட்டுப்பிரார்த்தனைகளில் அத்தனை தெய்வங்களும் கலந்துறவாடுவதும், அடியவர் நெஞ்சம் நிறைவதால்

குறைகள் மறைவதால் சொர்க்க வாசல் திறக்கும் அங்கே!

அங்கே பாடும் அடியரைப் பக்கத்திலே இருத்தி பாமாலை தொடுக்க வைத்து அதைப் பூமாலையாக சந்நிதி வேலன் ஏற்றருளும் ஓர் யாகம் நித்தம் அரங்கேறும் ஓர் அருட்கட்டளை. அதை அறக்கட்டளையாக்கி அதில் உன்னையும் இணைத்துவிட்டால் அவன் தன்னையும் தந்தருளுவான் . அந்தக் கருணை மழையிலே நனைந்து விட்டால் பின் கர்மம் வினை என்பதெல்லாம் காற்றோடு கலந்துவிடும், நேற்றாகி நிழலாகி மறைந்துவிடும். இதை உணர்ந்தவர்கள் உரைப்பதற்கும் வருவதில்லை, மறைப்பதும் இல்லை காரணம் அதுவே மறை! பொருளாகத் தெரிவதில்லை பொறியாகி உன்னுள் கலந்து விடுவதால்!

அன்னமலைகளையும் சொர்ணமலைகளையும் படைத்து அதில் ஏறி விளையாடும் அந்தச் செல்வன் அடியர் படைக்கும் பாமலைகளையும் பூமலைகளாக்கி ஏற்று மகிழ்ந்து புரியும் புன்னகையிலே மலரும் செல்வங்களெல்லாம் அடியர் இல்லங்களைச் சென்றடையும் விந்தையே அவன் திருவிளையாடல்!

ஆகவே தனிப்பட்ட உங்கள் குரல் வளத்தைப் பற்றிக் கவலைப்படாமல் அடியரோடு அடியராக நீங்களும் இணைந்து கூட்டுப்பிரார்த்தனைகளில் கலந்து அவன் புகழைப் பாடுங்கள். அவன் கருணை என்ற மழையிலே நனையுங்கள்.

சொர்க்கத்தின் வாசலை அடைவீர். அழைத்துச் செல்ல கதவில்லா வாசலிலே அவனே காத்து நிற்கின்றான்! அதுதான் ஸ்ரீ செல்வச் சந்நிதி!

******************************

## குருவருளும் திருவருளும்

**<u>பொன்னுத்துரை ஐயா</u>**வின் பூஜானுகூலத்தால்
என்னுள்ளே ஊறிடும் கவிதைத் திருப்புனலை
என்னென்று சொல்வேன் கண் என்று கொள்வேன்
பாதம் பற்றியதால் வந்த வேதாந்த விளை முத்தோ!

பூசித்த சந்நிதியான் சன்னிதியில் தட்டோடு வர
யாசித்துப் பாதம் பற்ற இவர் எடுக்க அவர் போடும்
நீறுதனைப் பெற்றதால் நெஞ்சத்தில் ஓர் நிம்மதி!
தந்தவனை இவர் கேட்க வந்ததோ ஓர் வற்றாத ஊற்று!

சிந்தனையில் சித்தி விநாயகன் நாவதனில் வாணியவள்
நெஞ்சத்தில் சந்நிதியான் நினைவலையில் முத்துமாரி
நின்றதினால் சென்றதெல்லாம் செம்மையே
வேற்கருணை திருவேற்கரணியாய் என்னுள்!

இந்து சமயத்தின் ஓராறு கிளைகளையும் இணைத்த
ஆதி சங்கரனாய் அவதரித்த அந்த அண்ணாமலை ஜோதி
பாற்கடலில் பள்ளி கொள்ளும் பரந்தாமனையும்
இணைத்ததால் இன்பருலகு இங்கு தோற்றமோ!

சிவனாரின் தாண்டவம் பரந்தாமனின் பள்ளி நிலை
உறங்கும் நிலை கொண்டு உலகில் இயங்குதற்கு
காட்டிய மார்க்கமோ கந்தனின் கருணையோ
ஆற்றருகே ஆனந்த அமைதி தரும் சொர்க்கமோ!



**எம் பிரார்த்தனை**

சேவற் கொடியரசே சேவடியை சேய் வேண்ட
சிந்தையுமே செம்மையாக
செந்தமிழ்க் கவியெல்லாம் ஸ்ரீ செல்வச் சந்நிதியில்
பித்தாகிச் சித்தாகுமே
ஆற்றங்கரையினில் அப்பனின் ஆடல்கள்
ஆயிரம் கண்ட போதும்
ஆறாது மாறாது அவன் பெருமை கூறாது
அவனியில் யான் வாழ்வது . . .

சிவ மாயையில் சிக்கி சிந்தனையே சவமாகி
சீர் கெட்டு அலைந்த போதும்
சிவனே என்றெனை விட்டுச் செல்லாமல் சொல்லாமல்
கூட நின்று அருள் தந்தவா
இம்மானிலத்திலே எனை ஈன்ற தாயுமே
உனைத்தானே நாட வைத்தாள்
அம்மா தரும் அருளை அப்பனும் தருவதை
எப்போதோ கண்டு விட்டேன் . . .

எதை எதை யான் சொல்ல என்னப்பன் எந்தனுக்கு
காட்டிய ஆட்டமெல்லாம்
அதை அதை அறிவித்த அருட் குருநாதனை
ஆனமட்டும் போற்றுகின்றேன்
விதை விதை யாயதை வேரூன்ற வைத்து என்
சிந்தையில் ஏற்றிவிட்டார்
கதை கதையாகவே வேதாந்த முத்துக்களை
கனிவுடன் ஊட்டி விட்டார் . . .

இனி என்ன யான் செய்ய என் அப்பன் காட்டிய
பாதையில் வாழவேண்டும்
வருகின்ற சந்ததியும் வாஞ்சையுடன் உந்தனையே
நாவாரப் பாட வேண்டும்
தருகின்ற அருளினால் தாழாமல் வாழ்கின்ற
வாழ்க்கையின் படிகளெல்லாம்
முருகாற்றுப்படையினது முதற் படியாகவே
முன்னின்று காக்க வேண்டும்
எம்மை என்றென்றும் காக்க வேண்டும்

**************









# ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலழகன் பாமலர்

**துதிக்கின்றேன் துணைபுரிக!**

மாணிக்கப் பிள்ளையாராய் ஆதி செல்வச் சந்நிதி அமர்ந்து
அடியவர்
காணிக்கை ஏற்றருளும் கருணா! ஞானக் கனிவுடைய விநாயகா!
வாணியுடன் இணைந்து நின் தம்பி சந்நிதியான் புகழ் பாட
பேணிக் காத்தருள்க! கடல் மடை திறக்குமே!

**வேலாரம்பம் .......**

இது ஆற்றங்கரையிலே அன்றொரு நாள் வேலன்
மருதர் கதிர்காமரைக் கேட்டதினால்
ஆடல்கள் காட்டியும் ஆட்கொண்ட பின்னாலே
வாய்கட்டி மௌனமாய் பூசை செய் என்றான்
தன் பின்னால் வந்த அறுபத்தி மூவர்க்கும்
ஆலமிலை தன்னில் அமுது படை என்றான்
படைத்த பின் இலையெல்லாம் மறைந்ததினால் அங்கே
பதைத்தவர் நெஞ்சத்தில் பால் வார்க்கவே
இது ஆனந்தம் தான் நல்ல ஆத்மார்த்தம்தான் என்றான்
ஆறாத பேரின்பப் பூசைகள் தான்
அன்று முதல் தினம் இன்று வரை அங்கே
மடங்களிலும் அன்னம் மலையானதோ
அடியர் பசி போனதோ ......

இது ஆனந்தம் தான் அந்த அறுபத்தி மூவரின்
ஆத்மார்த்த ஆசிகள் பேரின்பம்தான்

அது மாறாத நோய்களை மாற்றியதோ - அங்கே
தீராத வினையெல்லாம் நீறானதோ
அவன் நீறிட்டு அமுதுண்டு நிழலருகே நின்றார்க்கு
வினைகளும் மாயும் நோய்களும் தீரும்
தேவரும் மனிதரும் தினம் இங்கே பூஜிக்க - ஸ்ரீ
செல்வச் சந்நிதி என்று அவனே பெயர் சூட்ட
அப்பனை அவன் இங்கே பூஜித்த காரணத்தால்
நந்திகேஸ்வரர் என்றும் நாதங்கள் தான் முழங்க
இமய மலை எல்லாம் இங்குதான் உதயமோ
பார்வதியாள் இங்கு பயனாகி நின்றாளோ
வள்ளி வாசல் அருகே கொள்ளை இன்பம் தர
சிவநாகதம்பிரானும் திருக்கோலம் காட்டிட
கைலாச வைகுண்டக் காட்சியெல்லாம் காண
பூலோக புண்ய ஸ்தலமொன்றை நாடுங்கள் . . .

ஸ்ரீ செல்வச் சந்நிதி தான் அந்தத் திருத்தலம்
நினைத்தாலே மோட்சங்கள் சித்திக்கும் இங்கே
பூவரச மரத்தடியிலே புண்ணியனார் பொன்னுலக
வாழ்வெல்லாம் மண்ணுலகில் தந்தருள
வாருங்கள் ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கே - இங்கே
வந்தவர் என்றென்றும் வாழ்வதினால்
இது ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் - சந்நிதியில்
**ஆத்மார்த்த பூசைகள் ஆரம்பம்தான்**
அது ஆற அமர வந்த ஆற்றங்கரைதன்னில்
வேறாகி நின்றதெல்லாம் கூறாகும் நேரம்தான்
கூறாக குருவருளும் கூடவே நின்றார்க்கு
திறந்திடுமே அந்தத் திருவருட் பெட்டகம்
அது ஆதி அந்தமில்லா அருட் பெருஞ் சோதியை
தொண்டைமான் ஆற்றருகே தொண்டர்கள் சந்திக்க
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம் தான் வேலன்
அடியவர் நெஞ்சத்தில் ஆடி நின்றான் . . .
************

**சந்நிதி வேலா வருக . . .**
இடையனாய் வந்து **மருதர் கதிர்காமரை**
இரட்சிக்க வந்த முகம் ஒன்று!
கதிர்காமம் தன்னில் பூசை முறை காட்ட
அழைத்துச் செல்ல வந்த முகம் ஒன்று!
கதிரமலைக் கொடியேற்றம் காண என்று
கூட்டிச் செல்ல வந்த முகம் ஒன்று!
களைத்துத் துவையல் உண்ண கால் அடிபதிக்க
கல்லோடைக் கரை நின்ற முகம் ஒன்று!
தேடிவரும் அடியர் பசியைப் போக்கிடவே
அன்னதானம் செய்யும் முகம் ஒன்று!
புண்ணியனார் சமாதி கண்ட மரத்தருகே
கோவில் கொள்ள வந்த முகம் ஒன்று!
**ஆறுமுகமாகி** ஏறுமயிலேறி
வள்ளி தெய்வானை மங்கையுடன்
**வேலுமாகி வேற்படையுமாகி** - அங்கே
**வேழமுகனோடு** நின்றவனே - உனை
வேண்டும் அடியவரின் வேதனையைப் போக்க
**செல்வச் சந்நிதியாய்** அமர்ந்தவனே!
வரவேண்டும் வரவேண்டும் வரவேண்டும் வடிவேலா
தரவேண்டும் தரவேண்டும் தரவேண்டும் நினதருளே!
ஏழையடியோமை சூழும் வினை மாள
அகிலம் முழுதாள வரவேண்டும்!

******

**ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கு வாருங்கள்** - வேலன்
திருவருளை தினம் நாடி நில்லுங்கள்
மாறாத மனத்தோடு சொல்லுங்கள் - வேலன்
கூறாமல் குறை தீர்ப்பான் நம்புங்கள்

அமரர்கள் குறைதீர்க்க அப்பன் கண்ணில் வந்தோன்
அசுரர்களை அழிக்க சக்திவேலைக் கொண்டோன்
ஆறாகி ஒன்றாகி அறிவாகி நின்றோன்
மாறாத பக்தி கொண்டோர் மனங்களில் நிறைவோன்
நின்று . . .குகனாக . .வாழ்வோன் . . .

அடியார்கள் பசிதீர்க்கும் அன்னதானக் கந்தன்
அருட்பசி தனைப்போக்கும் ஞானஸ் கந்தவேலன்
புகழ்பாடிப் பூவரச மரத்தருகே நின்றேரின்
குறைதீர்த்து மனைவாழ மயிலேறி வருவான்
வந்து . . .இதமாகச் . . .சிரிப்பான் . . .
****************

**வாருங்கள் ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கே** - வந்து
வேண்டுங்கள் வேலவன் திருவருளை
ஆலமிலை அமுதும் அவன் திருநீறும்
ஆனந்த அமைதியைத் தந்திடுமே

தொண்டைமானாற்றம் கரையினிலே
தோன்றிய சந்நிதிக் கோவிலிலே
ஆத்ம ஈடேற்றம் வேண்டி வந்த
ஞானியர் வாழ்வதை அறியாயோ

நினைத்தால் அருளும் அண்ணாமலைக்கிணையாய்
மனத்தால் கொள்ள அன்னமலை அரசன்
வரமுன்னே வரம் தரும் வள்ளலாய் - இங்கே
வீற்றிருப்பதை நீ மறந்தாயோ

தேவர்கள் குறையெல்லாம் தீர்த்த இடம்
தேவலோகமே தினம் பூசை செய்யும் இடம்
வானவர் கானவர் தானவர் தினம் தினம்
பூஜிக்கும் பூலோக புண்ய ஸ்தலம்

சூரசம்ஹார நாடகத்தில் வேலன்
அபயம் கொடுத்த இடம் ஆதலால்
மனம் திறந்து மனிதன் பணிந்தாலோ - அவன்
மனைக்கே தெய்வ அருள் செல்லுமாம்

வினையெல்லாம் போக்க விக்னேஸ்வரனும்-என்றும்
துணையாய் வெற்றி வடி வேலவனும்
ஆதிமூலத்தின் வேற்படை அருகே
அம்மை அப்பனும் லிங்கோற்பவமாய்

அமைந்த பெருமைக்கு மெருகூட்ட
வள்ளி ஆலயத்தில் திருமாலவனும்
பூவரசத் தருகே ஹரிஹரனும்
இணைந்த விந்தை வேறெங்குமுண்டோ

ஆலும் அரசும் வேம்பும் பூவரசும்
வேலவன் வீதியில் ஒன்றாய் மலரும்
வைரவ சுவாமிக்கோர் ஆலயம் அமைத்து
போற்றுகின்றார் செல்வச் சந்நிதியில்

அத்தனை சக்திகளும் ஒன்றிணைய
அமைந்த வேலவன் ஆலயத்தில்
வந்தவர் என்றும் வாழ்வதினால்
வாருங்கள் ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கே
********************

**அண்ணனை முன் வைத்து அருளீட்டும் வேல் இது**
சொன்னவளாம் சரஸ்வதியாள் சுகமீட்டும் வேல் இது
மருதர் கதிர்காமரையே பூசைக்கழைத்த வேல் இது
மௌன அன்புப் பூசையிலே மகிழ்ந்தருளும் வேல் இது
அன்னையை வணங்கி ஆனிப்பொங்கலிடும் வேல் இது
ஆழ்கடலின் நீரினிலே விளக்கெரிக்கும் வேல் இது
மூலத்தில் லிங்கோற்பவமாய் சிவனை வணங்கும் வேல் இது

ஞாலத்தில் தேவலோகம் நாடும் சந்நிதி வேல் இது
ஆவணி மாதத்திலே விழாக்கோலவேல் இது
ஆலமிலை அமுதாலே பிணிதீர்க்கும்வேல் இது
ஆவணியின் பூரணையில் தீர்த்தமாடும்வேல் இது
தீராத வினை தீர்க்க தேடி வந்தவேல் இது
நாரணனின் அருளை வாரி வழங்க வந்த வேல் இது
நந்தி முதல் நாரதாதி முனிவர் போற்றும் வேல் இது
சங்கநிதி பதுமநிதி சந்திக்கும் வேல் இது
சிந்திக்கும் இதயத்திலே சிவனைக் காட்டும் வேல் இது
அன்னையர் இருவரையும் அரவணைக்கும் வேல் இது
அவர் மூலம் செல்வங்களை அள்ளித்தரும் வேல் இது
பூவரச மரத்தருகே வீற்றிருக்கும் வேல் இது
புண்ணியனார் சமாதி மேலே புகழ் பரப்பும் வேல் இது
தாய் தந்தை சக்தியெல்லாம் திரண்டு வந்த வேல் இது
அவுணரை அழிப்பதற்கு அன்னை தந்த வேல் இது
கதிர் ஒளி ஆகமுன் கதிர்காமர் பெற்ற வேல் இது
கதிர்காம விழாக்கோலம் கண்டு வரும் வேல் இது
ஆற்றங்கரையோரம் அன்னமலை படைக்கும் வேல் இது
ஆறுபடை வீட்டின் பின்னே ஆற வந்த வேல் இது
வேண்டும் அடியார்க்கு தாண்ட வழி காட்டும் வேல் இது
ஆழ்ந்தகன்று ஊன்றியதாம் அறிவின் சிகர வேல் இது
கர்மபக்திஞான யோக சித்தாந்த வேல் இது
வேதாந்த விழுப்பொருளாய் வீதி வரும் வேல் இது
நான் மறைகள் போற்றும் வல்ல நாதாந்த வேல் இது
தான் ஆக்கித் தயை புரிய தேடி நிற்கும் வேல் இது
கைலாச வைகுண்டக் காட்சி நல்கும் வேல் இது
பூலோக சொர்க்கமாகும் சந்நிதியான் வேல் இது
அவுணரை அழிக்க வந்த ஆறுமுக வேல் இது
ஆறாத துயரம் மாற்றும் ஆற்றங்கரை வேல் இது
வேண்டும் வரை வேண்டுவோர்க்கு வேளைக்கருளும் வேல் இது
தாண்டும் வழி காட்டும் அந்த தயாபர வேல் இது
வேற்கரணித் தீர்த்தக் குளம் தந்த வெற்றி வேல் இது

வேற்கருணை தினம் சுரக்கும் ஏகாந்த வேல் இது
ஆல் அரசை இணைய வைத்து அரசாளும் வேல் இது
பூவரசாய் நாவலுமாய் பூத்துக்குலுங்கும் வேல் இது
தைப்பூசநிதியை ஆலம் இலையில் தரும் வேல் இது
பன்னிரு கரங்களாலும் பகிர்ந்தளிக்கும் வேல் இது
கதவில்லா வாசலிலே காத்து நிற்கும் வேல் இது
நினைத்தவர்க்கு வரமுன்னே வரமருளும் வேல் இது
மடங்களிலே அடியரோடு அமுதுண்ணும் வேல் இது
பாடுவோர்க்குப் பக்கத்திலே ஆடி வரும் வேல் இது
சன்மார்க்க நெறி புகட்டும் சந்நிதியான் வேல் இது
உள் நோக்கும் உணர்வினிலே உறைந்து நிற்கும் வேல் இது
காவடியார் ஆட்டத்திலே கலந்து நிற்கும் வேல் இது
பூவடியார் நெஞ்சத்திலே பூத்துக்குலுங்கும் வேல் இது
கற்பூரச்சட்டி மேலே ஒளி பரப்பும் வேல் இது
பாற்குடங்கள் மத்தியிலே பவனிவரும் வேல் இது
அங்கப் பிரதட்சணை செய்ய அரவணைக்கும் வேல் இது
அடியழிக்கும் அன்பர்களை ஆதரிக்கும் வேல் இது
தீ மிதித்தோர் மஞ்சத்திலே தினம் தோன்றும் வேல் இது
நெய் விளக்காராத்தியில் நெகிழ்ந்தருளும் வேல் இது
தொண்டைமான் ஆற்றருகே தொல்லை தீர்க்கும் வேல் இது
அபயகரம் காட்டி அன்பரை ஆட்கொள்ளும் வேல் இது
கல்லோடைக்கரையினிலே காலடி வைத்த வேல் இது
காலமெல்லாம் காப்பேன் என்று அபயம் தரும் வேல் இது
சும்மா இரு தத்துவத்தை வலிந்துரைக்கும் வேல் இது
சுகப்பிரம்மமாய் அமர்ந்த சுப்ரமண்ய வேல் இது
***************

**வேல் அழகன்**

**சத்யம் சிவம் சுந்தரம் அழகு** ஆனந்தக் கூத்தழகு
அகிலத்தை இயக்கிடும் அந்த ஆட்டமே தனியழகு
பார்வதியாள் கண்ணழகு அவள் பார்த்த இந்த உலகழகு
படைத்தவனும் ஓர் அழகு காப்பவனும் தனி அழகு

சூரபத்மன் தவம் அழகு அவன் பெற்ற வரம் அழகு
வரம் தந்த வலிமையினால் வந்த ஆணவம் அழகு
தேவர் பட்ட துயர் அழகு தேம்பி அழுததும் அழகு
தேடிவந்த தேவரைக்காக்க சொன்ன சொல்லும் அழகு

அமைதியாய் தியானத்தில் அமர்ந்த ஐந்து முக அழகு
அதோமுகம் தனை இணைத்து நின்ற ஆறுமுக அழகு
ஆறுமுக நெற்றிக்கண்ணில் தோன்றிய பொறியழகு
ஏறுமுகமாகியங்கே மாறுமுகம் ஆறும் அழகு

ஆறுநெற்றிக் கண்ணில் வந்த ஆறு பொறியும் அழகு
வாயு வர்ணன் பயத்தழகு சுமந்த கங்கைக் கை அழகு
சரவணப் பொய்கை அழகு பூத்த ஆறு தாமரை அழகு
அமர்ந்த ஆறுபொறியழகு உருவெடுத்த வடிவழகு

கார்த்திகைப் பெண்ணழகு சீராட்டும் தாலாட்டழகு
வளர்ந்த ஆறு குழந்தை அழகு ஆறுமுகம் தான் அழகு
அன்னை வந்து ஆறையுமொன்றாய் அணைத்ததோர் தனி யழகு
அவனிக்கு அறுமுகம் கொண்ட திருமுருகன் உதய அழகு

பிரணவப் பொருளறியா பிரமன் சிறைவாசம் ஓர் அழகு
அர்த்தம் சொல்ல சிவனார் தோளில் அமர்ந்தவிதம் தானழகு
அழகனுக்கு அழகூட்ட அவன் கொண்ட வேல் ஓர் அழகு
அவுணரை அழிக்க அன்னை தந்த சக்தி வேல் அழகு

பழம் தந்த போட்டியினால் ஞானப்பழம் ஆனதோரழகு
கோவணாண்டிக்கோலம் கண்ட தெண்டாயுதம் அழகு
செந்தூரில் தேவர் படை நடத்த வந்ததோர் அழகு
சந்நிதியில் அபயகரம் காட்டி நின்றதோர் அழகு

நல்லூரில் அலங்காரம் மாவிட்டபுரம் அபிஷேகம்
அன்பாகிக் கதிர்காமம் மீண்டுமோர் கதிர் அழகு

வெருகலில் ஓர் அழகு மண்டூரில் தனி அழகு
கந்தவனம் மனத்தழகு குறிஞ்சிக் குமர வேலழகு

கந்தன் கருணை உணர்த்தவென வந்த வெள்ளி வேலழகு
ஆணவத்தை மட்டும் அழித்து சேவல் மயில் கொண்டழகு
சந்தி காலப் பூசை செய்த சந்நிதியும் ஓர் அழகு
சிவனை வணங்கித் தேவர்க்கு அபயகரம் காட்டும் அழகு

வெற்றி காட்டும் வேற்படையே சந்நிதியின் தனி அழகு
கேட்கும் வரம் கிடைக்கும் இடமாய் ஆனதே இனி அழகு
ஸ்ரீ செல்வச் சந்நிதி என்று அவன் வைத்த பெயரழகு
எண்ணில் அடங்காச் செல்வம் நிறைந்த சொர்ணமலையழகு

அன்னமலை ஓர் அழகு அங்கே ஆறும் அடியர் பசி அழகு
ஞானப்பசி தீர்த்துவைக்கும் மோன வெள்ளி வேலழகு
கட்டுத்தேரும் ஓர் அழகு அதை சரியவைத்ததும் அழகு
முன்பு இருந்த சித்திரத்தேரை சிதையவைத்ததும் அழகு

கட்டுத்தேர் போதுமென்று சொன்னவிதம் தானழகு
அடுத்த வருடம் இரண்டு தேரில் பவனி வந்த பேரழகு
சத்ரு சம்ஹாரனாய் சண்முகனார் சந்நிதியில்
சித்திரத் தேர் வந்தவிதம் என்ன அழகு என்றுரைக்க

சொல்லழகு செயலழகு காரண காரிய அழகு
எல்லாமே இணைந்ததுதான் சண்முகனார் தேரழகு
மூன்று தேரும் ஓடும் போது நாவில் எழும் சொல்லழகு
நாலாயிரம் பிரபந்தம் நாவினிக்க வருமழகு!

**********

**கந்தன் என்றால் அர்த்தம் கருணையோ – உமை**
மைந்தன் என்றால் அர்த்தம் மழையாகிப் பொழிவதாலோ
வேலன் என்றால் அர்த்தம் வேண்டுவது தந்தருளும்
பாலன் என்றால் அர்த்தம் பாபி எனைக் காப்பதாலோ

அன்னதானக் கந்தனாகி அடியரின் பசி போக்கி
ஆற்றங்கரை வேலனாகி ஆறாத துயரம் மாற்றி
சந்நிதிக் கந்தனாகி சங்கடங்கள் தனை நீக்கி
சரணாகதி என்றால் சரவணபவமாகும்

தொண்டைமான் ஆறாகி தொண்டர் குறை தீர்த்தருளும்
வேற்கரணித் தீர்த்தமாகி வேதனைகள் தனைப் போக்கும்
சரவணப் பொய்கையாகி சர்வ மங்களம் ஈட்டி
பூவரச மரத்தடியில் பூவாக்கி பொன்னடி சேர்க்கும்

ஆறுமுகமாகி அனைத்தையும் அள்ளித் தந்து
ஏறுமுகமாகி சத்ரு சங்காரம் செய்து
ஆறுபடை வீட்டின் பின்னே ஆற்றங்கரை அமர்ந்தருளி
ஆறுதலை எமக்களித்த ஆறுமுகா சரணம் ஐயா
************

**வானமளாவும் மயூராசனமே** - என்னை
வா என்றழைக்கும் வேலாயுதமே
ஆறியமர ஓர் ஆற்றங்கரையோ - அங்கே
நாட்டம் கொண்டால் பரமானந்தமே

கானமழை எல்லாம் கல்லோடையில் - அன்ன
தானமழை எல்லாம் மடங்களிலே - மன
ஆட்டம் அடங்கக் காணவேண்டின்
தொண்டைமானாற்றம் கரைவாரும் அடியவரே

வேடன் விருத்தனாய் வேடம் பூண்டு - வள்ளி
லோலனாய் கிழவனாய் ஆட்டங்கண்டு
காவடி யாயுனை ஆடவைத்துப் பின்
காணாத காட்சிகளைக் காட்டிடுவான்
அன்னையாய் தந்தையாய் அருட்குருவாய்
ஆற்றங்கரை வந்த படைவீட்டுத் தலைவனையே
சிந்தனையை வந்தனையாய் மாற்றிவிட்டால்
உந்தன் சித்தத்தில் அம்பலத்தைக் காட்டிடுவான்
*****************

**எங்கிருந்தால் காண்பேன் உன்னை என்றேன்** - நீ
அங்கிருந்து பார் அன்னமலை என்பாய்
சொர்ணமலை தான் படைக்கும் சுப்ரமண்யா - என்
எண்ணமலை மீதேற ஓடி வருவாய் . . . .

பூவரசத்தோரம் பாமாலை படைத்து பூஆரம் சூடவந்தால்- நீ
ஆற்றங்கரையோரம் ஆலமர நிழலில் ஆவினத்தை
மேய்த்து நிற்பாய்!
ஆலமிலை அமுதை ஆனமட்டும் உண்டு
சோர்ந்துறக்கம் கொள்ள என்றால்
சாலை ஓர அருகில் ஆடிவந்த காவடிகள் மத்தியிலே
காட்சி தருவாய்
காவடியைக் காணவென்று கால் கடுக்க ஓடி
வந்தால் கணப்பொழுதில் மறைந்திடுவாய்
காலடியைத் தான் பதிக்க கல்லோடைக்
கரையினிலே கண்டவர்கள் பின் மொழிந்தார்!

வந்தவழி நான் மறந்து சொந்தவழி
ஏதென்று உந்தனையே கேட்க நின்றேன்
பந்தவழியால் நின்று பாதிவழி சென்ற பின்னும்
எந்தவழி வேண்டும் என்பாய்
தந்தவழியாற்தானே சந்நிதிக்கு நான் வந்தேன்
எந்தவழி இனி என்றேன்
வந்தவழி பந்தவழி தந்தவழி பாதிவழி
எந்தவழி வந்தாலுமே - அது
எந்தன்வழி என்றுணர்ந்து எட்டியடி நீ
வைத்தால் தன்னுடனே சங்கமம் என்றான்!

*******

**அழகான தமிழ் பாடி அன்பாலே துதிக்கின்றோம்**
ஆறுமுக ஐயனே வா !
இலையமுது உண்கின்ற சந்நிதி வேலவா
ஈராறு கரம் நீட்டி வா !
உயிராகி என்னுள்ளே என்றென்றும் உறைவோனே
ஊனுக்கு ஒளியூட்ட வா !
எந்தையே என் தாயே என் தெய்வம் நீயன்றோ
ஏன் இன்னும் பாராமுகம் !
ஐயனே அருள் பொங்கும் ஸ்ரீ செல்வச் சந்நிதியில்
ஒன்றாகி ஒளியானவா !
ஓங்கார மாமணியின் ஓசையின் நாதத்தில்
ஔஷதமாய் ஆன திருவே !

கந்தனே கடம்பனே கதிர்காம வேலனே
காலமெல்லாம் உனை நம்பியே!
ஆற்றங்கரை ஓரம் அன்னமலை அருகினிலே
அணைத்தருள ஓடோடி வா !
எந் நிதியும் தரவல்ல சந்நிதி தீரத்தில்
ஏகாந்தமாய் நின்றவா !
ஆற்றங்கரை ஓரம் அன்னதானக் கந்தன்
ஆகியே அருள்கின்றவா !

தொண்டைமானாறும் ஸ்ரீ செல்வச் சந்நிதியும்
தொண்டரின் சொத்தாகுமே !
வித்தாக்கி விளைவாக்கி வேழமுகன் வாசலிலே
விருந்துண்ண வேலவா வா !
ஞானத்தின் தேனெல்லாம் பக்தியாம் தினையோடு
இணத்தவா ஞானகுருவே !
என்னையே தட்டாக்கி உணர்வையே அனலாக்கி
எரியவைத்தேன் ஆணவத்தை !
தயவாக நீ தந்த கவிதையை மலராக்கி
சாற்றினேன் நின் பாதத்தில் !
மாயாத மாயைக்கு வேலொன்று போதாதோ
உண்மையை உணர வைக்க ! ....................

**ஆலமிலை அமுதாம்ருதம் வேலழகன் நீறாம்ருதம்**
கல்லோடைக்கரையாம்ருதம் காலடியே தேனாம்ருதம்
அபிஷேகப் பஞ்சாமிர்தம் ஆறெழுத்தும்தானாம்ருதம்
அன்னமலை தருமாம்ருதம் பசிப்பிணிக்கோர் பஞ்சாமிர்தம்

வேற்கரணித் தீர்த்தாம்ருதம் பூவரச நிழலாம்ருதம்
வேற்படையே ஞானாம்ருதம் வேலில் தோன்றும் ஒளியாம்ருதம்
கஜமுகனார் கருணாம்ருதம் அபயகரம் தருமாம்ருதம்
சும்மாயிரு சொல்லாம்ருதம் தொண்டைமான் ஆறாம்ருதம்

மருதர் கதிர்காமரின் மௌன அன்புப் பூஜாம்ருதம்
மந்திரப் பூசையிலும் மகிழும் சுவாமி நாதாம்ருதம்
பழம் தந்த போட்டியினால் பழனி வந்த அழகாம்ருதம்
நவபாஷாணம் இணைந்துவந்த தெண்டபாணிப் பாதாம்ருதம்

அன்னை தந்த வேலே செந்தில் தேவசேனா பதியாம்ருதம்
சிவனை வணங்கச்சந்நிதி கண்ட அபயகரம்தேவாம்ருதம்
ஏமகூடப்போர்முனை அவுணரை அழிக்கவந்ததோராம்ருதம்
சேவல் மயில் ஆக்கிய வேலன் கருணையே பேராம்ருதம்

அமிர்தங்கள் அனைத்தையுமே அடியருக்கு பகிர்ந்தளிக்க
கதவில்லா வாசல் அருகே காத்து நிற்பான் சந்நிதியில்
ஆன்மாவை லயப்படுத்த என்ற இடம் ஆலயமே
ஆலயமாய் ஆண்டவனே அமைத்த இடம் சந்நிதியே

ஆவணியில் விழாக்கோலம் ஆனந்த அமிர்தமயம்
ஆடல் பாடல் விளையாடல் அத்தனையும் தேவாம்ருதம்
கொடியேற்ற நாள் முதல் வேலன் காட்டும் அந்தக்கோலங்கள்
அடியார் பூசையோடு அமிர்தமயம் ஆகிடுமே

சந்நிதியை நினைத்தவரை சங்கடங்கள் தொடர்வதில்லை
சந்நிதிக்கு வந்தவர்க்கு வினையேதும்விளைவதில்லை
சந்நிதியில் நின்றவர்க்கு சன்மார்க்க நெறிபுகட்டி
சந்நிதியில் இருந்தவர்க்கு இகபரசுகம் எந்நாளும் ..........

**ஐங்கராய நமக என்று அடிமனதில் கொண்டார்க்கு – சந்நிதியில்**
விக்கினங்கள் விலகிவிட விடைகிட்டும் என்பதினால் !

சிவாய நமக என்று சிந்தித்திருப்போர்க்கு - சந்நிதியில்
அபாயங்கள் அஸ்தமிக்க அஞ்ஞானம் அகலும் என்பதினால் !

அம்பிகாய நமக என்று அர்ச்சிப்போர்க்கு - சந்நிதியில்
அத்தனையும் அள்ளி அன்னை தந்திடுவாள் என்பதினால் !

நாராயணாய நமக என்று பாராயணம் செய்வோர்க்கு - –சந்நிதியில்
கண்ணனாக வந்தவன் கவலைகள் தீர்ப்பான் என்பதினால் !

சூர்யாய நமக என்று தோத்திரம் செய்வோர்க்கு - சந்நிதியில்
இருளகன்று வாழ்க்கையே ஒளி மயமாகும் என்பதினால் !

குகாய நமக என்று கும்பிட்டு நிற்போர்க்கு - சந்நிதியில்
வேலாகி அறிவாகி வேண்டுவன கிட்டும் என்பதினால் !
வேலைத் தொழுவதே வேலை என்று கொண்டு விட்டேன்
வினைகள் எல்லாம் விரைந்தோடி வேகுவதைக் கண்டுவிட்டேன்
வேண்டும் வரமருளும் வேலவனே எனக்குள்ளே !
தொண்டருக்கும் தொண்டனாய் வாழவைத்திடையா !

*******************

**வேண்டுகின்றேன் உந்தன் சந்நிதியில் - உன்னைப்**
**பாட வந்தேன் ஆற்றங்கரை அருகில் . .**

சரஸ்வதியாள் வந்து நாவிலே குடியேற - பாலகனாய்
அண்ணனும் தம்பியும் பக்கத்திலே ஆடிவர . .

ரோகியாய் நின்றபோது ரோகங்கள் விடவில்லை
போகியாய் வந்தபோது பாசங்கள் பகிர்ந்ததினால்
யோகங்கள் தந்தென்னை யோகியாய் மாற்றிவிட்டால்
பற்றற்ற நிலைகண்டு பித்தா என யான் பாட . .

பித்தனாய் எனை மாற்ற அத்தனே நீ வருவதென்றால்
நாமார்க்கும் குடியல்லோம் என நாவார யான் பாடுவேன்
வேலவனை வேண்டி நின்றால் வேறு ஏது பயம் எனக்கு
நஞ்சு கொண்ட நாகமே உந்தன் வாகனத்தின் காலடியில் . .

சிவநாக தம்பிரானே சிந்தையிலே குடியேற
பூவரச மரத்தடியின் புண்ணியனார் ஆசி கூற
வேற்கரணித் தீர்த்தமே எந்தன் வேதனையை வேகவைக்க
ஸ்ரீ செல்வச் சந்நிதியே சொர்க்க பூமி ஆனதினால் . . .

************************

**ஆற்றங் கரை ஓரம் கோயில்**
அங்கே ஆண்டவன் வீற்றிருக்கின்றான்
ஆடி அடங்கிட முன்னும் - உன்னை
ஆட்கொள்ள அவன் இருக்கின்றான்

வேலா என வேண்டுவோர்க்கு - அவன்
வேண்டுமட்டும் தருகின்றான்
பாலா எனப் பணிவோர்க்கு - அவன்
பாபங்களைப் போக்கி அருள்கின்றான்

முருகா என வருவோர்க்கு - அவன்
முன்வினையை நீக்கியே நிற்பான்
கந்தா என அழைப்போர்க்கு - கர்ம
வினைதனைக் களைந்திடுவானே

அப்பா என அழைப்போர்க்கு - அவன்
தப்பாமல் தயை புரிகின்றான்
ஐயா என வேண்டி நின்றால்
பொய்யாயின வெல்லாம் போகும்

சந்நிதி என்றே சொன்னால் - அவன்
எந்நிதியும் தருவானே - அங்கே
அன்னமலைகளைப் படைத்தால் - அவன்
சொர்ணமலையாகி நிற்பான்

அடியரின் பசிதனைப் போக்கி - அவன்
சேவடியைப் போற்றி நின்றால்
பாவடி தந்துனைக் கவியாக்கி
பாடவைப்பான் தான் ஆடி நிற்பான்

நினைக்க முன் அருளும் இறைவன்
நினைவை நீல மயில் ஆக்கு
மனத்தையும் கோவிலாய் மாற்று
நித்தம் உன்னோடு நர்த்தனமே!
*******

**சந்நிதியான் பிள்ளைத் தமிழ்**
ஆலமிலையினில் அமுதூட்டும் இன்பமே
ஆடிவா ஆற்றங்கரையினில் - நீ
ஆடிமுடிந்தாலும் ஓடி ஒழிந்தாலும்
விடவா போகின்றேன் - நான் உன்னை
விடவா போகின்றேன்

சின்ன வண்ண ஓர் சிறுவனாய் இருக்கையில்
செப்பினாய் உபதேசம் அப்பனுக்கு
அந்தப் பாதத்தால் என் நெஞ்சில் உதைத்தால்
குறைந்தா போய் விடுவாய் - நீ என்ன
குறைந்தா போய் விடுவாய்

வள்ளி தெய்வானை உடனிருந்தாலும்
வேலை நீ மறப்பதில்லை - உன்
வேலை நம்பியே சந்நிதி வந்தவனை
காக்க வைத்தல் முறையோ -வேலா எனைக்
காக்க வைத்தல் முறையோ

அமுதூட்டி அறிவூட்ட சந்நிதியில்
என்றும் வேலாக நிற்பேன் என்றாயே
அந்த வேலிலே வெளிச்சத்தைக் காட்ட
உனக்கின்னும் வேளையும் வரவில்லையோ-இன்னும்
தாமதம் ஏன் ஐயா

காக்க வைப்பாயோ காத்து நிற்பாயோ
என கேட்டதை நீ மறந்தாயோ - அந்தக்
கேள்வியிலே வந்த சந்தேகம் தீர்த்தால்
குறைந்தா போய் விடுவாய் - எனைக்காக்க
விரைந்தே வந்திடுவாய்

ஐந்து புலனும் என்னை அலைக் கழிக்க
உணர்வும் எண்ணங்களும் உருக்குலைக்க
வேலால் எனைக்குத்தி வேளைக்கு அந்த
ஞானத்தைத் தந்தருள்வாய் - அஞ்ஞானம்
போக்கியே அருளிடவா
******

**சந்நிதியான் பிள்ளைத் தமிழ்**

கட்டிமுத்தே கந்தா கனியமுதே
கதிர்காமா கதிர்வேலா - எனைக்
கட்டி அணைத்தோர் முத்தம் தந்தால்
நீ குறைந்தா போய் விடுவாய்

குளிர்ந்த மலர்ப் பொய்கை சரவணத்தில்
குழந்தையாய் வந்த குமரேசா - நீ
ஆலம் இலைமீது அமுது வேண்டுமெனில்
வருவாய் என்னிடமே - சந்நிதியில்

குழந்தை முருகேசா அரும்பும் குறும்புதனைக்
காட்ட முகம் போதாதென்றோ
வேண்டும் காட்சிதனைக் காட்டுதற்கோ
நீ வேலாய் மாறினாயோ

வேலில் காணும் அந்த சிரித்த முகம்
வேறு எங்கும் தெரிவதில்லை - அங்கு
வேண்டும் அடியவர்க்கு தாண்டும் வழிகாட்ட
வேலாய் மாறினாயோ

குழந்தை கொடுத்தால் அவன் பெரியவனாக
மீண்டும் ஆசை வரும் என்றோ
என்றும் என் குழந்தையாக வேண்டுமென்று
வேலில் தோற்றம் கொண்டாயோ

******************************

**உலகளாவிய முருகன் ஆலயங்கள்**

பழம் தந்த போட்டியினால் பழனி மலை ஏறி
ஞானப் பழமாகி நின்ற முருகா
பரமனுக்கு பிரணவத்தை குமரா ந் குருவாகி
உரைத்த இடம் சுவாமி மலையே
சூரசம்ஹாரத்தை நிறைவேற்ற செந்தூரில்
தேவ சேனாபதியுமானாய்

பெற்றோரை வணங்கியுமே தேவர்க்கு அபயகரம்
காட்டவோர் ஸ்ரீ செல்வச் சந்நிதியே
அசுரரை அழித்துமே சேவல் மயிலாக்கியுமே
ஏம கூடம் கண்டவா
அது கதிர்காம ஷேத்திரமாய் கதிர் ஒளி வீசியுமே
காந்தம் போல் கவருதையா
அசுர அழிவினால் மோட்ச நிலை பெற்றுமே - நீ
திருப் பரம்குன்றத்திலே
தெய்வானையை மணந்து அன்பு மயமாகிடவே
வள்ளியையும் கொள்ளை கொண்டாயோ
திருத்தணி மலையினிலே அன்னையர் இருவருடன்
ஆனந்தக் காட்சி தந்து
பழமுதிர்ச் சோலையிலே பள்ளி கொண்டருள் ஈட்டும்
சோலைமலைச் சுப்ரமண்யா
ஆறுபடை வீடெல்லாம் ஆடி முடிந்த பின்
தொண்டைமான் ஆற்றங்கரையில்
ஆறி அமர்ந்தருள பூவரச மரத்தருகே
வந்ததன் மர்மம் என்ன?
வில்லூண்டி வேடனாய் சித்தாண்டிச் சித்தனாய்
மண்டூரின் மன்னனாகி
நல்லூரின் நாயகனாய் வெருகலின் வேந்தனாய்
வேதப் பொருளான முருகா
மாவிட்டபுரத்திலே மாயை தனை நீக்கியே
மாருதப் புரவீர வல்லிக்கு
வண்ணமுகம் கொடுக்கவே தந்தை சோழ மன்னனோ
சுந்தரக் கோவில் அமைத்தான்
குடியேறும் மனமெல்லாம் கந்தவனம் ஆக்கியே
யோகர்க்கு அருள் செய்தவா
குடியேறும் நகரெல்லாம் நல்லூராய் மாறியுமே
வேலனை வாழ்த்திடாதோ
ஆடாத ஆட்டங்கள் ஆறுபடை வீடெல்லாம்
ஆடியும் அடங்காமலோ

**தொண்டைமான் ஆற்றருகே தொலையாத வினை தீர்க்க**
**வேலாக வீற்றிருப்பதோ**
குன்றேறி விளையாடும் குறிஞ்சிக் குமரா நீ
ஏறாத மலையுமுண்டோ
மாறாத பக்தியால் ஆடி வேல் கண்டிடவே
கொழும்பிலே கூடுகின்றார்
வத்துமலை மீதேறி மலேசியா நாட்டிலே
வாழ்விக்க வந்த முருகா
லண்டன் மா நகரிலும் உயர் வாசல் குன்றேறும்
குமரனைக் காண வருவேன்
கனடா நாட்டினுக்கும் களி கூர்ந்து வந்தவனே
கவலைகள் மறைய வேண்டும்
சிட்னி முருகா அடியர் பசி பட்னி எல்லாமே
ஒளி கண்ட பனியாக வேண்டும்




***************

**கதிர்காமம்**

மாணிக்க கங்கையோரம் மால்மருகன் அருட்கோலம்
மானிலம் உய்யவந்த வேலவன் மோன ரூபம்
வேலவன் மோன ரூபம் . . .

கதிர்காமக் காட்சி கண்டால்
கர்ம வினை தீரும் என்றார்
கந்தா உன் கருணைவெள்ளம்
கடல் மடை திறந்திடுமே
ஏழு திரைகளுக்குள் ஏன் இந்த ரகசியமோ?
ஏழை எனக்கருள ஏன் இன்னும் தாமதமோ
கந்தா கடம்பா கருணைக் கடலே
கார்த்திகேயா திரு வடிவேலா
சரவண சண்முக சிவகுருநாதா
வள்ளி குஞ்சரி மணவாளா
முருகேசா மால் மருகேசா எங்கள் குமரேசா
வருவாய் நீ . .மயிலேறி . .குறை தீர்க்கும் ஐயா

வெள்ளைத் தாமரை போலிருக்கும் எங்கள்
உள்ளத் தாமரையில் வீற்றிருக்கும் குகநேசா
கள்ள மில்லாமல் வரும் அடியவர்க்கு
கடைக்கண் பார்வை ஒன்றால் காத்தருள்வாயே
வேலெங்கே? வள்ளி தெய்வயானை எங்கே? உந்தன்
மயிலெங்கே?
வீட்டை மட்டுமே காட்டி நிற்பதால் வீடு தந்த ஓர் எண்ணமோ?
பொறியாகி நீ ஒன்றாகி
நீ பலதாகி பின் இலதாகும்
வேதாந்த நாதாந்த ஏகாந்த நிலையோ . . .
**********

**அன்புக்கோர் ஸ்தலம்** அமைத்தான்
கந்தன் கதிர்காமத்தில்
இச்சைக்கோர் சக்தி கொண்டான்
அப்பன் ஏமகூடத்தில் . . .

ஏமகூடப் போர் முனையில்
அசுரரை அழித்தாலும்
அன்பாலே ஆட்கொண்டு
சேவல் மயில் ஆக்கலையா . . .

அன்பின் பிறப்பிடமே
தென்புலம் என்பாரே
ஆளவந்த அழகனையே
ஆண்டு கொண்டாள் வள்ளியம்மா . . .

அன்புக்கு அடிமையாய்
அப்பன் கோயில் கொண்டபோது
அழைத்துச் செல்ல வந்த
ஞானியரும் சமாதி இங்கே . . .

தென்பதியில் அன்போடு
அப்பனையே நாடி நின்றால்
சந்நிதியில் பசி போக்கி
ஞானத்தையும் வழங்கிடுவான் . . .

சந்நிதியில் ஞானத்தை
அள்ளித் தரும் வேலாக
தென்பதியில் அன்பால் உருகி
உருவற்ற நிலை கொண்டாயோ . . .
***********

**முருகா வா மனம்** உருகாதா
மோகன வள்ளி தெய்வயானையுடன் மயிலேறும் . . .

வேலா வா என் மனமேற வா
சேவடி வைத்த செல்வச் சந்நிதியில் காத்திருப்பேன் . .

கந்தனைக் காண காட்டு வழிதனில் சென்றேனே
சண்முகன் துணையுண்டு சஞ்சலம் தீர்ப்பதற்கு
காட்டு வழி சென்று கதிர்காமம் தனை அடைந்து
மனத்தையே மாணிக்கமாய் மாற்றிய பின்னாலே
ஆறாக ஓடி நின்றால் வீடொன்று தெரிந்ததையா
ஏழு திரைகளுக்குள் ஏனிந்த ரகசியமோ? . . .

கதிரமலை தன்னில் புதிராக நிற்கின்றாய்
புரியாத மர்மம் இங்கு புலனாகும் நாளுமெப்போ?
கோயிலைத்தான் காணுகின்றோம் கோலம் தெரியவில்லை
கோலமெல்லாம் கலைந்து நாத பிந்து ஆனதோ . . .

திரையோ அகலவில்லை
குறையோ தெரியவில்லை
வீடே கண்டு கொண்ட
வேதாந்த நிலை அடைந்தேன் . . .

வேலையும் விட்டு வேறு சக்திகளையும் விட்டு
உருவற்ற நிலையிலே ஏகாந்த மயக்கத்திலே
ஞானஒளியாகும் மோன நிலையென்று
ஞானியர் கூறுகின்றார் நானறியேன் பராபரமே . .

தன்னையே உணர்ந்து நின்றால்
உன்னையெ நம்பி நின்றால்
வீட்டைக் கொடுப்பதாலோ
வீட்டைக் காட்டுகின்றாய் . . .

***********

**மங்கையர் வடிவழகா--மாணிக்க**
கங்கைக்கரை அழகா
கதிரமலை அழகா--கதிர்
காமத்துறை முருகா
கண்டி கதிர்காமம் கொண்ட கோலமெல்லாம் கந்தபுராணம்
கூறும்
கூறும் அடியார்கள் நாடும் குறைதீர்க்க வீறு கொண்ட முருகா
ஆறுமுகமெல்லாம் ஏறுமுகமாகி ஏமகூடம் தன்னில்
மாறுமுகமாகி சேவல் மயிலாக்கி நின்ற கோலம் என்னென்பேன்

செல்லக்கதிர்காமம் சொல்ல மனம் இனிக்கும் வல்ல கணபதியார்
தானைத்தளபதிக்கு யானையாய் வந்து வள்ளியை இணைத்தாரே
திருநீற்றுமலையிலும் வள்ளிக்குகையிலும் வள்ளலின்
விளையாட்டு
உகந்தை மலையிலே வேடருக்கருளிட ஒளியாய்ச் செல்பவனே

ஆடிஅமா வாசை காடுகடந்து நீ கதிரமலை அருகே
ஆடிமுடிந்ததும் வீடு திரும்பிட விருப்பமும் கொள்பவனே
மாணிக்க கங்கையில் காணிக்கை ஏற்றபின் கதிரொளி ஆகிடவே
பேரின்பவீடருள் காட்டிடவோ அங்கே திரையினுள் மறைகின்றாய்

ஏழுதிரைகளுக்குள் ஏனிந்த ரகசியம் எந்தையே திருமுருகா
வாழும் மனிதருக்கு ஏழு நிலைகாட்டத்தான் இந்த விளையாட்டோ
மாணிக்க கங்கையில் தீர்த்தமும் ஆடி மாணிக்கமாகிடுவர்
வர இயலாதவர் தொண்டைமானாற்றில் காட்சியும் கண்டிடுவர்

**கதிர்காமப் பயணம்**
கதிர்காமக் கொடியேற்ற நன்நாளிலே
கதிர்வேலன் கதிர்காமப் பயணமிங்கே
சாமி கதிர்காமம் போவதற்கு
சந்நிதியில் பக்தர் கூடுகின்றார்.

அந்தி மயங்கிடும் நேரத்திலே
ஆடி அமாவாசைக் கும்மிருட்டில்
ஞான ஒளி செல்லும் வேளையிலே
ஞாலத்தில் வேறொளி ஏதுக்கையா.

அன்பன் பயணம் செல்வதென்றால்
துன்பம் மேலோங்க நாம் துடிப்பது போல்
அப்பன் புறப்படும் நாளினிலே
வடபதி அடியார் வாடலுற்றார்.

திருவோணத்தில் தீர்த்தம் ஆடியபின்
திரும்பி அப்பன் இங்கே வந்தாலுமே
பதினைந்து நாள் தான் பிரிவென்றாலும்
பல்லாண்டு காணாத ஏக்கமய்யா.

கணப்பொழுதில் அப்பன் சென்றடைந்தாலும்
கனநேரக் காட்டு வழிப் பயணம் என்று
களைதீர உழுத்தம் புட்டு வைத்து
பூஜித்து நிற்பார் சந்நிதியில் ( உனைப் )

மனம் சோர்ந்து வாயிலை வந்தடைந்தோர்
மணி கேட்ட போதினில் வெறி கொண்டுமே
அப்பன் வாயிலை நோக்கிய வண்ணம்
ஆரவாரம் கூற வார்த்தை இல்லையே

அரோகரா கோஷம் வானைப் பிளக்குதையா
மனம் கசிந்து கண்ணில் நீர் பொங்கவே
அப்பனுக்கோ உள்ளே அபிஷேகம் செய்து
ஆயத்தம் செய்கின்றார் அன்பரெல்லாம்.

அப்பன் செல்லும் பாதை இருமருங்கில்
தீப அலங்காரங்கள் தோன்றுதையா
வாசல் கதவு திறந்ததையா . . . . . .
கையினுள் வேலோடு ஐயர் வந்தார்.

அடங்கிய மனம் கூட வெடித்ததங்கே
கூப்பிய கரங்களோ மேலெழும்ப
அரோகரா தவிர்ந்த வேறு வார்த்தையில்லையே
உருகாத மனத்தை நான் காணவில்லையே.

ஐயரைப் பின் தொடர்ந்து அடியவர்கள்
அலை மோதிச் செல்கின்ற வேளையிலே
அரச மரத்தடியில் கைவிரிக்க
காற்றோடு வேலவன் கலந்துவிட்டான்.

ஊனக் கண்களுக்குப் புலப்படுமோ
ஞானப் பிழம்பின் மோன நிலையை
அரோகரா கோஷத்தின் நாதவேகம்
அரச மர இலைகள் ஆட்டம் அங்கே! ...........
**செல்வச் சந்நிதியிலிருந்து கதிர்காமப்** பயணத்திற்கு
செல்வனை வழி அனுப்ப கூடுகின்றார் அடியரெல்லாம்
சேமமாய் நீயும் சென்று வரவே
சேர்ந்து வேண்டி நின்றார் மாந்தரெல்லாமே!

ஆடியமாவாசை யன்று அப்பனவன் பயணமென்று
நாடிவந்த அடியர் மனம் சோர்ந்து வாடிநிற்க
ஆலயத்தில் பூசை செய்து அன்பாக உனைத் தாங்கி
அர்ச்சகரும் வந்திடவே அன்பர் கூட்டம் மோத
அப்பனின் பயணத்தால் கவலைகள் கண்ணீராய்
ஓடத்தான் செய்தாலும் திரும்பி நீவரும் நாளை
எண்ணி மனம் ஆறி நிற்க
உனைக் காணும் நாளை எதிர்பார்த்து தானே
உந்தன் அடியர் எல்லாம் வாழ்கின்றார்

வேண்டி நின்ற அடியரின் விருப்பங்கள் நிறைவேறி
மீண்டும் நீவந்த நாள் வார்த்தைகளில் அடங்கிடுமோ
கன்று ஒன்று தாயிடத்தே களிப்புடன் வந்ததுபோல்
காத்திருந்த பக்தரெல்லாம் கந்தா உனை நாட
மானிடர் பிரிந்த பின் கூடினாலே வார்த்தையில்லை
மகானுபாவனே உன்னைக் கண்டதற்கு வார்த்தையுண்டோ
மீண்டும் உந்தன் அடியவர் வாழ்வு
உன்னோடு தானே என்றென்றும் இருக்க
உவந்து அருளிடுவாய் உமை மகனே

****************

**கந்தவனம்**

கந்தவனக் கடவையிலே காட்சி தரும் ஆறுமுகா
சாட்சியாய் வந்தெனக்கு மோட்ச நிலை தருவாயோ

எந்தவனம் போனாலும் உந்தன் துணை உண்டென்றால்
கந்தவனம் ஆகிடுமே கவலைகள் தீர்ந்திடுமே

முற்றாகச் சரண் அடைந்தால் முன்னாலே நிற்பாயே
சற்றேனும் தாமதியா சரவண பவகுகனே

இதயக் குகையினிலே குகனாக வாழ்பவனே
உதயமாகி விட்டால் உள்ளதெல்லாம் நீ யன்றோ

நீயும் நானாகி நானும் அதுவாகி
நானற்ற நிலையினிலே நானும் தானாகி
நானற்ற நிலை பெறவே குருவாக வருவாயே
கலி தீர்க்க வந்தவனே பொலிகண்டி வாழ்பவனே



**நல்லூர்**

முருகா முருகா என்று முன் மொழிந்து நின்றாலே
ஆறாக என் மனமே கண்ணில் நீராகப் பாய்ந்திடுமே

நல்லூரின் நாயகனே நல்லவையே தருவாயே
நல்லவையின் தாயகமே நல்ல சிந்தனை ஐயா
நல்ல சிந்தனை என்றால் கருமையெலாம் கரைந்திடுமே
நல்ல மனம் ஆகிடுமே வெள்ளை மனம் மலர்ந்திடுமே
வெள்ளை மனம் தோன்றிவிட்டால் வெண்மயிலில் நீ வருவாய்
வல்லமையெலாம் தருவாய் வண்ண வண்ண கவி பொழிவேன்

மாயையினால் கட்டுண்டு யான் தாயையே மறந்திருந்தால்
கூர் வேலால் குத்திக் கிளறி வேதனையைத் தந்திடையா
நான் வாழ மேதினியில் பாடுபட்ட அனைவரையும்
நல்லபடி வாழவைத்தென் நன்றிக்கடன் தீரய்யா . . .

நல்லூரின் ஆண்டவனே தொல்லையெலாம் தீர்ப்பவனே
வெல்லுகின்ற வேல் கொண்டு என் மனத்தில் வந்திடப்பா
சிந்தனைத் தெளிவுடனே சிந்தையில் நீ அமர
வந்தனையே செய்து நிற்க எந்தனுக்கு வரம் தருவாய் . . .

காதூரில் கேட்டு வந்தேன் கண்ணூரில் கண்டு கொள்ள
வாயூரில் பாடி நின்றேன் வயலூரில் நின்றவனை
காலூரால் நடந்து வந்தேன் கையூரில் வணங்கி நின்றேன்
மெய்யூரில் கண்டுகொண்டேன் பொய்யூரே போனதையா . .

*************

**மாவிட்டபுரம்**

மாவைக்கந்தா நானுன் மலரடியில் - ஓர்
பூவைப்போல் வந்தடைய என்ன வழி சொல்லையா

பூப்போன்ற பெண் ஒருத்தி உன்னையே சரண் அடைய
மாகுட்ட நோய் மாற்றி வண்ண முகம் கொடுத்தாயே

மாகுட்ட நோய் பெற்ற மாருதப் புரவீர
வல்லி என்ற சோழ மன்னன் மகளுக்கு அருள் செய்தவா
பூந்தோட்டத்தில் மங்கை கலைக்கோட்டு மாமுனிவர்
தவக்கோலத்தைக் கண்டு ஏளனமாய்ச் சிரித்ததினால்
மாமுனிவர் சாபத்தினால் குதிரை முகம் பெறவே
தான் செய்த பாபம் தீர ஏறாத கோயிலில்லை

ஈழமணித் திருநாட்டில் வந்தடைந்த வேளையிலே
கீரிமலைக் கேணியிலே தீர்த்தம் ஆடிய பின்
கந்தனைக் கண்டாளோ! காலடியில் விழுந்தாளோ!
காங்கேயன் அருள் சுரக்க வண்ண முகம் பெற்றாளே! . . .

மாகுட்ட நோய் தீர்ந்த காரணத்தினால் இத்தலம்
மாவிட்டபுரம் என்ற பெயர் பெற்ற தன்றுமுதல்
மனம் மகிழ்ந்த மங்கை கந்தனுக்கு கோயில் கட்ட
தந்தை உக்கிரசோழனோ விக்ரகங்கள் அனுப்பிவைத்தான்

ஆடி அமாவாசையில் தீர்த்தமாடும் காட்சி கண்டால்
வாடிய உன் பக்தர் உள்ளம் தாமரைபோல் மலர்ந்திடுமே
பாடிப் பரவசமாய் நானும் துதிக்கின்றேன்
பாராமுகம் ஏனோ மாவிட்டபுரத்தரசே! . . . . .

************

**பழநி**

**தென்னகம் வாழவென்று** சிவன் கொடுத்த இரண்டு
மலைகளுமே இன்று பழனியில் இருக்குதையா!

சிவனார் கொடுத்ததாலோ சிவகிரி என்றாரோ
பழம் அங்கே நின்றதாலோ பழனி என்றாரோ

திருவாவினன்குடி என்பதும் இத்தலம் தானோ
ஆண்டிக்கோலத்தில் அப்பன் நிற்பதும் இங்கு தானோ
வேண்டுவார் வேண்டுவன கொடுப்பதும் இத்தலத்தே
தீராத நோய் தீர்க்கும் தீர்த்தமும் இங்குதானே!

அகத்தியர் இடத்திலே மலை இரண்டைக் கொடுத்து
தென்னகத்தே வை என்றான் தென்னாடுடை சிவனே
அகத்தியரின் அடியன் இடும்பன் என்ற அசுரன்
கம்பொன்றில் மேல் வைத்து காவடிபோல் சுமந்துசென்றான்

இப்படியாக ஓர் நாடகம் நடக்கையிலே
கைலையிலோ முருகன் மாங்கனி கிடைக்காமல்
கவலை மிகவாகி பெற்றோரையும் துறந்து
வந்த வேளையிலே மலை இரண்டைக் கண்டான்

கண்ட முருகனோ அம்மலைகள் தனக்கென்று
வாதிட்டுச் சூரனை வதம் செய்து நின்றவேளை
அகத்தியர் அங்கு வந்து நடந்த கதை கூறவே
அப்பனும் மனம் மகிழ்ந்து இடும்பனையும் மீட்டு

காவலாளி ஆக்கிவைத்து இடும்பனை முன் வணங்கி
தன்னை வணங்குமோர் நியதியும் கூறி நின்றான்
காவடிபோல் மலையைக் காவிச் சென்ற முறையாலே
காவடி எடுப்பது கந்தனுக்கு விருப்பமையா!
******************

**இலண்டன் முருகன்**

இலண்டன் மாநகரினில் நீ கொண்டஓர் கோலமதை
எடுத்துரைக்க வார்த்தை யுண்டோ
உயர் வாசல் குன்றேறும் திருமுருகன் புகழ்மாலை
அனுதினமும் என் உள்ளத்திலே

புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகி
பல்விருகமாகி வருமே - பின்
பறவையாய் பாம்பாகி கல்லாகி மனிதராய்
சொல்லோடு சுவை சேருமே

பேயாகிக் கணங்களாய் வல்லசுரராகியுமே
முனிவராய் தேவராக - எல்லாப்
பிறப்பும் இனிப் பிறப்பதோ அறுப்பதோ
எல்லாம் உன் செயல் அல்லவோ

உருவாகி அருவாகி உளதாகி இலதாகி
மருவாகி மலராகியே - உன்
பாதார விந்தத்தை கண்ணீரால் நீராட்டி
பாமாலை சூட்ட வந்தேன்

மணியாகி ஒளியாகி கருவாகி உயிராகி
கலந்தவனே கதிர் வேலனே - நீ
கதியாகி விதியாகி குருவாகி வருவதை
சந்நிதியில் பார்த்து நிற்பேன்

இலண்டன் மாநகரிலும் எந்தம் மனக் கோயிலிலும்
என்றென்றும் உறையும் குமரா - உன்
கண்கண்ட கோலமும் காட்சியும் நீ நல்க
காலமெல்லாம் காத்திருப்பேனே!
**************

**உலகளாவிய முருகன் ஆலயங்கள்**

சந்நிதி வேலே சஞ்சலம் தீர்ப்பாய்
சந்நிதி வேலே சடுதியில் வருவாய் . . .

அப்பன் கண்ணிலே ஆறு பொறியாகி . .
சரவணப் பொய்கையிலே ஆறு குழந்தையாகி . .
அன்னை அணைத்ததால் ஆறும் ஒன்றாகி ஆறுமுகமாகி . .
திருவிளையாடல் காட்ட வந்த திருக்குமரா - ந
சூரனை வதைத்து சேவல் மயிலாக்கி . . .
காலத்தையும் ஞாலத்தையும் கடந்த கந்தனாகி . .
மாவிட்டபுரத்திலே மாயையை மாளவைத்து . .
நல்லூரிலே நடுநாயகமாய்த் தான் மிளிர்ந்து . .
கந்தவனத்திலே காருண்ய மூர்த்தியாகி . .
வெருகல் நகரிலே வேத சொரூபமாகி . .
சித்தாண்டி வேடனாகி வில்லூண்டி விருத்தனாகி . .
மண்டூர் மன்னனாகி எழுவையில் கோலம் காட்டி . .

கதிர்காம ஷேத்திரத்தில் கருணையின் எல்லையாகி . .
கொழும்பு மாநகரிலே கோலங்கள் பல காட்டி . .
ஆடிவேலாகி ஆடல் காட்டும் அன்பு வடிவேல் முருகா . . .

வயலூர் வள்ளலாகி, கந்த கோட்டக் காவலனாய்
மருதமலை மாமணியாய் மாயங்கள் பல காட்டும்
வட பழனி ஆண்டவா வல்வினைகள் தீருமய்யா
மலேசியா வத்துமலைக்கு வாராத அடியரில்லை
லண்டன் மாநகரிலும் அடியர் நயமாக உனை வேண்ட
கனடா நாட்டிலும் நீ காட்டாத கருணையில்லை
சாம்பியாவிலும் ஓமானிலும் விழாக் கோலம் தனைக்காட்டி
ஆற வந்த  தொண்டைமான் ஆற்றங்கரைப் பூவரச மரத்தடியில்
ஐயா உன் அருள் வேண்டும் அடியருக்கேது பஞ்சம் . . . .

இருந்து கொண்டே பாடுங்கள் நின்று கேட்பேன் என்றாய்
நின்றுகொண்டே பாடினால் ஆடிக்கொண்டே கேட்பேன்
என்றாய்
ஆடிக்கொண்டே பாடினால் அடியர் காலடியில் நீ என்றாய்
பாவலர்க்கு அத்தனை பாக்கியம் நீ கொடுத்தாய்
பாடிக்கொண்டே இருப்பேன் பாராமுகம் போதுமய்யா . . .

அன்னமலை அமைத்து சொர்ணமலை காட்டும்
அன்புத் தெய்வமே வேல் அழகா - நீ . . .
பழனிமலை தேடி ஆண்டியாய் கோலம் காட்டி . .
அடியர் குறை நீக்கி அரசனாய் ஆக்கிவிட்டு . .
சுவாமி மலையிலே தகப்பன் சுவாமியாகி . .
செந்தூர்க் கரையினிலே படைத்தளம் அமைத்து . .
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் அபய கரம் காட்டி
சென்று ஏமகூடம் சூரனை வென்றுமே
மோட்ச நிலை பெற்று திருப்பரம்குன்றத்தில்
தெய்வயானையின் திருக்கரமும் தான் பற்றி . .
அன்பு நிலை காண மான் வள்ளியோடிணைந்து . .

திருத்தணியில் அன்னையர் இருவருடன்
பழமுதிர் சோலையில் பவனியும் தான் வந்தவா சரணம் . . .
ஆறியமர வல்லியாற்றம் கரை தேடி . .
அமர்ந்த சிவமே ! குமரேசா - உனை
வேண்டும் அடியர்க்கு வேண்டுவன தந்தருள
வேலானாய் ! அங்கே வேற்படையுமானாய்
வேழமுகனோடு வேண்டும் தெய்வ அருளையெல்லாம்
வேண்டும் வரை கூட இணைத்து . . . . . .
லிங்கோற்பவத்தையும் சிவநாக தம்பிரானாக்கி . . .
சித்தாகி சிவமாகி சச்சிதானந்தமாய் . . .
தொண்டைமானாற்றருகே தொடரும் வினை தொலைக்க
சித்தம் கொண்டு பூவரச மரத்தருகே . . .புண்ணியனார்
சமாதி மேலே வேலாய் நின்றவனே ! குறிஞ்சிக்குமரா . .
கண்டி கதிர்காமம் காந்தம் போல் கவர்ந்தருள . . .
ஸ்ரீசெல்வச் சந்நிதியாய் ! சிந்தித்து இருப்போர்க்கு
சிந்தையிலே சாயுச்ச நிலை சித்திக்க வைத்து . . .
கல்லோடைக்கரையினிலே காலடியும் தான் பதித்து
காலமெல்லாம் காத்திடும் உன் கருணைக்கு ஏது குறை?

சர்வ மங்களம் ஈட்டும் குமரகுருபரா சரணம் !
ஓம் சரவணபவ குகாய சந்நிதி வேலாய சரணம் !
சட்கோண இறைவா சரணம் ! சரணம் !
*******

**எத்தனை ஆனந்தம் ஆனந்தக் கூத்தனின்** ஆறு பொறிகளும் ஆனந்தம்
எம் குலத் தெய்வம் சந்நிதி வேலனின் நினைவே ஆனந்தம்
அவன் அருளே ஆனந்தம்
தொண்டைமானாற்றம் கரைதனில் தோன்றிய கோவிலே ஆனந்தம்
அங்கே தொழ அடியாரின் வினைகளும் மாயும் உணர்வே ஆனந்தம்
ஸ்ரீ செல்வச் சந்நிதிக் கோவிலின் சன்னிதி காணும் நினைவே ஆனந்தம்
ஞானானந்தம் ஆகவே அமர்ந்த வேலே ஆனந்தம்
வேற்படையே ஆனந்தம்
வேலானந்தம் பரமானந்தம் ஆக அமைவதே ஆனந்தம்
ஆனந்தமயமே அன்பே சிவமாய் அமர்வதே பேரானந்தம்
லிங்கோற்பவமே மூலஸ்தானம் நிறைந்தது ஆனந்தம் - அது
வேற்படை யருகே வீற்றிருக்க வந்த நிலையே ஆனந்தம் - அந்த
உண ர்வே ஆனந்தம்
பாட வந்ததும் கேட்க வந்ததும் அடைவது ஆனந்தம்
வேலானந்தம் சச்சிதானந்தம் அதுவே சந்நிதி ஆனந்தம் - அதுவே
வேலானந்தம்
******

**எத்தனை எத்தனை பூசைகளை நாம் சந்நிதியில்** காண்கின்றோம்
அத்தனையும் கண்டு ஆனந்திக்க அவன் அருள்தானாகப் புரியும்
தொழ வினை தானாக மறையும்

ஆண்டியும் அரசனும் அத்தனைபேரும் அன்னதானத்தில் இணைகின்றார்
ஆத்ம ஞானியோ அறுபத்திமூவரில் ஒருவராய் அமர்கின்றார்
வேலனோடு ஒன்றாய் அமர்கின்றார்

ஹோமத்தை கும்பத்தில் கொணர்ந்து நிற்பது சந்நிதி அபிஷேகம்
நாமத்தின் மகிமையில் நாதன் அருள் சுரக்கும் பூவரச மரத்தடியில்
அங்கே பாவரசாய் நீ மிளிர்வாய்

சரி பிழை பாராச் சந்நிதியில் நீ வருவதை ஏற்றிட மனம் கொண்டால்
நடந்தது நடப்பது நடக்க இருப்பது நல்லது ஆகவே அமையும்
சொல்லதின் சுவையே புரியும்

அன்னமலையிலும் சொர்ணமலையிலும் வேலவன் இருப்பதை மறந்தாயோ
வேண்டுவார் வேண்டுவதை வேளைக்கே அருளும் அருளே சந்நிதி ஆகும்
அது எந்நிதியும் தரும் வேலே

கந்தனை வேண்டி கந்தஷஷ்டியை கடும் விரதமாகக் கொண்டாலே
கேட்பதையெல்லாம் அள்ளித்தர அவன் கதவில்லா வாசலில் நிற்பான்
வேலன் கருணை ஆறாக ஓடும்

காலபயம் நீக்கும் மூலமந்திரத்தை கருத்தினில் கொண்டுவிட்டாலோ
வரமுன்னே வரம்தரும் வள்ளலாய் உந்தன் வாசலில் வந்திடுவானே
வந்து கேட்பதை அள்ளித் தருவானே

******

**சக்தி வேல் சித்தி வேல் சந்நிதிக் கந்தா**
**தங்க மயில் மீதேறி வந்து சுகம் தா**

பத்தாம் திருவிழாவில் சந்நிதிக் கந்தா - உன்
பக்தர் எல்லாம் கூடுகின்றார் சந்நிதிக் கந்தா
ஏங்கா மனம் தந்திடவே சந்நிதிக் கந்தா - நீ
பூங்கா வனம் ஏறிடுவாய் சந்நிதிக் கந்தா
நாகம் குடை பிடிக்க சந்நிதிக் கந்தா - நீ
வீதி வலம் வருவாயே சந்நிதிக் கந்தா

சித்திரத் தேர் மீதேறி சந்நிதிக் கந்தா - நீ
தீரா வினை தீர்க்க வந்தாய் சந்நிதிக் கந்தா
பக்தர்களின் உள்ளம் எல்லாம் சந்நிதிக் கந்தா - அங்கே
பம்பரமாய் ஆடிடுமே சந்நிதிக் கந்தா
ஆவணியின் பூரணையில் சந்நிதிக் கந்தா - நீர்
ஆடும் தீர்த்த அழகு என்ன சந்நிதிக் கந்தா
தொண்டர் குறை தீர்க்க வென்றோ சந்நிதிக் கந்தா - நீ
கொண்டாய் மௌன விழாக் கோலம் சந்நிதிக் கந்தா
பதினாறு செல்வம் பெற சந்நிதிக் கந்தா - உமக்கு
பதினாறு விழாக் கோலம் சந்நிதிக் கந்தா

கார்த்திகையின் தீபத்திலே சந்நிதிக் கந்தா - நீ
கனக ஊஞ்சல் ஆடிடுவாய் சந்நிதிக் கந்தா
தைப் பூச நன்நாளில் சந்நிதிக் கந்தா - உந்தன்
தண்டை ஒலி கேட்குதையா சந்நிதிக் கந்தா
ஆனிப் பொங்கல் விளக்கெரிய சந்நிதிக் கந்தா
ஆழ்கடலில் நீரெடுப்பர் சந்நிதிக் கந்தா
கதிர்காமப் பயணத் தன்று சந்நிதிக் கந்தா - உமக்கு
கட்டிடுவார் உழுத்தம் புட்டு சந்நிதிக் கந்தா
கதிர்காமத் தீர்த்த நாளில் சந்நிதிக் கந்தா - இங்கே
காட்சி தருவேன் என்றாயே சந்நிதிக் கந்தா
வரும் நாளில் பகல் வேளை சந்நிதிக் கந்தா - எங்களாற்றை
மாணிக்க நதி ஆக்குவாயே சந்நிதிக் கந்தா
கதிர்காம காட்சி எல்லாம் சந்நிதிக் கந்தா - இங்கே
கண்டிடுவார் அடியரெல்லாம் சந்நிதிக் கந்தா
பறந்து வருவாய் என்று சந்நிதிக் கந்தா - உமக்கு
பயற்றம் துவையல் வைத்திடுவர் சந்நிதிக் கந்தா
இளைத்து வருவாயென்று சந்நிதிக் கந்தா - உமக்கு
இளநீரும் வெட்டி வைப்பர் சந்நிதிக் கந்தா

தேடும் அடியர் வருமுன்னே சந்நிதிக் கந்தா
தீர்த்து வைப்பாய் வினைகளெல்லாம் சந்நிதிக் கந்தா

சோர்ந்து வரும் அடியருக்கு சந்நிதிக் கந்தா - நீ
துயர் தீர்க்கும் மாமருந்து சந்நிதிக் கந்தா
களைத்து வரும் அடியருக்கு சந்நிதிக் கந்தா - நீ
பசி தீர்க்கும் அன்னமலை சந்நிதிக் கந்தா
இல்லையென்றார் வாசலிலே சந்நிதிக் கந்தா - நீ
இருள் விளக்காய் நின்றிடுவாய் சந்நிதிக் கந்தா
உண்டென்றார் வாசலிலே சந்நிதிக் கந்தா - நீ
ஒளி விளக்காய் நின்றிடுவாய் சந்நிதிக் கந்தா
அன்பான அடியவர்க்கு சந்நிதிக் கந்தா - நீ
அருள் விளக்காய் நின்றிடுவாய் சந்நிதிக் கந்தா
புகழ்பாடும் அடியவர்க்கு சந்நிதிக் கந்தா - நீ
பொன் விளக்காய் மின்னிடுவாய் சந்நிதிக் கந்தா
ஆலமிலை அமுதாகி சந்நிதிக் கந்தா - நீ
அடியர் பிணி தீர்த்திடுவாய் சந்நிதிக் கந்தா
வேற்கரணித் தீர்த்தமது சந்நிதிக் கந்தா - அடியர்
வினை போக்கும் மாமருந்து சந்நிதிக் கந்தா
தீவினையை வேரறுக்க சந்நிதிக் கந்தா - நீ
திருநீறாய் நின்றிடுவாய் சந்நிதிக் கந்தா
பழுத்த பூவரச இலையை சந்நிதிக் கந்தா - நீ
பணமாக மாற்றிடுவாய் சந்நிதிக் கந்தா
புண்ணியனார் சமாதியிலே சந்நிதிக் கந்தா - நீ
பூவரசாய் நின்றிடுவாய் சந்நிதிக் கந்தா
பூவரச நிழல் நாடி சந்நிதிக் கந்தா - உன்
புகழ் பாடும் அடியர் கோடி சந்நிதிக் கந்தா
கதவில்லா வாசலோரம் சந்நிதிக் கந்தா - மக்கள்
கஷ்டமெல்லாம் போக்கிடுவாய் சந்நிதிக் கந்தா
சாத்தாத் தலைவாசல் சந்நிதிக் கந்தா - செல்வச்
சந்நிதியில் தானுண்டு சந்நிதிக் கந்தா
வல்வினையை தானறுக்க சந்நிதிக் கந்தா - நீ
மாவிளக்காய் நின்றிடுவாய் சந்நிதிக் கந்தா
பஞ்சாமிர்தம் உண்டவர்க்கு சந்நிதிக் கந்தா - துன்பம்
பஞ்சாய்ப் பறந்திடுமே சந்நிதிக் கந்தா

தீ மிதிப்போர் காட்சியிலே சந்நிதிக் கந்தா - உந்தன்
திருக்கோலம் தெரியுதய்யா சந்நிதிக் கந்தா
பாற்கலச மத்தியிலே சந்நிதிக் கந்தா - உந்தன்
பசுமைக்கோலம் தெரியுதையா சந்நிதிக் கந்தா
கற்பூரச் சட்டியிலே சந்நிதிக் கந்தா - உந்தன்
கருணை முகம் தோன்றுதையா சந்நிதிக் கந்தா
காவடியின் ஆட்டத்திலே சந்நிதிக் கந்தா - உந்தன்
கனத்தஒளி வீசுதையா சந்நிதிக் கந்தா
பாடிடுவோர் முன்னிலையில் சந்நிதிக் கந்தா - நீ
ஆடும் காட்சி அழகு என்ன சந்நிதிக் கந்தா
வினை எல்லாம் வேரறுக்க சந்நிதிக் கந்தா - இங்கே
வேலாக நின்றாயே சந்நிதிக் கந்தா
கனவினிலே சொன்னதெல்லாம் சந்நிதிக் கந்தா
நனவினிலே நடக்குதையா சந்நிதிக் கந்தா
உள்ளம் களவெடுக்க சந்நிதிக் கந்தா
உம்மைப் போல யாருமில்லை சந்நிதிக் கந்தா
பூசகரின் கால் தொழவே சந்நிதிக் கந்தா - நீ
போட்டிடுவாய் திரு நீறு சந்நிதிக் கந்தா
உன் வரலாறு தான்கேட்டு சந்நிதிக் கந்தா - இங்கே
வாய் கட்டி மௌனப் பூசை சந்நிதிக் கந்தா
நேர்த்தி வைப்பர் அன்னமலை சந்நிதிக் கந்தா - எண்ணம்
பூர்த்தி செய்வதுன் பொறுப்பு சந்நிதிக் கந்தா
அடியர் பசி போக்கவென்றோ சந்நிதிக் கந்தா - நீ
அன்னமலை ஆகிடுவாய் சந்நிதிக் கந்தா
உண்டு பசி ஆறிய பின் சந்நிதிக் கந்தா - கட்டிக்
கொண்டுமல்லோ போய்விடுவர் சந்நிதிக் கந்தா
கொண்டுபோன இடத்திலெல்லாம் சந்நிதிக் கந்தா - செல்வம்
கொழித்து மலை ஆகிடுமே சந்நிதிக் கந்தா
அள்ள அள்ளக் குறையாத சந்நிதிக் கந்தா - நீ
அன்னமலைச் செல்வமல்லோ சந்நிதிக் கந்தா
அன்னமலை படைத்தார்க்கு சந்நிதிக் கந்தா - பல
சொர்ணமலை காட்டிடுவாய் சந்நிதிக் கந்தா

எண்ணும் சுகங்கள் வரும் சந்நிதிக் கந்தா - இதை
இருந்து உணர்ந்து கேட்டவர்க்கு சந்நிதிக் கந்தா
விண்ணின் சுகங்கள் வரும் சந்நிதிக் கந்தா
விரும்பி இதைப் பாடுவோர்க்கு சந்நிதிக் கந்தா

சக்தி வேல் சித்தி வேல் சந்நிதிக் கந்தா
தங்க மயில் மீதேறி வந்து சுகம் தா ( தவத்திரு வே . முருகேசு சுவாமிகள். )

**வேலாஷ்டகம்**

பரப்பிரம்ம பரிபூரண சந்நிதி
ப்ரம்மவிஷ்ணுசதாசிவ சங்கம சந்நிதி
ஆழ்ந்து அகன்று ஓங்கிய சந்நிதி
அவனே பெயர் வைத்த அவன் செல்வச் சந்நிதி

சிவனை வணங்க வந்த சீர் பெற்ற சந்நிதி
மகனாரின் கோயிலாய் மாறிய சந்நிதி
அவனவன் வினைகளைப் போக்கிடும் சந்நிதி
சிவமயமாக்கிடும் சோமாஸ்கந்த சந்நிதி

சந்நிதி சந்நிதி சர்வம் சந்நிதி
எந்நிதியும் தரும் ஸ்ரீ செல்வச் சந்நிதி
கலியுக வரதனின் கருணைநிறை சந்நிதி
கந்தபுராணகாலத்தே தோற்றுவித்த சந்நிதி

வருமடியார்களின் குறைதீர்க்கும் சந்நிதி
வரமுன்னே வரம் தரும் வள்ளலின் சந்நிதி
அன்னமலை சொர்ணமலை அவன் செல்வச் சந்நிதி
அடியாரின் சொர்க்கபூமி ஆகிடும் சந்நிதி

இந்துமத கிளைகள் இணைந்திடும் சந்நிதி
சொந்தமாக்கி சுகமீட்டும் சுப்ரமண்ய சந்நிதி
வேண்டுவார்க்கு வேண்டுவன காட்டும் வேலன் சந்நிதி
தாண்டவழியும் தரும் ஸ்ரீ செல்வச் சந்நிதி

தாயாக வேண்டிநின்றால் பொருளீட்டும் சந்நிதி
தந்தையாய் வேண்டி நிற்க தயை காட்டும் சந்நிதி
குருவாக கொள்ள தயை அருளாகும் சந்நிதி
குன்றேறி விளையாடும் குமரனின் சந்நிதி

தொண்டைமான் ஆற்றருகே தோன்றிய சந்நிதி
தொண்டர்களின் குறை தீர்க்கும் ஸ்ரீ செல்வச் சந்நிதி
அஷ்டமா சித்திகளை அருளிடும் சந்நிதி
இஷ்டமாயிருப்போரின் இன்பராகம் சந்நிதி

சும்மா இருக்க வைத்து சுகமீட்டும் சந்நிதி
கதிரமலை நிலையைக் காட்டிடும் சந்நிதி
மாணிக்கமாய் மனதை மாற்றிடும் சந்நிதி
காணிக்கையாயிரு கந்தன் கருணையே சந்நிதி
******************

**சந்நிதிப் பத்து**

**வேலவன் சிவனை பூஜித்த** சந்நிதி
வேண்டும் அடியார்க்கு கிடைக்கும் எந்நிதி
தாண்ட வழி கேட்டால் வாழ்வில் நிம்மதி
ஆண்டவன் உறையும் ஆற்றங்கரை சந்நிதி

நெஞ்சில் நினைத்திடு அப்பனின் சந்நிதி
வஞ்சகம் தானறு என்றும் நிம்மதி
சஞ்சல புத்தியை மாற்றிடும் சந்நிதி
எங்கள் குருபரன் வாழ்ந்திடும் சந்நிதி

சூரபத்மனையும் ஏற்றவன் சந்நிதி
வேறுபாடில்லாத வேலவன் சந்நிதி
கூறுமடியார்கள் கும்பிடும் சந்நிதி
மாறில்லா வள்ளி வேல் வாழ்க சந்நிதி

அண்ணனோடிணைந்த மாணிக்க சந்நிதி
அடியவர் வேண்டிட பெருகிடும் சந்ததி
அன்னை தந்தையுடனே மூலஸ்தான சந்நிதி
எல்லையைக் காத்திட வைரவர் சந்நிதி

வேலே சந்நிதி வினை போக்கும் சந்நிதி
மால்மருகன் துணை தெய்வானை சந்நிதி
காலம் கூட நிற்கும் வள்ளியம்மன் சந்நிதி
காட்டும் வழிதான் அன்பே சந்நிதி

பூவரச மர நிழலில் நிம்மதி
புண்ணியனார் சமாதிமேல் உந்தன் சந்நிதி
புகழ்பாடும் அடியார்கள் போற்றும் பெரும்நிதி
இகபர சுகங்கள் அருளும் சந்நிதி

ஆற்றங்கரை யோரம் அறுமுகன் சந்நிதி
அன்னமலைமேலே அழகனின் சந்நிதி
ஆலும் அரசும் பூவரசும் சந்நிதி
நால் வேதப் பொருளாம் நாயகன் சந்நிதி

காவடி ஆட்டத்தில் கந்தனின் சந்நிதி
கற்பூரச் சட்டியில் வெந்தது உன் பிணி
காலம் காப்பான் அதுவே சந்நிதி
ஞாலமுள்ள வரைக்கும் மறவோம் சந்நிதி

அன்பே சந்நிதி அருளே சந்நிதி
அவனை நினைப்பார் நெஞ்சே சந்நிதி

ஆணவம் அழித்தால் அங்கே சந்நிதி
ஆண்டவன் உறைவான் அதுவே நிம்மதி

சந்நிதி சந்நிதி சர்வம் சந்நிதி
எந்நிதி தரும் வள்ளல் வேலவன் சந்நிதி
சந்நிதி சந்நிதி சாயுச்யம் சந்நிதி
எந்நிதியும் தரும் ஸ்ரீ செல்வச் சந்நிதி
*************

**ஞானமும் நீயே கந்தா ஆனந்தமும் நீயே கந்தா**
ஞானானந்த வெள்ளமதில் நீந்த அருள்வாயே கந்தா

தொண்டைமானாற்றருகே தொண்டர்களைக் காக்க வந்தாய்
தொலையாத வினை தீர்க்க வேலாகக் காட்சி தந்தாய்
இலைமீது அமுது தந்தாய் சிலையாகவும் நின்றாய்
வலை வீசி நின்றவரை அருளாலே ஆட்கொண்டாய்

ஆட்கொண்டது போதாதென்று பூசையும் தான் பெற்றாய்
பூசையின் சிறப்பறிய புண்ணியனை வரவும் வைத்தாய்
அறிந்த பின் அவனை உந்தன் அருகினிலே அடங்க வைத்தாய்
அடக்கத்தின் மேலே ஓர் பூவரசைத் தோற்றவைத்தாய்

பூவரசைத் தலவிருட்சமாய் போற்றவேண்டும் என்று சொன்னாய்
தேவரசன் குறைகளையெல்லாம் தீர்த்து வைத்தாய் இத்தலத்தில்
பாவரசன் அருணகிரிக்கு பதமலரைத் தந்தது போலே
கவியரசாய்க் கதிர்காமரை ஆக்கி நீயும் களிப்படைந்தாய்

அவர் அருகே நீ இருந்து ஆடிடவும் பாடிடவும் - அமைத்த
அந்தத் திண்ணை அருகே எந்தனையும் பாட வைத்தாய்
ஆறாத துயரமெல்லாம் நீறாக மாறுதங்கே
ஆறாக ஓடும் மனதில் தியான நிலை கூடுதங்கே

அன்னதானக் கந்தனாகி அடியர் பசி எல்லாம் தீர்த்தாய்
ஆலம் இலை மீது அமுதாகிப் பிணி தீர்த்தாய்
புண்ணியனார் சமாதி கண்ட பூவரச மரத்தருகே
எங்களையும் பாட வைத்து என்ன சுகம் நீ கண்டாய்

சுகம் எல்லாம் அடியருக்கே சொர்க்கமும் அவர்களுக்கே
சொந்தம் என்றால் நீயே அன்றி வேறேது வேல் முருகா
அன்னையுமாய்த் தந்தையுமாய் அருட்குருவாய் தெய்வமுமாய்
ஆதரித் தெனையாளும் உன் பொன்னடிகள் தான் வேண்டும்

கல்லோடைக் கந்தன் ஆகி காக்கவும் செய்கின்றாய்
காலடியும் தந்த பின்னே காத்துமே நிற்கின்றாய்
காவடியாய் ஆடவும் வைத்தாய் காலடியில் அடங்கவும் வைத்தாய்
காலமெல்லாம் காத்திருப்பேன் உன் திருவடியில் சரண் அடைய
***********************

**என் இதயக் கோவிலும் நீயே அங்கு வாழும்** தெய்வமும் நீயே
ஆற ஆற்றங்கரை நின்றாலும் ஆறுமுகன் பெரும் நிதியே
நான் என்றதெல்லாம் இனி நீயாக மாற வேண்டும்
அன்னமலைச் செல்வம் எந்தன் எண்ணமலை ஏறவேண்டும்
நீயே எந்தன் தெய்வம் நானோ உந்தன் அடிமை
நானற்ற நிலை தந்தாலோ எல்லாம் நீயே என்று
வண்ணத் தமிழ் பாவாலே வாழ்த்தி வணங்குவேன்

கடலில் நின்ற கதிர்காமரை கரைக்கு இழுத்த கதை கூறவா
அழைத்து வந்த அறுபத்தி மூவர்க்கு அமுது படைத்த விதம் கூறவா
அன்னவனை ஆட்கொண்ட பின்னே பூசை ஏற்ற விதம் கூறவா
ஆலமிலை அமுதனைத்தும் மறைந்தவிதம் நான் கூறவா

செந்தூரில் களம் அமைத்தாலும் சந்நிதியில் வேல் கொடுத்தாய் - அன்று
சென்ற ஏமகூடத்திலும் வெற்றி வேற்கொடி வைத்தாய் - இன்று
கதிர்காமம் கொடியேற சந்நிதியின் வேல் போகவேண்டும்
தீர்த்தமும் ஆடியபின்னே திரும்பி இங்கே வரவேண்டும்

போவதையும் வருவதையும் காண்பவர்கள் இன்றும் உண்டு
அரசமிலை அசைவதையும் பயறியிலை சிலிர்ப்பதையும்
பார்ப்பவர்கள் கண்களெல்லாம் தொண்டைமான் ஆறாவதும்
பக்தியின் பரிணமிப்போ அன்றி முக்திக்கு முதற்படியோ

அன்னதான மடங்களிலெல்லாம் அன்றாடம் வருவதுண்டு
அன்போடு கவனிப்போர்க்கு தொல்லைகளும் தருவதுண்டு
பாடுவோரின் பக்கத்திலே பாலகனாய் ஆடுவதுண்டு
ஆனமட்டும் ஆட்டிவிட்டு பின் அருள் மழையும் பொழிவதுண்டு

அருள் மழையில் நனைந்தவர்க்கு சந்நிதிதான் சொர்க்கமம்மா
எந்நிதியும் நாடாமல் அவர் உன்னுடனே இருந்திடுவர்
அன்னவர்க்கு சேவை செய்ய அடியனை நீ அழைப்பதெப்போ
அந்த நாள் வரும்வரை எந்தன் மனதில் அமைதி தந்தருள்வாய்
*******

## மாதாந்த விழாக் கோலம்

தை பிறக்க வழி பிறக்கும் சந்நிதி வேலா
தைப் பூச நாள் வருமே சந்நிதி வேலா

மாசி மாதம் சிவராத்திரி சந்நிதி வேலா
காசி சென்ற பலன் கிட்டுமே சந்நிதி வேலா

பங்குனியின் உத்தரத்தில் சந்நிதி வேலா
பழனி மலை இங்கு வரும் சந்நிதி வேலா

சித்திரையில் புது வருடம் சந்நிதி வேலா
பிறக்க அருள் சுரந்திடுமே சந்நிதி வேலா

வைகாசி விசாகத்தில் சந்நிதி வேலா - உன்
விழாக் கோல அழகு என்ன சந்நிதி வேலா

ஆனித் திங்கள் பொங்கல் இங்கு சந்நிதி வேலா
அன்னை கதை அற்புதமே சந்நிதி வேலா

ஆடி அமாவாசையிலே சந்நிதி வேலா - நீ
கதிர்காமப் பயணமோ சந்நிதி வேலா

ஆவணியிலுன் விழாக் கோலம் சந்நிதி வேலா
மூவுலகும் கொண்டாடும் சந்நிதி வேலா

ஆவணியின் பூரணையில் சந்நிதி வேலா - கருணை
ஆறாகிக் கடலாகும் சந்நிதி வேலா

அடியார் பூசைச் சிறப்பையெல்லாம் சந்நிதி வேலா
ஆவணியில் கண்டிடலாம் சந்நிதி வேலா

பதினாறு செல்வங்களைச் சந்நிதி வேலா
பகிர்ந்தளிக்கும் காலமல்லோ சந்நிதி வேலா

புரட்டாசி நவராத்திரி சந்நிதி வேலா
கேட்கும் வரம் கொடுப்பாயே சந்நிதி வேலா

ஐப்பசியில் கந்த சஷ்டி சந்நிதி வேலா
அற்புதமாய் அமைந்திடுமே சந்நிதி வேலா

சூர சம்ஹாரக் கோலம் சந்நிதி வேலா
சுப்ரமண்யமாய்த் தெரியும் சந்நிதி வேலா

கார்த்திகையின் தீப ஒளி சந்நிதி வேலா
குழந்தை வடிவம் நெஞ்சில் நிறையும் சந்நிதி வேலா

மார்கழியில் திருவெம்பாவை சந்நிதி வேலா
மாதம் முழுதும் அருள் வெள்ளம் சந்நிதி வேலா

சக்தி வேல் சித்தி வேல் சந்நிதி வேலா
தங்க மயில் மீதேறி வந்து சுகம் தா
**************

**ஏறப்போகுது கொடி ஏறப்போகுது**

கோலமயில் வாகனனின் கொடி ஏறப்போகுது
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் கொடி ஏறப்போகுது
சத்ரு சங்ஹாரன் கொடி ஏறப்போகுது
சந்நிதியான் சேவல் கொடி ஏறப்போகுது

பறக்கப் போகுது கொடி பறக்கப் போகுது
பரமசிவன் மைந்தன் கொடி பறக்கப் போகுது
பார்வதியாள் பாலன் கொடி பறக்கப் போகுது
பக்தர்களின் துயரம் எல்லாம் பறக்கப் போகுது

உயரப் போகுது கொடி உயரப் பொகுது
துயரமெல்லாம் துரும்பாகி மறையப் போகுது
துன்பமெல்லாம் பஞ்சாகிப் பறக்கப் போகுது
சஞ்சலமும் சங்கடமும் சருகாகப் போகுது

நிறையப் போகுது கந்தன் அருள் நிறையப் போகுது
சன்மார்க்க நெறி உலகில் நிறையப் போகுது
நம்பினவர் மனதில் அமைதி நிறையப் போகுது
முருகன் அருள் மூவுலகும் நிறையப் போகுது

ஏறப் போகுது கொடி ஏறப் போகுது
ஆறுமுகன் ஏறுமயில் ஏறப் போகுது
சண்முகமே எம்முகமாய் ஆகப் போகுது
குமரன் அருள் குவலயத்தில் ஏறப் போகுது

சஞ்சலங்கள் தீர்ப்பதெல்லாம் சந்நிதிக் கொடியே
சங்கடங்கள் மறையும் இடம் சந்நிதிக் கொடியே
சரவணபவ சண்முகமே சந்நிதிக் கொடியே
சாயுட்ச நிலைகாண சந்நிதிக் கொடியே

வேதாந்த வெளி தன்னிலே சந்நிதிக் கொடியே
ஏகாந்த நிலை காட்டும் சந்நிதிக் கொடியே
நாதாந்த நலமெல்லாம் சந்நிதிக் கொடியே
நம்பினோர்க்குக் காட்டிடுமே சந்நிதிக் கொடியே

தொண்டைமான் ஆற்றருகே கொடி ஏறப்போகுது
தொண்டர்களின் குறைகள் எல்லாம் மறையப் போகுது
**************

**வள்ளிக் கொடி தான்முளைக்க**
வள்ளலவன் கொடியேற
வாடி நின்ற அடியவர் கூட்டம்
அலை அலையாய் மாறுதையா - ஆற்றங்
கரை தேடி ஓடுதையா - மனங்கள்
சந்நிதியைத் தேடுதையா!

தான் அமைத்த சந்நிதியில்
ஆனைமுகன் அருகிருக்க - தெய்வ
யானைதனை அருகிருத்தி - தேனும்
தினை மாவும் வேண்டி வேலன்
வள்ளி வாசல் செல்வானே - அழகன்
வேண்டும் வரம் அருள்வானே!

கதிர்காமம் சென்று வந்த
களையெல்லாம் மாறமுன்னே
அடியவரின் குறை தீர்க்க - அப்பன்
வீதி வலச் சம்மதமோ - சந்நிதியில்
ஆவணியின் பெருவிழாவோ - அது
அடியருக்குத் திருவிழாவோ!

ஆறுபடை வீடு சென்று
அறுமுகனைத் தேடி நின்று
அழுதழுது தொழுது நின்றேன் - ஆற்றங்
கரையில் அமைதி தந்தாயே!
பூவரச மரத்தடியில், பூவாக எனை மாற்ற
ஆலரசுச் சோலையிலே, அடிக்கடியே வந்தாலும்
பா இதழைத் தந்தெந்தன் பயணத்தைத் தடுத்தாயே
கடமையெல்லாம் தீர்த்தபின் தான் - இனி
தரிசனமே தருவாயோ?

கோவில் காணாக் கவலை மாற்ற
வீட்டையே கோவிலாக்கி
திருவிழாப் பூசையெல்லாம்
செய்ய வைத்த வள்ளலே!

வள்ளலவன் கொடியேற
வல்வினைகள் பறந்தோட
வேலன் புகழ் பாட வந்தோம்
வேதனையைத் தீர்த்திடையா - வாழும்
வழிதன்னைக் காட்டிடையா!

*******

**வேலவன் வந்தான் வேலவன் வந்தான்** ஆற்றங்கரையிலே
அவன் வீதியோர மடங்களையும் பார்த்து வருவான்

கடைத்தேற இனி வழியில்லாமல் கந்தா என்று வந்தவர்க்கவன்
கதவில்லா வாசலிலே காத்துக் காத்து நின்றிடுவான்

அமுதளித்துப் பிணி தீர்த்து தீர்த்தத்தாலே வினையும் போக்கி
பூசகரை வணங்க வைத்து திருநீற்றையும் தான் இட்டு

பூவரச நிழலினிலே நோய்களையும் தான் மாற்றி
புது வாழ்வையும் காட்டி புத்துணர்வையும் கொடுத்து

மடங்களிலே அன்னமளித்து களையாற இடமும் வைத்து
களை தீர்ந்த பின்னாலே கலி தீர்க்க மனமும் கொண்டு

அருளாற்று அருகினிலே ஆராரோ தான் பாடி
இருளாற்று அஞ்ஞானம் இனி உனக்குப் போதுமென்று
ஆராரோ நீயாரோ . . . .அருமையான குழந்தையாரோ

முருகா என்று மொழிந்ததினால் முன்வினையும் முடிந்ததோடா
கந்தா என்று கதறியதால் கர்மவினை கரைந்ததோடா
குமரா என்று கும்பிட்டதால் குழப்பமெல்லாம் குறைந்ததோடா
வேலா என்று வேண்டியதால் வேதனையும் போனதோடா
ஆராரோ நீயாரோ அருமையான குழந்தை யாரோ

******************

**தேவரும் மனிதரும் தினம்** தினம் பூசிக்கும்
ஸ்ரீ செல்வச் சந்நிதி **அலங்காரம்**
காணக் கண் ஆயிரம் வேண்டும்
அந்தக் காட்சியே அலங்காரம்!

கற்பூர ஜோதியில் வேற்படைக் காட்சி
காண்பதே கண்ணுக்கு அலங்காரம்

அன்னமலை அருகே குழந்தை வடிவேலன்
குறுநடை கண்டால் அலங்காரம்!

ஆற்றங்கரை அருகே அறுமுகவேலன்
ஆடி வருவதே அலங்காரம்
கல்லோடைக்கரையினில் கந்த வடிவேலன்
காலடி கண்டால் அலங்காரம்!

வீரபாகு தேவர் சந்திகாலப் பூசை
செய்ததே அலங்காரம்
அப்பனைப் பூசை செய்தபின் வேலன்
காட்டிய அபயம் அலங்காரம்!
தொழும் அடியாரின் வினைகளெல்லாம்
இங்கே தொலைவது அலங்காரம்
நினைப்பவர் நெஞ்சில் வேலாக
வேலன் இருப்பது அலங்காரம்!

புண்ணியனார் சமாதியில் பூவரசு
தோன்றியது சந்நிதி அலங்காரம்
அதனருகே வேலன் வேலாக
வீற்றிருக்க வந்தது அலங்காரம்!

கடலிலே நின்ற கதிர்காமரை வேலன்
கரைக்கு அழைத்தது அலங்காரம்
வாய் கட்டிப் பூசை செய்ய
வைத்தது எத்தனை அலங்காரம்!

அவருக்குப் பின்னால் வந்தவர் எல்லாம்
பூசை செய்யும் விதம் அலங்காரம்
பூசை காண வந்த என்னையுமே
பூவாய் மாற்றியது அலங்காரம்!

சரவணப் பொய்கை வேற்கரணி
ஆவது சந்நிதி அலங்காரம்
சந்நிதிக் கோலம் காண்பதே வாழ்வில்
மனிதனுக்கு அலங்காரம்!

இத்தனை அலங்காரம் **கந்தர் அலங்காரம்**
ஆகவே ஆவது அலங்காரம்
ஆறுமுகமுமே அலங்காரமாவது
**மொழிக்கே அலங்காரம்** - தமிழ்
மொழிக்கே அலங்காரம்! **.............**

**வேலவன் வீதி வரும்வேளை** - வேலில்
வெற்றிலைத் துண்டினைக் கண்டோம்
பத்திர முத்திரை வேலவனே - எங்கள்
பத்தரை மாற்றுப் பசும்பொன்னே . . .

சந்நிதி வேலனின் திருவிளையாடலால்
வந்த ஓர் கதையின் ஞாபகமே
வெற்றிலை மடங்கும் திரிகோண
சக்தி மூர்த்தம் கொண்ட வெள்ளிவேல் ஆனான்

சிவமுனி சிகண்டி சீடருடன்
கதிர்காமம் செல்லும் காட்டு வழியிலே
கண்டான் மதம் கொண்ட யானை ஒன்று - தன்
சீடரைத் துரத்தி வருவதையே

வேலை நினைத்தான் வேண்டி நின்றான்
வெற்றிலை எடுத்தான் மந்திரம் ஜெபித்தான்
அம்புபோல் அதனை யானைமேல் ஏவ
யானையும் மறையவோர் கந்தர்வன் நின்றான்

யானைச் சாபமும் நீங்கிய நிலையில்
ஐராவசு என்ற கந்தர்வன்

சிகண்டி முனிவரையும் வணங்கி நின்றான்
சிங்கார வேலனின் கருணையை உணர்ந்தான்!

இருவரும் முருகனை வணங்கிடவே
வேலனும் அங்கு காட்சி தந்தான்
சிகண்டியின் பக்தியை மெச்சியுமே
கதிர்காமம் வந்தென்னைக் காண்பாய் என்றான்!

ஐராவசுவும் அவன் அருள் வேண்ட
வடபதியாம் செல்வச் சந்நிதியில்
நடக்கும் பூசைமுறைச் சிறப்பறிவாய்
ஆட்கொள அங்குநான் வருவேன் என்றான்!
கந்தனின் பூசைச் சிறப்பறிய
கந்தர்வனும் சந்நிதி வந்தான்
முருகநாகர் என்ற பெயரிலே
முருகனை இங்கு வணங்கி நின்றான்

அன்னவனை ஆட்கொண்டிடவே
அப்பனின் அருள் அங்கு தோன்றிடவே
அவனும் சமாதி நிலை கொண்டான்
அதன்மேல் பூவரசும் தோன்றியதே!

அதனருகே அப்பன் வேலாகி நின்று
பூவரசைத் தல விருட்சம் என்றான்
என்னை வணங்கும் அடியர் எல்லாம்
பூவரசைப் போற்ற வேண்டும் என்றான்

வெற்றிலை வேலாய் மாறியதாலும்
யானைச் சாபம் தனை நீக்கியதாலும்
வெற்றிலைத் துண்டினை வைத்துக் கொண்டே
வேலவன் வீதி வருகின்றான் ......

**************

**ஆற்றங்கரை வேலனுக்கு ஆவணியில்** பெருவிழாவாம்
அடியவர்கள் திருக்கூட்டம் அலைமோதிப் பாயுதிங்கே
வருமடியார் குறைகளெல்லாம் வரமுன்னே தீர்த்துவைக்கும்
வடிவேலன் பெருங்கருணை வார்த்தைகளில் அடங்கிடுமோ
எந்தன் வார்த்தைகளில் அடங்கிடுமோ

பசி ஆற மடங்களிலே ஆக்கிவைத்த அன்னமலை
மலை கண்ட மால்மருகன் தன்னைக் குழந்தையாக மாற்றியுமே
குன்றேறி விளையாட அன்னமலை ஆறுதங்கே
அடியர் பசி தீருதங்கே அப்பன் அருள் சொரியுதங்கே

சந்நிதியின் பெரும்நிதியே சரவணபவ சண்முகமே
சங்கடங்கள் தீர்ப்பதிலே உனையன்றித் தெய்வமில்லை
வேலுண்டு மயிலுண்டு வேண்டும் துணை நீ என்று
வேண்டுபவர் வாழ்வினிலே வேதனைகள் இனியேது

ஆற்றங்கரை வேலவனே ஆறுமுகத் திருவடிவே
ஆறாத துயரங்கள் ஆற்றருகே இனியேது
ஆடி வரும் காவடியில் உன் அழகு முகம் காணவேண்டி
கூடிவந்த அடியவர்கள் கும்பிட்டு நிற்கையிலே
நெஞ்சத்துக் கனலெல்லாம் கற்பூர ஜோதியாக
கசிந்துருகித் தொண்டைமான் ஆற்றினிலே சங்கமமோ
*******

**ஆற்றங்கரை வேலனுக்கு ஆவணியில்** பெருவிழாவாம்
அடியவர்கள் திருக்கூட்டம் அலைமோதிப்பாயுதிங்கே
வருமடியார் குறைகளெல்லாம் வரமுன்னே தீர்த்துவைக்கும்
வடிவேலன் பெருங்கருணை வார்த்தைகளில் அடங்கிடுமோ
எந்தன் வார்த்தைகளில் அடங்கிடுமோ

பூவாரம் தொடுப்பதற்கு **பூக்காரர் வேண்டுகின்றார்**
விழாக்கோலம் வரமுன்னே சந்நிதியை நாடுகின்றார்
பஞ்சகௌவியம் கலந்த அந்த தீர்த்தத்தை பூசகர் தர

தஞ்சம் என்று அருந்திவிட்டுத் தொண்டுக்கு ஆயத்தம்
அதுவே பூத்தொண்டின் ஆரம்பம்

வீட்டைவிட்டு வந்தவர்கள் சந்நிதியே கதி என்று
வீதீயில்தான் உறங்குவது வேளைக்கே எழும்புவது
சுற்றியுள்ள கிராமங்களில் பூப்பறிக்கச் சென்றிடுவர்
அதிகாலை விடியுமுன்னே ஆலயத்தில் நின்றிடுவர்
பூமலையைக் குவித்திடுவர்

திருவிழா முடியும்வரை தம் மனைவாசல் மறந்திடுவர்
உண்ணுவது சந்நிதியான் உவந்தளிக்கும் அமுதினையே
விழாக்கோல அலங்காரம் அவர் சிந்தனையில் நின்றதினால்
பூவாக அவர் மாறி நாளடைவில் வேலனுக்குப் பூவாவார்
வேலனோடு இணைந்திடுவர்

தொண்டருக்கு அருளவென்றே தொண்டைமான் ஆற்றருகே
வண்டமிழ் வடிவேலன் வாசலிலே காத்து நிற்க
பூக்காரர் அலங்காரமும் சிறுமியரின் நெய்விளக்கார்த்தியும்
வேண்டுமடியாருக்கு வேலன் அருளைச் சுரக்க வைக்குமே
*********

**ஆற்றங்கரை வேலனுக்கு ஆவணியில்** பெருவிழாவாம்
அடியவர்கள் திருக்கூட்டம் அலைமோதிப்பாயும் அங்கே
வருமடியார் குறைகளெல்லாம் வரமுன்னே தீர்த்துவைக்கும்
வடிவேலன் பெரும்கருணை வார்த்தைகளில் அடங்கிடுமோ
எந்தன் வார்த்தைகளில் அடங்கிடுமோ

**திருவிழாக்காலங்களில் வேலனுக்கு விளக்கெடுக்க**
**சிறுமியர்கள் பெருங்கூட்டம் சந்நிதியைத் தேடிடுமே**
பூசகரின் தீர்த்தத்தை கொடியேற முன்னாலே
அருந்திவிட்டு விளக்கெடுக்க அணிவகுத்து நின்றிடுவர்
அணி அணியாய் வந்திடுவர்
பெண்குழந்தை என்பதினால் கோவிலிலே தங்குவதில்லை

கோவிலடிச் சூழலிலே குடியேற வந்திடுவர்
எத்தனைபேர் வந்தாலும் அத்தனைக்கும் சந்தர்ப்பம்
வழங்குதற்கு வேலவன் வழிவகுத்து நிற்பானே
விழியாகிக் காத்து நிற்பான்
திருவிழா முடிந்தவுடன் மூலஸ்தானம் சென்றவுடன்
பூசகர் நெய்த்திரியோடு வாசலிலே நிற்கையிலே
வரிசையாக பன்னிருவர் தட்டுக்கு நெய்த்திரி பெற்று
ஒன்றாக ஆராத்தி கண் கொள்ளாக்காட்சி அன்றோ
ஆயிரம் கண் போதாதே
ஆரத்தி காட்டிவிட்டு ஆனைமுகன் வாசலிலே
திரியை யெல்லாம் போட்டுவிட்டு
திரும்பி வாசல் வந்ததுமே
தட்டையெல்லாம் வைத்திடவே பூசகர் எடுத்துச் செல்ல
வேலவனை வணங்கி விட்டு வள்ளி வாசல் செல்வாரே
சென்று வணங்கி வந்தவரை வேலன் அருள் காத்திடுமே
வாழும் வரை கூட வரும்
******

**எங்கெங்கு நின்றாலும் அங்கெனக்கோர்** இடம் தருவாய்
பொங்கும் மங்களமாய் என்னுள்ளே தங்கிடுவாய்
அங்கிங்கெனாதபடி எங்கும் அனல் ஜோதியாய்
தங்கிட வந்தவனே சந்நிதியின் பெருநிதியே!

பூங்காவனத் தழகை பூவினிடை வேலழகை
பாங்காக யான் காண பல திசையில் சென்றாலும்
அங்கெனக்கோர் இடம் தருவாய் அழகை ரசிப்பேனே
ஓங்கார ரூபத்தை சரவணத்தில் காண்பேனே!

தாமரை மலரினிலே தவழ்ந்து வந்த பாலகனே
தாமரைத் தடாகத்தை தானமைத்தார் சந்நிதியில்
சாமரை வீசுகின்ற சிறுமியரின் பக்தி மெச்சி
தாமரை மலர்களினிலே மீண்டும் நீ ஆடி வந்தாய்!

பூங்காவனத்தினிலே பூவின்மேல் வரும் வேளை
நீங்காத நினைவாக்க பா தந்தாயென் நாவின்மேல்
பாங்காக ஊஞ்சலிலே ஆடி வரும் வேளையிலே
ஆடீரோ ஊஞ்சல் பாட அடி எடுத்துத் தந்தவனே!

சரவணத்துப் பொய்கைதனை சந்நிதியில் அமைத்துமே
பிரணவத்தின் பெரும் பொருளே! பேரின்பப் பெட்டகமே
எம்மிடையே நீ இன்று இருப்பதுபோல் ஓர் உணர்வு
ஊஞ்சலுக்கு ஓடிவா ஆடீரோ ஊஞ்சல் பாட!

வேதங்கள் பீடமாக இருவினையும் கயிறாக
நாதங்கள் கைகளாக நானுன்னை ஆட்டிடுவேன்
வேதாந்த சாரமே நாதாந்த ரூபமே
பூங்கா வனத்தினிலே பொங்கும் உன் அருள் தாராய்!

கதிர்காமர் அன்று உனைத் தன் கையாலே ஆட்டினாரோ
கதிர்காமம் சென்று வந்த களை இன்னும் அடங்கலையோ
மருதர் கதிர்காமர் வழி வந்த நாங்களுமே
தருகின்ற உன் அருளால் பூங்கா வனம் அமைப்போம்!

ஏங்காத மனம் தந்தாய் அதைப் பூங்கா வனமாக்கி
பாங்காக ஊறிடும் எண்ணங்களை ஊஞ்சலாக்கி
ஆட நீ வாராயோ அழகுமிகு கந்தா என
பாடியுமே ஆட்டிடுவோம் பாலகா நீ வந்தமர்வாய்!

உன்னை நினைத்தாலே என் துயர் தீர்த்திடுவாய்
உனைநாடி வந்தாலோ பிறவிப்பிணி தீர்த்தருள்வாய்
உள்ளத்து ஊஞ்சலிலே உனை வைத்து ஆட்டிவிட்டால்
வெள்ளத்து நீராகி வினைப் பயனை வேரறுப்பாய்!
*****

**வேண்டும் வரம் தரவே வேலா நீ**
வீதி வர வேண்டும்
வீதி வரும் வேளை சித்திரத் தேர்
மூன்று நிற்க வேண்டும் . . .

காணும் இடமெல்லாம் காவடி
ஆட்டமே காண வேண்டும்
கேட்கும் ஒலி எல்லாம் அரோகரா
கோஷமாய் ஆக வேண்டும்

ஓம் என்றொலிக்கும் மணி கேட்டு
மக்கள் ஓடியே வரவேண்டும்
ஓடியே வருவோரின் உள்ளத்தில் நீ
ஓங்காரம் உணர்த்த வேண்டும்
பாடியே வரும் அடியர் உள்ளத்தில்
பாங்காக நீ அமர
பார்க்கும் இடமெல்லாம் நீல
மயிலாகத் தெரிய வேண்டும்

நிற்கின்ற தேரினிலே வேலா நீ
ஏறி அமர வேண்டும்
ஏறி அமரும் வேளை உன் நாமம்
திக்கெட்டும் கேட்க வேண்டும்

வடம் தனை இழுக்கையிலே முருகா
வண்ணத்தேர் அசையும் வேளை
அடியவர் கண்களிலே ஆனந்தம்
நீராக மாற வேண்டும்

மகாரத ஊஞ்சலிலே மன்னவா நீ
ஆடி ஆடி வரவே
சண்முக ஜோதியிலே கந்தா உந்தன்
கோலம் நான் காண வேண்டும்

மறந்து விட்டேன் கந்தா உன்னிடம்
வரம் கேட்க வந்தேனே
கேட்கும் வரமெல்லாம் நான்
காணும் இக்காட்சி தானே!

***************

**வேலனுக்கு தீர்த்தமிங்கே வேதனைகள் தீருதிங்கே**
பாலனுக்கு அபிஷேகம் பார்த்தோர் வினை தீருதிங்கே
கூறுமடியார் வினைகள் தீர்ப்பதற்கோ தீர்த்தமிங்கே
தீர்ந்த கதை கூறுதற்கோ தீர்த்தக் கரை தேடி வந்தான்!

குளத்தருகே நின்றுகொண்டு குற்றேவல் புரிபவர்கள்
விளக்கருகே நின்ற அந்த விட்டலுக்கு இணையாகும்
விளக்கருகே நின்ற விட்டல் வேறெங்கும் செல்வதில்லை
விடிந்தபின் விட்டல் எங்கே விளக்கொளியில் சங்கமமே!

இரும்பு மனம் கனிந்த பின்னே இளகியதோ கரும்பாகி
கரும்பாகிச் சாறாகிப்பின் இளநீராய் மாறியதோ
கனிந்த பின் நெஞ்சக்கனல் எரிந்திடவே நீறானார்
நீறான பின்னாலும் பன்னீரால் கழுவி நின்றார்!

எண்ணிஎண்ணித் தெளிவதற்கோ என்னை வைத்தாய் எண்ணை வைத்தார்
எண்ணமும் அழிவதற்கோ பழம் வைத்து அரப்பிட்டார்
பாலான மனங்கள் தான் பாரினிலே பல உண்டு
பாலாறு பாயுதிங்கே பாலனுக்கு அபிஷேகம்!

திட நெஞ்சம் கொண்டவர்கள் தயிராக நிற்கின்றார்
நெக்குருகும் அடியவரோ நெய்யாக மாறிவிட்டார்
கனிந்தவரோ கனிவினிலும் பல அளவில் நிற்கின்றார்
கனிகளிலும் பல வகைகள் கந்தனுக்கு அபிஷேகம்!

வேலாக வந்தவன் தர்த்தக் கரையருகே ஒளியானான்
கண்டவர்கள் குளத்தருகே கரைந்தார் பின் கனியானார்
கந்தனவன் களிப்படைந்தான் அடியவரை அணைப்பதற்கோ
பட்டாடை கட்டிக் கொண்டு பளிங்குமுகம் காட்ட வந்தான்!

என்நிலையும் முன்னிலையில் தன்னிலையில் நானில்லை
நீறிட்டார் பொட்டிட்டார் நிமிர்ந்தேன் என் நிலை மறந்தேன்
என்னையே மலராக்கி என் அப்பன் முன் நின்றேன்
எடுத்தவர் சாற்றி விட்டார் வேலழகன் மீதினிலே!
***********************

**கந்தபுராணச் சுருக்கம்**

சந்நிதி முருகா ஓம் சரவண பவகுகனே
தண்மதி போலே நீ அருள்மழை பொழிவாயே

உனைநாடி உருகாத உள்ளமும் இங்குண்டோ
ஆறாகப் பெருகாத கண்ணிலே நீருண்டோ

சந்நிதி முருகா ஓம் சரவண பவகுகனே
என் கதி இனிமேலுன் திருவடி தனிலே

ஓரடி நாமெடுத்தாலோ பத்தடி நீ வருவாயே
பன்னிருகை வேலய்யா பதநிலை தருவாயே

அசுரரை அழிக்க அப்பன் திருவுள்ளம் கொண்டானே
முக்காலம் உணர்ந்த சிவன் முக்கண்ணைத் திறந்தானே

அனல் வடிவாக ஆறு பொறி வடிவானாயே
கனல் வடிவானோய் பிரணவப் பொருள் வடிவானாயே
சிவபெருமானின் அந்தச் சிவந்த முக்கண்ணிலே
கனல் வடிவாகவே கனிந்த சிவப்பொருளே

பஞ்ச பூதங்கள் உன்னை பக்குவமாய்ச் சீராட்டி
சரவணப் பொய்கையிலே நயமாக இட்டனரே

தேவர் குறைதீர்க்க தெய்வம் கீழிறங்கி வந்ததோ
குளிர்ந்த மலர்ப் பொய்கையில் குழந்தையாய் ஆனதோ

ஆறு திருக்குமரன் அகிலத்தில் ஜனனம் ஐயா
கார்த்திகைப் பெண்கள் அங்கே கண்போல கவனமய்யா

கவனத்தின் பரிசோ நீ கார்த்திகேயன் ஆனாய்
பொறி உருவானதுமே சிவன் சினம் தணிந்தானே

மனம்கொண்ட மங்கை அன்னை மாயவன் தங்கையவள்
நடந்ததை அறிந்தாளோ ஓடோடி வந்தாளே

அள்ளி அணைத்தாளே ஆறாக நின்றவனை
அத்தனையும் ஒன்றாகி ஸ்கந்தம் அங்கு உதயமே

வேறுபட்ட அசுரர்கள் கூறுபட்டு ஒழியவே
குழந்தையாய் இருந்தோன் குமரன் ஆகின்றான்

மாம்பழம் வேண்டியே மனம் நீ கலங்கியே
தனி மலை தேடியே பழம் நீ ஆனாயோ

பிரணவத் திருமந்திரம் அறியாத பிரம்மா
பணியாமல் நின்றான் சிறைதன்னில் வாசம்

தந்தை அறிந்தான் தனையனை அழைத்தான்
அப்பனுக் குபதேசம் சுவாமிமலை தன்னிலே
பிரம்மா பணிந்ததினால் குமரனும் தணிந்தனனே
படைத்தல் தொழிலையே மீண்டும் கொடுத்தனனே

கொடுமைதனை அழிக்க படையதனைச் சேர்க்க
அன்னையிடத்திலே ஓடோடி வந்தனனே

அப்பன் முருகனுக்கு அன்னை சக்தி வேல் கொடுக்க
வீரபாகுடனேயே தேவர் படை சூழ

திருச்செந்தூரிலே படைத்தளம் அமைத்தனனே
**ஸ்ரீ செல்வச் சந்நிதியில் தேவர் பூசை செய்தனரே**
**சந்திகாலப் பூசையிலே அபயம் அளித்து நின்றான்**
**வேண்டுவார் வேண்டுவது கொடுப்பது இத்தலத்திலென்றான்**

அப்பனின் அருள் வரத்தால் ஆனந்தம் கொண்ட தேவர்
ஏமகூடம் நோக்கியே விரைவாய்ச் சென்றனரே

குழந்தை யென்றெண்ணி சூரன் குறுநகை செய்தனனே
தூதுதனை விட்டபோதும் துஷ்டனோ பணியவில்லை

நகைத்தவன் பின்னாலே நாணிக் கோணி நிற்க
யுத்த களத்திலே கூண்டோடு அழிந்தனரே

வஞ்சனைச் சூரனையே வாகனம் ஆக்கியே
எஞ்சிய பாதியினை சேவற் கொடியாக்கி

தேவர் மனம் மகிழ தேரேறி பவனி வந்தான்
தேவலோகமுமே பூமாரி பொழிந்ததையா

திருப்பரங்குன்றத்திலே பெற்றவர்கள் ஆசியுடன்
தேவகுஞ்சரியை திருமணம் செய்தனனே
ஆதியிலே கொடுத்த பாதி வரம் நிறைவேற
வள்ளிக்குறமாதையும் கடிமணம் கொண்டனனே

அன்று நடந்த கந்த புராணம் இதுவன்றோ
இன்று அடியவர்கள் உள்ளத்தில் நீ யன்றோ

ஆதியிலே தேவர் குறை தீர்த்த முருகா இன்று
கலி தீர்க்க வந்தாய் என் குறை தீர்க்கமாட்டாயோ

சந்நிதி முருகா ஓம் சரவண பவகுகனே
என் கதி இனிமேலுன் திருவடிதனிலே ......

**சந்நிதியான் திருப்பள்ளி யெழுச்சி**

சந்நிதி வாழுகின்ற சுப்ரமண்யா
சஞ்சலம் தீர்க்க வந்த வேலவனே
ஸ்ரீ செல்வச் சந்நிதிதான் பெயர் என்றாய்
தீர்ந்திடும் அடியரின் வினையென்றாய்

வேலாக நின்று அன்னை அருளையெல்லாம்
வேண்டும் மட்டும் நாங்கள் பெற்றிடவே
பிரணவத்தை ஓர் முகமாய்க் கொண்டவனே
சரவணத்தில் சங்கடங்கள் தீர்த்தவனே

வானம் சிவக்குதய்யா வேலவனே
கானம் பிறக்குதய்யா காவலனே
அரிதுயில் உந்தனுக்கு போதுமய்யா
ஆடல்கள் காட்ட இது நேரமய்யா

தொண்டைமான் ஆற்றருகே வேலவனே
தொண்டரெல்லாம் இங்கே கூடிவிட்டார்
நந்தியும் நாரதாதி முனிவரெல்லாம்
நாதம் முழங்கிட நாடி நின்றாய்

அபயம் அருள வந்த சந்நிதியில்
இதயத்தை மலராக்கி சாற்றி நின்றால்

உதயம் ஆகிடுமே வேற் கருணை
ஆறாக ஓடி அன்ன மலையாகுமே

அன்னமலை எல்லாம் படைத்திடவோ -வேலன்
சொர்ணமலை மீது தான் அமர்ந்து
எண்ண மலையாகி எனக்குள்ளே தந்த
வண்ணப் பாமாலைகளை என் என்பேன்

வண்ணப் பாமலை நீ ஏறி ஆட
இமயத்தின் உச்சியிலே எனை ஏற்ற
சமயத்தில் சங்கரனும் சேர்ந்து நிற்க
உதயம் ஆகியதோ உன் கருணை

கருணை ஆறங்கே கடல் மடையாய்
கங்கையாய் தந்தையார் சிரசிருந்து
முக்கண்ணில் பொறியாக வந்தவனின்
ஊற்றாகி திருவேற் கருணையானதோ

வேற்கருணை திருவேற் கரணியாக
சரவணப் பொய்கையுமே சங்கமிக்க
வேழமுகன் முன்னாலே குளமாக
வேலவன் வீதி வலம் வருகின்றான்

பொறியாக வந்தவனை ஏற்கவென்றோ
சரவணப் பொய்கையுமே தோன்றிடவே
தாமரை மலர்களங்கே தான் மலர
பொறியங்கே மலர்களில் தங்கியதோ

தங்கிய பொறி ஆறும் குழந்தையாக
அன்னை வந்து ஆறையுமே ஒன்றாக்கவே
ஆறுமுகம் கொண்ட ஓர் முருகன்
வையகம் வாழ என்று தோன்றினனே

வேழமுகனோடு விளையாடி வேலன்
நாலும் தெரிந்தவனாய் தான் வளர்ந்து
ப்ரம்மனை சிறையினில் அடைத்த பின்னே
வேதம் சொல்ல தகப்பன் சுவாமி ஆனான்

சூரனை அழிக்க ஓர் சுப்ரமண்யன்
தேவ சேனாபதியாய்ப் படை அமைக்க
வீரபாகு தேவரையும் தூதனுப்ப
வந்தவர் வழியிலே இந்த இடத்தில்

சந்தி காலப் பூசை செய்து வணங்கி நிற்க
வாது செய்ய வந்த வேளை இவ்விடத்தில்
வேலனும் தந்தையை வணங்கியபின்
அபய கரம் எல்லாம் காட்டி நின்றான்

அபயகரம் காட்டிய இடமாதலால்
இது ஸ்ரீ செல்வச் சந்நிதி ஆகுமென்றான்
அன்னமலை சொர்ணமலைதான் அமைத்தே இங்கே
வேலாக வீற்றிருப்பேன் என்று சொன்னான்

ஓங்கி அகன்று ஊன்றி நிற்பதெல்லாம்
வேலாகும் அறிவாகும் என்று சொன்னாய்
வேலாகி நின்ற வலது கரத்தினாலே
அபயம் என்றே கூறி அருளி நின்றான்

வேல் காட்டும் வலக்கை அபயம் என்றால்
கால் காட்டும் இடக்கை காவல் என்றோ
சேவடியை சிந்தையிலே கொண்டவர்க்கு
ஆறுதல் தர ஆறுமுகம் தோன்றும்

தந்தையை யான் வணங்கும் இத்தலத்தில்
என்னை வணங்க வருவோர்க்கெல்லாம்

கேட்கமுன் வரம் வரும் என்று சொன்னான்
வர முன்னே வரம் தரும் வள்ளலவன்

நினைத்தாலே வரம் தரும் அண்ணாமலையாய்
நெஞ்சத்தில் நிறைந்திருக்கும் சொர்ணமலையை
நெஞ்சகத்தைக் கோவிலாய் கொண்டவர்க்கு
அன்னமலையாகி இங்கே அருளுகின்றான்

அன்னமலையாகி பசி தீர்த்த பின்னாலே
சொர்ணமலை கொடுக்க சித்தம் இரங்கியே
வேலாகி அறிவாகி ஞானம் தந்தான்
வேதாந்த விளக்கமெல்லாம் வெளிச்சமிங்கே

அண்ணாமலைக்கிணையாய் அமைய என்றோ
அத்தனை தெய்வங்களையும் கூட வைத்து
இந்து சமயத்தின் ஓராறு நிலைகளில்
அருளை ஆறாக்கி ஓட வைத்தான்

ஓம் சரவணபவ என்ற ஆறெழுத்தில்
எழுகோடி மந்திரத்தை அடக்கி வைத்தான்
தொழு கோடி அடியாரின் குறைகளெல்லாம்
தொலையுது தொண்டைமான் ஆற்றருகே

மந்திரப் பூசையை நீ விரும்பினாலும்
மௌன அன்புப் பூசையிலும் நாட்டம் காட்ட
மருதர் கதிர்காமரை நீ மாயம் செய்தே -இங்கே
வாய்கட்டிப் பூசை செய் என்று சொன்னான்

அதுகூட எப்படி என்று தெரியாதவர்க்கு
கதிர்காமம் கூட்டிச் சென்று காட்டிவைத்தாய்
கதிர்காம வாய் கட்டும் பூசை யெல்லாம்
காட்டிய பின் ஓர் தங்க வேலைக் கொடுத்தான்

காட்டுவழி செல்வதினால் பயந்தவர்க்கு
திருப்பிப் பார் என்று நீ சொன்னபோது
வெள்ளிவேல் ஒன்றங்கே தென்பட்டதே
வேலனை வணங்கி வேலைப் பெற்றனரே

வெள்ளி வேலை மருதர் விரும்பிடவே
வெள்ளி வேலே சந்நிதியில் எழுந்தருளவே
அன்று கொடுத்த அந்த வெள்ளி வேலே
இன்று வரை வீதி வலம் வருதே

மருதர் கதிர்காமரின் வழி வந்தோர்
மௌனமாய் இன்றும் உனைப் பூஜிக்கின்றார்
கதிர்காமம் கொடியேற சந்நிதி வேல் போய்
தீர்த்தம் ஆடியபின் திரும்பி வரும்

போகின்ற வேளையிலே உழுத்தம் புட்டு
வருகின்ற நாளினிலே பயத்தம் துவையல்
பிரசாதமாகின்ற வழக்கம் இன்னும்
மாறல்லையே வடிவேலழகா

நீல மயில் ஒன்று தெரியுதையா - அதில்
நீயேறி வருவது புரியுதையா
வானமும் கானகமும் நீளமன்றோ - அந்த
நீளமெல்லாம் நீல நிறமுமன்றோ

பச்சை மயில் ஒன்று தெரியுதையா - அங்கே
பன்னிரு கண்ணும் தோளும் புரியுதையா
என்னிரு கண்களால் கண்டு களிக்க
கண்ணுக்கு ஒளி தனைத் தந்திடையா

தங்க மயில் ஒன்று தோன்றுதையா - அங்கே
தங்க வந்த வேலன் சொந்தம் என்றே

சொல்லிச் சொல்லி யான் சுகம் பெறவே
தங்க மயில் ஏறி வந்திடணும்

வெள்ளி மயிலொன்று தெரியுதையா - அது
வீதியெல்லாம் விளையாடுதையா - வெள்ளி
வேலன் அங்கே வந்து வீற்றிருக்க
ஆடாத மயிலாக ஆகுதையா!

**************

**சந்நிதியான் திருப்பள்ளி யெழுச்சி**

செல்வச் சந்நிதி வேலவனே செந்தமிழின் காவலனே
வேற்படையாய்க் காட்சி தரும் செல்வச் சந்நிதி வேலவனே

வானம் சிவக்குதிங்கே கானம் கனியுதிங்கே
கந்தா உன் கருணைமுகம் காணவேண்டிக் காத்துநின்றோம்

பிரணவத்தை ஒருமுகமாய்ப் பெற்ற ஆறுமுகத்தவனே
அன்னை தந்த சக்திவேலால் அவுணர் குலம் அழித்தவனே

கந்தபுராண காலத்திருந்தே எம்மோடு வாழ்பவனே
வல்லியாற்றம் கரைக்கு வந்த வண்ண வடிவேலவனே

தூது செல்லும் வழியினிலே வீரபாகு இங்கு வந்தார்
சந்தி காலப் பூசை செய்து சங்கரனை வணங்கி நின்றார்

வாது செல்லும் வழியினிலே வேலவனும் படையுடனே
சிவனை இங்கு வணங்கிவிட்டு தேவருக்கு அபயகரம்

அபயகரம் காட்டியதால் அன்றுமுதல் இந்த இடம்
ஸ்ரீ செல்வச் சந்நிதி என்று பெயர் கொள்ளும் என்றானே

அன்று முதல் இன்றுவரை தேவர்களும் மனிதர்களும்
தினமும் இங்கே பூசை செய்ய ஞானியரும் தோன்றுகின்றார்

ஞானவேலன் தினமும் இங்கே அடியர் பசி போக்கிடவே
அன்னதான மடங்களிலே அடியரோடு அமுது கொள்வான்

ஆறாத பசியெல்லாம் ஆற்றருகே ஆறிடவே
ஆறுமுகன் ஆறி அமர்ந்து அருளாட்சி புரிகின்றான்

பூவரசை விருட்சமாக்கி ஓர் புண்ணியனார் சமாதியிலே
வேலாக வீற்றிருந்து கருணை ஆறை ஓட விட்டான்

காலத்தின் கோலத்தாலே வல்லியாறு பெயர்மாற
தொண்டைமான் ஆற்றருகே தொண்டர்களை காக்கின்றான்

சிகண்டி முனிவர் அன்றொருநாள் கதிர்காமம் செல்கையில்
யானை ஒன்று வழி மறிக்க வெற்றிலையை அம்பாக்கிட

யானைச் சாபம் நீங்கியதும் கந்தர்வன் அங்கு நின்றான்
முருகனுமே காட்சி தந்து இருவருக்கும் இடம் சொன்னான்

சிகண்டி முனிவர் கதிர்காமம் சென்று கண்டுகளித்தனரே
கந்தர்வன் முருகநாதர் என்ற பெயரில் வடபதிக்கே

வடபதியாம் சந்நிதியில் பூசை முறை எல்லாம் கண்டு
புண்ணியனார் சமாதிமேலே பூவரசும் தோன்றியதே

பூவரசம் ஸ்தல விருக்ஷம் என்று வேலன் சொன்னானே
மௌன அன்புப் பூசையை மகிழ்வோடு ஏற்றானே
மருதர் கதிர்காமருக்கு மனமாயை தனை போக்கி
வேலன் வலைவீசி தன்னை பூஜிக்க அழைத்தானே

முருகா எனக்கு மந்திரம் தெரியாதென்று அவர் சொல்ல
மூலத்தையே மனதில்கொண்டு மௌனப் பூசை செய் என்றான்

அன்றுமுதல் கதிர்காமர் அன்புப் பூசை செய்கின்றார்
அறுபத்து மூவருக்கும் அமுதுபடை என்று சொல்ல

கதிர்காமர் அமுதையெல்லாம் ஆலமிலையில் படைத்திடவே
பூசை முடிந்த பின்னாலே இலைகளெல்லாம் மறைந்தனவே

முருகனுக்கும் மருதருக்கும் வந்த அறுபத்தி மூவர்க்கும்
ஆக அறுபத்தி ஐந்து இலை அன்றுமுதல் இன்றுவரை

யானைச் சாபக் கதை ஞாபகம் வேலன் வீதி வருகையிலே
எழுந்தருளி வேலில் வெற்றிலைத் துண்டொன்று கூட வரும்

ஆலும் அரசும் வேம்புமிங்கே ஒன்றாகவே வளரும்
வைரவ சுவாமிக்கோர் ஆலயமும்தான் தெரியும்

மூலஸ்தான வேற்படைக்கு அருகில் லிங்கோற்பவமே
வள்ளி நாச்சி சன்னிதியில் விஷ்ணு நாகபடமாக

வள்ளி வாசல் முன்னே சிவனார் அமைதி கொள்ளவே
பூசை நேரம் நாகபடம் சிவனோடு ஒன்றினைய

சிவநாகத் தம்பிரானின் அபிஷேகச் சிறப்பெல்லாம்
காண வேண்டில் ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கு வாருங்கள்

சிவநாகத் தம்பிரானின் திவ்ய அபிஷேகமெல்லாம்
பூவரச விருக்ஷத்திற்கும் கீழே இருக்கும் சமாதிக்கும்

ஆக இந்த அபிஷேகத்தின் அத்தனை சக்திகளும்
இணைந்து அருள் செய்வதினால் இது பூலோக சொர்க்கமாமே

தேனாறு பாயுதிங்கே பாவாறு ஓடுதிங்கே
கந்தனருள் கருணையாகி கடல்மடையாய் திறக்குதிங்கே

கதிர்காமம் கொடியேற சந்நிதி வேல் போகவேண்டும்
தீர்த்தம் அங்கே முடிந்தபின்னே திரும்பி இங்கே வரவேண்டும்

கதிர்காமத் திருவிழாவை காணமுடியாதவர்கள்
சந்நிதிக்கு வந்தால் கதிர்காமம் சென்ற பலன் பெறுவர்

ஆலமிலை அமுதும் வேலன் இட்டுவிடும் திருநீறும்
பூவரச இலைச் சருகும் வேலன் கவசம் ஆகுமிங்கே

வேற்கருணை இங்கே திருவேற்கரணிக் குளமாகி
வேழமுகன் சன்னிதிக்கு முன்னாலே சுரந்திடுமே

இந்து சமய கிளைகள் ஆறும் இங்கே சங்கமிக்க
அன்னமலை மீதேறி வேலன் விளையாடுகின்றான்

நாத வேத ரூபமான வேலன் விளையாடுகின்றான்
நானிலமும் தான் மகிழ நாடுவன கிட்டும் இங்கே

வேண்டும் அடியார்களுக்கு வேண்டுவன கிட்ட என்றோ
கதவில்லா வாசலிலே வேலன் என்றும் காத்து நின்றான்

***************

**சந்நிதியான் சுப்ரபாதம்**

மாணிக்க விநாயகனின் மலரடியில் மலராகி
மண்டியிட்டு வணங்கி நின்றோம்
சந்நிதித் தெய்வங்களின் அருள் மழையில் நனைவதற்கு
அருளாற்று அருகில் நின்றோம்

மெய்யுறையும் பொய்யுறைக்கு வைகறை வந்ததென
வேலுறையும் என் குருநாதன் சொல்ல
தண்கருணை தானுறையும் செல்வத்தைத் துயிலெழுப்ப
செல்வச் சந்நிதியில் நின்றோம்

அன்னையும் அப்பனும் அண்ணனும் மாமனும்
நிற்பதால் இருள் அங்கு இனி இல்லையோ
அன்னையர் இருவரில் வேலின் ஒளி தெரிவதால்
ஒளி அங்கு நிலையானதோ

பள்ளி எழுந்தருளும் எழில் காணவென்றடியவர்
கோவிலில் கூடிவிட்டார்
நந்திகேஸ்வரர் முதல் நாரதாதி முனிவர்கள்
நாதஒலி தான் முழங்க நாடி நின்றார்

அன்னத்தைப் பாலாக்கி அன்னையவள் ஊட்டவென்று
அருகிருந்த தன்மையாலோ
அன்னமலை அமுதெல்லாம் ஆலம் இலை தன்னிலே
ஆலயத்தின் உள் வந்ததோ

சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம்
சுப்ரமண்ய சுவாமி சுப்ரபாதம்
செல்வத்தின் சந்நிதியில் சுப்ரபாதம்
ஸ்ரீசெல்வச் சந்நிதியில் சுப்ரபாதம்

உதிர்கால கதிரவனும் உதயத்து மணிகேட்டு
கடல் குளித்து கந்தனை வணங்கி நின்றான் (சுப்ரபாதம் )

கடலோசை மேளமாக குயிலோசை வீணையாக
பாவோசை உடன் இணைந்த சுப்ரபாதம் (சுப்ரபாதம் )

சுந்தரன் முக்கண்ணில் அறுபொறியாகி
சரவணத்தின் பொய்கையில் தவழ்ந்தவனுக்கு (சுப்ரபாதம் )

சுந்தரனுக்கே குருவாக நின்று
பிரணவத்தின் பொருளை உலகினுக்குத் தந்தான்(சுப்ரபாதம் )
சுவாமி மலை வாசன் சுப்ரபாதம்

ஆண்டியாய் வருவோரை அரசனாய் ஆக்குதற்கு
மலைமீது ஆண்டியாய் அருளி நின்றாய்(சுப்ரபாதம் )
பழனி மலை வாசன் சுப்ரபாதம்

செந்தூரில் தளம் அமைத்த தேவரின் தளபதி
கார்த்திகேயனுக்கு சுப்ரபாதம் (சுப்ரபாதம் )
செந்தூரின் செல்வனுக்கு சுப்ரபாதம்

சூரனை வென்று தெய்வயானையைக் கொண்ட
திருப்பரங்குன்றுறை சுப்ரபாதம் (சுப்ரபாதம் )
பரங்குன்ற சுவாமிக்கு சுப்ரபாதம்

எங்கள் குல தேவியை காந்தர்வ மணம் கொண்ட
திருத்தணி வேலழகன் சுப்ரபாதம் (சுப்ரபாதம் )
வள்ளி மணவாளன் சுப்ரபாதம்

காயான மனத்தை கனியாக்கவோ
பழமுதிர் சோலையில் பழம் ஆகினாய்(சுப்ரபாதம் )
சோலைமலை வாசன் சுப்ரபாதம்

பொறியாக வந்தவன் சுடராக மாறமுன்
தொண்டைமான் ஆற்றருகே வேலாகினான்(சுப்ரபாதம் )
சந்நிதி வேலழகன் சுப்ரபாதம்

பொறியாக வந்தவன் மாணிக்க நதிக்கரையில்
மோன நிலை கொண்டு சுடராகினான்(சுப்ரபாதம் )
கதிரமலை வாசன் சுப்ரபாதம்

இத்தனை தலங்களில் குடியிருந்தும்
எந்தன் மனக் கோவிலில் வாழவந்தாய்(சுப்ரபாதம் )
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம்
சுப்ரமண்ய சுவாமி சுப்ரபாதம்
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் ஆற்றங்கரையினில் சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் அன்னமலையரசே சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் வேற்கரணிக்குளத்தருகே சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் பூவரச மரத்தடியில் சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் கல்லோடைக்கரையினில் சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் ஆலம் இலை தன்னில் சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் ஆலரசுச் சோலையில் சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் தொண்டைமானாற்றிலே சுப்ர . . .
சுப்ரபாதம் கந்தன் சுப்ரபாதம் ஸ்ரீசெல்வச் சந்நிதியில் சுப்ர . .

********

**சந்நிதியான் சுப்ரபாதம்**

செல்வச் சந்நிதி கதிர்காமம்
சென்றிடு மாவிட்டபுரம் நல்லூர்
நின்றிடு வெருகல் கந்தவனம்
கண்டிடு கந்தன் கருணைதனை!

கருணை கந்தன் இலக்கணமாம்
அருளே அவனின் அடைக்கலமாம்
பசிப்பிணிக் கவன் ஓர் அன்னமலை
ஆறவைப்பான் ஆற்றம் கரைமீதில்!

பழம் நீ ஆனாய் சுவாமி மலை
செந்தூர் படையுடன் பகைமுடித்து
பரங்குன்றம் தெய்வயானையுடன்
திருத்தணி சோலை மலையோனே!

ஆறுபடை வீட்டில் ஆடிவிட்டு
அன்னை தந்த ஓர் ஆலயத்தில்
ஆனந்த அமைதியின் இருப்பிடமோ
சமராபுரிச் சண்முகத்தரசே!

தேவர்க்கு அபயகரம் காட்ட - நீ
தேடிய இடம் செல்வச் சந்நிதியே
மீண்டும் அந்த இடத்தினிலே
வேண்டும் உந்தன் அருள் மழையே!

தேவரும் மனிதரும் வருகின்றார்
தினம் பூசை செய்து நிற்கின்றார்
அன்று காட்டிய அபயகரம்
இன்றும் அருளைப் பொழிகின்றதே!

ஆறுபடை வீட்டின் பின்னே - நீ
ஆறி அமர ஓர் ஆற்றங்கரையோ
புண்ணியனார் சமாதி அருகே - நீ
பூவரசாய் அங்கே பூக்கின்றாய்!

பாக்கள் பூக்களாய் மாறுதங்கே
பூக்கள் பொன்னடி தேடுதங்கே
வேலாக நீஅங்கே வீற்றிருக்க
வேற்படை காட்டுது சம்ஹாரம்!

சத்ரு சம்ஹாரக் கோலத்திலே
சந்நிதி வந்த சரவணனே
ஆணவ மலங்களை அழித்தபின்னே
அரவணைத்தாய் சேவல் மயிலாக்கி!

கருணைக்கு இதைவிட வேறேது
காரண காரியம் காட்டணுமா?
நாரணன் மருகா முருகையா
நினைத்தால் நீலமயில் தோன்றும்!

கந்தபுராணத்துக் காலத்தே
படையுடன் வந்த வேளையிலே
பெற்றோரை வணங்கிய பின்னாலே
தேவர்க்கு அபயகரம் காட்ட !

அபயகரமும் காட்டியதால் - இங்கே
வருமடியார் குறை தீருமென்றாய்
ஸ்ரீ செல்வச் சந்நிதி பெயராகும்
வரமுன்னே வரம் தரும் வேற்படையே!

வேற்படை மூலஸ் தானமென்றாய்
எழுந்தருளும் வெள்ளி வேலென்றாய்
மாணிக்கப் பிள்ளையார் காணிக்கை ஏற்க
அன்பால் வள்ளி அருள்வாளே!

காலம் கனிந்து நின்றிடவே - மாயம்
காட்டி மருதர் கதிர்காமரையே
ஆட்கொண்டு ஆடல்கள் பல காட்டி
வாய் கட்டும் பூசையில் மகிழ்ந்தாயே!

வானம் சிவக்குது முருகையா
கானம் பிறக்குது கந்தையா
அரிதுயில் உந்தனுக்கு போதுமய்யா
அடியரைக் காக்க எழுந்தருள்வாய்!

நந்தி தேவர் முதல் நாரதாதி
முனிவரெல்லாம் கானம் இசைக்கையிலே
நெற்றிக்கண்ணின் நாயகனே
நெஞ்சம் நிறைய எழுந்தருள்வாய்!

சூரியக் கதிர் ஒளி வருகையிலே - வந்த
காரியம் நெஞ்சில் நிறையுதையா
அவுணரை அழிக்க எழுந்தருள்வாய்
ஆதி அருணாசலத் திருவுருவே!

நினைத்தால் நீல மயில் தோன்றும்
பச்சை மயிலேறும் பரந்தாமா
தங்க மயிலேறும் நல்லூரா
தங்கிடுவாய் தயை வேண்டுமையா!

குறிஞ்சிக் குமரா குணநிதியே
குறைகள் தீர்க்கும் குருபரனே
மாகுட்டநோய் தீர்த்த மால் மருகா
கங்கை சுமந்த காங்கேயா!

கால் வைத்த இடம் எங்கள் சந்நிதியே
கால் நடை யாத்திரை கதிர்காமம்
தூக்கிய காவடி இறக்கணுமே
தூயவனே பள்ளி எழுந்தருள்வாய்!

இமயத்தில் ஆறு பொறிநிலையோ
சமயத்தில் சரவணப் பொய்கையிலே
உதயம் காணும் நேரம் இது
இதயம் இருந்திட எழுந்தருள்வாய்!

ஈழத்து ஆறு படை வீட்டிலுமே
ஞாலத்து கண்டங்கள் கடலிலெல்லாம்
திருப்பள்ளி எழுச்சி பாடுகின்றார்
திருவே! குருவே! எழுந்தருள்வாய்!

மந்திர வடிவே நீல மயிலே
இந்திர வடிவே பச்சை மயிலே
சூர மயிலேறும் சுப்ரமண்யா
வெள்ளி மயிலேறி எழுந்தருள்வாய்!

அன்னமலை படைக்கும் ஆறுமுகா
சொர்ணமலை யமர்ந்த சுப்ரமண்யா
எண்ணமலையிலே ஏற வைத்து - தந்த
வண்ணமலை ஏற எழுந்தருள்வாய்!

ஆற்றலை உந்தனைச் சீராட்டும் - அடியர்
பாட்டலை உந்தனைத் தாலாட்டும்
கதிர்காமர் வாய் கட்டித் தியானிக்க
சந்நிதியில் பள்ளி எழுந்தருள்வாய்!

அகத்தியர் ஔவை அருணகிரி
நக்கீரர் நாரதாதி முனிவரெல்லாம்
நந்தியோடு பூவரச மரத்தருகே
நாத ஒலி கேட்பது போதாதோ!

ஆற்றருகே வந்த அடியரெல்லாம்
ஆற்றலையாய் உனைத் தாலாட்ட
ஆறி அமர வந்த அறுமுகவா
ஏறு மயிலேறி எழுந்தருள்வாய்!

கதிர்காமர் வழிவந்த அன்பரெல்லாம்
கும்பத்தில் ஹோமத்தை ஏற்றிவிட்டார்
பாலாபிஷேகம் காணவேண்டும்
பாலா பள்ளி எழுந்தருள்வாய்!

வேற்கருணை வேற்கரணி ஆகணுமே
அருளே ஆறாய் ஓடணுமே
கருணை கடலாய் மாறணுமே
கந்தா பள்ளி எழுந்தருள்வாய்!

ஆலம் இலையில் அமுதையெல்லாம்-அன்னை
பாலாக்கி அங்கே பார்த்திருக்க
சோமாஸ்கந்த மூர்த்தியாகி
சுப்ரமண்யா எழுந்தருள்வாய்!

பசிப்பிணி போக்கும் அன்னமலை-ஞான
அருட் பசி நீக்கும் வேற்படையே
இச்சா கிரிய ஞான சக்தியுடன்
எழுந்தருள்வாய் எங்கள் சந்நிதியில்!

ஆறு படை வீட்டின் அம்சமாய்
அமைந்த ஸ்ரீ செல்வச் சந்நிதியில்
ஆறி அமர வந்த அருள் வடிவே
கூறுமடியாரின் குறை தீர்ப்பாய்!

மெய்யுறையும் பொய்யுறைக்கு வைகறை வந்ததென
வேலுறையும் என் குருநாதன் சொல்ல
தண்கருணை தானுறையும் செல்வத்தை எழுப்ப
சந்நிதி வந்தேன் எழுந்தருள்வாய்!

தொண்டைமானாற்றம் கரையினிலே - நீ
தோற்றிய சந்நிதிக் கோவிலிலே
மாமணி மீண்டும் ஒலிக்குதையா
தூமணியே பள்ளி எழுந்தருள்வாய்!

மாணிக்க விநாயகன் மலரடி தொழுதேன்
காணிக்கை ஏற்றவர் கனிந்தருள்வாரே
சந்நிதித் தெய்வங்களின் அருள் மழை வேண்டும்
எழுந்தருள்வாயே ஜெகத் குருநாதா!

காலடி தந்ததன் கருணையினால்
பூங்கொல்லை நடுவே உன் திருவடியோ
பூஜிக்க ஓடோடி வருவேனே
பள்ளி எழுந்தருள் பரம் பொருளே!

வழிக்குத்துணை கந்தன் வடிவேலாம்
பழிக்குத்துணை பாலன் படை வீடாம்
மொழிக்குத்துணை உயிர் மெய் எழுத்தாகும்
விழிக்குத்துணை வேலன் மலர்ப்பாதம்!

அகரம் அவனே அனாதியே
உகரம் அவனே உள்ளதே
மகரம் ஓம் எனும் மந்திரமே
சிகரம் ஸ்ரீ செல்வச் சந்நிதியே!

தையும் பிறந்து வழி பிறக்க
தைப்பூசத்திருநாள் வந்திடுமே
அபயகரமங்கே திறக்கையிலே
அத்தனை நிதியும் சுரந்திடுமே!

மாசியில் வரும் சிவராத்திரியில்
காசியில் நின்ற பலன் எல்லாம்
இரவைப் பகலாய் ஆக்கிவிட்டால்
இந்திர போகம் இப்புவிமீதே!

கைலையிலே திருக்கல்யாணம்
சமநிலைக்காய் இடும்பன் கொணர்ந்த
இருமலை கண்டாய் பழனியிலே
பங்குனி உத்தர நந்நாளில்!

சித்திரை மாதம் புது வருடம்
பத்தர மூர்த்தம் கொண்டுமே நீ
வெள்ளி மயில் மீது ஏறியுமே
தரிசனம் தருவாய் தயாபரா!

வைகாசி விசாகம் வந்ததுவே
வைபோகத் திருநாள் சந்நிதியில்
வேளைக்கே நீ அங்கு நின்றாலோ
வேண்டியதை வேலன் தருவானே!

ஆனிப்பொங்கல் விளக் கெரிய
ஆழ்கடல் சென்று நீரெடுப்பர்
கண்ணகை அம்மன் கதையெல்லாம்
கேட்கவைப்பாய் உன் கோவிலிலே!

ஆடி மாதம் கதிர்காமம்
தேடிச் செல்வாய் கொடியேற்றம் காண
திருவிளையாடல்கள் காட்டிய பின்
திரும்பிடுவாய் துவையல் உண்ண!

ஆவணி மாதம் உன் மகோற்சவம்
பூரணையோடு பொலிவு பெறும்
விழாக்கோல அழகைச் செப்புதற்கு
வார்த்தைகள் தேடி நிற்கின்றேன்!

புரட்டாசி மாதம் நவராத்திரி
சக்திகள் சம்ஹார அருட்கோலம்
விஜய தசமி நாள் அதனில்
விரும்பிய வரங்கள் பெற்றிடுவீர்!

ஐப்பசிமாதச் சஷ்டியை நோக்கி
ஆறுநாளவன் விரதமேற்று
சக்தியின் வேலின் துணையுடனே
சம்ஹரித்தான் அவுணர் குலத்தையுமே!

கார்த்திகை மாதம் பிறந்ததுமே
கார்த்திகைப் பெண்கள் இடம் வளர்ந்த

கார்த்திகேயன் தான் கருத்தினிலே
தீப ஒளியிலே தெரிசனமோ!

மார்கழி மாதம் திருவெம்பாவை
ஆருத்ரா தரிசனம் ஆலயத்தில்
ஆறுமுகன் பெற்ற அருளையெல்லாம்
அடியர்க்கு அள்ளித் தருகின்றான்!
******************

**வேலாபிஷேகம்**

ஆற்றங்கரையினிலே வேலா உனக்கு அபிஷேகம்
ஆறாத மனங்களிலே ஆறுதல் தான் உதயம்
உன்னைக் குளிர வைக்கும் காட்சிதனைக் கண்டுவிட்டால்
தம் வாழ்வு மலரும் என்ற எண்ணமோ உன் அடியருக்கு . . .

ஆற்றங்கரை வேலையா அன்னதானக் கந்தையா
வேலாபிஷேகம் காண சந்நிதி வருவோம் - முருகா
வேலாபிஷேகம் காண சந்நிதி வருவோம்
வேல் வேல் முருகா . . . .முத்துக்குமரா
வேல் வேல் முருகா . . . .முத்துக்குமரா

வரும் அடியார் குறைகளெல்லாம் வரமுன்னே தீர்ப்பவனே
வேலாபிஷேகம் காண சந்நிதி வருவோம் - முருகா
வேலாபிஷேகம் காண சந்நிதி வருவோம் ( வேல் வேல் முருகா )

அன்னதானக் கந்த வேலோ இது அறிவு தரும் ஞான வேலோ
வேலாபிஷேகம் காண சந்நிதி வருவோம் - முருகா
வேலாபிஷேகம் காண சந்நிதி வருவோம் (வேல் வேல் முருகா )

தேவரெல்லாம் தினம் தினமும் பூசை செய்யும் சந்நிதியில்
வேலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம் - முருகா
வேலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம் (வேல் வேல்
முருகா )

தணிகாசலம் அமர்ந்தவனே தணித்திடுவாய் வினை வேட்கை
தண்ணீர் அபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
தண்ணீர் அபிஷேகம் காணச் சந்நிதி வருவோம்(வேல் வேல் முருகா)

பால முருகன் உருவினிலே பார்வதியாள் வேல் தந்தாள்
பாலாபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
பாலாபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் (வேல் வேல் முருகா )

தனித்து நின்ற இளையவனே தெண்டாயுதம் தரித்தவனே
தயிரால் அபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம் - முருகா
தயிரால் அபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம்(வேல் வேல் முருகா)

நெக்குருகும் அடியவரின் நெஞ்சமதில் நிறைந்தவனே
நெய்யால் அபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
நெய்யால் அபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம்(வேல் வேல் முருகா)

தித்திக்கும் செந்தமிழாய் தென்னகத்தில் மிளிர்பவனே
தேனா லபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
தேனா லபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம் (வேல் வேல் முருகா )

தஞ்சம் என்ற அடியவரின் நெஞ்சமதோ நின் கோவில்
பஞ்சாமிர்தபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
பஞ்சாமிர்தபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம்( வேல் வேல் முருகா)

இளகுதப்பா கல் மனசு இளையவனே உனைக் காண
இளநீர் அபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
இளநீர் அபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம்(வேல் வேல் முருகா)

வினையறுக்கும் வேலதனைத் துணையாகக் கொண்டவனே
விபூதி அபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
விபூதி அபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம் (வேல் வேல் முருகா)

சந்தணத்தில் நிறம் எடுத்து சரணகமலாலயத்தில்
சந்தணாபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
சந்தணாபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம் (வேல் வேல் முருகா)

வள்ளி தெய்வயானையரின் குங்குமத்தில் திகழ்பவனே
குங்குமாபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
குங்குமாபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம் (வேல் வேல் முருகா)

பன்னிரு கை வேலப்பா பத நிலையைத் தருவாயே
பன்னீர் அபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
பன்னீர் அபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம்(வேல் வேல் முருகா)

வாசனைத் திரவியத்தில் வந்து மனம் லயிப்பவனே
வாசனாபிஷேகம் காணச் சந்நிதி வருவோம் - முருகா
வாசனாபிஷேகம் காணப் புண்ணியம் செய்தோம் (வேல் வேல் முருகா)

******

**சந்நிதியான் அர்ச்சனைகள்**

அண்ணனை முன் வைத்தேன் ஆனைமுகத்தரசே போற்றி
விக்கினங்கள் அகல்விக்கும் விநாயகப் பெம்மான் போற்றி
ஆயிரம் கரங்கள் கூப்பி அழைக்கின்ற அருளே போற்றி
ஆறுதல் தருவதற்கு ஆறிரு கரங்கள் நீட்டி
இன்பமான வாழ்வதனை இனி எமக்குத் தருவதற்கு
ஈதலே கதி என்றால் கோலால பூசையுண்டு
உன் அருள் தான் வேண்டும் உவந்ததைத் தருவாய் போற்றி
ஊழ்வினைப் பயனெல்லாம் உனை வாழ்த்தப் போயிடுமே
என் அப்பன் என்று சொன்னேன் என் தாயும் நீ யன்றோ
ஏரகப்பதி வாழும் எங்கள் சந்நிதி வேலா
ஐயா எனப் பணிந்தால் ஐயங்கள் பறந்திடுமே
ஒன்றாகி நாமெல்லாம் ஒற்றுமையாய் வாழ வேண்டும்
ஓலங்கள் குறையவேண்டும் பா ஓதலே நிறைய வேண்டும்
ஔஷதமாய் நின்றெமக்கு அருளதனை அள்ளித்தர
ஆனைமுகன் தம்பியே ஆதி செல்வச் சந்நிதி வாழ்
ஞானக் கனிவுடைய நாயகனே போற்றி போற்றி

ஆறிரு கரங்கள் நீட்டி அணைத்திடும் அருளே போற்றி
ஆறிரு கைகள் காட்டி அபயமெனும் அன்பே போற்றி
ஆறிரு கரங்களாலே அனைத்தையுமே அருள்வாய் போற்றி
ஆறிருகை அமுதளித்து பழமாக்கும் திருவே போற்றி
அன்னமலை அரசே போற்றி ஆற்றங்கரை அருளே போற்றி
பூவரசத்தருகமர்ந்த புண்ணியா நின் பொன்கழல்கள் போற்றி
கல்லோடைக் கரை அமைந்த பாதார விந்தம் போற்றி
சொல் அமுதம் எனக்களித்த சுந்தரனே போற்றி போற்றி
என்னிரண்டு கரங்களாலே எடுப்பதெல்லாம் மலராக்கி
உன்னிரண்டு பாதத்திலே ஏற்றிடுவாய் போற்றி போற்றி
என்னையுமே மலராக்கி ஏற்கும் நாள் வரும் வரையில்
பன்னிரண்டு விழிகளினால் பாவி எனைக் காப்பாய் போற்றி

வேழமுகத்தான் துணை விநாயகப் பெம்மான் துணை
ஞானமுதல்வன் துணை நாதாந்த நாயகன் துணை

வினையகல வைத்தான் துணை துணையாக நின்றான் துணை
நம்பினோர்க் கென்றும் துணை நாதன் தாள் நாளும் துணை

வேலும் மயிலும் துணை வெற்றிவேல் முருகன் துணை
நாளும் கோளும் துணை நம்பினோர் வாழ்வில் துணை
நாதாந்த நாமம் துணை வேதாந்த விளைவே துணை
சங்கடம் தீர்ப்பாய் துணை சந்நிதி வேலன் துணை
சரவணபவனே துணை சகலதும் ஆனாய் துணை
வேற்கரணி முத்தே துணை பூவரசத் திருவே துணை
காலடியே நாளும் துணை கல்லோடைக் கரையும் துணை
பாவடியைத் தந்தாய் துணை பாபங்கள் தீர்ப்பாய் துணை
சேவடியைத் தொழுவார் துணை சேவலும் மயிலும் துணை
வள்ளி தெய்வானை துணை வல்வினைகள் தீர்ப்பாய் துணை
ஆற்றங்கரையான் துணை ஈராறு கரங்கள் துணை
ஆறுமுகத் திருவே துணை ஆறுதல் தருவாய் துணை

சந்நிதி வேலா சரணம் சரணம் சரவணபவனே சரணம் சரணம்
சந்நிதி வேலா சரணம் சரணம் சரவணபவனே சரணம் சரணம்
சந்நிதி வேலா சரணம் சரணம் சரவணபவனே சரணம் சரணம்

சந்நிதி வேலா சரணம் சரணம் ஷட்கோண இறைவா சரணம் சரணம்
சந்நிதி வேலா சரணம் சரணம் ஷட்கோண இறைவா சரணம் சரணம்
சந்நிதி வேலா சரணம் சரணம் சகலதும் நீயே சரணம் சரணம்!

*****************

**கணபதியே ஓம் கணபதியே**
கனிந்தருள்வாயே கணபதியே
கணபதியே ஓம் கணபதியே
கனிந்தருள்வாயே குணநிதியே



மாணிக்கப் பிள்ளையாராய் கணபதியே
ஸ்ரீசெல்வச் சந்நிதி வாழ் கணபதியே
மனமாயை களைவாய் கணபதியே
மனமதில் நிறைவாய் கணபதியே

தொண்டைமான் ஆற்றங்கரை கணபதியே
தொண்டரைக் காக்க வந்த கணபதியே
தம்பியோடு கூட நின்று கணபதியே
தும்பிக்கையான் துணை வேண்டும் கணபதியே

மாம்பழப் போட்டியிலே கணபதியே
அன்னை தந்தை உலகமென்றாய் கணபதியே
ஞானப் பழம் பெற்றதினால் கணபதியே
தம்பி கோபம் கொள்ளவைத்தாய் கணபதியே

கோபம் கொண்ட தம்பியையும் கணபதியே
தாபம் கொண்ட நேரம் காத்தாய் கணபதியே
வள்ளியை மணமுடிக்க கணபதியே
யானையாக நீ வந்தாய் கணபதியே

செல்லக் கதிர்காமத்திலே கணபதியே
வல்ல கணபதியானாயே கணபதியே
நல்ல நல்ல வரம் வேண்டும் கணபதியே
தொல்லைகளைத் தீர்த்தருளும் கணபதயே

தச்சகொல்லை நாயகனாய் கணபதியே
அச்சம் தவிர்க்க வாராய் கணபதியே

மிச்சமின்றி வினை தீர்க்கும் கணபதியே
தொண்டைமானாறு வாழும் கணபதியே

தம்பியோடு சந்நிதியில் கணபதியே
காட்டுகின்ற அற்புதங்கள் கணபதியே
சொல்ல சொல்ல வாயினிக்கும் கணபதியே
மெல்ல மெல்ல மனமினிக்கும் கணபதியே

*******

**சற்குருவாய் வருவாயே சந்நிதி வேலே**
சஞ்சலங்கள் தீர்க்கும் எங்கள் சந்நிதி வேலே
சரவணபவ சண்முகமே சந்நிதி வேலே
சந்தேகம் தீரும் உன்னைச் சரண் அடைந்தாலே
தொண்டை மானாற்றருகே சந்நிதி வேலே
தொண்டர் குறை தீர்த்தருள்வாய் சந்நிதி வேலே
கண்டம் பல கடந்தாலும் சந்நிதி வேலே
என்றும் எங்கள் நினைவில் நிற்பாய் சந்நிதி வேலே
உள்ளம் தன்னில் குடியிருக்கும் சந்நிதி வேலே
உணர்வாகி உருவானாய் சந்நிதி வேலே
அனல் வடிவாய் வந்தவனே சந்நிதி வேலே
அருட்குருவே அனைத்தும் நீயே சந்நிதி வேலே

*******

**குரு கவசம்**

நாயகனாய் வந்த குருநாதா
விநாயகனாய் வந்தெம் வினை தீராயோ
தச்சகொல்லை நாயகனின் தாள் பணிந்து நின்றார்க்கு
மாணிக்கப் பிள்ளையாரே காணிக்கை ஏற்பாரே
ஓம் குருநாதா ஜெய குருநாதா

சந்நிதி வாழ் தெய்வங்களின் சரணகமலாலயத்தில்
சரண் அடைய வந்தோர் சாயுச்ய சங்கமமே!
இந்து சமயத்தின் ஓராறு கிளைகளுமே
இன்ப மயமாகி அங்கே ஆறாகி ஓடிடுமே
தொண்டைமானாற்றருகே தொண்டர் குறை தீரவென்று
பூவரச மரத்தருகே சிவகுரு நாதன் ஆனான்!
அண்ணாமலை அரசன் தெட்சணா மூர்த்தியாய்
அடியர்க்கு அருளும் அந்த அற்புதக் காட்சிதானே!
அரஹர சிவசிவ மகாதேவா . . .
சம்போ சங்கர சாம்ப சிவா தேவா . . .
முன்னேஸ்வரம் நின்றாய் கோணமாமலை அமர்ந்தாய்
கேதீஸ்வரத்தில் ஆடி நகுலேஸ்வரம் தந்தாய்
தில்லையம்பதியிலே உன் திருவிளையாடல் கண்டேன்
அண்ணாமலையிலே உன் அருட்ஜோதி கண்டேன்
காளகஸ்தியிலுன் கருணை மழை கண்டேன்
திருவானைக்காவிலே உன் திருவிளையாடல் கண்டேன்
கங்கைக்கரை அமைந்த காசியில் உன் கோலம் காண
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் திருவருள் கைகூடும் (ஓம் குருநாதா )

அன்னையே உன்னையே நம்பி வந்தேன்
என்னையும் காத்தருள எழுந்தருள்வாய் தாயே . .(அன்னையே)
கோடிக்கரை பெயர்ந்து வல்வையம்பதி வந்த
சமய புரத்தவளே வல்வை முத்துமாரியே
காஞ்சி காமாட்சியாய் மதுரை மீனாட்சியாய்
கடவூர் அபிராமியாய் தெல்லிப்பளை துர்க்கையாய்

நயினை நாகபூஷணியாய் துர்க்கா லக்ஷ்மி சரஸ்வதியாய்
எம்மைக் காக்க வந்த வீரமாகாளியம்மா!
கன்னியாகுமரியாய் காசிவிசாலாட்சியாய்
எண்ணிய போதெல்லாம் எண்ணத்தில் உறைபவளே!
கௌரியாய் காயத்ரியாய் கருமாரித் தாயாகி
களம் பல கண்ட அந்த நவராத்திரி நாயகியே!
நவக் கிரகங்க ளெல்லாம் உன் திருக் கரங்களாம்
நல்லவை எமக்கருள நலமுடன் நின்றருள்வாய் (ஓம் குருநாதா)

வா முருகா வரம் தா முருகா
வண்ண மயிலேறி வள்ளி தெய்வயானையுடன் . . .வா முருகா
எண்ணமெல்லாம் நிறைந்த வண்ணவடி வேலழகா . .வா முருகா
அடியரின் உள்ளம் என்னும் சரவணப்பொய்கையிலே . .வா
முருகா
செந்தூர்க் கரையினிலே படைத் தளம் அமைத்தவனே . .வா
முருகா
வேல் கொண்டு அசுரத்தன்மை வேரறுத்த வேந்தனே . . .வா
முருகா
மாங்கனிக்காக நீ வாதாடிய பின்னே
பழநியிலே நீ பழம் ஆகினாயோ . . .வா முருகா
அப்பனுக் குபதேசம் அளிப்பதற்கோ - ஓர்
சுவாமிமலை தன்னைத் தேடினாயோ . . . வா முருகா
தூது சென்ற வீரபாகு சந்திகாலப் பூசை செய்ய
அபயம் அளிப்பதற்கோர் ஸ்ரீ செல்வச் சந்நிதியோ . . . வா முருகா
தீயவை அழிந்த பின்னே திருப்பரங்குன்றத்தில்
தெய்வானையுடன் இணையும் மோட்ச நிலை தானோ . . . வா
முருகா
மோட்ச நிலை பெற்றபின்னே அன்பு மயம் ஆவதற்கோ
தினைப் புனத்தில் எங்கள் அன்னை வள்ளி திருமணமோ . . வா
முருகா
அன்னையர் இருவருடன் ஆனந்தக் காட்சி தர
தேடினாயோ திருத் தணிகைமலை . . .வா முருகா

அன்பு நிலை பெற்ற பின்னே ஆறியமர்வதற்கு
பழமுதிர்ச்சோலை தனைத் தேடி நீ சென்றாயோ . . .வா முருகா
ஆடி முடிந்த பின்னே வீடு திரும்ப முன்னே
கதிர் ஒளி ஆவதற்கோர் கதிர்காமமோ . . .
வா முருகா வரம் தா முருகா
வண்ண மயிலேறி வள்ளிதெய்வானையுடன் . . .வா முருகா
ஞானபண்டிதா நீ ஞானசற்குருவோ
ஞானவேலா நீ ஞானானந்தமோ
ஞானவேலா நீ ஸ்ரீ ஹரிதாசமோ
ஞானவேலா நீ ஸ்ரீ முருகேசமோ . . . (ஓம் குருநாதா)

காளீய மர்த்தனா கம்ச நீசூதனா
கனகாம்பரதாரி காருண்ய மூர்த்தியோ . .(காளீய மர்த்தனா)
அலைகடல் அருகினிலே வல்லிபுர ஆழ்வாரோ
பஜனையால் மகிழும் பக்தவத்சலனே கண்ணா
சந்நிதியில் எமக்கருள சங்கரனோடு இணைந்து
சிவநாகதம்பிரானாய் தவக்கோலம் தனைக்காட்டி
பூவரச மரத்தருகே புண்ணியனார் சமாதி மேலே
பாமலர் படைத்தோர்க்கு பரலோகக் காட்சி நல்கும்
ஸ்ரீ ராமனும் நீயே ஸ்ரீ ஹனுமானும் நீயே
ஐயப்பனும் நீயே அருள் தருவாயே
அஞ்ஞானம் போக்க வந்த அருட்குருவே தேவா
மெய்ஞானம் தரும் எங்கள் ஞானத் தபோவனனே
மெய்ஞானம் தரும் எங்கள் ஆலரசுச் சோலையனே
மெய்ஞானம் தரும் எங்கள் ஆற்றங்கரை வேலவனே (ஓம் குருநாதா)
ஜெய ஜெய ஜெய ஜெய குருநாதா
ஜெய சுப மங்களம் தரும் நாதா . .

************

**அன்புக்கு அன்னை ஆனவன்**
அறிவுக்கு தந்தை ஆனவன்
பரிவுக்கு குருவுமானவன் குகநேசனே

கருவாகா உருவுமானவன்
அறிவாகி அனைத்துமானவன்
அன்னவனாம் சந்நிதியான் அடிமையானவன்

புற்றுநோய் பற்றவைத்து
பற்றறுத்துப் பழுக்க வைத்து
தந்த ஓர் குருநாதன் எங்கள் ஐயா

காவியுடை தரிக்காமல்
கானகமே செல்லாமல்
தவிக்கும் அந்த அடியருக்கோர் ஆலமரமே

ஆலமிலை அமுதூட்டி
ஆனமட்டும் அருள் கூட்டி
பூவரசாய் பூத்தவர்தான் எங்கள் ஐயா

சந்நிதியே சிந்தனையாக
திருப்பணியே வந்தனையாக
நின்ற அந்தத் திரு உருவே முருகேசமே

உடலைவிட்டு அகன்றாலும்
கடலைத்தாண்டி நின்றாலும்
என் உயிரில் கலந்தவன் தான் எங்கள் ஐயா

முருகேசம் பரமஹம்சம்
முருகேசம் பரிபூர்ணம்
முருகேசம் பரப்பிரம்மம் அறிவாய் மனமே
*********

**அன்றலர்ந்த தாமரையோ - ஐயா**
இன்றிணைந்த இன்சுவையோ

வேலவன் திருவடியில் வேண்டி நீ சென்றாயோ
வேண்டும் அடியவரின் வேதனைகள் தீர்ப்பதற்கோ

உடலோடு நீவாழ்ந்து உழன்றது போதும் ஐயா
அருளோடு நீ இணைந்து ஆதரித்தால் அடியவர்கள்
குருபீடம் தனை அமைத்து கும்பிட்டு நிற்பாரே
அருளாற்று சந்நிதியில் ஆடல் கண்டு களிப்பாரே

ஈழத்தமிழர் வாழ்வில் இன்னல்கள் மறையவேண்டும்
இழந்த நம் உரிமைகளை இனி நாம் பெறவேண்டும்
களபூமியான எங்கள் ஈழத்தமிழ் மண்ணெல்லாம்
விளைபூமியாய் மாற விக்கினங்கள் தீரவேண்டும்

மூலஸ்தானத்தில் வேலன் அருள் சுரக்கின்றது
வேற்படையே ஓர் காற்படையாய் வருகின்றது
சத்ரு சம்ஹார வேளையங்கு தெரிகின்றது
வேலனருள் கடல் மடையாய் சந்நிதியில் பாய்கின்றது

விக்கினங்கள் தனைப்போக்கும் வேழமுகம் வருகின்றது
வேதங்கள் பீடமாக வேலன் அங்கே வீற்றிருக்க
அன்னையர் இருவருமே அணிகலன் ஆகின்றார்
அன்னமலை அருகினிலே வேலன்
விளையாடுகின்றான்

*******************************



ஆத்மாஞ்சலி

**தேவரும் மனிதரும் தினம் உன்னைப்பூஜி க்க**
ஸ்ரீ செல்வச் சந்நிதியோ - அங்கே
அடியார்க்கு அன்னமும் ஆலயத்தின் திருப்பணியும்
ஆற்றவோர் **முருகேசமோ!**
அரூபமாயிருக்கும் ஆரமுதே ஆலமரமாகி
நிழலாகினாயோ - ஞான
சொரூபத்தின் சிகரத்தில் சுப்ரமண்ய குருவாகி
சுடரொளியால் இடர் நீக்கமோ!

சுடரொளியின் சூடெல்லாம் சூழ்ந்துவரும் அடியவரை
சுட்டெரிக்காமல் இருக்கவோ
சித்த சுத்தானந்த சின்மயமாய் நின்றவரை
சந்நிதியில் நிரப்பி வைத்தாய்!
அன்னவரின் வரிசையிலே சொன்னவர்க்கு அடிமையாகி
சூழ்ந்து நின்ற முருகேசமோ!
தன் உடலைத்தான் வாட்டி எம்மவர்க்கு அருள் கூட்டி
மெழுகாகித்தான் கரைந்ததோ!

புற்று நோயைப் பற்றவைத்து தன்னையுமே உணரவைத்து
அன்னவனை ஆட்கொண்டபோதும்
பற்றற்றான் பாதத்தைப் பற்றியுமே பணி புரிந்தும்

பாசத்தை துறக்கவில்லை
பூர்வஜென்ம சொந்தங்கள் துறந்தாலும் துறவாத
புதுப்பொலிவைத்தான் கண்டவா!
வந்தடைந்த அடியவரில் வாரிசைக் கண்டதுமே
சொந்தங்கள் உருவானதோ!

வினைஒட்டாக் கர்மமும் துணை ஒட்டாச் சொந்தமும்
வாழ்க்கையாய்க் கண்டபோதும்
வேலவனின் அடிமையாய் வேள்வியாய் அமைந்ததால்
அடியாரின் குறை தீர்ந்ததோ!
அன்னதானப் பெரும் பணியை அடிக்கடி நீ ஏற்றுமே
அடியாரின் பசி போக்கினாலும்
ஞானதானப் பணியெல்லாம் நாள்தோறும் நீ ஏற்று
நல்லவழி காட்டி நின்றாய்!

சித்தமலமடக்கி சிதானந்த நிலைகண்டு
சித்தராய் நின்றபோதும்
ஆத்ம ஈடேற்றத்தில் சாஸ்வதமாய் நிற்பதுதான்
சாலச் சிறந்ததென்றாய்!
பக்தியின் ஆழத்தை பலர் அறிய வேண்டுமென்று
இறைவனை ஏற்றிடுவாய்
ஞானத்தை நாமறிய வேலவனை மனதேற்றி
தியானத்தில் திளைத்திடுவாய்!

அருட்குருவாய் அவர் இருந்து - வரும் அடியார்களின்
குறையெல்லாம் தீர்த்த போதும்
குற்றேவல் புரிவதற்கும் கூடநின்று காப்பதற்கும்
உற்ற ஓர் துணை தந்தானே!
அன்னவனாம் முருகேசன் அவன் பாதம் பற்றியதும்
தன்னுடலை வாட்டியது எல்லாம்
சாயுச்ச நிலை காட்டும் சந்நிதியின் வேலவனின்
சன்மார்க்க நெறி என்பதோ!

குற்றேவல் புரிந்தவரை குன்றாக்கி குணமாக்கி
நல்ல குருநாதனாக்கி
அன்பினுக்கு அன்னையாய் அறிவினுக்கு தந்தையாய்
பரிவினுக்கோர் குருவுமாக்கி
உடல்வாடி நின்றதால் உதவாது என்றெண்ணி
புகழுடம்பில் புகுத்தி விட்டாயோ!
ஆத்மார்த்தமாகவே உன்னடியில் **எங்கள் ஐயா**
கூட இருந்தருள வேண்டும் – **நின் அருளை**
**வாரி எமக்கருளவேண்டும்**

-சந்நிதி வேலே சங்கடம் தீர்ப்பாய்!

******************

## வேலவன்





**அருளோடு வேலாட ஆட அடியார் நின் புகழே தான்** பாட
திருநீற்றைத் தலைமேலே போட நீ போட தீவினைகள் பறந்தோடி ஓட

சேவிக்கும் அடியவர்கள் கூட கூட- நின் திருநாமம் திக்கெட்டும் பாட பாட
தீர்த்தமது கோமுகையில் ஓட ஓட தெளிவான சிந்தனையை நாட

காப்பாய் முருகா எனப் பாட பாட கருணை அருளாறாகி ஓட ஓட
ஆலமிலை அமுதினைத் தேட தேட அடியவர் பிணியெல்லாம் ஓட

நெய்யொளியில் மாவிளக்கு கூட கூட மணி விளக்காய் நீ அருகே
ஆட ஆட
தாமதியா அருளதனை அள்ளி தருகின்றாள் உன் துணைவி வள்ளி
. . .

( தவத்திரு வே . முருகேசு சுவாமிகள். )

*********

**அரஹர சிவசிவ சண்முகநாதா சந்நிதி வேலா** சரணம்
சிவசிவ ஹரஹர சரவண பவனே சந்நிதி வேலா சரணம்
செல்வச் சந்நிதி வேலா சரணம்

வேலனைத் துதித்தால் வேண்டும் வரங்கள்
வேண்டிய அளவில் தருவான்
காலனையும் வெல்லும் வேலனிவன் - உனைக்
காலகால மென்றும் காப்பான்
ஞான அறிவும் தருவான்
அன்னதானக் கந்தனாய் வருவான்

ஓராறு முகமும் ஈராறு கரமும்
தீராத வினைகளைத் தீர்க்கும்
வாராது இடர் இவன் பாதாரம் தனிலே
மாறாது சரண் அடைந்தோரை.
எங்கும் தங்கும் வேலவனே
பொங்கும் மங்களம் தாராய்.
தங்கு தடையின்றி வரம் தரவே
ஆற்றங்கரை யருகே நின்றருள்வாய்

**********

**வடிவே!**

அருள் வடிவே ஆறுமுக வடிவே
அசுரர் குலம் அழிக்க வந்த வடிவே
சூரசம்ஹாரத்தின் எழில் வடிவே
வேலாக வீதி வந்த பெருவடிவே . . .

ஆறுமுகம் இணைந்து வந்த வடிவே
அன்னையவள் அணைத்ததால் இந்த வடிவே
ஆதி சிவன் முக்கண்ணின் பொறி வடிவே
ஆனைமுகன் பின்னாலே நின்ற வடிவே . . .

அசுரர்கள் குழந்தைபோல் கண்ட வடிவே
மயிலான இந்திரன் மேல் வந்த வடிவே
மாயா ஜாலச் சூரனைக் கொன்ற வடிவே
மயிலாக்கிச் சேவலாக்கிக் கொண்ட வடிவே . . .

மாமரமாய் வந்தவனைக் கண்ட வடிவே
பிளந்த பின் இரட்சித்த பெரு வடிவே
மாங்கனிக்காய் மயிலேறிச் சென்ற வடிவே
பழம் எனப் பழனியில் நின்ற வடிவே . . .

ஒளி வடிவாய் வந்த எழில் வடிவே
ஓம் என்ற மந்திரத்தின் உள் வடிவே
ஓங்கார நாதத்தில் வரும் வடிவே
ஓடி வந்து குறை தீர்க்கும் அன்பு வடிவே . . .

வேலாகச் சந்நிதியில் தோற்றும் வடிவே
வேண்டுவார் வேண்டுவன தரும் வடிவே
கலியுக வரதனாய் வந்த வடிவே
பொன்னுலக வாழ்வு தரும் இன்ப வடிவே . . .

வடிவேலாய் வரும் போதோர் தனி வடிவே
வள்ளி தெய்வானையுடன் இணை வடிவே
வேலும் மயிலுமென்றால் துணை வடிவே
வேதாந்த நாதாந்தப் பெரு வடிவே . . .

குறை தீர்க்க குன்றுதோறும் வரும் வடிவே
மறைகளெல்லாம் கடந்த மோன வடிவே
ஆறு படை வீட்டினிலே ஆடும் வடிவே
ஆறி அமர இங்கு வந்த வடிவே . . .

ஆற்றங்கரை தன்னிலே ஆறும் வடிவே
ஆறெழுத்தை மந்திரமாய்க் கொண்ட வடிவே
ஆடி வரும் காவடியில் வந்த வடிவே
பூவரச மரத்தருகே நின்ற வடிவே . . .
*********

**அண்ணாமலை மேலே ஓர் ஜோதியைக் கண்டபின்னே**
ஆறு பொறியாய் ஓர் உருவாய் அன்னமலை மேல் தவழ்ந்தாயே

அசுரரை அழித்திடவே அப்பன் கண்களில் வந்ததெல்லாம்
சரவணப் பொய்கையிலே தாமரை மலர்களில் தவழ்ந்ததெல்லாம்
கார்த்திகையின் பெண்கள் உன்னைத் தாலாட்டிச் சீராட்ட
காக்க வந்த தேவர்க்கு அபயம் சந்நிதியின் ஞாபகமே

முருக என்றாலே மனம் உருகிடும் ஞாபகமே
தருக என்றாலே நீ தந்தது ஞாபகமே
வருக என்றாலே சந்நிதியில் எனைக் காத்தது ஞாபகமே
உள்ளம் தன்னிலே நீ உறைந்த ஞாபகம்
உயிராய் என்றும் என்னில் நீ கலந்த ஞாபகம்

தொண்டைமானாற்றம் கரையோரம் ஞாபகமே - அங்கே
தோன்றிய ஓர் கோவிலில் வினை தொலைவது ஞாபகமே

கண்களில் நீரைத்தேக்கி நின்றார்க்கு கருணையாறாய்ப் பாய்வது ஞாபகம்
காலடியும் வைத்தது ஞாபகம் பாவடியும் தந்தது ஞாபகம்
காலம் எல்லாம் காப்பேன் என்று சொன்ன ஞாபகம்

பூவரச மரத்தடியில் ஓர் புண்ணியன் ஞாபகமே
பூவாய் எனை மாற்ற பா தந்ததும் ஞாபகமே
ஆலரசெல்லாம் பூவரசாய் இங்கே மாறுதல் ஞாபகமே
ஆலமுண்டோன் மகனிங்கே தன் அடியர்பிணி போக்கிய ஞாபகம்
அன்னமலை படைத்திங்கே சொர்ணமலை அமர்ந்தது ஞாபகம்

வேற்கரணி வேற்கருணை ஆய் ஆவது ஞாபகமே
வேழமுகத்தோன் வினைபோக்க வீற்றிருப்பதும் ஞாபகமே
காலடி தந்ததும் அற்புதங்கள் பல காட்டிய ஞாபகமே
தேவரும் மனிதரும் இங்கே தினம் பூசை ஞாபகமே
தேனாறும் பாலாறும் இங்கே தினம் பாயும் ஞாபகமே

*******

**அறுபத்து மூவர்க்கு ஆலமிலை அமுதளித்த**
அண்ணாமலை தந்த அன்னமலை அமுதனின்
புகழ் பாட எண்ணமலை மீதேறி நிற்கின்றேன்
சொர்ணமலையோன் அருகழைத்து சுப்ரமண்யம் என்றான்

சுப்ரமண்யத்தில் தொழுகோடி அடியர் அடக்கம்
சரவணபவத்திலே எழுகோடி மந்திரம் அடக்கம்
ஓம் சரவணபவ குகாய சந்நிதி வேலாய என்றேன்
தொழுகோடியையும் எழுகோடியையும் என்னுள்ளே கண்டேன்

இத்துணை சக்தி கொண்ட மகாமந்திரம் இதுதானோ
இதனை எனக்குத் தந்தவிதம் என்னென்று நா சொல்லும்
அகர உகர மகரங்கள் நாவிலே நர்த்தனமோ
நாயகியாள் வீணை மீட்க நிர்த்தியங்கள் சொப்பனத்தில்

நினைவா கனவா என்றேன்
ஆட்டமோ அடங்கவில்லை
அன்னையவள் ஆட்டத்தை அப்பனும் ரசிக்கின்றான்
ஈரேழு உலகங்களும் சலங்கையாய் ஒலி முழங்க

ஆறு நாடிச் சுளிமுனையையும்
ஆறு படை வீடாக்கி
ஏறி ஏறி வந்தவர்க்கு குண்டலினி குதித்தெழும்ப
உச்சியிலே சொர்க்கத்தை உள்ளடக்கி வைத்தானோ

சிரசினிலே சரசம் சிவனாரும் மகனாரும்
உரசி உரசிப் பார்க்கையிலே மிளிரும் பொன்போலே
தராசினிலே பக்தியும் ஞானமும் இரு பக்கம்
சமநிலையில் சன்மார்க்க நெறியும் தான தர்மமும்

ஆசைகளை அடக்காமல் அறுத்தே எறிந்துவிடு
காமகோப தாபங்களை எரித்தேவிடு அனுதினமே
ஐம்புலன்கள் அடக்கமென்றால் அஞ்ஞானம் ஒடுங்கிவிடும்
மாயைத்திரை உனக்கு மனத்தளவில் மாத்திரமே

நான் என்ற ஒன்றை தானாக ஏற்படுத்தி
மனம் என்ற ஒன்றில் மமதையையும் தான் இருத்தி
ஒன்றாகி நின்றவன் வேறாகி விட்டானே
யோகத்தை கட்டிஅணை தூரங்கள் தொலைந்துவிடும்
*******

**அழித்தனையோ அசுரர் குலத்தனையோ** - பின்
அருளீட்டி சேவல் மயில் ஆக்கலையோ
காப்பதும் அழிப்பதும் உன் கடனல்லவோ
காண்பதெல்லாம் மாயையின் தோற்றமன்றோ

சூரபத்மன் ஆதியில் உன் பக்தனன்றோ - பின்
சூரசம்ஹாரத்தின் தலைவனன்றோ
நீ கொடுத்த வரத்தாலே அசுரனாகி - பின்
நீ கொடுத்த வரத்தாலே வல்லமை பெற்றான்

நான் என்ற பொய்மை நிலை கொண்டதாலே
உனை மறந்து தேவரைத் துன்புறுத்த
தேவரும் தம் தவறுணர்ந்து உனைத் துதிக்க
தேவர் குறையும் தீர்த்தாய் அசுரரையும் அழித்தாய்

பிறப்பும் இறப்புமென்று ஒன்றில்லையே
பின் ஏனையா உந்தன் இந்த விளையாட்டு
உண்மை தனை உணர்த்தவோர் ஆயிரம் பாடல்
பாடி வைத்தார் அன்பரெல்லாம் உந்தன் பெயரால்

ஸ்கந்தம் என்ற மூலசக்தி பாம்பினைப்போல்
சுருண்டு கிடக்கிறதே மூலாதாரத்தில்
ஆறு சந்திகளைக் கடப்பதையே
ஆறு படை வீடென்று ஆடி வந்தாய்

தீய சக்தி அத்தனையும் அழிந்த பின்னே
மோட்சத்தை அடைவதோ உன் முதல் கல்யாணம்
மோட்ச நிலை அடைந்த பின்னே அன்பு மயமாய்
இருப்பதை உணர்த்தவோ வள்ளி கல்யாணம்

அகிலத்தின் இயக்கம் சிவ சக்தி மயமே
பரம் பொருளான அந்தப் பெரும் பொருளே
இச்சை கொண்டு கிரிகை செய்து ஞானத்துடனே
ஆடிய பின் அடங்குவது - மோன நிலையோ

******

**அசுரத்தன்மை எல்லாம் அழிந்தபின் மோட்சநிலை**
அதனை உணர்த்திடவே **தெய்வானைத் திருமணமே**
மோட்ச நிலை கண்டபின்னே வியாபித்து அருள் சுரக்க
அன்பாகி ஆட்கொள்ள வள்ளியை மணந்தானோ

மூத்தவளோ மூலஸ்தானம் முன்னின்று அருளவென்று
மற்றவளோ பின்னின்று அன்பாலே ஆட்கொள்ள
தனியாக வீற்றிருந்து தணியாத தாகத்தை
தீர்ப்பதற்கே வேறாக கோயில் கொண்டாள் சந்நிதியில்

மனிதரின் திருமணங்கள் வள்ளி உந்தன் வாசலிலே
பிணிகளைத் தீர்ப்பதற்கு மாவிளக்கும் ஏற்றுகின்றார்
வேறாக இருந்தாலும் வேலனோடு கூட நின்று
வேதனையைத் தீர்க்க வந்த சுந்தரவல்லியம்மா

அமிர்தவல்லி சுந்தரவல்லி அன்று தவம் செய்தனரே
அடுத்த பிறப்பிலே அருள் புரிவேன் என்றானே
இந்திரனின் மகளாக அமிர்தவல்லி பிறந்தபின்னே
மானின் மகள் சுந்தரவல்லி வேடனிடம் வாழ்ந்தாளே

காலங்கள் கனிந்திடவே கந்தன் வரம் சித்திக்கவே
தெய்வானைத் திருமணமே திருப்பரங்குன்றத்திலே
மானைத் துரத்திவந்து தினைப் புலம் கண்டானே
அண்ணன் துணையால் வள்ளியைக் கைப்பிடித்தான்

மோட்ச நிலை தான் கண்டு அன்புமயமாகி நின்றான்
அருளவந்தான் சந்நிதியில் அன்னையர் இருவரோடு
************

**அருளுக்குக் குறைவுண்டோ கந்தா** - நின்
திருவடியில் சரண் அடைய சந்நிதிக்கு வந்தால்
கருணைக்குக் குறைவுண்டோ கந்தா - நின்
காலடியே தந்த செல்வச் சந்நிதியில் நின்றால்

ஆகம விதிமுறைகள் இல்லா
வாய் கட்டும் பூசைமுறை ஒன்றால் - உன்
அன்பரின் கால் தொட்டு நின்றால் - அந்தப்
பணிவேதான் பதநிலையைத் தருவதற்கென்றா

தேவரசு உனைப் பூசை செய்ததும் இங்கே
பூவரசு பொலிவுடன் தோன்றியதும் இங்கே
பாவரசு அருணகிரிக் குபதேசம் அங்கே
கவியரசு கதிர்காமர்க் குபதேசம் இங்கே

நின் புகழை நாவாரப் பாட நான் வந்தால்
எந்தனுக்கும் தருவாயோ நின் அருளைக் கந்தா
கருவாகா உருவான சக்தி உமை மைந்தா
கற்பூரமா யுருக எந்தனுக்கும் வரம் தா

***********

**அஞ்சி அஞ்சி அலறிவரும் அடியவரின்** நெஞ்சமதில்
அஞ்சேல் என்று சொல்லி வீற்றிருக்கும் காரணமோ
வேண்டும் அடியவர்க்கு வேலாகத் தோன்றுவதும்
கெஞ்சி நின்றால் நெஞ்சமது நெக்குருகி நிற்பதுவும்
உள்ளம் உருகியதால் உன்னடியர் கண்களிலே
கவலைகள் ஆறாகக் கசிந்துருகும் என்பதினால்
ஆற்றருகே அமர்ந்தாயோ ஆறுமுகா என் குருவே
ஆலம் இலைமீது அமுது தரும் கந்தனும் நீ
மாறாத நோய்க்கெல்லாம் திருநீறு அருமருந்தோ
வேறுபட்ட மனநிலையை வேல் தோன்றி மாற்றிடுமே
அதர்மங்கள் கூறாகும் அந்த நாளும் வந்திடாதோ
செல்வச் சந்நிதிவாழ் வேலழகா சரணம் ஐயா

**ஏற்றினோம் மாவிளக்கு** - உனக்கு
ஏற்றினோம் மாவிளக்கு

வள்ளி மலைக் காட்டினிலே வளர்ந்த தினை மாவெடுத்து
இந்திரனார் லோகத்திலே இருந்து வந்த இனிப்பெடுத்து

ஆறுபடை வீடுதனை ஓராறு திரிகளாக்கி, ஞானத்தை
நெய்யாக்கி நாம் படைத்தோம் உந்தனுக்கு

உள்ளமதைத் தட்டாக்கி உணர்வுதனை அனலாக்கி
ஏற்றிய திரிகள் ஆறும் எரிகின்ற அழகினிலே
படை வீட்டு ஜோதியிலே பதமலர்கள் தான் கண்டோம்
ஆற்றங்கரையினிலே ஆனந்தம் தான் அடைந்தோம்

மாவிளக்கு ஏற்றி உன்னை மனதாரப் போற்றி நின்றோம்
நானிலமும் தான் விளங்க நின் அருளைத் தந்திடையா
சந்நிதியின் பெரும் நிதியே சரவண பவ சண்முகமே
மாவிளக்கு ஏற்றிடுவோர் மனை வாழ வைத்திடையா

சக்தி தருவாய் என்று உந்தன் சந்நிதிக்கு வந்தோம்
சித்தி விநாயகன் துணையும் அன்னை சக்தி அருளும் வேண்டும்
தோகை மயிலேறும் மால்மருகா இந்த
ஏழைக்கருளவும் தாமதமேன்
ஆற்றங்கரையினில் ஆறுதல் காட்ட
ஆறுமுகத்தோடு வந்தருள்வாய்
வந்தருள்வாயே வரம் தந்தருள்வாயே

ஐந்தெழுத்து ஆதிமூலம் ஆறாகி எழுந்தருளி
ஆறெழுத்தை மந்திரமாய் ஆள வந்த ஆறுமுகா
சிவகாமி மைந்தனே . . .சிருங்கார வேலனே
*************

**அன்னமலை அருகே அமர்ந்தவனே**
அடியார்கள் குறையெல்லாம் தீர்ப்பவனே
ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலழகா
தீராயோ எங்கள் வினைகளெல்லாம்

பிணி தீர்க்க திருவேற்கரணி கொண்டாய்
இனியேது கவலை எந்தனுக்கு
துணிவோடு உன் புகழ் பாடுவேன் - வேலா
நோய் தீர்க்கும் பூவரச மரத்தருகே

பாலான மனத்தையும் அடங்கவைத்து - நீ
உறையாகி என்னுள் என்றும் உறைபவனே
பாடுகின்ற மனத்தினால் தேட வைத்து - நீ
பாடலாய் வந்தெனக்கு அமைதி தந்தாய்

வேதனையைத் தந்தும் என்னை வேகவும் விட்டாய் -பின்னே
சாதனையில் சத்தியத்தின் சாயலும் கண்டேன் - இனி
வேளைவரும் போதுதான் வேலை எனக்கோ - வேலா
வேண்டும் வரை வேண்டுகின்றேன் தாண்டும் வழி தா

வித்து வாங்க வருவோர்க்கு சந்நிதியிலே - நீ
சந்தான விருத்தியைத் தர எண்ணியே
வித்தை யெல்லாம் விளைவாக்கி ஆலமிலையில்
அமுதாக்கி உண்ண வைப்பாய் அண்ணன் வாசலில்

**வேலன் அனுபூதி**

அபயம் அளிக்கும் உந்தன் கரமெங்கே
அஞ்ஞானம் போக்கும் உன் வேலெங்கே
குறைகள் தீர்க்க வரும் மயிலெங்கே
குன்று தோறாடும் முகமெங்கே
ஆறுமுகமெங்கே . . .ஏறுமயிலெங்கே
கூர் வேலெங்கே . . .குமரா நீ எங்கே
தேடி தேடி நான் அலைந்தேனே
தேனார் அமுதனைக் கண்டிலனே
குழந்தை மனம் அறியும் தாய்போலே
என் குமுறும் மனமறிய வில்லையோ
பாடிப்பாடி நின்றேன் - நிதம்
பாமலர் சூட்டி வந்தேன்
ஆசையற்ற மனம் ஒன்றைத் தந்து
ஆண்டவா ரட்சிக்க மாட்டாயோ
தந்த பிறவிப் பயன் யான் அடைய
எந்தனுக்கு அருள் இல்லையோ

இல்லையென்றால் நீ என்னை
இன்றே அழித்துவிடு ஐயா
தந்தேன் என்றால் பொன்னடியை
இன்றே காட்டிவிடு ஐயா
முருகையா . .வேலய்யா..குமரய்யா..கந்தையா . .
மண்ணில் பதித்த காலடி எங்கே
விண்ணை முட்டும் விஸ்வ ரூபமெங்கே
கண்ணைப் பறிக்கும் தங்க வேலெங்கே
கதிர்காமர் பாட ஆடும் அழகெங்கே
மரத்தடியில் கேட்கும் நாத ஒலியெங்கே
அன்னதானக் கந்தன் ஈராறு கரமெங்கே
கண்ணை மூடி நின்றேன் - என்னுள்ளே
அத்தனையும் உண்டென்று சொன்னாய்
கண்ணை மூடி நின்றேன் - அங்கே
கருமை அகலவில்லை
மதியை மறைத்து நிற்கும் - கரு
முகிலைக் கரைத்துவிடு ஐயா
கறைகள் கரைந்த பின்னே - அகக்
கண்ணையும் தந்துவிட்டால்
ஆறுமுகா உன் கோலம் கண்டு
ஆறி நான் நிற்பேனே - சந்நிதியில்
ஆறி நான் நிற்பேனே . . .

******************

**அரூபமாயிருக்கும் ஆரமுதே** அன்னமலையாக்கும்
அருள் வெள்ளமே - ஞான
சொரூபமாய் நெஞ்சில் வேலாகத் தோன்றும்
சிவசுப்ர மண்ய தெய்வமே!
ஆவினம் மேய்க்கும் இடையனைப் போலே
ஆலமர நிழலிலும் - தொண்டை
மானாற்றம் கரையோரம் நீ ஆடும் ஆட்டத்தின்
அர்த்தத்தை யார் அறிவார்! . . .

பூவரசத்தோரம் பாசிந்திப் பூசிக்கும் யாசிக்கும்
அடியவர் நெஞ்சில்
தோன்றிடும் எண்ணங்கள் காட்டிடும் காட்சிகள்
வார்த்தையிலே அடங்கிடுமோ
வேற்கரணித் தீர்த்தத்தால் பூவரசை நீராட்ட
வேண்டும் அடியவரின்
வேதனைகள் தீர்ந்தவிதம் சாதனைகள் ஆனவிதம்
சாற்ற இனிக் கவி பாடவா! . . .

கவிபாட கனவினிலும் நனவினிலும் என் அப்பன்
அடியெடுத்துத் தந்த விதம் எல்லாம்
தவியாத தாகத்தால் நான் தவிக்க செவி தன்னில்
கனியாக அவன் ஊட்டினான்
கனியாக அவனூட்ட கவியொன்று உருவாக
நான் என்ற நிலை மாறி ஆட
அழகங்கே உருவாக அவனங்கே வேலாகி
அருளூட்டிக் கரம் நீட்டினான்! . . .

கவிதந்து புவியாள களிகூர்ந்து எந்தனை நீ
கனதூரம் அனுப்பினாலும்
கதி என்று சந்நிதியில் நின் பணியை நான் செய்ய
கட்டளை நீ இடும் நாள் எப்போ?
தொட்டகுறை விட்டகுறை ஏதேனும் உண்டென்றால்
ஏற்றதை நீ தந்தருள்வாய்
பட்டதெல்லாம் போதுமய்யா மற்றதெல்லாம் இனி
எனக்குன் பாதார விந்தம் துணை! . . .

*********

**அகிலமெல்லாம் உந்தன் சந்நிதியோ**
அனல் வடிவாய் வந்த பெரு நிதியே

ஆறு பொறியாக உருவெடுத்து
அணைத்தாள் இணைந்தாய் ஆறுமுகனே
அன்னையவள் தந்த சக்தி வேலுடனே
அழித்தாய் அவுணர் குலத்தனையோ

தூது செல்ல வீரபாகு தேவர் வந்து
சந்தி காலப் பூசை செய்தார் சந்நிதியிலே
புண்ணியனார் சமாதி கண்ட பூவரச மரத்தருகே
வேலாய் நிற்பதும் சந்நிதியிலோ

மாடுகள் மேய்க்கும் இடையனைப் போல்
மாயங்கள் செய்வதற்கோர் சந்நிதியோ
கடலிலே நின்ற கதிர்காமரையே
கரைக்கு அழைத்ததும் சந்நிதியிலோ

ஆலம் இலையின் மீதினிலே
அமுது படைத்தாய் சந்நிதியிலோ
ஆறுபடை வீட்டினில் ஆடிய பின்னே
ஆறி அமரவோர் ஆற்றங்கரையோ

தொண்டைமானாற்றம் கரையினிலே
தொண்டரைக் காக்க வந்தாய் சந்நிதியிலோ
கேட்கும் வரமருளும் திருத்தலமாய் என்றும்
ஸ்ரீ செல்வச் சந்நிதி துலங்கிடுமே

**********

**அரகரோகரா முருகா அரகரோகரா முருகா** அரகரோகரா முருகா அரகரோகரா
அரகரோகரா முருகா அரகரோகரா முருகா அரகரோகரா முருகா அரகரோகரா
அசுரர் கொடுமை அழித்திடவே ஆறு பொறியாகவே
அப்பன் கண்ணில் அவதரித்த அனல் வடிவே வா
ஆறு தாமரை மலரில் சரவணத்தின் பொய்கை தன்னில்
ஆறு குழந்தை ஆனவனே ஆடி ஆடி வா ( அரகரோகரா முருகா )

கார்த்திகைப்பெண்கள் உன்னைத் தாலாட்டிச் சீராட்ட
கார்த்திகேயனான எங்கள் கருணை வள்ளலே
அன்னையர் அணைத்ததினால் அத்தனையும் ஒன்றாகி
ஆறுமுகத்தோடு வந்த அப்பனே நீ வா ( அரகரோகரா முருகா )

எந்த வனம் ஏகினாலும் கந்தவனம் ஆகிவிட்டால்
கவலை எனக்கேதினிமேல் மேதினியிலே
மாகுட்ட நோய்தீர்த்து மாமலையாய் அமர்ந்த எங்கள்
மாவிட்டபுரத்தரசே மால்மருகேசா ( அரகரோகரா முருகா )

ஆலம் இலைமீது அமுதூட்டிப்பின்னாலே
அறிவூட்ட வந்தாயோ ஆற்றங்கரையிலே
தானத்தில் சிறந்த அன்னதானம் அளித்தபின்னே
ஞானம் கொடுப்பாயோ சந்நிதியிலே ( அரகரோகரா முருகா )

ஆண்டியாக நின்ற அந்த பழனிமலை மீதிலே
வேண்டி நின்ற போகரையும் ஆட்கொண்டவா
நல்லூரின் நாயகனாய் நல்லைக்குமரனாய்
யோகரையும் ஆண்டு கொண்ட யோக மூர்த்தியே ( அரகரோகரா முருகா )

ஆறுபடை வீட்டினிலே அயராது அடியருக்கு
அற்புதங்கள் காட்டி வரும் அன்பு மூர்த்தியே

இதயக்குகை யெல்லாம் எழுந்ருளி என்னாளும்
அஞ்ஞானம் போக்க வந்த இன்பமூர்த்தியே ( அரகரோகரா முருகா )

ஆடி முடிந்தபின்னே வீடு திரும்பமுன்னே
மாணிக்க நதியோரம் மகிழ்ந்திருந்தவா
கதிர்காம ஷேத்திரத்தில் கதிர் ஒளி ஆவதற்கோ
ஏழுதிரைக்குள்ளே எழுந்தருளினாய் ( அரகரோகரா முருகா )

வந்தாலும் போனாலும் எந்நாளும் என்னுள்ளே
உன்னையே காணவேண்டும் என் ஐயனே
மயிலாக என் மனத்தை மாற்றிவிட்டேன் வேலழகா
ஒயிலாக எழுந்தருள ஓடி ஓடி வா ( அரகரோகரா முருகா )

**************

**அருணகிரியார் திருப்புகழ்** பாடுவோம்
எங்கள் ஆனந்தக் கூத்தனின் நிழல் நாடுவோம்
அடியாரின் குறை தீர்க்கும் வடிவேலனின்
புகழ் பாடிச் சந்நிதியில் அருள் நாடுவோம் . . .

அசுரர் குலம் அழிக்க அப்பன் கண்ணிலே
ஆறு பொறியாகியே பின் உருவானவன்
பழம் கேட்டு ஔவைக்குப் பாடம் தந்த
எங்கள் வடிவேலன் புகழ் பாடும் பணி நாடுவோம் . . .

பழம் வேண்டிப் பாரெல்லாம் பறந்தே வந்தும்
மாம்பழமின்றியே தனி மலை நின்றவன்
தனை நாடி வருவோரின் குறை தீர்க்கவே
பழமாகியும் ஆண்டிக் கோலம் கொண்டவன் . . .

அன்னை தந்த வேலால் சூரர் குலமும் அழித்தே
தந்தைக் குபதேசம் செய்த எந்தை முருகா
குருவாக வருவாய் என் மனமேறியே
குகனே சிவன் மகனே கலியுகத் தெய்வமே! . . .
********

**அருள் எல்லாம் அவன் அன்றோ**
பொருளாகவும் வருவான்
கல்லோடைக்கரை வந்த-எங்கள்
காவலனும் அவன் அன்றோ

தொண்டைமான் ஆற்றருகே
தொடர்ந்து வரும் வினைப்பயனை
தொலைப்பதற்கென்றோ அன்றே
பூவரசத் தருகிருந்தோன்

வீட்டினிலே இருந்து கொண்டே
விரும்பி அவனை வணங்கி நின்றால்
ஆற்றருகே வீற்றிருந்தே--அவன்
ஆறுதலை அனுப்பி வைப்பான்

அபயமென்று வருபவர்க்கெல்லாம்
சமயம் பார்த்து நிற்பதில்லை
உகந்ததையே தருவதற்கென்றும்
உறுதி மொழி கேட்பதில்லை

அன்பாலே அழைத்தாலே
அடிக்கடி அவன் வந்திடுவான்
அன்பாகி நின்றாலோ--உன்
அருகினிலே அமர்ந்திடுவான்

நான் என்ற ஆணவத்தை
நான் விட்டால் அவன் வருவான்
தான் ஆகி நிற்க என்றால்
நான் ஆகித் தான் நிற்பான்

நான் அற்ற நிலைபெறவே
நாடி நிற்கும் அடியவரை
தேடி வந்து நலமருளும்
சந்நிதியின் வேல் அழகன்

ஆணவங்கள் ஆடுகின்ற--இந்த
அஞ்ஞான அகிலத்திலே
அடிமனத்தால் ஆடுகின்ற--அந்த
அறிவை எனக்குத் தருவதெப்போ

*********

**அன்னமலைச் செல்வமல்லோ சந்நிதிவேலா**
அடியவரின் சங்கடங்கள் தீர்த்தருள்வாயே
ஆறுபடை வீடுதன்னில் ஆடியபின்னே
ஆற்றங்கரை வந்தாயோ ஆறி அருள--இனி
சந்நிதியில் கந்தன் அருள் கடல்மடைதானோ

காட்சி தந்து கதிர்காமர்க் அருள் கொடுத்தவா
கதிரமலைப் பூசைமுறை காட்டிச் சென்றவா
மௌனப் பூசைமுறையை எல்லாம் கூறிநின்றவா
மௌனமாகப் பூசைஏற்று அருள் புரிந்தவா
காலாகிக் கோலாகிக் காட்சி தந்தவா
காலடியும் தான் பதித்து குறைகள் தீர்த்தவா
அடியர் குறைகள் தீர்த்தவா
அன்னதான மடங்களிலே அடியராகவே
அடிக்கடி நீ காட்சி தந்து அருள் புரிந்தவா
பூவரச மரத்தடியில் புகழைப்பாடிடும்

அடியவரின் அருகினிலே ஆட வந்தவா
ஆலமிலை அமுது உண்டோர் பிணிகள் தீரணும்
வேற்கரணித்தீர்த்தம் மக்கள் நோயை மாற்றணும்
திருநீறும் தீர்க்கணும்
அடிக்கடிதான் எங்களையும் உந்தன் மண்ணிலே
அழைத்து உந்தன் அற்புதங்கள் காட்டவேண்டுமே
புத்தம் புது பாடல்களை நாங்கள் பாடவே-அங்கே
நித்தம் புது அர்த்தங்களும் தோன்றவேண்டுமே
சந்தி காலப் பூசை செய்த சந்நிதியிலே
சங்கடங்கள் தீர்ந்து அடியர் ஆடவேண்டுமே
காவடியாய் ஆகவேண்டுமே

*********

**அவர் எடுக்க நீ போடும் நீறு-சந்நிதியில்**
ஆனந்த அமைதி வரும் பாரு
அவர் எடுக்க நீ போடும் நீறு-அந்த
ஆதிசிவன் தந்த திருநீறு... (அவர்)

அது ஆணவத்தை அனலாக்கி
மாயையைப் புடம் போட்டு
மாவிளக்காய் அங்கே எரியும்
பாவிளக்கை ஏற்றினால் புரியும் (அவர்)

மூலத்தின் ஸ்தானத்தில் முதல்வனை
வணங்கியதால் முருகனுக்கு
வாய்த்த திருநீறு-அதை
முற்றாகப் பூசினால் வினை ஓடும்
பற்றற்றான் பாதத்தை பற்றியே நின்றார்க்கு
பழ வினை என்றேதும் உண்டோ-சந்நிதியில்
தொழவினை தொலையுமே பாரு ... (அவர்)

********

**ஆனைமுகன் அருகிருக்க ஆறுமுகம் தோன்றும்**
அஞ்சுதலைப் போக்குதற்கு அங்கே அபயகரம் தோன்றும்
புண்ணியனார் சமாதியிலே பூவரசம் தோன்றும்
அவர் அருகே வேலாக இருக்க சந்நிதிவேல் தோன்றும்

காலடி வைத்ததன் கருணையினால் கல்லோடைக்கரை தோன்றும்
இடையனாய் வந்து கதிர்காமரைக் கவர மௌனப் பூசை தோன்றும்
மந்திரம் அறியா கதிர்காமரால் வாய்கட்டும் பூசை தோன்றும்
தேவருக்கு அபயகரம் காட்ட ஸ்ரீ செல்வச் சந்நிதி தோன்றும்

மூலத்தில் முதல்வனை வணங்கியதால் அது வேற்படையாய்த் தோன்றும்
அடியருக்கு ஆறுதல் அளிக்க அன்னமலைகள் தோன்றும்
ஞானத்தை வேண்டும் அடியருக்காய் அங்கே ஞானியரும் தோன்றும்
சித்தரும் முக்தரும் யோகியரும் வாழ மடங்கள் பல தோன்றும்

கதிரமலைக் கொடியேற்றநாளில் பூசகர் கையில் வேல் தோன்றும்
அரச மரத்து அருகினில் கைவிரிக்க வானத்தில் வேல் தோன்றும்
கதிர்காமத் தீர்த்தம் முடிந்ததும் இரவு கோவிலில் வேல் தோன்றும்
துவையலும் இளநீரும் அருந்துவதற்கே சந்நிதி வேல் தோன்றும்

தேவரும் மனிதரும் பூசிப்பதால் அங்கே வேற்கரணி தோன்றும்
மங்கையரோடு மனதில் குடியேற மயில் மேல் வேல் தோன்றும்
பூவரச மரத்தருகே புகழ் பாடும் அடியவரின்
பக்கத்திலே பாலகனாய் பாங்காக வேல் தோன்றும்

இருந்து கொண்டே பாடுங்கள் அங்கே நித்தம் வேல் தோன்றும்
பாடிக்கொண்டே ஆடுங்கள் என்றென்றும் வேல் தோன்றும்
சூர சம்ஹாரத்தில் அடியரோடடியராய் வீதியில் வேல் தோன்றும்
தேர்விழா இரவு காவடி மத்தியில் சந்நிதி வேல் தோன்றும்

சந்நிதியை நினைத்தவர்க்கு மனதில் வேல் தோன்றும்
அன்னமலை படைப்பவர்க்கு அவர் அருகில் வேல் தோன்றும்
மாவிளக்கை ஏற்றிவிட்டால் அவர் குணத்தில் வேல் தோன்றும்
பாவிளக்கை ஏற்றிவிடு உந்தன் புத்தியில் வேல் தோன்றும்

கர்ம யோகத்தில் கலந்துறவாடு கருத்தினில் வேல் தோன்றும்
பக்தி யோகத்தில் பரிணமித்து நில் சந்நிதி வேல் தோன்றும்
ஞான யோகத்தில் தியானித்திரு அங்கே சந்நிதி வேல் தோன்றும்
மோன நிலையிலே மோகித்திரு நீ ஸ்ரீ செல்வச் சந்நிதியே!
*********

**ஆறுபடை வீடுகொண்ட ஆறுமுகவேலவா - உன்**
ஆடல் காண ஆற்றங்கரை வந்தேன் - அங்கே
ஆடிவரும் காவடியில் அழகு முகம் காட்டி
அன்னதானக் கந்தனாக நின்றாய்

தேடிவரும் அடியவர்கள் காணமுடியாமல் நின்று
தேம்பித்தேம்பி அழுகின்றார் உன்வாசலில் - அங்கே
பாடிவரும் அடியவரின் பக்கத்திலே நீ ஓர்
பாலனாக ஆடி வருகின்றாய்

கூறுமடியார்கள் வினை தீர்ப்பதற்கு என்றோ
குன்றுதோறும் ஓடி வருகின்றாய் - அங்கே
மாறுபட்ட சூரரெல்லாம் கூறுபட்டு வேறுபட்டு
வேலின் முன்னே சேவல் மயில் ஆகின்றார்

அமுதூட்டி அறிவூட்டி ஆடல் காட்டும் அன்பு வேலா
அடியனை நீ ஆட்கொள்ளும் நாள் எப்போது - அப்போ
பூவாக என்னை நீ மாற்றிவிட்டால் - அந்தப்
பூவரச மரத்தருகே காத்திருப்பேன்

************

**ஆற்றோரம் நான் காத்திருப்பேன்**
கல்லோடைக் கரையினில் விழித்திருப்பேன்
பூவரச மரத்தடியில் நினைத்திருப்பேன் - வேலா
பொங்கும் உன் எழிலுருவைக் காட்டிடுவாயே

தொண்டைமான் ஆற்றருகே குறை தீர்க்கின்றாய்
குறையாத அருளை வாரி இறைக்கின்றாய்
வருகின்ற அருள் வெள்ளம் தனில் நீந்தவே
அடியேனுக் கருகதையும் தந்தருள்வாய்

ஆற்றம் கரை நடுவே ஆண்டவா உன் சந்நிதி
ஆறுதல் தர அங்கோர் ஆலய மாமணி
அடியாரின் குறையெல்லாம் அறிவித்த மணிகேட்டு
ஓடோடி வருவாயே குறை தீர்க்கும் குருபரனே

கவலைகள் கண்ணீராய் கசிந்துருகி ஓடுது
கந்தா உன் அருள் வெள்ளம் கடல் மடையாய் பாயுது
கால் தொட்டோர் குறையெல்லாம் அவர் எடுத்து நீ கொடுத்த
திருநீறு தனைப் பூச நீறாகி மறையுது

*******

**ஆற்றருகே நீ சிரித்தால் ஆறுமுகா – அங்கே**
அன்னமெல்லாம் மலையாகும் மடங்களிலே
அடியவர் பசி எல்லாம் ஆறுதங்கே - வேலன்
அருள் வெள்ளம் ஆறாக ஓடுதிங்கே . . .

பூவரச மரத்தருகில் புகழ்பாடும் - அடியர்
நெஞ்சமதில் நிம்மதியின் நிழலாடும்
பொங்கிவரும் புன்னகையில் வேலாடும் - அதைக்
கண்டோர்கள் கண்களிலே நீராடும் . . .

பசியாற அன்னதான மடங்களுண்டு - பின்னே
களையாற ஆற்றங்கரை ஓரமுண்டு
பிணி தீர்க்க ஆலமிலையில் அமுதுமுண்டு - கர்ம
வினை போக்க வேற்கரணித் தீர்த்தமுண்டு . . .

காவடியாய் உன் மனமே ஆட வந்தால் - அங்கே
கந்தனருள் கடல் மடை போல் திறந்திடுமே
கற்பூரமாயுருக நீ துணிந்தால் - வேலன்
கதவில்லா வாசலிலே காத்திருப்பான்

******

**ஆசை வைக்க மனமிருக்க ஆதரிக்க நீ இருக்க**
கருணைக்கு குறை வேதடா முருகா
சந்நிதியில் குறை தீரடா . . .

காவடிகள் ஆட்டத்திலும் கற்பூரச்சட்டி மீதும்
பொங்கும் உந்தன் எழிலே கண்டேன் - குமரா
உன் குறு நகைக்கிணையேதடா . . .

ஆற்றங்கரை ஓரத்திலே ஓங்கார நாதத்திலே
எம்மனமும் அடங்கக் கண்டேன் - அப்போ
ஆங்காரம் அழியாதோடா . . .

ஏமகூடம் செல்லும் வழியில் - இவ்வூரில்
தேவரெல்லாம் பூசை செய்தாரே - அருள் பொங்க
நீ சந்நிதியைத் தோற்றுவித்தாயே . . .

சேவடி தந்துவிட்டு சென்றுவிட்டாயே
பாவடி தந்தருள பாடுகின்றேனே
எந்தனைக் காத்தருள ஏனிந்த தாமதமோ
கந்தா உன் காலடியையே நம்பி வந்தேன்
காப்பாயே கருணை வள்ளலே . . .

ஆற்றங்கரை தன்னிலே அமர்ந்தவனே
அழகா குமரா வாராயோ
கதிர்காமர் பாடலின் கனிவினிலே
ஆடவந்த அப்பனே வாராயோ
வேலாகத் தோற்றுவதால் வேதனைகள் தீருதையா
பார் காக்க வந்த பாலகா - என் வேலய்யா
பள்ளி கொள்ள வர மாட்டாயோ - என்னோடு நீ
பள்ளி கொள்ள வர மாட்டாயோ

கந்தையா வேலய்யா தாலேலோ
உன் தாளே தான் துணையய்யா தாலேலோ

******

**ஆலம் இலையே தரும் அமுதின் சுவையே**
ஓலமிடும் அடியர் பிணிதீர்க்கும் எழிலே
காலம் குறைவே காட்டும் கோலம் நிறைவே
கந்தன் திருஅமுதைத் தாங்கும் இலையே

அப்பன் திருஅமுதைத் தாங்குதற்கென்றோ
அறுபத்தி ஐந்தாகப் பூசை நேரம் எல்லாம்
மூலஸ்தானம் காணும் உன்போல் யாருண்டு (ஆலம்)

தொண்டைமானாற்றம் கரையோரமெல்லாம்
தோன்றியே அடியர்க்கு நிழலையும் தருகின்றாய்
அமுதைத் தான் தாங்க என்று ஆலயத்துள் சென்றாயே
அருளைத்தான் தாங்கி அடியர் கரங்களில் தவழ்ந்தாயே

எந்நிதியும் தரும் சந்நிதி வேலனின்
சன்னிதி கண்டாயே சாயுச்சம் பெற்றாயே
உன்போல் புண்ணியம் பெற்றவர் யாரோ (ஆலம்)

ஆலம் இலையும் பூவரசம் இலையும்
சந்நிதியான் அருள் பொங்கும் இன்பநிலையே
பெற்றாய் இலையே அருள் பெற்றாய் இலையே
மீண்டும் மீண்டும் அவனடி தொழவே..

கல்லோடைக் கரையிலே காலடி தந்தவனின்
கருணை வெள்ளம் இங்கு கடல்மடை திறந்திட
வந்தாய் தந்தாய் வள்ளலில் அருளதனை..(ஆலம்)
**************

**ஆறடி நிலத்தினுள்ளே அடங்கிடும் கோலமடா**
ஓரடி தானும் அசைக்க அவன் அருள் வேண்டுமடா
பாரடி மாந்தரிங்கே ஆடுகின்ற ஆட்டமதை
கூறடி உண்மை எது? சந்நிதிவாழ் அப்பனல்லோ!

தொண்டைமான் ஆற்றருகே தொண்டர்களைக் காக்க என்று
கண்டவர்கள் விண்டில்லாத வேதப் பொருளாகி
கதிர்காமர் மனம் கொண்டு அமைத்த நற்கோயிலிது
செல்வச் சந்நிதி எம் செல்வத்தின் சன்னிதியே

வள்ளிக்குறமாதுடன் துள்ளி விளையாட என்று
சோலைகள் சில சமைத்தார் சாலைகள் பல அமைத்தார்
அடியவர் குறைதீர்க்க அன்னதானம் படைக்க
இடங்கள் பல வைத்தே மடங்கள் பல அமைத்தார்

கற்பூரச் சட்டி மேலே கந்தன் முகம் தெரியுதையா
காவடி ஆட்டத்திலே உந்தன் எழில் தோணுதய்யா
தீ மிதித்த பக்தரில் உன் திருக்கோலம் தெரியுதய்யா
திருநீற்று மகிமை ஐயா திக்கெட்டும் பரவுதையா

தீராத நோய் தீர்க்கும் மாமருந்து இங்குண்டு
வாராத மனிதரில்லை தீராத நோயுமில்லை

மாறாத மனத்தோடு சோராமல் நம்பினவர்
கூறாமல் குறை தீர்ப்பான் செல்வச் சந்நிதியான்

எங்கிருந்தோ வந்த என்னை இங்கழைத்த மர்மமென்ன
ஆறாக ஓடி இங்கே கடலாக மாறுகின்றாய்
பிறவிக்கடலினிலே தத்தளிக்கும் பிள்ளையய்யா
பிறப்பை அறுத்து என்னை ஈடேற்றும் நாளெப்போ
*****

**ஆற்றங்கரையினில் அன்னமலையினில்**
வெற்றி வேற்படையின் விளிம்பிலே
ஆறு படையையும் ஆற்றுப் படையையும்
ஆறுமுகத்தையும் அறிய வா

அறிவாகவும் அருளாகவும் - அப்பன்
ஆற்றங்கரை அமர்ந்ததால்
அன்று தேவர்கள் இடரெல்லாம் தீரமுன்
இங்கே அபயகரம் காட்டினான்

அன்று முதல் தேவர் நித்தம் இத்தலத்தில்
பூசை காண வந்ததால்
முருகாற்றுப்படையுமிங்கே ஆறு படையுமிங்கே
அமைவதில் விந்தை என்ன

ஆறு கடல் நீராய் ஆவதை
வேறெங்குமே கண்டாயா - அதன்
அருகினில் சரவணப் பொய்கையுமே
வேற்கரணியாய் ஆனதெங்கே

பூவரசமே தல விருக்ஷமாய் ஆன
புதுமை வேறெங்குமுண்டோ
பூவாக உனை அப்பன் மாற்றும்
புதுமை பூவுலகில் காண்பதரிது

அன்னமலை அமைத்து பழனிமலை
காட்டும் ஆண்டியை மறந்தாயோ
வேட்கை தணிவித்த தணிகை
மலையுமே ஸ்ரீசெல்வச் சந்நிதியே

செந்தூர்க் கடலின் நீர் தொண்டைமான்
ஆற்றில் கலந்ததை உணர்ந்தாயோ
அங்கே படைத்தளம் இங்கே அபயகரம்
அர்த்தம் அறிவாயோ

உன்னைப் பழமாக்க சோலை பல
அமைத்த செல்வத்தை மறந்தாயோ
பழமுதிர் சோலைகள் பல இங்கே
இருப்பது கண்ணுக்குத் தெரியலையோ

பரம் குன்றம் தனில் தெய்வ யானையை
மணந்த காட்சி மூலஸ்தானத்தில் - சுவாமி
மலையுமாக்கி இங்கே தந்தைக்குபதேசம்
நடப்பதை உணர்வாயோ - தினம் தினம்
நடப்பதை உணர்வாயோ

**சனி முழுக்கு**

ஆட வரவா நின் புகழ் பாட வரவா
சனி முழுக்காடும் அந்த சந்நிதி தீரத்திலே

வேற்கரணித் தீர்த்தத்தாலே நவக்கிரகங்களுக்கு
தீர்த்தாபிஷேகம் செய்ய சற்குருநாதன் சொன்னான்

பூவரச மரத்தினுக்கும் தீர்த்தாபிஷேகம்
கர்ம வினையெல்லாம் கரைந்தோடும் கணப்பொழுதில்

தொண்டைமானாற்றில் நீ தீர்த்தமாடி
வள்ளி வாசல் குளத்தினிலே மீண்டும் ஆடி
செம்பிலே நீர் மொண்டு பூவரச மர அடியில்
செம்மையாய் நீர் ஊற்றி உளமார வேண்டி நின்று
நவக்கிரகங்களுக்கு நயமாக நீர் ஊற்றி
உள்ளன்போடு வள்ளி வாசலிலே வணங்கி நிற்க
சனி முழுக்காடும் அந்த சந்நிதியானையுமே
சண்முகார்ச்சனையினிலே ஒளிக்கோலம் கண்டவர்கள்
சந்திக்க இருப்பதெல்லாம் சாயுச்ய முதல்படியே!

சனி முழுக்காடிடும் சந்நிதி முருகா - உன்
அருள் முழுக்கில் தோய நானும் வரவா

பாலாபிஷேகம் கண்டால் பாபம் தொலையும் - உன்
பஞ்சாமிர்தம் உண்டால் பசி பறக்கும்
நீறாபிஷேகம் கண்டால் நெஞ்சம் நிறையும்
சந்தணாபிஷேகம் காண சந்தேகம் மறையும்
கரும்பாபிஷேகம் காண கருணை சுரக்கும்
பன்னீர் பட்டதும் பன்னிரு விழி திறக்கும்
திறந்த விழி மடலில் தேன் சுரக்கும்
கறந்த பால் கடலாய் காட்சி தருமே!
தேனாறும் பாலாறும் வீதி எல்லாம்
ஓடி அடியவரை அரவணைக்கும்
குளிப்பதா குடிப்பதா எனக் குழம்ப
அழிப்பது அடியரின் வினைப்பயனே!

சனி முழுக்காடிடும் சந்நிதி முருகா - நின்
அருள் மழையில் தோய நானும் வரவா!

*******

**ஆற்றம் கரையினில் அமைந்த ஆலயத்தில்**
அப்பன் ஆறி அமர வந்தான்
மாற்றம் வேண்டும் அடியவரின் வேதனை
விளிம்பில் வேலாகக் காட்சி தந்தான்

பாடும் அடியவரின் ஓசைதனில்
கலந்து தேடும் வழி காட்டவே
பாலன் அவன் பூவரச மரத்தடியில்
புன்னகை காட்டி நின்றான்

நின்றவன் எந்தன் நினைவை நீல
மயிலாக்கி ஏறி வந்தான்
வந்தவன் தன்னை வாரி அணைத்திட
வானில் நானும் திரிந்தேன்

எங்கும் காணாமல் ஏங்கியே
எனக்குள்ளே தேட முயன்றேன்
என்னைக் காண்பதற்கு எண் திசையிலும்
நீ தேடி வந்தது ஏனோ என்றான்

பாடிப்பாடி உன்னைத் தேடி நின்றால்
நீ ஆடி ஆடி வருவாயே - என்று
ஆரோ சொன்னதில் ஆலயம் ஒன்றை
பாவால் நான் அமைத்தேன் என்றேன்

அமைத்த ஆலயத்தின் அருகினிலே
பூவரசைத் தோற்ற மறந்தாய் - அதன்
அடியினிலே வரும் ஒலியினைக் கேட்க
மறந்தது ஏனோ என்றான்

என்னைப் பூவரசமாக்கியே அங்கே
எழுந்து நின்ற போது - அவன்

தன்னையே நாதமாக்கியே அதன்
அடியினில் ஒழிந்து கொண்டான்

என்னிலே மலர்ந்த மலரெடுத்து
அவன் பாதம் தனில் சாற்றினேன்
அவன் தன்னையுமே மலராக்கியே
எந்தன் அருகில் அமர்ந்து கொண்டான்

நானும் நீயுமென்ற நிலைகளெல்லாம்
இந்த நானிலத்தில் இனி ஏது - என்னிலே
உன்னைக் கண்டு கொண்டால் - நான்
என்ற நிலை ஏது என்றான்!

**********

**ஆறோடும் சந்நிதியில் மாலோடு சங்கரனார்**
மகிழ்வோடு நின்ற இடம் பூவரசத்தடியே - அங்கே
பாலாறும் தேனாறும் தினம் பாயும் அபிஷேகம்
சந்நிதியின் தேவ சங்கல்பம் . . . அதைக்
கண்ணாரக் கண்டவர்கள் வாயாரக் கொண்டவர்கள்
வேண்டுமட்டும் வேலன் அருள் காண்பரே!
சங்கரனும் நாரணனும் சமாதியிலே புண்ணியனும்
தந்த அருள் யாவும் சேருமே . . . .

அத்தனையும் பெற்றவர்க்கு அன்னதான மடமும் வைத்து
பசி போன பின்னாலே ஞானமும் வழங்கும் வள்ளலை
வாயாரப் பாடுவதன்றி வேறென்ன வேலை வேண்டுமே!

சந்நிதி வேலா பாலா குருநாதா
எந்நிதி தரவே விரைவாய் வருவாயே
சந்நிதி வேலா சரணம் சரவணபவமே சரணம்
அவலக் குரல்கள் அறவே ஒழிக்க வேலா நீ வரணும்!

தந்தையைப் பூஜித்தபின் சம்ஹார சேதி சொன்ன
சண்முகனார் சங்கதியெல்லாம் அடியருக்கு வெளிச்சம்
வேற்படை மூலஸ்தானம் தெய்வானை உடனிருக்க
வேண்டுமடியாருக்கு வேண்டுவன கிட்டுமே!

வள்ளி அம்மன் தனியாக கோயில் கொண்டிருந்தாலும்
திருமணங்கள் நிறைவேற சிறந்த இடம் அதுவன்றோ
மாவிளக்கு ஏற்றி அங்கே மனதார வேண்டுவோர்க்கு
நெய்விளக்காய் வேலன் அருள் நெஞ்சகத்தில் நிறைந்திடுமே!

சந்நிதி வேலா பாலா குருநாதா
எந்நிதி தரவே விரைவாய் வருவாயே
சந்நிதி வேலா சரணம் சரவணபவமே சரணம்
அவலக் குரல்கள் அறவே ஒழிக்க வேலா நீ வரணும்!

******************

**ஆடுகின்றானடி சந்நிதியில் - அதைப்**
பாட வந்தேன் ஆற்றங்கரை அருகில்
அன்னையும் ஆட அப்பனும் ஆட
அருகிருந்த மூன்று சக்திகளும் ஆட . . .

மனத்தையே சந்நிதி ஆக்கிவிட்டே - அங்கே
மலர்ந்திடும் எண்ணங்களை அன்னமலை ஆக்கியே
கும்பிடும் அடியவர் கைகளிலே ஆலம் இலைமீது
அமுதையும் தந்திடுவான் வேலன்! . . .

ஆடாத மனங்களையும் ஆடவைப்பான் - பின்னே
ஆற்றருகே ஆறுதலையும் அளிப்பான்
கூடாத நோய்களையும் கூட வைத்தே -பின்
கும்பிட்டோர் குறை தீர்க்க நீறும் தருவான் வேலன்! . . .

என் மன ஓட்டத்தின் எல்லையிலே - அந்த
தில்லையின் மன்னவனின் மைந்தன் இங்கே
தினம் ஆடும் ஆட்டத்தில் லயிக்க வைத்தே
பாட வைத்துத் தானும் ஆட வந்தான் வேலன்! . . .

பூவாக்கி என்னையும் வாட வைப்பான்
பூவரசாக்கி தன்னையும் நாட வைப்பான்
இலையாக்கி அமுதையும் தந்திடுவான் - பின்னே
காயாக்கி கனியவும் வைத்திடுவான் வேலன்! . . .
********

**ஆற்றங்கரை வேல் அழகா - முருகா**
ஆறு படை வீடழகா
வள்ளி தெய்வயானையுடன் வண்ண மயில் மீதேறி
கோயில் கொள்ள கொள்ளை ஆசை, கொண்டுமே எழுந்தருள
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .

வல்லி யாற்றம் கரை அருகே - முருகா
பள்ளி கொள்ள மனம் கொண்டாயோ
பூவரச மரத்தருகே, புண்ணியனார் சமாதி மேலே
பாவரசர் பாடி நிற்க, பாலகனாய் நீ ஆட
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .

தேவர் படைச் சேனாபதியாய் - முருகா
தென்பதி நீ ஏகும் முன்னே
சந்தி காலப் பூசை செய்து, சங்கரனை வேண்டிக்கொண்டு
அபய கரம் காட்டி நின்றாய் - இன்றோ
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .

தேவரும் மனிதரு மிங்கே - முருகா
தினம் பூசை செய்வார் என்றாய்
ஸ்ரீ செல்வச் சந்நிதி என்று நீயே பெயர் சூட்டிவிட்டு
வேற்கரணிக் குளத்தருகே, வேண்டும் அடியாரைக் காண
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .

அன்னமலை மீதேறி - முருகா
அன்பரோடு கூட நின்றவா
கல்லோடைக் கரையருகே, காலடியும் தந்து எம்மைக்
காப்பேன் என்று சொல்லிவிட்டு
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .

அண்ணாமலை அரசனுக்கு - முருகா
அன்று தகப்பன் சுவாமி ஆனாய் - இன்று
லிங்கோற்பவத் தருகே, வேற்படையாய் காட்சி தந்து
தெய்வானை யுடன் அமர்ந்தவா - முருகா
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .

எண்ணமலை மீதேறி - முருகா
தொண்டைமான் ஆற்றருகே
சத்தம் எல்லாம் அடங்கிய பின்
நித்தம் உன்னை வேண்டி நிற்க
ஏன் இன்னும் தாமதம் ஏன் - இங்கு வர
ஏன் இன்னும் தாமதம் ஏன் . . .
*******

**ஆறுபடை வீடுதனை நாடிவர நன்மை தரும்**
ஆதி சிவன் தந்த ஆறு பொறியே (வேல் வேல்)
அன்னையவள் அணைத்ததால் அத்தனையும் ஒன்றாகி
ஆறுமுகத்தோடு வந்த செல்வமே (வேல் வேல்)

ஆறுபடை வீடுவிட்டு தொண்டைமான் ஆற்றருகே
ஆற என்று வந்தமர்ந்த வேலனில் ( வேல் வேல்)
ஆறெழுத்து மந்திரத்தை நூறுமுறை கூறிவிடு
ஆலமிலை அமுது தன்னைத் தருவான் (வேல் வேல்)

தந்த பிரசாதத்தினை தங்கமென்று நீ கொண்டு
வந்த அடியாருடனே பகிர்ந்து ( வேல் வேல்)
உண்டபின்னே அவன் காட்டும் அன்னமலை மீதேறி
ஆறும் பசி ஓடும் வினை பாரு (வேல் வேல்)

பசிபோன பின்னாலே மனமாயை போக்குதற்கு
வேற்படையாய் வீற்றிருக்கும் பாலனை (வேல் வேல்)
கண்டதுமே கொண்ட கோலம் வெண்டிடவே
வெற்றி வேலன் ஞானத்தையும் அள்ளித் தருவான் (வேல் வேல்)

ஞானத்தையும் கொண்ட பின்னே ஞாலத்தையும் நீ வெல்ல
ஞானியாக மாற மனம் கொண்டால் (வேல் வேல்)
சும்மா இருக்கவைத்து சுகங்களையும் காட்டிய பின்
சுகப்பிரம்மம் ஆக்கிடுவான் பாரு

******

**ஆற்றம் கரையினில் அமர்ந்த வேலழகா**
பாடும் படி நீ பணித்தாய் பணிந்தேன்
கூடும் அடியார் குறையெல்லாம் தீர்த்தே
தேடும் வழியில் தெரிசனம் தருவாய்

ஆலம் இலையில் அமுதெல்லாம் தருவாய்
காலம் வரவே கனியும் தருவாய்
ஓலம் இடும் அடியார் குறை தீர்ப்பாய்
ஞாலம் உள்ளவரை யான் மறவேன் உனை

திருநீறு அணிந்தால் தீருமுன் குறைகள்
தீர்த்தமும் தீர்க்குமே மாறா நோய்களெல்லாம்
சரணடைந்தோரின் தீராவினை தீரும்
சாயுச்யம் பெறவே சந்நிதியை நாடு

பூவரச மரத்தடியினில் அமர்ந்து
புண்ணியனை வேண்டி பொன்னுலகு பெறவே
சிந்தையிலே சிவசிவ நாராயணா என்றால்
சிவ நாகதம்பிரானும் திருவருள் தருவான்

முழுமனத்தோடு முருகா என்றொரு முறை
முறையிட்டால் கருகாதோ கர்மவினையெல்லாம்
சிறைமீட்டுத் தேவர் குறை தீர்த்த வெற்றிவேலனுக்குன்
குறைதீர்க்க அக்கறையில் குறைவேதும் உளதோ

அக்கரையில் நின்றவரை இக்கரைக் கழைத்துமே
அற்புதங்கள் காட்டியதை அறிவாயோ மனிதா
ஆற்றம் கரையமர்ந்தும் அன்னதானமளித்தும்
ஆடுகின்ற நாடகத்தின் அந்தம் அறிவாயோ

ஆற்றம் கரையோரம் அமர்ந்த வேலழகா
சாற்றும் கவியெல்லாம் உன் புகழ் அன்றோ
மாற்றும் வழியிலும் மால் மருகேசா நீ
தோற்றும் காட்சியானால் அது ஒன்றே போதும்!
*****************

**ஆழ்ந்தகன்று ஓங்கிய வேலா**
ஆவதெல்லாம் உன்னருளாலே
ஆழ்கடலைத் தாண்டி உந்தன்
ஆணையை என் சிரமேல் கொண்டேன்! . . .
ஆனமட்டும் ஊனமின்றி
வாழ்ந்திருந்தால் போதுமையா
ஏனதென்று கேட்பதையெல்லாம்
எப்போதோ விட்டு விட்டேன்! . . .

உனதருளே என்றென்றும்
என்னுடனே இருப்பதென்றால்
உலகதனில் பூவரசத்து
இலைச் சருகே ஆனாலும்
காசாக மாறுகின்ற விந்தை
உந்தன் கருணை மழை
அருமைதனை உணர்ந்தவர்க்கு
அவனி எல்லாம் இன்பமயம்! . . .

பொய்யான உலகத்தில் எல்லாம்
மெய்யாக மிளிர்பவனே
ஐயா உன் அருளதனை
அன்றாடம் அறிவோர்க்கு
பொய்யென்று விட்டதெல்லாம்
தொட்டவுடன் மெய்யாகும்
பொய்யென்ற மெய்யினுள்ளே
பொன்னாகி நிற்பவனே! . . .
(நானாகி நிற்பவனே)

கை வந்து எடுக்க வந்தால்
பையினிலே ஒன்றுமில்லை
பன்னிருகை வேலவனின்
கையிருப்பு உந்தனுக்கே
காலடியில் சிரம் வைத்தால்
பன்னிருகை திறந்திடுமே
தருவதனைத் தாங்கிடவே
உன் கைகளுக்குத் திறனுண்டோ
(உன் பையதனில் இடமுண்டோ)

சந்நிதியை நினைத்தவர்க்கு
எந்நிதிக்கும் குறைவில்லை
சந்நிதிக்கு வந்துவிட்டால்

சந்ததியே வாழ்ந்திடுமே
சந்நிதியின் பெரும் நிதியே
சரவணபவ சண்முகமே
சந்நிதியைச் சரணடைந்தாலோ
சாயுச்ய சங்கமமே
( சாயுச்ய சங்கமமே )
***************

**ஆனிப் பொங்கல்**

ஆனிப் பொங்கல் விளக்கெரிய சந்நிதி வேலா
ஆழ் கடலில் நீர் எடுப்பர் சந்நிதி வேலா

எடுத்து வந்த நீர் எல்லாம் சந்நிதி வேலா
எண்ணையாக மாறிடுமே சந்நிதி வேலா

எடுத்து வந்த நீரில் திரி சந்நிதி வேலா
எட்டு நாளா எரிந்திடுமே சந்நிதி வேலா

என்னையே திரியாக்கி சந்நிதி வேலா
எரக்க ஆணவம் எரிந்திடாதோ சந்நிதி வேலா

கண்ணகையாள் கதையை எல்லாம் சந்நிதி வேலா
அன்பர் கூடிப் படித்திடுவர் சந்நிதி வேலா

ஆற்றங்கரை வீதியெல்லாம் சந்நிதி வேலா
ஆனிப் பொங்கல் பானையல்லோ சந்நிதி வேலா

ஆனித் திங்கள் நாளினிலே சந்நிதி வேலா
வீதி யெல்லாம் அன்னமலையோ சந்நிதி வேலா

ஆனிப் பொங்கல் உண்ட பின்னே சந்நதி வேலா
கதிர்காம ஞாபகமோ சந்நிதி வேலா

ஆடி அமாவாசையிலே சந்நிதி வேலா - நீ
கதிர்காமப் பயணமோ சந்நிதி வேலா

கதிர்காம தீர்த்தம் கண்டு சந்நிதி வேலா
திரும்பி இங்கே வருவாயே சந்நிதி வேலா

நீ போவதையும் வருவதையும் சந்நிதி வேலா
நல்லூர்ப் பூங்கொல்லை காட்டிடுமே சந்நிதி வேலா

தென் நோக்கும் காலடிதான் சந்நிதி வேலா - நீ
சென்றதை உணர்த்திடுமே சந்நிதி வேலா

வட திசையில் காலடிகள் சந்நிதி வேலா - நீ
வருவதை அறிவிக்குமே சந்நிதி வேலா

பயணப் புட்டு ஆயத்தம் சந்நிதி வேலா
களையாறிச் செல்லவேண்டும் சந்நிதி வேலா

இளநீரும் துவையலுமே சந்நிதி வேலா - நீ
திரும்பி வர ஆயத்தமே சந்நிதி வேலா

ஆவணியிலுன் விழாக்கோலம் சந்நிதி வேலா
ஆனந்தமாய்க் காணவேண்டும் சந்நிதி வேலா

பதினாறு செல்வங்களைச் சந்நிதி வேலா - நீ
பகிர்ந்தளிக்கும் காலமல்லோ சந்நிதி வேலா

மூன்று தேரும் ஓடும் வருடம் சந்நிதி வேலா
மூவுலகும் காண வருமே சந்நிதி வேலா

**********

**ஆறோடும் சந்நிதியில் தேரோடும் காட்சி காண**
நீரோடும் கண்கள் இங்கு எத்தனை எத்தனையோ-திரு
மாலோடு சங்கரனும் மாதோடு பாகனுமாகி
நின்றாடும் கோலம் நெஞ்சில் நிழலாடுதே!

தேர்க்கோலம் காணவென்று மடந்தோறும் வந்ததெல்லாம்
போர்க்கோலம் பூண்ட வேலன் புகழ்மாலையே!
தேர் ஏறி வேலன் தேவர் படையோடு ஏமகூடம்
ஏகமுன் இங்கு பெற்றோரை வணங்கி நின்றானே!

வணங்கி நல்லாசிபெற்று வானோர்க்கு அபயம் காட்டி
நின்ற இடம் ஸ்ரீ செல்வச் சந்நிதி என்றானே
அங்கே வந்தெனை வேண்டும் அடியார்க்கு அத்தனையும்
அள்ளித் தருவேனென்றானே வள்ளல் வடிவேலனே!

தேரேறும் தேவ சேனாபதியிங்கே பதிவிட்டு
காற்றோடு கலந்து ஏம கூடம் செல்வானே
சூர சம்ஹாரம் செய்து சேவல் மயில் ஆக்கியுமே
கருணையாற்றம் கரைக்கு வேலன் வருவானே!

படையோடு சென்றவன் இங்கே படையாகக் காட்சிதர
விடைதேடி வரும் அடியர் பல கோடியே- அதில்
ஒரு கோடி காவடியாய் பலகோடிகாலடியால்
தொண்டைமானாற்றம் கரையில் அலையாகுமே!

அலையாகி வரும் அடியரை விலையில்லா மாணிக்கக்
கல்லாக்கி வேலன் கரையில் விளையாடவே
கல்லெல்லாம் நவரத்னமாய் மலராகி அன்னைக்கு மாலையாக
சூடும் முருகனே கதியென்றுகூறும் அடியர் பல கோடியே!

ஆனந்த தாண்டவம் அரங்கேறும் வேளை வேலன்
தொழு தேற்றும் அடியரின் தொலையாத வினை எரிக்க
ஓங்கி வளர்ந்த அந்த ஒளிப்பிழம்பின் அடிமுடியைத்
தேடும் திருக்கோலம் நினைவலையினிலே!
***********

**ஆட வரவா நின் புகழ் பாட வரவா**
நாட வரவா உன்னோடு கூட வரவா
சனி முழுக்காடிடும் சந்நிதி முருகா - உன்
அருள் முழுக்கில் தோய நானும் வரவா

பாலாபிஷேகம் கண்டால் பாபம் தொலையும்- உன்
பஞ்சாமிர்தம் உண்டால் பசி பறக்கும்
கற்பூர ஒளியிலே உன் அருள் சுரக்கும்
கண்மூடி நின்றாலோ நீ வருவாய்

அழைக்க வந்தேன் நீ அருகிருந்தாய் - பின்
ஆறவென்று ஆற்றங்கரை இருந்தாய்
கூறவென்று நான் ஓடி வந்தேன்
கை அசைத்து என்னை அருகழைத்து
கூறாமல் பூவரச மரத்தருகே
கும்பிட்டு நின்றால் போதும் என்றாய்

*********

**ஆற்றங்கரையிலே அந்த ஆறுமுகத்தவன்**
பூவரச நிழலிலே வேலாக நின்றவன்
உருகி நின்றோரின் வினைகள் கருக வைத்தவன்
கருணை என்னென்பேன் பெருமை பேசிமுடியுமோ

சரணம் வேலப்பா முருகா சரணம் வேலப்பா
சரணம் வேலப்பா முருகா சரணம் வேலப்பா

ஆலமிலையிலே அவன் அமுது படைத்தவன்
கோல மயில்மீது அவன் காட்சி கொடுப்பவன்
குகையை நாடியே அடியர் மனத்தைத் தேடியே
குறும்பு செய்துமே அவன் குறைகள் தீர்ப்பவன்

செல்வச் சந்நிதியில் எங்கள் செல்வமே நீ வா
செந்தமிழ்ப் பாவினால் நின் புகழ் பாட நான் வரவா
பச்சை மயில் மீது பழனி ஆண்டவா ஓடி வா
பிச்சை கேட்கிறேன் முருகா இங்கு ஓடி வா
******************

**ஆனந்த சாகரா வடிவேலவா**
ஆறுபடை ஆடிவிட்டு ஆறியமரவா- தொண்டைமான்
ஆற்றங்கரைக்கு வா...
செல்வச் சந்நிதியில் நீ காட்டும் செல்வங்களை யெல்லாம்
அள்ளிச் செல்லும் அடியரோடு துள்ளிச் சென்றவா-
வீடுவரை துள்ளிச் சென்றவா...

நினைத்த போதிலே அருளும் அண்ணாமலைக் கிணையாய்
அன்னமலை அமைத்து அடியர் பசியைத் தீர்த்தவா-
வேலா பசியைத் தீர்த்தவா...

பசியைப் போக்கியே பின் அருளைக் கொடுக்கவே
ஞானவடிவான வேலாய் காட்சி தந்தவா-
வேலாய் காட்சி தந்தவா...

ஞானம் தந்தபின் அவர்க்கு மோனம் காட்டவே
ஞானியரை சந்நிதியில் ஆட விட்டவா-
நடமாட விட்டவா...

ஞானியரோடு உறவாடிய பின்னே
ஆத்ம ஞானம் பெற்று வேலன் அடியைத் தேடலாம்-
வேலன் அருளை வேண்டலாம்... (ஆனந்த சாகரா)

******

**ஆனந்த சாகரா** வடிவேலவா
வள்ளி தெய்வயானையோடு ஆற்றங்கரைக்கு வா
ஆறு படையை விட்டு வா , ஆறி அமர ஓடி வா . . .
வேலாக வந்தவா . . .வேற்படையாய் நின்றவா . . .
வேலும் மயிலும் சேவலோடு வீதி வலமும் வா
அன்னமலையைத் தந்தவா , சொர்ணமலையாய் நின்றவா

ஆனந்த வெள்ளமே வடிவேலவா
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் அபய கரமும் தா
அப்பன் அருளை வேண்டித்தா, அன்னை சக்திவேலும் தா
அசுரரை அழிக்க ஆறு பொறியாய் வந்தவா
ஏறு மயில் ஏறி சூர சம் ஹாரம் தா
நாட்டில் அமைதியையும் தா, வீட்டில் ஆனந்தமும் தா

வேதாந்த வெளிச்சமே வடிவேலவா
அன்னை தந்தை அண்ணனோடு ஆறியமர வா
தொண்டைமான் ஆற்றங்கரைக்கு வா, தொல்லைகளை
தீர்த்து அருள வா . . .
கருணை வெள்ளமே ஞான தீபமே
தேவர் குறை தீர்க்க வந்த தண்ட பாணியே
தேவ சேனாபதியே , சூர சம் ஹாரனே

நாதாந்த நாயகனே வடிவேலவா
வள்ளி வாசல் முன்னே சிவநாகதம்பிரான்
சிவனோடு நாரணன், இணைய வரும் சாயுச்சம்
பூவரச மரத்தையே ஓர் சமாதியின் மேலே
தோற்றுவித்து அதன் அருகே வேலாய் நின்றவா
வேற்படையாய் வந்தவா, சந்நிதியே ஆனவா

*************

**ஆடாத மயிலொன்று கண்டேன்** - முருகன்
வேலாகச் சந்நிதியில் வீதி வரும் போது

ஆடும் மயில் ஆடாததேனோ - இங்கு
வேலோடு வருவோன் தனி வேலாக வந்ததேனோ . .

மனமென்ற மயிலேறி வருவான் - அப்பன்
எழில் கண்டு மனமடங்கி நிற்கின்ற தத்துவத்தை
ஆடாத மயிலாகக் கண்டேன் முருகன்
வேலாக சந்நிதியில் வீதி வரும் போது . .

வினைதீர்க்க வருகின்ற வடிவேல் - மனக்
குறைதீர்க்க அடியாரின் மனக்கோயில் தன்னில்
வேலாக மேலோங்கி நிற்பேன்
எனக்கூறி சந்நிதியில் வேலாக நின்றான் . .

மனமென்ற மயிலேறி உளம் கொண்டு
விளையாடும் விளையாட்டின் முடிவென்ன?
அடியாரின் குறைதீர்க்க வேலாய் - இங்கு
கோலாகி , காலாகி காட்டுகின்ற விந்தைதானோ . .

மெய்ஞ்ஞான அறிவன்றோ வடிவேல் - எங்கள்
அஞ்ஞானத் திரை கிழிக்க அப்பன் தந்த கோல்
எஞ்ஞான்றும் எம்முன்னே தோன்றும் - அந்த
விஞ்ஞான விளக்கமே வீரவேல் ஞானவேல் . .

அன்னை தந்த வேலாக இங்கு - நீ
முன்னை வினை முழுதும் போக்க மனம் கொண்டு
அன்னையாய் தந்தையாய் குருவாய்
என்னையுமோர் பொருட்டாக ஏற்பாயோ முருகா . .
*************

**ஆற்றங்கரை ஆண்டவா** - தொண்டைமான்
ஆற்றருகே அமர்ந்த சந்நிதி வேலவா

பேரற்ற உருவற்ற வேதாந்த வெளிதன்னில்
நானற்ற நிலையிலே உன்னையும் அதுவாக்கும்

ஆறுபடை வீட்டினிலே ஆடி முடிந்தபின்னே
ஆறி அமர்ந்தருள ஆற்றங்கரை வந்தாயோ
மருதர் கதிர்காமர் அமைத்த சன்னிதியில்
களிப்புடன் அமர்ந்தாயே கலியுகத் தெய்வமே

கதிர்காமக் கொடியேற்றம் காண நீ சென்றாயோ
களைத்துத் துவையலுண்ண ஓடி நீ வந்தாயோ
புண்ணியனார் சமாதி கண்ட பூவரச மரத்தருகே
கோயில் கொண்டு வீற்றிருந்து அடியரைக் காத்தருளும்
**********************

**ஆடிமுடிந்த பின்னே தங்கவேலா** - நீ
தங்க வந்த இடமிதுவோ எங்கவேலா
தங்கு தடையின்றி தெரிசனமோ தரவோ
தொண்டைமான் ஆற்றருகே கோயில் கொண்டாய் வேலா

காட்டுவழி வந்ததினால் தங்கவேலா - கதிர்
காமருமே பயந்ததினால் தங்கவேலா
திருப்பியே பார் என்றாய் தங்கவேலா - நீ
விரும்பியே மாறி நின்றாய் வெள்ளி வேலாய் - முருகா

சங்கநிதி பதுமநிதி எல்லாமே வேலா - உந்தன்
பொன்னடியைச் சரணடைந்தோர் காலடியிலே
எந்தவனம் ஏகினாலும் கந்தவேலா - அதைக்
கந்தவனம் ஆக்கிடுவாய் செல்வச் சந்நிதி வேலா

வெள்ளை மனம் வேண்டுமென்பாய் வெள்ளிவேலா - எனைத்
தள்ளி இனி வைத்திடாதே வெள்ளிவேலா
வள்ளிக் குறமாதுடன் விளையாடியது போதும் வேலா
பள்ளி கொள்ள என்னோடு வர மாட்டாயோ பாலா

உன்னையே தூங்கவைத்தால் வெள்ளிவேலா - நான்
தன்னையுமே தூங்க வைப்பேன் எங்கவேலா
நானுமே தூங்கிவிட்டால் கந்தவேலா - அந்த
நானற்ற நிலை புரியும் செல்வச் சந்நிதி வேலா
********

**ஆற்றங்கரை வேலா ஸ்ரீ செல்வச் சந்நிதி பாலா**
மாற்றங்கள் தந்தருள உனைப் பார்த்து நின்றோம் வேலா

கலியிலே அதர்மங்கள் பிரபோ கட்டுக் கடங்கவில்லை
தன்மந்த காலம் வேறு பிரபோ தடை பல தருவதினால்
தெய்வ சக்தி எல்லாம் பிரபோ தரிசனம் ஆகுதில்லை
தொண்டைமான் ஆற்றருகே பிரபோ தேடாத இடமேயில்லை

பொறுத்தது போதும் பிரபோ பொங்கி எழுந்தருள்வாயே
வறுத்தது போதும் பிரபோ மக்கள் வதைபட்டது போதும் வேலா
சிவந்தது பூமியிங்கே பிரபோ மக்களின் இரத்தத்தினால்
வெளுக்குமோ வானமிங்கே பிரபோ வேலொன்றை நீ வீசினால்

கல்லோடைக் கரையினிலே பிரபோ காலடி தேடுகின்றோம்
காலத்தின் கோலத்தினால் பிரபோ தேடவும் நேரமில்லை
குண்டுகள் வீழ்வதினால் பிரபோ மனங்களில் அமைதியில்லை
அமைதியைத் தந்தருள மீண்டும் சத்ரு சம்ஹாரம் வேண்டும்

தேவரும் மனிதருமே பிரபோ தினம் உனைப் பூஜிக்கின்றார்
பூலோக சொர்க்கத்திலே பிரபோ அசுரர்கள் ஆள்கின்றாரே
உன் ஆட்சிதான் வேண்டும் பிரபோ அடியவர் ஆர்ப்பரிக்க
பள்ளி எழுந்தருள்வாய் பிரபோ பக்தரைக் காத்தருள

கண்ணசைவொன்றினாலே பிரபோ அக்கரை வெளிக்காதோ
விட்டது வேலொன்றாலே பிரபோ அசுரரும் அழியாரோ
ஏமகூடம் ஒன்றை பிரபோ இங்கமைக்க மாட்டாயோ
சேவலும் மயிலுமாக பிரபோ அசுரர்கள் மாறாரோ

சித்தர்கள் வாழ்ந்த பூமி ஜீவன் முக்தர்கள் நடந்த பூமி
யோகியர் நின்ற இடம் பிரபோ ஜோதிப் பிழம்பாகாதோ
ஆடி முடிந்த பின்னே பிரபோ ஆரம்பம் வேலானந்தம்
ஆத்மார்த்த பூசைகள்தான் பிரபோ ஸ்ரீ செல்வச் சந்நிதியில்

எங்கள் தெய்வமே பிரபோ சந்நிதி வேல் அழகா
பொங்கும் மங்களமே பிரபோ தந்தருள்வாயே
அன்னமலை தன்னிலே பிரபோ என்றென்றும் வாழ்பவனே
அடியரைக் காத்திடவே பிரபோ ஆற்றங்கரை வந்தாய்

சொந்த மண்ணிலே பிரபோ மீண்டும் நாம் வாழவேண்டும்
நாடுவிட்டோர் எல்லாம் பிரபோ மீண்டும் வரவேண்டும்
சுற்றங்கள் சேரவேண்டும் பிரபோ சுகமாக வாழவேண்டும்
உன்னைத் துதித்து நிற்க பிரபோ வரம் தருவாயே
********

**ஆலிலை மேல் அமுதைத்--தரும் சந்நிதி வேல் அழகா**
ஆலமுண்டோன் மகனே--எங்கள் ஆற்றங்கரை அழகா
ஓலமிடும் அடியார் குறைதீர்க்க ஓடியும் வருபவனே
ஞாலமெல்லாம் மயிலேறியே வலம் வரும் வண்ண
வடிவழகா...(ஆலிலை)

வேற்படையாய் இங்கே வீற்றிருந்தே எங்கள் வேதனை
தீர்ப்பவனே
காற்படை நாற்படை வெருண்டிட ஓடிட வேற்படை
ஆனவனே.(ஆலிலை)

தொண்டைமானாற்றம் கரையில் தோன்றிய சந்நிதி தீரத்திலே
தொண்டரைக் காக்க வானவர் வாழ அபயம் தந்தவனே
அபயகரமும்
தந்தவனே.(ஆலிலை)

தேவரும் மனிதரும் தினம் பூசைசெய்யும் ஸ்ரீ செல்வசந்நிதியில்
மருதமும் நெய்தலும் மரமாய் கொடியாய் மகிழ்வுடன்
தந்திடுமே.(ஆலிலை)

அன்னமலை படைத்து அடியர் பசி போக்க மடங்களைத்
தந்தவனே
சொர்ணமலையேறி சுப்ரமண்யமாய் சுகம் பல
தந்தவனே............(ஆலிலை)

பசிப்பிணி போக்கி ஞானத்தை நல்கும் ஞானபண்டிதவேலாயுதா
பூவரச மரத்தருகினிலே என்னைப் பூவாக மாற்றிட
வருவாயே...(ஆலிலை)

*******

**ஆயிரம் எண்ணம் உன்னுள் உதயமப்பா**
அதை இறைவனை வேண்டிப் பின்னே அலசிடப்பா

பற்றைத் துறந்துவிடு பந்தபாசத்தை அகற்றிவிடு
அவனை எண்ணிவிடு மனம் தானாய் மயங்கிவிடும்
மயங்கும் மனத்திடமே உள்ளே தயங்கும் உள்மனதில்
அவனே யாதுமென்ற உண்மையை ஊட்டிப்பார்
பள்ளங்களில் அவனருள் நிறைந்துவிடும் - பல
பாதைகளும் தானாய் திறந்துவிடும்
காணும் படிகளினால் ஆறுபடையைச்சுற்றிவிடு - அப்போ
மாறான எண்ணங்கள் கூறாகி வீழ்ந்திடுமே
வெற்றிவேலனிடம் உந்தன் பற்றைக் காட்டிவிடு
அவன் கட்டி அணைத்துன்னை படை வீட்டைக் காட்டிடுவான்
வீடுகளைச் சுற்றி சுற்றி வந்து விடப்பா - வினை

தானாக உனை விட்டு ஓடி விடுமே
வீட்டைக் கண்டதுமே வந்த காட்டை நீ மறப்பாய் - உந்தன்
நாட்டில் நடப்பதெல்லாம் நல்லவையாய் அமையும்
நாட்டைப் பிடிகொண்ட அசுரர் ஆட்சி அகன்றதுமே
உந்தன் வீட்டில் பயிர்விளையும் அன்னதானத்தை மனம்
நாடும்
ஆலம் இலை தன்னிலே அப்போ அமுதை நீ படைப்பாய்
ஆலகால விஷத்தையெல்லாம் அப்பன் கண்டத்தில்
ஏற்றிடுவான்
உன் மனத்தை சந்நிதியாய் மாற்றிடப்பா
அமுதங்கள் இனி அங்கே உதயமப்பா

*********

**ஆற்றங்கரை ஓரத்திலே ஆறெழுத்து மந்திரத்தை**
அன்று கதிர்காமருக்கு அறிய வைத்தாய்
அன்று முதல் இன்றுவரை அவர் வழியில் வந்தவர்கள்
வாய் கட்டும் பூசை முறையால் வணங்குகின்றார்
எழுந்தருள்வாய் பள்ளி எழுந்தருள்வாய்!

வீரபாகுதேவர் முன்பு சந்தி காலப் பூசை செய்தார்
போர்தொடுக்க முன்னால் முருகன் சிவபூசை இங்கு செய்தார்
ஸ்ரீ செல்வச் சந்நிதியே இத்தலத்தின் பெயரும் என்றாய்
சித்திக்கும் முத்திக்கு சிறந்த இடம் ஆகுமென்றாய்!

ஏமகூடப் போர் முடிவில் ஏகும் இடம் சந்நிதியே
கதிர்காமயாத்திரைப் பலனைக் காட்டுமிடம் சந்நிதியே
ஆறில்லா நிலப்பரப்பில் தொண்டைமான் ஆறு வைத்தாய்
ஆற வந்த அடியருக்கு அன்னதான மடமும் வைத்தாய்!

சத்துருவைச் சம்ஹரிக்க வேற்படையாய் ஆனவனே
எந்நிதியும் சித்திக்க சந்நிதியின் வேலானாய்
பூவரச மரத்தடியில் புண்ணியனார் சமாதி வைத்தாய்
பூக்கள் இங்கு கனியாகும் கருணை உன் அருள்வெள்ளம்!
****

**ஆடி அடங்கினாலும் தங்கவேலா - நீ**
ஆறி அமர்ந்த இடம் சந்நிதியே - அங்கே
தேடியே வருவோர்க்கெல்லாம் தேனாம்ருதம் - தரும்
ஸ்ரீ செல்வச் சந்நிதி தான் சொர்க்கவாசலே முருகா

அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
அமர்ந்து இங்கே அப்பனை வணங்கினானே
அன்னையும் அமர்ந்தாளே லிங்கோற்பவத்தில்
நாரணனும் தேடி நின்றான் வள்ளி வாசலில் முருகா

விக்கினங்கள் தீர்ப்பதற்கோர் விக்னேஸ்வரன்
விரும்பித் தம்பியோடு கூட நிற்க
வேற்கருணை வேற்கரணியாய் சுரக்கின்றதே - அங்கே
வேழமுகன் வாசலிலே தெப்பக் குளமாய் முருகா

மூத்தவளும் மாமியாரும் செல்வங்களையே
மூலவரின் கோமுகையின் அருகினிலே
மாவிளக்கேற்றும் வள்ளி வாசலருகே
குவிக்கின்றார் அடியவர்க்கு அளந்திடவே முருகா

மாவிளக்கில் செல்வங்கள் சென்றிணைய
பாவிளக்கேற்றுவோரும் பெறுகின்றார்
கண் கலங்கும் அடியர்க்கு கடல் மடையே - அதை
காணக்கண் ஆயிரம் நீ தரமாட்டாயோ முருகா

பூவரச விருக்ஷசத்தின் அருகினிலே
பாலனவன் வேலாக வீற்றிருக்கையில்
பார்க்கவந்த கந்தர்வன் சமாதி நிலை
ஹரிஹர அபிஷேகம் தீர்க்கும் வினையே முருகா

வாசலிலே வீரபாகுவும் இடும்பனுமே
காவலாக திண்ணை யருகே விரும்பி நிற்க

தெப்பகுள முன்னாலே வைரவரும் நிலை கொள்ள
சங்க நிதி பதும நிதி நிதம் தோன்றுமே முருகா!

********

**ஆடுகின்றானடி சந்நிதியில் - அதைப்**
பாடவந்தேன் ஆற்றங்கரை அருகில்
அன்னையும் ஆட அப்பனும் ஆட
அருகிருந்த மூன்று சக்திகளும் ஆட

வேண்டுகின்றேன் நீயோ வாட்டுகின்றாய் - அப்போ
எந்தையோ என் துயர் தீர்க்க என்றான்
காட்டியுமே பின்னே கண் அசைத்து - நீ
ஆடுகின்ற ஆட்டத்தின் அர்த்தமென்ன- வேலன் (ஆடுகின்)

ஊழ்வினை சூழ்வினையோ நானறியேன் - அதை
உணர்ந்தவர் உரைக்கவும் தடுக்கின்றாய்
சொல்லாமல் சொல்லி அங்கே மெல்லவைத்த - உன்
சோதி வடிவழகை சொல்லில் கண்டேன் - வேலன்(ஆடுகின்)

அரிசியைக் கற்கண்டாய் ஆக்கி வைத்தே - அன்று
அடியவர் களை தீர்த்தாய் மடங்களிலே
ஆறுதல் தர வேண்டி ஆறுமுகா என்றேன் - நீ
மாறுமுகமாகி மாறுவதேன் முருகா (ஆடுகின்)

*******

**ஆற்றங்கரை ஆண்டவா** - தொண்டைமான் (ஆற்றங்கரை)

ஆற்றங்கரையோனை சரண் அடைந்தோர் வாழ்வில்
மாற்றங்கள் ஏற்றங்கள் தானாகத் தந்திடும் . . .

ஏறுமயிலேறி என்னிடம் வரவேண்டும்
கூறுமடியாரின் குறை தீர்க்கும் குருபரா
மாறுபடு சூரரை வதைத்த எம் தெய்வமே
ஆறுமுகம் காட்டி அமைதியைத் தாராயோ . . .

வள்ளி தெய்வானை அன்னையர் இருவருடன்
வண்ண மயிலேறி வடிவேலுடன் வருவாய்
எண்ணமெலாம் நிறைந்த எந்தையே முருகா
வேலாக நீ இங்கு வீற்றிருக்கும் மர்மமென்ன . . .

************

**இளமையானவன் இனிமையானவன்**

அழகு ஆனவன் என்னை ஆள வந்தவன்
ஆறு பொறியிலே அவதாரம் ஆனவன்
ஆலம் இலையிலே எனக்கமுது தருபவன்

செல்வச் சந்நிதியே எங்கள் செல்வத்தின் சந்நிதியே
தேவரும் மனிதருமே தினம் பூஜிக்கும் சந்நிதியே

ஆற்றங்கரையிலே அவன் ஆறவந்தவன்
ஆறு படை வீட்டில் ஆடி அமர்ந்தவன்
ஏறுமுகமாகி அந்த ஏமகூடத்தில்
அசுர அழிவிலே சேவல் மயிலும் கொண்டவன்

எந்நிதியும் தரவல்ல அந்தச் சந்நிதி தீரத்திலே
எந்தனைக் காக்கவோ பல ஆடல்கள் காட்டியுமே
கருணை வெள்ளமாகி கால் அடியும் பதித்துமே
கல்லோடைக் கரையிலே எமைக் காத்து நிற்பவன்

தாள் இல்லாத் தலைவாசல்
தகப்பன் சுவாமியின் நுளைவாசல்
நினைப்பவர் மனத்திலெல்லாம்
நீலமயிலேறி நின்றிடுவான்

தங்க மயிலேறி எங்களோடு தங்க வந்த அழகன்
வெள்ளி மயிலேறி உள்ளக் கள்ளம் கரைத்திடுவான்
பச்சை மயிலேறும் என் இச்சைக்குகந்தவனே
நீலமயிலேறி எந்தன் நெஞ்சம் நிறைந்திடையா

தொண்டைமான் ஆற்றருகே தொழ வினை அகன்றிடுமே
தொண்டரின் குறைகளெல்லாம் அழ அங்கே மாறிடுமே
பசிப்பிணி தீர என்றோ கந்தன் மடங்களில் கூட நிற்பான்
அருட்பசி போக்க என்றோ வேலாக வீற்றிருப்பான்

*******

**உனைப்பாட தமிழ் போல மொழியில்லையே - உன்**
எழில் கூற முருகன் போல் வார்த்தை இல்லையே குமரா

உனைப்போல பிறந்தஓர் பிள்ளையில்லையே முருகா
உலகாள உனைப்போல தெய்வமில்லையே குமரா

ஸ்கந்தம் என்ற வடமொழியில் உருவெடுத்து முருகா
குகையினில் வாழ்ந்திருந்தாய் வகையறியாதிருந்தோம்
தேவர் குறை தீர்க்க நீ தென்னகத்தே வந்தபோது
தமிழோடு இணைந்தாயே மொழியாக மிளிர்ந்தாயே

நல்ல தமிழ் பாட்டெல்லாம் வாசமிகு மாலை என்பாய்
ஔவையிடம் ஓடுவாய் செந்தமிழ்ப் பா கேட்க
அருணகிரித் திருப்புகழில் ஆட நீ வருவாயே
நானும் தான் பாடுகிறேன் முருகா உன் அருள் நாடி

*******

**உதயத்தில் ஊறிடும் நினைவலையில்**
இதயத்தில் வேலவனை இருத்திவிடு
இமயத்தின் ஈசனின் மகனவனே
சமயத்தில் அருள் தரும் சந்நிதியான்

காக்க என்றால் கதிர் வேல் தோன்றும்
தாக்க என்றால் வேற்படை ஆகும்
நோக்க என்றால் நோய் நொடி அகலும்
தூக்க என்றால் வேலும் மயிலுமங்கே

கேட்பதைக் கொடுக்கும் வேந்தனவன்
வேண்டுவன ஈயும் வேலனவன்
தாண்ட வழி காட்டும் தயாபரனே
தொண்டைமானாற்றம் கரை வந்தான்

பசி நோய்க்கு மருந்தும் ஆறெழுத்தே
பவ நோய்க்கு விருந்தும் ஆறெழுத்தே
சிவனே என்றங்கே இருந்துவிடு
சண்முகனே உனக்கருள் புரிவானே

ஆகம விதிமுறைக்கு அப்பால் வேலன்
அருள நின்ற இடம் செல்வச் சந்நிதியே
மூலமந்திரத்தை ஜெபித்து நின்றால்
மூண்டெழு கனல் முறையாய் எழுமே!

*******

**உள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சி வெள்ளம்**
உன்னருளால் உருவாகிப் பாமலராய்
மலர்ந்ததுமே நின் பாதம் தனில் சாற்ற
மனத்துள்ளே ஓர் ஆலயம் தனை அமைத்தேன்

வேதனையைத் தந்தால் தான் உணர்ச்சி வெள்ளம்
வேகமாய்ப் பாயுமென்ற ஓர் நினைப்போ
அடிக்கடி நீ தருகின்றாய் என் மனத்தே
ஏன் இந்தச் சோதனை எந்தனுக்கு

கவி பாட வந்தவனின் கதி நீயே
புவி எல்லாம் கட்டி ஆள எண்ணமில்லை
எனக்காக எதையுமே நாடவில்லை - பின்
எதற்காக சுமைதாங்கி ஆக்குகின்றாய்

பாட என்று வந்தவனை வாட வைத்து - உனைத்
தேட என்றால் திசை தன்னை மாற்றுகின்றாய்
நாடகங்கள் எத்தனை நீ ஆடுகின்றாய் - விளை
யாட வேறு யாரும் இங்கு கிட்டலையோ

ஆட்டுகின்றாய் ஆட்டும்வரை ஆடுகின்றேன்
வாட்டுகின்றாய் வாடுகின்றேன் இன்று வரை
வேதனைதான் எனக்களிக்கும் சொத்தென்றால்
வேண்டும் வரை தந்து என்னை வேகவிடு

ஆறுதலைத் தந்தும் நீ ஆறுமனம் தரவில்லை
மாறுபட்ட சிந்தனைகள் தீவினையின் சாயலோ
வேறுபட்ட மனநிலையால் வேதனைகள் எனைச்சூழ
கூறுபட்டுக் குறுகுவது உந்தனுக்குச் சம்மதமோ

வாழ் நாளில் பாதிக்குமேல் சோதனை - இனி
வருகின்ற நாட்களிலும் வேதனையோ
பட்டுப் பழுத்துவிட்டேன் பழகிவிட்டேன் - இனித்
தொட்டுப் பழமாக்கி விட்டால் போதுமய்யா!
******

**உள்ளம் என்றும் உனக்காக வேலப்பா**
உகந்தது எதுவோ அதனைத் தருவாய் கந்தப்பா - எனக்கு

உன் எழில் காண சந்நிதி வருவேன் வேலப்பா - உன்
கருணையை நினைந்து உருகிட வேண்டும் கந்தப்பா

ஏசியும் பேசியும் துதிப்பவர்க்கு நீ எதிரில் நிற்பாயாம்
அறிந்தும் அவ்வழி நாட என் மனமோ மறுக்கிறதே
அடித்தாலும் நீயே எனை அணைத்தாலும் நீயே
ஆற்றங்கரையினிலே என்றும் காத்திருப்பவன் நானே

அபயம் தர நீ வருவாய் என்பதை அறிந்திருந்தும்
அறியாமை என்ற அஞ்ஞானத்தால் வாடுகின்றேன்
சஞ்சல மனத்தால் வரும் சங்கடம் தன்னை
சடுதியில் தீர்ப்பாய் எங்கள் சந்நிதி வேலே

அடிமனம் தினமுனை நாடும் என்பதை அறியாயோ
அங்கு ஆலயம் ஒன்றினை அமைத்ததை நீயும் மறந்தாயோ
பூவரசாய் எனை மாற்ற வந்ததை மறந்தாயோ - நீ
விழுத்தும் பழுத்த இலையெல்லாம் பாமலர் இதழே

விழுந்த பழுத்த இலைபோல் பாமலர் பழுத்திடுமோ
விழுந்த மனத்தோர் மத்தியில் நிம்மதி தந்திடுமோ
விழுந்த இலைகள் பத்திரமாய் மாறும் விந்தையைப்போல்
பழுத்த பாமலர் கந்த கவசமாய் ஆவது எப்போ
******

**உன் எழில் கூற வரும்**
எந்தப் பாட்டுக்கும் எல்லையில்லை
அந்த எல்லையில் நின்றார்க்கு
அவன் தொல்லைகள் தருவதில்லை...
பாதந்து என் வாழ்வை பகலாக்கித் தந்தாயே

பகல் வந்த பின்னாலும் கனவொன்றும் கலையலையே
உனைத் தேடவே இந்த வாழ்க்கைதான்
தேட தேட நீயும் கூட நின்று காட்டருளே....
(உன் எழில்)
சந்நிதி என்றாலோ சஞ்சலங்கள் தீருமென்றாய்
சஞ்சலம் தீர்ந்தபின்னே மனம் சந்நிதியே ஆகிவிட்டால்
உள்ளம் ஒன்றே போதுமே கள்ளங்கள் கரைந்திடுமே
கள்ளங்கள் கரைந்தபின்னே கந்தனே காட்சி என்றான்
ஆற்றலை எல்லாமே உனை அணைப்பதே போதாதோ
காற்றலை போலே கந்தன் அருள்சூழ்வது குறையாதே
நினைக்க நினைக்க இனிக்க இனிக்க மனம் மயங்கிறதே
(உன் எழில்)
********

**உனை நாடுதே கந்தா என் மனம் உனை நாடுதே**
அந்த ஆறுமுகம் தன்னில் ஆறுதலைத்தேடி

வினையகலா நெஞ்சத்தில் துணையாகவே நின்று
மனைதேடி ஓடிவந்து வினைபோக்கும் வேல் முருகா

பிறவிக்கடலிலே தத்தளித்தலைகின்றோம்
காற்றடித்தால் காகித ஓடத்தின் கதியேது
அலைஅலையாய் வரும் உன் அருள் அங்கு தெரியுதே
ஆழ் கடலே எனக்கு ஆறாகப்புரியுதே
கனத்த மனத்தில் கருணைக்கடலாய்
காட்சியும் தந்து மறைத்தவா
நினைத்த கணத்தில் எனக்கு அனைத்தும்
அளித்து என்னைக் கவர்ந்தவா
ஆள் கடல் அலையினில்
அலைந்துலையாமலே
அருட்கரத்தால் எனை அணைத்தவா
உருகி மனம் கசிந்து நான் அழைக்கவா
கந்தா கந்தா என

உருகி மனம் கசிந்து நான் அழைக்கவா
கருகி விலகும் கர்ம வினை அனைத்துமே
தினம் உனையே
மனம் தன்னிலே
மறவா நினைவைத்தருவாயே
தந்துவிட்டால்
காலம் எல்லாம்
கந்தா உனையே பாடிடுவேன்
முருகா............குமரா..............
அழகா.............வருவாய்...........
தருவாய்..........அருளே..........
தினமும்..........நிறைவாய்......... (உனை நாடுதே )
*******

**உன் வேல் காண ஆசைதான்**

உன் வாசல் வர ஆசைதான்
உன் வீதி சுத்த ஆசைதான் - ஆசைதான்
என் வேலா ஆசை தான்

உன் தேர் காண ஆசைதான்
தீர்த்தம் ஆட ஆசைதான்
வனத்தில் பாட ஆசைதான் - உன்
மடத்தில் ஆற ஆசைதான் - மீண்டும் அந்த
மண்ணில் வாழ ஆசைதான்

கண்ணால் கடைக்கண்ணால் நீயும் பார்த்தால் போதுமே
காயம் பட்டபூமி மீண்டும் செழிப்பாய் மாறுமே
அல்லல் படும் அடியார் குரல் கேட்கவில்லையோ- தமிழர்
வாழ்வில் துயர் தீர்க்க இன்னும் தாமதம் ஏனோ
வேல் கொண்டு வெற்றியை நீ தர
நாள் இன்னும் வரவில்லையோ - வெற்றிவேலனே
உந்தன் பிறப்பின் பயன் மீண்டும் காணவேண்டுமே

வண்ண வடிவேலா உனைக்காண வேண்டுமே
அண்ணன் கூட நீ இருந்து அருள வேண்டுமே
அன்னமலை படைத்து உனை அடியவர் வேண்ட
சொர்ணமலை வீட்டில் நீயும் குவிக்க வேண்டுமே
எண்ணத்தில் எப்போதும் நீ இருக்க
என் வாழ்வில் கவலையே இல்லை -என்றும் உந்தனருள்
எந்தன் கூட நின்று காக்க வேண்டுகின்றேன்
*********

**உன்னையே வேண்டி நின்றேன்**

நின்னருளைத் தந்திடையா
உள்ளமாம் சந்நிதியில்
உன்னையல்லோ தேடுகின்றேன்

உன்னையெண்ணி உருகி நிற்கும்
பக்தருக்குன் அருள் வெள்ளம்
அள்ளி அள்ளி கொடுக்கும் எங்கள் சந்நிதிவேலா
அருட்பசியைத் தீர்ப்பதற்கு
உடற் பசியைப் போக்க எண்ணி
அன்ன தானக் கந்தனான அப்பனே வேலா . . .

காலமெல்லாம் காக்க என்று
காலடியும் தந்துவிட்டு
பூவரச மரத்தருகே வீற்றிருந்தவா
மூர்த்தி ஸ்தலம் தீர்த்தம் கொண்ட
தொண்டைமான் ஆற்றருகே சந்நிதியைத்
தோற்றுவித்து கோயில் கொண்டவா . . .

ஆன்மாவை ஈர்ப்பதற்கோ
ஆலயத்தை இங்கமைத்தாய்
ஆற்றங்கரை ஓரத்திலே
ஓங்கி அகன்று ஊன்றி நின்றாய் . . .

என்னையே உணரவைக்க உன்னையே தேடவைத்த
உத்தமா என் குருவே சந்நிதி வேலா
பூவரச மரத்தருகே தியான நிலை கூட வைத்து
என்னையே காட்டுகின்ற எந்தை முருகா

நானென்றும் நீயாக நல்ல வழி சொல்லையா
நானென்றது அழிந்துவிட்டால் தானாக வந்திடுமோ . . .
*******

**ஊரும் தொண்டைமானாறே** - அங்கே
ஓடும் தொண்டைமானாறே
தோன்றிய வேலன் கோவிலில்
தொலையுது வினை எந்நாளுமே!

அருளாற்றம் கரையின் அருகிலே
அமைந்த அறுமுகன் கோவிலில்
அன்னமலை நிதம் தோன்றுது
அடியர் பசியங்கே மாறுது!

படையுடன் புறப்பட்ட செந்தூரன்
இங்கே சந்நிதியானாக மாறியே
அன்னமலைகளை அடியர்க்கு தந்து
சொர்ணமலைமீது தான் அமர்ந்தான்!

நினைத்தால் அருளும் அண்ணாமலை போல்
மனத்தால் கொள்ள அன்னமலையரசன்
வரமுன்னே வரம் தரும் வள்ளலாய்
இங்கே வீற்றிருந்தே விளையாடுகிறான்!

தேவர்க்கு அபயகரம் காட்டியே - அசுரர்
அழிவினை இங்கே சொன்னதால்
ஸ்ரீசெல்வச் சந்நிதி பெயர் என்றான் - இங்கே
தீரும் அடியார் வினை என்றான்!

ஆலும் அரசும் ஒன்றாய்ப் பூவரசுடன்
சேர்ந்து மலரும் என்றான்
பூவரசை தல விருக்ஷம் ஆக்கியே
அதன் அருகே வேலாக நின்றான்!

தந்தையை வணங்கிய இடமாதலால்
மூலத்தில் லிங்கத்தை வைத்தான்
நந்தி தேவரும் வாசல் நின்றார்
நாரதாதி முனிவரும் தினம் வருவர்!

தேவரும் மனிதரும் தினமிங்கே
பூசைக்கு வருமிடம் என்றான்
மனிதரைத் தேவராய் மாற்றும் - ஓர்
மார்க்கத்தையும் கூறி நின்றான்!

ஞானத்தை வழங்குதற் கென்றோ
வேற்படையாய் இங்கே வீற்றிருந்தே
மோனத்தை விரும்பும் அடியருக்கு
சும்மா இரு என்று சொன்னான்!

சும்மா இருந்து சுகம் காண
அம்மா இதுபோல் இடமில்லை
வேண்டுவார் வேண்டுவன தந்தருள
வேலாக வீதி வருகின்றான்!
************

**என் உள்ளத்தோட்டத்தில் வந்தமர்ந்த கள்வன் நீ**
என் வாழ்க்கைச் சோலையிலே பூத்த புது மலரும் நீ
ஏற்றமென்றும் மாற்றமென்றும் இனியும் எனைக்குழப்பாமல்
என்னோடு இருந்திடையா

காலத்தின் கோலத்தால் நடந்தவற்றை நினைக்கின்றேன்
காலங்கள் மாறியதால் கவலைதனை மறக்கின்றேன்
கடல்மடைபோல் வந்த உந்தன் கருணைதனை நினைக்கின்றேன்
ஆனந்தம் கண்ணீர் ஆனதோ

ஏசியும் பேசியும் துதிப்பவர்கள் பலர் இருந்தாலும்
அந்த வழி எனக்கில்லை என்று என்றோ நான் கண்டேனே
கண்டதினால் காலடியே கதியென்று கிடப்பவனை
காக்க வைத்தல் முறையோ

கடமைதனை முடிப்பதற்கே கட்டுண்டு வாழ்பவன் ஐயா
உடமையாக்கும் நாளைத்தேடி உன் வாசல் காத்திருப்பேன்
மடமையினால் மறந்திருந்தாலும் நினைவைத்தரும் நிழலைப்போலே
என்றென்றும் என்னோடிரய்யா

தொண்டைமானாற்றருகே தொடர்ந்து உந்தன் கருணை வெள்ளம்
தொண்டருக்கு என்றென்றும் தொடர்கதையாய் இருப்பதினால்
மனம் ஆறி இருந்தாலும் மனஏக்கம் குறையல்லையே
சந்நிதி காணும் நாள்வரை
****************

**எத்தனை பிழைகள் எத்தனை குறைகள்**
அத்தனை இருந்தாலும் அருளுதல் உன் கடன்
சிந்தனையும் நீயே வந்தனையும் உந்தனையே
வருந்தி அழைத்தால் வாராதிருப்பாயோ வடிவேலா . . .

நீ நினைத்தால் நான் வருவேன் சந்நிதி முருகா
நீ மறந்தால் ஆறுமோ என் மனம் ஆறுமுக வேலா . . .

ஆறுபடை வீடுதன்னில் ஆடியது ஓர் முகமே
ஆற்றங்கரை மீதினிலே ஆற வந்த ஆறுமுகமே
அன்னதான மடங்களிலே அடியர் பசி ஆறயிலே- போதும்
என்ற பொலிவினிலே பொங்கும் உந்தன் எழில் கண்டேன்

அல்லலுறும் அடியவர்கள் தேடுவது யார் முகமோ
வள்ளிக்குற மணவாளா வாஞ்சையுடன் உன் முகமே
ஒருமுகமாய் நின்று உந்தனையே துதிப்பவர்க்கு
ஆறுமுகமளிக்கும் ஆறுதலுக் கிணையேது

ஐந்தெழுத்து மந்திரமோ ஐந்துகர அண்ணனுமோ
அஞ்சுதலைப் போக்குதற்கோ ஆறுமுகமாகினாயோ
ஆறுமுகம் ஏறுமுகமாய் மாறயிலே ஏது பயம்
வேல் தோன்றி அபயம் என்றால் வேண்டுதற் கினியேது

ஓம் என்ற பிரணவமும் ஆறெழுத்தும் சேர்ந்துவிட்டால்
"யாம் இருக்க பயமேது" நெஞ்சகத்தில் நிறைந்திடுமே
மாம்பழத்துப் போட்டியினால் ஞானப் பழம் ஆனதினால்
நாம் எல்லாம் ஈடேற நல்ல குருநாதன் ஆனாய்

ஞானப்பசி கொண்டவர்கள் நாடும் இடம் எவ்விடமோ
மோனநிலை கொண்ட எங்கள் மோகனனின் சந்நிதியே
பூவரச மரத்தருகே பூவாக மாறிவிட்டால்
காயான உன் மனத்தை கனியாக்கித் தந்திடுவான்
*******

**எத்தனை அலங்காரம் ஆற்றங்கரை அழகனுக்கெத்தனை அலங்காரம்**

எம் குல தெய்வம் சந்நிதி வேலனுக் கெத்தனை அலங்காரம்
பூவரச மரத்தடியின் புண்ணியனுக்கு பூவால் அலங்காரம்
வெள்ளி மயிலேறும் வெள்ளி வேலுக்கு வெற்றிலை அலங்காரம்
வேற்கரணித் தீர்த்தம் கொண்ட வேலவனுக்கு விபூதி அலங்காரம்
வேண்டும் அடியவரின் வேதனை தீர்ப்பவனுக் கோடி அலங்காரம்

கதிர்காமரைக் கவர்ந்த கார்த்திகேயனுக்கு தீப அலங்காரம்
சனி முழுக்காடிடும் சந்நிதியானுக்கு தீர்த்த அலங்காரம்
வேற்கரணித் தீர்த்த அலங்காரம்
ஆறு பொறியாகி ஆற்றங்கரை வந்தவனுக் கன்னமலை அலங்காரம்
அருணகிரி முதல் கதிர்காமர் படைத்த பாமாலை அலங்காரம்

**எண்ணமலை மீதேறி எந்திசையில் நான் வருவேன்**
அன்னமலை மீதேறி அருள்வாயே வேல் அழகா
வேல் முருகா வேல் முருகா....... ......... ...........

சந்நிதியில் வேண்டி நின்றால் சங்கடங்கள் தீர்ப்பாயென்று
சங்கதியெல்லாம் கேட்டே சந்நிதிக்கு வந்தேனய்யா (சங்கதி )
எந்தவனம் போனாலும் கந்த வனம் ஆக்கியங்கே
கவலைகள் தீர்த்திடுவாய் என்றதினால் ஓடி வந்தேன்
( வேல் முருகா வேல் முருகா )
அன்னமலைக்கந்தனாகி......... முருகாநீ..........அன்னமலைக்கந்தனாகி
" " அடியர் பசி தீர்ப்பதினால்
மடந்தேடி வந்தங்கே இடந்தேடி நின்றேனே (மடந்தேடி)
அடியரோடு அடியராய் அங்கமர்வாய் என்றறிந்து
உன்னோடு நானமர்ந்து உண்டதையும் மறந்தாயோ (உன்னோடு )
(வேல் முருகா வேல் முருகா)
பூவரச மரத்தருகே புகழ் பாடும் அடியவரின்
பக்கத்திலே நீ இருந்து பண்ணிசைப்பாய் என்றறிந்தும்
(பக்கத்திலே)
ஆடியும் நிற்பாய் என்று ஆராரோ சொன்னதினால்
அடிக்கடி வந்ததையெல்லாம் மறந்தாயோ வேலழகா
(வேல் முருகா வேல் முருகா)
********

**எங்கும் நிறைந்தவனே, எல்லாம் அறிந்தவனே**
எல்லாமாய் ஆனவன் தான் வடிவேலன் (எங்கும் நிறைந்தவனே)

அந்த வேலனை நினைத்தால் சஞ்சலம் எல்லாம் சாய்ந்துவிடும்
வேற்படையை நினைத்தால் வேதனை அங்கே தீர்ந்துவிடும்
சோதனையைத் திருவிளையாடல் என்று கொண்டுவிட்டால்
சாதனை உந்தன் வாழ்க்கையின் போக்கை மாற்றிவிடும்
(எங்கும் நிறைந்தவனே)

தொண்டைமானாற்றும் கரையில் அமர்ந்த சுகப்பிரமம்
ஜோதி வடிவில் சுடர்விட்டொளிரும் சுப்ரமண்யம்
அந்த சுந்தர வடிவன் அமிர்த சுந்தர வல்லியுடன்
இணைந்தே அமர்ந்த இடம்தான் செல்வச் சந்நிதியே
(எங்கும் நிறைந்தவனே)

அன்னையின் அருளெலாம் வேலனைச் சார்ந்து நின்றிடவே
வேலையும் கொடுத்து வேற்படையாக்கியே மகிழ்கின்றாள்
சிவனை வணங்கிடும் நந்தியும் வந்து அமர்ந்திடவே
சரவணன் சிவனை வணங்கியே அருளைப் பெறுகின்றான்
(எங்கும் நிறைந்தவனே)

ஆறுபடை விட்டு ஆறி அமர என்று வந்ததினால்
இங்கு ஆறுதலை என்றும் அடியவருக்கு பொழிகின்றான்
பொழிகின்ற ஆறுதல் பொங்கிவழிய என்று மனம்கொண்டே
அண்ணனை அப்பனை மாமனை இங்கே இணைத்துவிட்டான்
(எங்கும் நிறைந்தவன் )

தெய்வ அருளெல்லாம் திரண்டு பூவரச மரத்தருகே
சங்கர நாரண சங்கமமாகி அருளுகின்றார்
பூவரச விருக்ஷம் ஆதி சேஷனாய் நிழல்தரவே
நவக்கிரகம் எல்லாம் சாமரை வீசி மகிழ்கின்றார்
(எங்கும் நிறைந்தவனே )

அண்ணன் ஐங்கரன் திருவேற்கரணித் தெப்பக் குளத்தை
திருவருள் குருவருள் இரண்டையும் இணைத்து ஊறவைக்க
ஊறும் நீரில் சரவணப் பொய்கையும் தான் இணைய
திருவேற் கருணையைத் தெரிசனமாக்கித் தந்ததுவே
(எங்கும் நிறைந்தவனே )

******

**எந்நிதி தரும் எங்கள் சந்நிதி வேலவா**
உன்னடி போற்றிட உகந்தது தருவாயே
சந்நிதிவேலா எந்நாளும் சரணம் சரணம் ஐயா

வேலவனே உன்னை வேண்டுவது கேட்கவில்லையோ- உமை
பாலகனே உன்னை பாடுவது கேட்கவில்லையோ
நீயில்லாமல் நானும் இல்லை நின் அருளில்லாமல் வாழ்வும்
இல்லையே

அன்னையாய் தந்தையாய் குருவுமாய் தெய்வமாய்
ஆதரித்தெமை ஆட்கொள்ள வருபவனே
அன்னமலைமேலே அடியெடுத்து வந்து அடியார்க்கு
அருள்பவனே

ஆற்றங்கரையோனே அழைப்பது கேட்கவில்லையோ
சாற்றும் கவிபாடி போற்றுகின்றேன் கேட்கவில்லையோ
அன்னமலை அரசனே என் எண்ணத்திலே என்றும் நிற்கவா!
*******

**ஓடிவா முருகா நீ ஆடிவா முருகா**
ஏறுமயிலேறி வா முருகா சேவற் கொடியோடுவா
கதிரமலையோனே வா செல்வச் சந்நிதி முருகனே வா
மாவைக் கந்தனே வா தினைமாவை உண்ண ஓடிவா

நல்லைக்குமரனே வா எங்கள் தொல்லை தீர்த்தருள வா
வெருகல் முருகனே வா அசுரர் படை அழித்தவா வா
கந்தவனத்தோனே வா எங்கள் கருணை வள்ளலே வா
மண்டூர் வேலனே வா எழுவையில் விந்தை காட்ட ஓடிவா
பழனி உச்சியில் வா பழமுதிர்ச் சோலை நடுவினில் வா
தணிகைத்தலத்திலே வா செந்தூர்க் கடலின் அருகிலே வா
சுவாமி மலைதன்னில் வா பரங்குன்றம் தனில் ஏறி வா
ஆறுபடை வீட்டில் வா பின் இங்கு ஆறியமர ஓடிவா

குறிஞ்சிக் குமரனே வா விரும்பி அழைக்க ஓடி வா
உகந்தை மலையினில் வா என் அகந்தை அழிக்க ஓடி வா
வில்லூண்டி வேலா வா சித்தாண்டிச் செல்வனே வா
தேவன் துறை இறங்கி வா திசை மாறாமலே ஓடி வா

அஞ்சுதலை அறுக்க வா ஆறுதலை அளிக்க வா
ஆறுமுகத்தோனே வா இந்த ஏழைக்கருள ஓடி வா
சக்திகள் சூழ வா ஞான சித்திகள் அருள வா
செல்வச் சந்நிதியில் வா எங்கள் செல்வமே ஓடி வா
*************************

**ஓடும் மனத்தை ஒரு நிலைப் படுத்த**
பாடும் மனத்தைத் தருவாய் முருகா
வாடும் அடியார் மனங்கள் மகிழ்ந்து
கூடும்படி நீ அருள்வாய் கந்தா

பாடும் பணியால் பதநிலை தரவே
தேடும் வழியைக் காட்டிடுவாயே
நாடும் மனத்தை நெகிழவைத்தும்
ஆடும் படி நீ அருள்வாய் கந்தா

காடும் வழியும் கண்ட பின்னாலே
தேடும் வழியில் ஒளியாய் வருவாய்
வீடும் விளைவும் காட்டிடும் முன்னே
பாடும் படி நீ பணிப்பாய் கந்தா

**********************

**ஓம் முருகா என ஓதி உணர்ந்தால் ஓடியே வருவாயே**
வா முருகா என வாசலில் நின்றால் வாரி அணைப்பாயே

எம் குறை தீர்க்க ஸ்ரீ செல்வச் சந்நிதி வந்தவனே முருகா-இங்கு
தா முருகா எனத் தாள் பணிந்தால் நீ உன்னையே தருவாயே

ஆடி அடங்கி வாடி வதங்கி வருகின்ற வேளையிலும்
ஆறுதல் தந்து அன்னமும் தந்த ஆதி சிவன் மைந்தா

ஆடியே வரும் அந்தக் காவடியில் உன் அழகு முகம் காண
தேடியே வருமந்தக் கற்பூரச் சட்டியின் ஜோதிதான் போதாதோ

ஏசியும் பேசியும் உந்தனைத் துதிப்பார் உன் அடியர் இங்கே
அத்தனை உரிமை தந்தவனே எங்கள் அப்பனே வேலழகா
***********

**ஓங்கார ரூபத்தை உன் மயில் அசைவில் கண்டேனே**
நாதாந்த கானத்தை சேவல் ஒலி ஆர்ப்பரிக்க
வேதாந்த விளக்கத்தை வேல் ஒளியில் காட்டிவிட்டு
ஏகாந்த வெளியிலே எனை ஆள வந்தவா........
வா வடிவேலனே.........வா வடிவேலனே..........

ஆறுமுகங்களும் அழகிய தோளும் அபயகரங்களுடன் -வந்து
அடியவர் குறைகளைத் தீர்த்திட அன்னை தந்த வேல்
கொண்டவனே
சிவத்தாலே உருவானவா-சிவ
சக்தியாலே அருள் கொண்டவா
அசுரர்கள் அருந்தவம் செய்ததினால் பெற்ற வரங்கள்
அனைத்தையுமே
ஆணவம் அங்கே முளைத்ததினால் வந்த ஆங்காரம் அழிந்திடவே
தவத்தாலே உருவானவா-சிவன்
பொறியாலே திருவானவா

ஆறுபொறிகளும் விண்வெளி வான்வெளி மண்ணினில்
வந்திடவே
சரவணப்பொய்கையில் ஆறுதாமரை மலர்களில் தவழ்ந்தவனே
கருவாகா உருவானவா-அன்னை
அணைத்ததால் ஒன்றானவா
ஓராறுமுகமும் இராறுவிழியும் கொண்ட ஓர் முருகன் நின்றான்
ஓராறு எழுத்தில் எழுகோடி மந்திரம் அடங்கிடும் விதமும்
சொன்னான்
ஓம் சரவணபவ என்றான்-அங்கே
அடங்கிடும் அனைத்தும் என்றான்
ஆறுபடையெல்லாம் ஆடிவிட்டு அவன் ஆற்றருகே நின்றான்
தொண்டைமானாற்றம் கரையில் அடியவர் வினைகள்
தொலையுமென்றான்
ஸ்ரீ செல்வச் சந்நிதி என்றான்-அங்கே
வேலாக வீற்றிருப்பேன் என்றான்
எந்நிதியும் தரும் சந்நிதி தீரத்தில் தேவரும் மனிதருமே-தினம்
பூஜித்து நிற்பதால் பூலோகத்தில் ஒரு புண்யபூமி என்றான்
அன்று அபயகரம் காட்டினான்
இன்று இதயமாகி இருந்தான்

*****************

**கந்தா கடம்பா உமை**
மைந்தா நிதம்வா
உன் தாள் பணிந்தேன் நெஞ்சில்
ஒளியூட்ட வாராய்

ஒளியாக வந்தவா என்னுள்
ஒளியூட்டவா
வழிதெரியாதபோது உனை நாடினேன்
உன்னைவிட்டால் யாரெனக்கு வழிகாட்டுவார்
மண்ணையுண்ட கண்ணனின் மருகேசனே
(வேல் வேல் முருகா வெற்றி வேல் முருகா)

நீயில்லாத வாழ்வு என்ற கதையே இல்லை
உன்னைவிட தெய்வம் ஒன்று பெரிதென்றும் இல்லை
தந்தைக்கு உபதேசித்து சுவாமிநாதனானாய்
பிரம்மாவை சிறையிலிட்டு கர்வத்தை குறைத்தாய்
அன்பாலே ஒன்றால் மட்டும் இறைவனை அடைவாய்
என்றதோர் அரியசெய்தி எடுத்து நீ சொன்னாய்
கந்த சஷ்டியில் சூரசம்ஹாரம் அதுவேதான் சாட்சி
அன்னை வள்ளியை ஏற்று நின்றாயே அன்பாலே நீயும்
என்குரல் கேட்கலையே வடிவேலனே
என்மனம் உந்தன் கோயில் முருகேசனே

அன்று கதிர்காமருக்கு அத்தனையும் சொன்னாய்
இன்று வேண்டி நிற்கின்றேன் எப்போ வருவாயோ
என்றும் நீ எந்தனின் குலதெய்வமன்றோ
ஏனிந்த விளையாட்டு எங்கள் முருகேசா
உன்னைவிட்டால் யாரெனக்கு துணையிங்கே வேலவா
வெண்ணையுண்ட கண்ணன்போல் விளையாட்டு ஏனோ
அன்று ஆலமிலையிலே அமுதுபடைத்து அற்புதம்காட்டி
ஆலரசோடு கோயிலமைத்து அடியரைக்காத்தாய்
இன்று என் குரல் காதில் கேட்கலையே
இன்னும் ஏன் தாமதம் என் குருவே
****************************

**கந்த சஷ்டி முடிவன்று – சந்நிதியில்**
கந்தன் தவக்கோலம் காண
கண்கள் ஆயிரம் வேண்டும்
கண்ணாரக் கண்டு களிக்க . . .

ஆறுநாள் விரதமேற்று - அப்பன்
ஆறுமுகன் இரதம் ஏறி
வேலோடு வீற்றிருக்கும் கோலம் – காண
கண்கள் குளம் ஆனதே . . .

புறப்பட்டு விட்டதே வேல்
அறப் போர் ஒன்று புரியவே
வேலில் கடும் வேகம் கண்டேன்
ஆறுமுகத்திலோ அமைதி கொண்டேன் . . .

வள்ளியம்மன் வாசலில்
அப்பன் வழமைபோல் சென்றுவிட்டு
திரும்பி வந்த போதங்கே
ஓர் புத்தொளி மலரக் கண்டேன் . . .

சோர்ந்த அடியர் மனம் குளிரவோ - இல்லை
சார்ந்த தேவர் மனம் தெளியவோ -இல்லை
அசுரர் முடிவை எண்ணிப் பார்க்கவோ - அந்தப்
புத்தொளி அங்கு உதித்ததோ . . .

வீரர் புடை சூழவே - வள்ளி
வாசலை விட்டு விலகவே
மாமலைபோல் சூரன் தோன்றி - மணிக்
கோபுரத் தருகில் நின்றான் . . .

அரோகரா கோஷத்தின் இடையே
அப்பன் ஆடி ஆடி வரவே
அசுரனும் முன்னும் பின்னுமாய் - அட்ட
காசங்கள் பலவும் செய்தான் . . .

அமைதியாக அப்பன் - அவனின்
தலைகளை ஒவ்வொன்றாகக் கொய்ய
மாயங்கள் பல செய்த போதும்
அசுரன் அழிவு தெரிந்ததங்கே . . .

அந்தி மயங்கிற போது - சூரன்
மாமரம் போலத் தோன்றவே
சக்தி வேல் துணை கொண்டுமே
சண்முகன் சாய்த்து விட்டான் சூரனை . . .

பிளந்த போதும் அங்கே - அப்பன்
கருணை பெருக் கெடுக்கவே
சேவல் மயிலாக்கிச் சூரனை
அபயம் அளித்து நின்றான்.

தேவர்கள் குதித்து மகிழ
தேவலோகமே பூமாரி பொழியவே
பட்டுப் பீதாம்பரம் அணிந்து
அப்பன் புறப்பட்டு வந்தான்.

இந்தக் கோலம் கண்டபோது - அடியர்
போல அப்பன் அங்கு நின்றதால்
களை யெலாம் போன நிலையில் - பக்தரெல்லாம்
அருளில் திளைத்து நின்றார்!
*******

**கட்டுத் தேரைச் சரிய வைக்க வேலா உனக்கு**
வள்ளி அம்மன் வாசல் மண்டபம் தான் கிட்டியதோ!
சாய்வதற்கு இடம் தேடித்தான் சரித்தாயோ - அன்றி
அடியவர் இனி சாய்வதற்கும் ஓர் இடத்தைச் சொன்னாயோ?

வள்ளி வாசல் முன்னே உள்ள பூவரச மரத்தடியும்
புண்ணியனார் சமாதியுமே உனக்குகந்த இடமென்றாய்!
இன்று தேரையே சரித்துமே மீண்டும் நீ கூறுகின்றாய்
சொன்ன இடம் தான் சோதியில் கலக்கும் இடமோ!

தேரைத்தான் சரிய வைத்தாய்
ஊரைத்தான் கலங்க வைத்தாய்

சரியும் தருணத்தில் நீ வெளி வந்த விந்தையை
கட்டுக் குலையாமல் நீ காட்டிய கோலத்தை
கதை என்பதா அன்றி கவிதை பாடவா
அற்புதம் அதிசயம் ஆனாலும் சத்தியமே!
ஆடல் என்பதா திருவிளையாடல் என்பதா
அத்தனையும் காட்ட வல்ல தெய்வம் சந்நிதியானே!

கட்டுத்தேரில் நீ வருவதை கனகாலம் கண்டுவிட்டோம்
சித்திரத் தேரில் உன் கோலம் தெவிட்டாத பேரின்பம்
அளவு மீறிய ஆசையால் தேரே விஸ்வரூபி ஆனதால்
அளவு மீறியதால்தன் அழிந்திட விட்டாயோ?

அளவான ஓர் சித்திரத்தேர்
என் அப்பனுக்கு வேண்டும் - அதை
சிறப்பாக ஈடேற்ற ஸ்ரீ செல்வச்
சந்நிதியான் திருவருள் வேண்டுகிறோம் - வேண்டும்!

**************************

**கந்தா உமை மைந்தா என் சிந்தையில் – நீ**
வந்தால் ஒளி தந்தால் உனைப் பாடுவேன்
வண்ண வண்ணக் கவி மலர்கள் அங்கு மலருமே
எண்ண எண்ண என் சிந்தையும் தெளியுமே . . .

ஆவினம் மேய்க்கும் மாயவனைப் போலவே
நீ ஆடல் காட்ட வந்த மர்மம் ஏதையா?
அக்கரையில் நின்ற கதிர்காமரை , நீ
இக்கரைக்கு அழைத்ததும் ஏனையா?
ஆலம் இலைமீது அமுது படைத்த பின்னாலே
நீ ஆரென்று அறியவைத்தாய் தன்னாலே
உன்னை உணர்ந்த பின்னே வந்தாரே பின்னாலே
அன்னவரைப் பூசை செய்ய வைத்தாயே தன்னாலே . . .

மந்திரப் பூசையெல்லாம் வகை வகையாய்ப் பெற்றபின்னே
மனதிலே கொண்ட அன்பு மலர்ப்பூசையில் தான் நாட்டமோ?
இங்கு மௌனப் பூசைதான் மன்னனுக்கு வேண்டுமோ? . . .

அவர் பாட நீ ஆடியுமே நின்றாயே
அவர் படைத்த அமுதெல்லாம் உண்டாயே
அன்பாலே உனை வேண்டி நின்றாலே
இங்கு அமுதாகப் பிணி தீர்க்க வருவாயே
இந்தச் சந்நிதியின் தத்துவமே இதுதானோ?
இங்கு வேலாக நின்றவா கூறய்யா! . . .
*******

**கருணை பொழியும் முகம் ஆறு**
கந்தன் பெருமை கூறும் திருநீறு
கலி தீரக் கந்தா என்று கூறு
வினை ஓடுதா இல்லையா பாரு - அப்பன் (கருணை)

காரிருளிலே நீ நின்ற போதும்
கந்தனைக் கருத்தில் கொண்டால்
ஞான ஒளி அங்கே தோன்ற
நல்ல வழி கூடப் புரியும்

அன்ன தானக் கந்தனின்
சந்நிதானத்தில் உருகி நின்றால்
அத்தனையும் அள்ளிக் கொடுப்பான்
எங்கள் செல்வச் சந்நிதி வேலவன்

ஆறி அமர வந்த இந்த
ஆற்றங் கரை மீதிலே
ஆண்டியாகிக் கெஞ்சி நின்றால்
உன்னை அரசனாக்கி விடுவான்

ஆறாகி நின்ற குமரன் - சக்தி
அணைத்ததால் இணைந்து ஸ்கந்தமே
வேறாகி நிற்கும் மனப் போக்கை
உள் நோக்கினால் வேலவன் உதயமே

**********************

**கந்தா கடம்பா கதிர்காமா**
காத்து நின்றேனய்யா தாள் பணிய
காலடி வைத்தது சந்நிதி என்றார்
காத்துக் காத்து இங்கே நிற்கின்றேன் ஐயா

ஆறுபடை வீட்டில் தேடி நின்றேன்
ஆறுமுகா உந்தன் கோலம் காண
ஆறியமர நீ சந்நிதி சென்றாயென்று
ஆரோ சொன்னார் ஓடி வந்தேன்

சந்நிதியில் உன்னை நம்பி நின்றால்
எந்நிதியும் கொடுப்பாயென்று சொன்னார்
எந்நிதியும் நான் கேட்கலையே உந்தன்
பொன்னடி கண்டால் போதுமையா

காலமெல்லாம் நீ காக்க வைப்பாயோ
காரணத்தையும் நீ சொல்லவும் மாட்டாயோ
காரணமாக வந்த இம்மேனியை
தீயிலிட்டால் தான் கருணை செய்வாயோ

உள்ள வழியெல்லாம் கொள்ளாமலே நான்
உன்னிடம் வந்தேன் நல்வழி தேடி
நம்பி வந்தேனையா கெஞ்சி நின்றேன்
தும்பிக்கையான் தம்பி தாமதமேன்

காக்க வைப்பாயோ காத்து நிற்பாயோ
கந்தா எனக்குத் தெரியாதய்யா
காலமெல்லாம் நான் உள்ளவரை உன்
காலடி துணை என்று வந்துவிட்டேன்

உன்னருளாலே உன் தாள் பணிய
நின்னருள் தந்தருள் கந்தவேளே

மின்னொளி ஒன்றேனும் காட்டிவிட்டாலே
தன்னாலே பின்னாலே நான் வருவேன்

*******

**கல்லோடைக் கரையினிலே காலடியும் தந்தவனே**
தொண்டைமான் ஆற்றருகே தொண்டரைக் காப்பவனே
வண்டமிழ் வடிவேலா . . .

எழுகோடி மந்திரத்தை ஓம் சரவணபவத்தில்
இருத்தியே தொழுகோடி அடியவர் இடர் தீர்த்தாய்
அறுகோணச் சக்கரத்தில் ஆடிவரும் அழகேசா
அருளாற்றுச் சந்நிதியில் ஆடல் முகம் தெரியுதையா
கந்தா கடம்பா கருணைக்கடலே கார்த்திகேயா திருவடிவேலா
சரவண சண்முக சிவகுருநாதா வள்ளி குஞ்சரி மணவாளா
முருகேசா மால்மருகேசா எங்கள் குமரேசா
வருவாய் நீ . . . மயிலேறி . . .குறைதீர்க்கும் ஐயா . . .

ஆலம் இலைமீது அமுதாக வருபவனே
அன்னமலை மீதேறி ஆடிவரும் அருள் வடிவே
பூவரச மரத்துப் புண்ணியனார் அருகிருந்து
வேலாகக் கதவில்லாத் தலைவாசல் தனில் வருவாய்
வடிவேலா . .உமைபாலா . .வள்ளிலோலா
ஆற்றைமட்டுமே காட்டி நிற்பதால் ஆறுதல் இங்கு தருவாயோ

பொருளாகி . . நீ அருளாகி . .நீ . .அன்பாகி பின் அறிவாகும்
வேதாந்த நாதாந்த ஏகாந்த நிலையோ . . .

**********************

**கண்ணிலே நீர் சொரிந்தால் கந்தனுக்கு அபிஷேகம்**
மண்ணிலே சிரம் சாய்ந்தால் மால்மருகனுக்கு நான் சரணம்
விண்ணிலே விழி சேர்ந்தால் வேதாந்த எண்ணங்களோ
பண்ணிலே யான் சேர்ந்தால் பாலனுக்கு பாமலரே!

என்னிலே நீ சேர்ந்தால் எண்ணங்கள் தான் உதயம்
உன்னிலே நான் சேர்ந்தால் உள்ளதெல்லாம் நீ யன்றோ
தன்னாலே தான் வாரா தவநிலையும் சித்திகளும் - உன்
பின்னாலே நின்றாலே ஓர் நாள் முன்னாலே வந்திடுமே!

கையோடு கைசேர உந்தனையே நான் அழைப்பேன்
காலிரண்டும் ஓடிடுமே கார்த்திகேயன் தனைக்காண
காலங்கள் ஓடட்டும் காலனுமே தான் வரட்டும்
வந்தபின் கந்தனையே வாழ்த்திடுவேன் வாழும்வரை!
*******

**கலியிலே நின் கருணை கடல் மடையே ஆண்டவா**
கண்ணீரால் உனைத்துதித்து நின் கருணை வேண்டவா
ஆறுபடை வீடெல்லாம் அழுதழுது தாண்டவா
ஆறி அமர்ந்தருள ஆற்றங்கரை கொண்டவா

தொண்டைமான் ஆற்றருகே தொழுது நான் வேண்டவா
தொலையாத வினையெல்லாம் தீர்க்கும் எங்கள் ஆண்டவா
வீதி ஓர மடங்களிலே வீற்றிருக்கும் ஆண்டவா
ஆதி அந்த மில்லா எங்கள் சுவாமிநாத ஆண்டவா

இருளகற்ற மருளகற்ற இகபரத்தைத் தாண்டவா
இன்பமே வேண்டிடும் எந்தன் இதயத்தைத் தாண்டவா
மயிலாக என் மனத்தை மாற்றிவிட்டால் ஆண்டவா
ஒயிலாக வந்தமர்வாயோ சந்நிதியின் ஆண்டவா

நீ மட்டும் வந்தமர்ந்தால் போதாது ஆண்டவா
முப்பெரும் சக்திகளும் முன்னிற்க வேண்டவா
பூவரச மரத்தடியின் புண்ணியனை வேண்டவா
வேலாக நின்றவா நின் தாளே துணை ஆண்டவா

வேல் முருகா மால் மருகா வேதனை தீர்க்க வாராயோ
பழவினைகள் வருவினைகள் வேரறுக்க வேல் தாராயோ

*******

**கதிரமலையினிலே முருகா கதிர் ஒளி ஆகமுன்னே**
வெருகல் நகரினிலே முருகா கதிர்காம ரகஸ்யம் என்றாய்
சித்தாண்டி வேடனாகி முருகா சித்தாக ஆகமுன்னே
வில்லூண்டி வேலனாகி முருகா விளையாடி நின்றாயப்பா

கந்தவனத்திலுமே முருகா கனக ஊஞ்சல் ஆடியுமே
மாவிட்டபுரத்தினிலே முருகா மனமாயை போக்கினாயே
நல்லை நகரினிலே முருகா நல்லவை தரமுன்னே
ஸ்ரீ செல்வச் சந்நிதியிலே முருகா வேலாகக் காட்சி தந்தாய்

குறிஞ்சிக் குமரவேலே முருகா கொழும்பிலெல்லாம் ஆடியபின்
வேற்படையாய் அமர்ந்தே முருகா வேலாக வீதி வந்தாய்
வாழத் துடிப்போரெல்லாம் முருகா வாசல் வந்து கதறுகின்றார்
கதவில்லா வாசல் நின்று முருகா கவலையெல்லாம் தீர்த்திடுவாய்

ஆற்றங்கரை ஓரத்திலே முருகா அடியவரைக் காப்பவனே
விலையில்லா மாணிக்கமே முருகா வேதாந்த விழுப்பொருளே
வரமுன்னே வரமருளும் முருகா வள்ளலவன் நீ யல்லவோ
தரமுன்னே விளையாடி முருகா தவிக்கவிட்டு குறை தீர்ப்பாய்

வேலா வெற்றி வேலா முருகா வள்ளி தெய்வயானையோடு வாராய்
பாலா சிவசக்தி பாலா முருகா சக்தியெல்லாம் தருவாயே
சந்நிதி வேலழகா முருகா சஞ்சலங்கள் தீர்த்தருள்வாய்
பொன்னடி ஒன்றே போதும் முருகா பூவாக ஏற்றிடுவாய்
********

**காவடியார் ஆட்டமது கண்கொள்ளாக் காட்சி இங்கே**
பூவடியார் மலர் கொண்டு விழாக்கோலம் தான் படைக்க
தீ மிதித்தோர் பக்தி வெள்ளப் பிழம்பாகப் பரிணமிக்க
செல்வச் சந்நிதியான் வீதி வலம் வருவானே

பொருள் படைத்தோர் மடங்களிலே அமுது படைக்கின்றார்
அருள் பெற்ற அடியார்கள் வயிறாரப் பசி போக்க
தாக நீர்ச்சாலையிலே பாலெல்லாம் மோராக
செல்வச் சந்நிதியான் வீதி வலம் வருவானே

சின்ன வண்ணச் சிறுமியர்கள் தீபாஞ்சலி செய்ய
பென்னம் பெரிய பெண்கள் வீதியிலே அடி அழிக்க
ஆடவர்கள் அருள் நாடி அங்கப் பிரதட்சணை செய்ய
செல்வச் சந்நிதியான் வீதி வலம் வருவானே

அரோகரா என்ற கோஷம் வானைப் பிளக்குதையா
பஜனையில் உன் நாமம் திக்கெட்டும் பாயுதையா
கண் கலங்கும் அடியவர்கள் கவலைகள் தீர்க்கவென்று
செல்வச் சந்நிதியான் வீதி வலம் வருவானே

தேரேறி வருவதும் பின் தீர்த்தமாட வருவதும்
கண் கொள்ளாக் காட்சியன்றோ மனம் கொண்ட சாட்சியன்றோ
அடியவர் குறை கேட்க மௌனமாய் விழாக் கண்டு
தேவ குஞ்சரியுடன் இரண்டறக் கலந்தாயோ

************

**கார்த்திகேயா கார்த்திகேயா கலியுக வரதா**
கந்தா குகனே கதிர்வேலவனே

கந்தவனத்தில் கவலைகள் தீர்க்கும்
ஆறுமுகனே அழகா வருவாய்
மண்டூர் வேலா வேண்டுவோரின்
வேதனைகள் தீர்த்தருள்வாய்

மால்மருகா மயிலேறி வருவாய்
மாவைக்கந்தா மனமேற வருவாய்
நல்லை நகரின் குமரா அழகா
எல்லையில்லா இன்பம் தருவாய்

சக்திவேலா சந்நிதி முருகா
சரண் அடைந்தேன் சடுதியில் வருவாய்
கதிர்காமத்துறை கந்தவேளே
காந்தம் போலெனைக் கவர்ந்தருள்வாயே
*******

**கார்த்திகைத் தீப நன்நாளிலே** - அன்று
கார்த்திகைப் பெண்களிடம் வளர்ந்த
கார்த்திகேயனை நீ கருத்தினில் கொண்டால்
நேர்த்தியாய் உன் குறை தீர்ப்பானே . . .

அருட்குருநாதனின் திருவருட் கருணையால்
ஆயிரம் அகல் விளக்கேற்றி நின்றால்
ஆறுமுகன் தன் ஈராறு கரங்களால்
அள்ளி அள்ளி அருள் தந்தருள்வான்

ஆற்றங்கரையினில் திருவிளக்கேற்றினால்
கூறாமல் குறை தீர்க்க வேலன் வருவான்
வந்த அந்த வேலன் தந்தது போதாதென்றால்
பன்னிரு விழியாலுனைப் பார்த்திடுவான்

கடைக்கண்ணின் பார்வை ஒன்றே போதுமென்றே நீ
கதறிய நாட்களை மறந்தனையோ
பன்னிரு விழிகளின் பார்வையும் உன் மேலே
பட்டு விட்ட பின்னால் வினையேது?

**********************

**குஞ்சரி மணவாளா சுப்ரமண்யா**
வள்ளிக் குறமாதுடன் நீ துள்ளி வருவாய்
வந்தருள்வாயே வரம் தந்தருள்வாயே

வேல் முருகா வா திருமால் மருகா வா
தேவர் குறை தீர்க்க வந்த தீஞ்சுடரே வா
வந்தருள்வாயே வரம் தந்தருள்வாயே

********************

**குகநாமம் தினம் சொல்லி வருவேனையா**
மனக் குறை ஒன்றும் எனக்கில்லை குமரேஸ்வரா
என் குருவானதோ இந்த ஆற்றங்கரை
என் இருவிழி நீரே குருதட்சணை!

அன்னமலை பேசுது அடியர் மனம் பேசுது
ஆற்றலை கூட அரோகரா தினம் சொல்லுது
பூவரசிலைக் காற்றும் ஓம் என சொல்லுது
தேவரும் மனிதரும் பூசை செய்வதால்
பூலோகத்தில் புண்ணிய ஸ்தலமாகுது
ஏதென்று அறியாமல் மனம் நடுங்குது
என்னை அறியாமல் குகநாமம் வெளிவந்தது

எந்த வரம் வேண்டினும் அது உடன் கிடைத்தது
அள்ளக் குறையாததாய் வளம் வளர்ந்தோங்குது

செய்யும் செயலோங்கிப் புகழோடு பொருள் சேருது
என் சந்நிதி யானின் அருள் தானது
வேற்படை கண்டுதான் நான் நலம் காண்கிறேன்
ஸ்ரீ செல்வச்சந்நிதி புகழ் தினம் பாடுவேன்
என் மனதோரம் தினம் தோறும் ஆராதனை
இந்த வரம் தானே என்றென்றும் என் பிரார்த்தனை

***********

**குகநாமம் தினந்தோறும் அலைபாயுது**
ஆற்றோரம் அன்னமலைகள் தினம் தோன்றுது
அன்னமலையென்பதா சொர்ண நிலை என்பதா
பூலோக சொர்க்க வாசற் படி என்பதா

வேலாட விழிநீரே ஆறாகுது
வேற்படை கூட வெஞ்சமர்க்கு நேராகுது
சத்ரு சம்ஹாரம் தான் இங்கே தலமாகுது
ஸ்ரீ செல்வச்சந்நிதியாய் தினம் காணுது

குகநாமம் தினம் கூறி வருவேனய்யா
நிறைவாக நீ எனக்குத் தந்தாய் ஐயா
என் குருவானதோ ஆற்றங்கரை ஆண்டவா
என் இருவிழி நீரே குருதட்சணை!

இங்கே அலை பேசுது ஆற்றங்கரை பேசுது x 2
பூவரசத்து இலை கூட எமைக் காக்குது
தொண்டைமானாறும் ஓம் என்ற இசையாகுது
↑ தொண்டர் நாவெல்லாம் பிரணவ ஒலியாகுது
↑ வீதி யெங்கிலும் திருநீற்றின் மணம் வீசுது
மனம் வடிவேலன் திருக் கோவிலாய் மாறுது
என்னை அறியாமல் ஓம் முருகா வெளி வந்தது

நினைத்தாலே வரமாகி உடன் சேருது
அள்ளக் குறையாத நிலைக்களமாய் மலை மாறுது
செய்யும் செயலோங்கிப் புகழோடு பொருள் சேருது

ஸ்ரீ செல்வத்தின் சந்நிதியான் அருள் தானது
வீதி வலம் வந்துதான் நான் நலம் காண்கிறேன்
குருவான வேலன் புகழ் தினம் பாடுவேன்
தேவரும் மனிதரும் தினம் பூசையோ
பூசைக்கு மலராய் நான் வரும் நாளெப்போ!
**************************

**குன்றுதோர் ஆடிவரும் குமரனுட வேல் இது**
கூடிவரும் பக்தர்களின் குறை தீர்க்கும் வேல் இது
வேற்படையாய் வீற்றிருக்கும் வெற்றி வீரன் வேல் இது
நாற்புறமும் ஒளிபரப்பும் ஞானச்சுடர் வேல் இது
ஸ்ரீ செல்வச் சந்நிதியான் சிறப்பு மிக்க வேல் இது
சீர்பெருகும் செந்தமிழின் அழகு தெய்வ வேல் இது

கள்ளமில்லா அன்பர் தம்மை காத்து நிற்கும் வேல் இது
கணப்பொழுதில் வினை தீர்க்கும் கண்கண்ட வேல் இது
கதவில்லா வாசலிலே காட்சி தரும் வேல் இது
கருணைமழை பொழிகின்ற கார்த்திகேயன் வேல் இது
தொண்டைமான் ஆற்றருகே தோன்றி நிற்கும் வேல் இது
தொண்டர் தம்மை காத்திருக்கும் தெண்டபாணி வேல் இது

அன்னதானக் கந்தனாகி பிணி அகற்றும் வேல் இது
ஆண்டியாக நின்றிருந்தும் அரசாளும் வேல் இது
எந்நிதியும் தந்தருளும் சந்நிதியான் வேல் இது
எம் குலத்தைக் காக்க வந்த எம் தலைவன் வேல் இது
நெஞ்சமென்ற கோயிலிலே குடியிருக்கும் வேல் இது
சஞ்சலத்தை அகற்றிவிடும் சண்முகனார் வேல் இது

அஞ்சுதலைப் போக்கிவிடும் ஆறுமுக வேல் இது
ஆறுதலைத் தந்தருளும் ஆற்றல் மிக்க வேல் இது
பூவரச மரத்தடியில் புகழ் பரப்பும் வேல் இது
புண்ணியனார் பூசையினால் புவிகாக்கும் வேல் இது

ஆலமிலை அமுதூட்டும் அன்பு நிறை வேல் இது
காலமெல்லாம் நம்பினோரை கைவிடாத வேல் இது

கண்டி கதிர்காமத்தோனின் கனிவான வேல் இது
காணக் கண் கோடி வேண்டும் சந்நிதியான் வேல் இது
சந்திகாலப் பூசையிலே நெகிழ்ந்து நிற்கும் வேல் இது
சந்நிதியான் உருவமான ஓங்கார வேல் இது
குன்றுதோர் ஆடிவரும் குமரனுட வேல் இது
கூடிவரும் பக்தர்களின் குறை தீர்க்கும் வேல் இது! (அழ. முருகப்பன்)

******************

**குன்றுதோறாடிவரும் குமரன் கை வேல் இது**
கூறுமடியார் குறைகள் தீர்க்க வந்த வேல் இது

தேவர் குறை போக்க அப்பன் அருளாய் வந்த வேல் இது
அப்பன் கண்ணில் ஆறுபொறியாய் அவதரித்த வேல் இது

சரவணத்தின் பொய்கையில் ஆறு குழந்தையான வேல் இது
தாமரை மலரில் தவழ்ந்த ஆறுமுக வேல் இது

அன்னை வந்து அணைத்ததினால் ஒன்றான வேல் இது
ஆறுமுகம் கொண்ட ஓர்திரு முருகனின் வேல் இது

மாம்பழத்துப் போட்டியினால் மனமுடைந்த வேல் இது
பழனியில் ஆண்டிக்கோலம் கண்டதோர் வேல் இது

பழம் நீ என்றதையே உணர்ந்த ஞான வேல் இது
பழனி மலை அமர்ந்த தெண்டபாணி வேல் இது

ஓங்காரப் பொருளுரைத்த சுவாமி மலை வேல் இது
ஆங்காரம் அழிக்க செந்தூரில் படையமைத்த வேல் இது

தூது செல்ல வீரபாகுவை அனுப்பி வைத்த வேல் இது
சந்திகாலப் பூசை செய்ய சந்நிதி நின்ற வேல் இது
வல்லியாற்றம் கரையினிலே கோயில் கொண்ட வேல் இது
போருக்கென்று புறப்படுமுன் அன்னை தந்த வேல் இது

சிக்கலிலே சண்முகனார் பெற்ற சக்தி வேல் இது
செந்தூரில் படை நடத்த வந்த சிவ வேல் இது

வல்லியாற்றம் கரையில் பெற்றோரை வணங்க வந்த வேல் இது
மூலத்தில் லிங்கோற்பவத்தை வைத்து வணங்கும் வேல் இது

நந்தியை பலிபீடத்தே அமர வைத்த வேல் இது
நாரதாதி முனிவர்கள் ஏற்றித் தொழும் வேல் இது

தேவருக்கு அபயகரம் காட்டி நின்ற வேல் இது
தலப்பெயரோ ஸ்ரீ செல்வச்சந்நிதி என்று சொன்ன வேல் இது

கதவில்லா வாசலிலே காத்து நிற்கும் வேல் இது
இங்கு வந்து வணங்குவோர்க்கு வரமளிக்கும் வேல் இது

நினைத்தவர்க்கு நீலமயிலாய் நெஞ்சம் நிறை வேல் இது
அணைப்பவர்க்கு அன்னமலையாய் அருளும் சந்நிதி வேல் இது

சொர்ணமலை தனைப்படைக்கும் சுப்ரமண்ய வேல் இது
எண்ணமலை மீதேறி ஆடல் காட்டும் வேல் இது

காட்டு வழி சென்ற சிகண்டி முனிவர் கண்ட வேல் இது
யானைச் சாபம் நீங்கியதும் கந்தர்வன் கண்ட வேல் இது

மந்திரித்த வெற்றிலை அம்பை நெற்றியில் தாங்கும் வேல் இது
இருவருக்கும் அருள மனம் கொண்ட முருகன் வேல் இது
சிகண்டியைக் கதிர்காமம் செல்லச் சொன்ன வேல் இது

கந்தர்வன் ஐராவசுவை சந்நிதி அழைத்த வேல் இது
முருக நாகர் பெயரில் ஐராவசு கண்ட வேல் இது
அன்னவன் சமாதியில் பூவரசைத் தந்த வேல் இது

காட்டுவழி யானைச் சாப கதையில் வந்த வேல் இது
காட்டவோர் வெற்றிலைத் துண்டோடு வீதி வரும் வேல் இது

இத்தனையும் நடந்த கந்த புராண கால வேல் இது
கலிகாலக் கட்டத்திலும் கருணை புரியும் வேல் இது

மருதர் கதிர்காமரையே பூசைக் கழைத்த வேல் இது
அற்புதம் பல காட்டி ஆட்கொண்ட வேல் இது

மௌன அன்புப் பூசைதனை வேண்டி நின்ற வேல் இது
கதிர்காமப் பூசைமுறையைக் காட்டி நின்ற வேல் இது

பூசைக்கென கதிர்காமர் பெற்ற தங்க வேல் இது
காட்டுவழிப் பயத்தினாலே மாறிய வெள்ளி வேல் இது

தென்பதியாம் கதிர்காமத்தில் தோன்றி அருளும் வேல் இது
வடபதியாம் சந்நிதியில் வாழ்வளிக்கும் வேல் இது

கதிர்காம கொடியேற்றம் காணச் செல்லும் வேல் இது
களைத்துத் துவயலுண்ண திரும்பி வரும் வேல் இது

ஆவணியில் விழாக்கோலக் களைகட்டும் வேல் இது
ஆவணியின் பூரணையில் தீர்த்தமாடும் வேல் இது

அப்பனின் சிவராத்திரியைக் கொண்டாடும் வேல் இது
ஆனிப் பொங்கலிட்டு அன்னையை வணங்கும் வேல் இது
ஆழ் கடலில் நீரெடுத்து விளக்கேற்றும் வேல் இது
ஆடியிலே கதிர்காம விழாக் காணும் வேல் இது

சந்நிதியில் கதிர்காமக் காட்சி காட்டும் வேல் இது
எந்நிதியும் தர வல்ல சந்நிதியான் வேல் இது

கந்த ஷஷ்டி காலத்திலே தவக் கோல வேல் இது
சூரசம்ஹாரனாகி ஆர்ப்பரிக்கும் வேல் இது

மோட்ச நிலை கொண்டு தெய்வ யானையை மணந்த வேல் இது
அன்பு மயமாகி வள்ளியை அணைத்து நின்ற வேல் இது

அண்ணாமலைக் கிணையாய் அன்னமலை படைக்கும் வேல் இது
அடியர் பசி போக்கி ஞானம் அருளுகின்ற வேல் இது

மூலத்தில் சோமாஸ்கந்த மூர்த்தம் காணும் வேல் இது
கூடவே தெய்வானையையும் வைத்திருந்த வேல் இது

வள்ளிவாசல் முன்னால் திருமணங்கள் நடாத்தும் வேல் இது
மாமனார் நாரணனையும் கூட வைத்த வேல் இது

பூவரச மரத்தருகே கூட நிற்கும் வேல் இது
சிவனையும் நாரணனையும் இணைத்து வணங்கும் வேல் இது

இருவரின் அபிஷேகமும் காட்டுகின்ற வேல் இது
பார்க்கின்ற அடியாரின் பாபம் போக்கும் வேல் இது

வேற்கரணித் தீர்த்தத்தாலே நோய் மாற்றும் வேல் இது
பூவரச மரத்தடியில் புகழ் பரப்பும் வேல் இது

தீராத நோய் தீர்க்கும் நீறு தரும் வேல் இது
ஆலமிலை அமுதை அரு மருந்தாக்கும் வேல் இது

நினைத்தவர் மனங்களிலே நிதம் தோன்றும் வேல் இது
வரமுன்னே வரமருளும் சந்நிதியான் வேல் இது

அண்ணனை முன் வைக்க அனைத்தும் அருளும் வேல் இது
ஆலகால விஷமுண்டோன் ஆக்கித்தந்த வேல் இது

அன்னை சிவகாமி அணைக்க ஒன்றான வேல் இது
சும்மா இரு சொல்ல வந்த சுப்ரமண்ய வேல் இது

மாறுபட்ட சூரனை அழிக்க வந்த வேல் இது
கூறாக்கிச் சேவல் மயில் ஆக்கி அணைத்த வேல் இது

கருணைக்கோர் அர்த்தமாகும் காருண்ய வேல் இது
கலிபயம் நீக்கி எம்மைக் காக்க வந்த வேல் இது

திருநீற்று மலையினிலே திகழும் வெற்றி வேல் இது
கதிர்காமக்காட்டில் வள்ளியைத் தேடி நின்ற வேல் இது

வேடனாய் விருத்தனாய் விளையாடும் வேல் இது
வேளை வந்த போது வள்ளியை மணமுடித்த வேல் இது

ஏறாத மலை எல்லாம் ஏறி நிற்கும் வேல் இது
மாறாத பக்தி கொண்டோர் மனதில் உறையும் வேல் இது
ஆறு படை வீடெல்லாம் ஆடி வந்த வேல் இது
ஆறி அருள ஆற்றங் கரைக்கு வந்த வேல் இது

ஏழு திரைக்குள் கதிர்காமம் கண்ட வேல் இது
ஏழேழு பிறப்பும் எமைக்காக்கும் சந்நிதி வேல் இது

தொண்டரைக்காக்க தொண்டைமான் ஆறு கண்ட வேல் இது
தொலையா வினை தீர்க்கும் எங்கள் சந்நிதியான் வேல் இது

ஆறெழுத்தை மந்திரமாய் ஆள வந்த வேல் இது
வேறெழுத்தைச் சேவல் மயிலாக்கி நின்ற வேல் இது

எழுகோடி மந்திரங்கள் ஏற்றிப்போற்றும் வேல் இது
தொழுகோடி அடியவரின் துயர் துடைக்கும் வேல் இது

****************

**வேலன் அலங்காரம்**

கொத்துக் கொத்தாய் பூமலைகள் பூத்தாட
பக்தரெல்லாம் பாமாலைகள் பாடி ஆட
சந்திரனும் சூரியனும் சந்தண மழை பொழிய
இந்த விழா உனக்கல்லவோ சந்நிது வேலா
சந்நிதி வேலா சிவ சங்கரி பாலா (சந்நிதி வேலா)

மூன்று கண்டம் மூலையிலே உனக்காக - ஐயா
மூன்று லட்சம் கூட்டம் உந்தன் விழாக்காண
ஆனிப்பொங்கல் விளக்கெடுப்பர் உனக்காக
இந்த விழா உனக்கல்லவோ சந்நிதி வேலா
சந்நிதி வேலா சிவ சங்கரி பாலா (சந்நிதி வேலா)

ஆண்டிக்கோலம் கொண்ட இடம் பழனிமலை -அடியர்
பசி போக்க நின்ற இடம் அன்னமலை - எமை
காக்க இங்கு வந்தாய் இந்த பூமியிலே - அதில்
என் மனமே உன் சன்னிதி சந்நிதி வேலா
சந்நிதி வேலா சிவ சங்கரி பாலா (சந்நிதி வேலா)

நாதஸ்வர மேளமய்யா உனக்காக - துலாக்
காவடிகள் ஆட்டமய்யா உனக்காக
வேதமோடு பக்திப்பாட்டும் உனக்காக
இந்த விழா உனக்கல்லவோ சந்நிதி வேலா
சந்நிதி வேலா சிவ சங்கரி பாலா (சந்நிதி வேலா)

புத்தம் புதுப் பாமலர்கள் உனக்காக - எமை
காக்கும் உந்தன் கருணை வெள்ளம் எமக்காக
மொத்தமாகக் குவிந்திருக்கும் மலர்மாலை
இந்த விழா உனக்கல்லவோ சந்நிதி வேலா
சந்நிதி வேலா சிவ சங்கரி பாலா (சந்நிதி வேலா)
*****************

## சந்நிதி வேலன் நவரத்ன மாலை

ஞான கணேசா சரணம் சரணம்
ஞான ஸ்கந்தா சரணம் சரணம்
ஞான சற்குரு சரணம் சரணம்
ஞானா னந்தா சரணம் சரனம்

தேவர்க் கருளும் சேனாபதியாய்
மாந்தர்க் கருளும் மகேசன் மகனே
அன்னைக்குச் சூடிய நவரத்னமாலையினை
நின் பாதக் கமலம் சூடவே விழைந்தேன்

பூக்கும் மலர்கள் பூமகள் தரணும்
காக்கும் கண நாயக வாரணமும்
உன் மொழியாலே உன்னைத் துதிப்பேன்
பொன்னாய் மணியாய் பூத்திட வேண்டும்
சந்நிதி வேலே சரவணபவமே
எந்நிதியும் தரும் சுப்ரமண்யமே
நின்னொளி கண்டேன் மின்னிடும் ரத்னம்
முக்கண்ணில் உதித்த முதல்வா சரணம்!
பற்றும் வைரப் படைவாள் வயிரப்
பகைவர்க் கெமனாக உதித்தவனே
வற்றாத அருட் சுனையே வருவாய்
கந்தா சரணம் நின் கருணையே சரணம்
போற்றிடும் அடியர் பொங்கி எழுந்திட
தூற்றும் நாவெல்லாம் துகள் துகளாக
கலிபயம் நீங்கி கருத்தினில் நீயே
இருந்திடவே எமக்கருள்வாய் குமரா!

நீல மயிலாய் நினைவினில் நிற்பாய்
கானக் குயிலாய் கருத்தினில் உறைவாய்
மோன நிலையினை மோகிக்கும் அடியார்
தியான நிலையினில் சித்திப்பாயே

மூலக்கனலே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலச் சேவலாய்க் கூவிடும் அழகே
காலம் வரும் வரை காத்திருப்பேனே!

மரகத வடிவே சரணம் சரணம்
வரமது தரவே விரைவாய் வருவாய்
சுரபதி பணிய சுகமே தந்தாய்
சுருதி ஜதி லயமே இசையே சரணம்
அரோகரா முருகா அடியவர் கூற
அவரவர் விதியினை மாற்றிடும் வேலா
ஒருதரம் முருகா உள்ளத்தில் தோன்ற
பலதரம் சுரக்குமே நின் அருள் அங்கே!

முத்தே முருகா சொத்தாய் வருவாய்
தத்தேறிய நான் தனையன் தாய் நீ
வித்தாய் விளைவாய் அண்ணன் வாசலில்
அமுதைத் தருகின்ற அழகே வருவாய்
வித்தார் என்னை விளைந்தேன் உன்னில்
முத்தாய் மிளிர முருகா அருள்வாய்
சொத்தே சுகமே சுகப் பிரம்மமே
மத்தால் கடைவேன் மனமதில் நிறைவாய்!

பவள வாயால் பகர்ந்திடும் மொழியில்
தவளும் உந்தன் கருணையின் இலக்கணம்
உருளும் இந்த உலகத்து மாயையை
சுருளாய் உருட்டி சுகமே தரணும்
மருளும் நெஞ்சத்து மயக்கத்தைப் போக்கி
அருளும் இறைவா அருணாச்சலமாய்
பொன்னும் பொருளும் தந்தருள்வாயே
பூமியில் புழுதியாய் மாறிவிடாமல்!

மாணிக்க ஒளிக்கதிராய் வந்தோய்
வாணி வந்தெந்தன் நாவினில் அமர
பேணிப்புகழ்ந்து பாடிட வந்தோம்
காணக்கிடையாக் கதியானவனே
மாணிக்க நதிக் கரையோரத்தில்
காணிக்கையாய் அங்கு ஞானியர் குழும
கதிர் ஒளி நிலையினில் இச்சைகொண்டே நீ
மீண்டும் ஒளி வடிவாய் மாறினாயோ?

கோமேதகமே குளிர்வான் நிலவே
குழல்வாய் மொழியே தரவே வருவாய்
திருஆவிநன்குடி வளர் கோகிலமே
சந்நிதி வேலா சரவணபவமே
பூமேவிய நான் புரியும் செயல்கள்
பூவாய் மலராய் உன் சேவடி சேர
பாலான எந்தன் மனத்தினைக் கடைந்து
நெய்யாய் உருக்கி நெகிழ்ந்திட வைப்பாய்!

பதுமராகம் போல் பளிச்சிடும் குமரா
புதுமை ராகமாய்ப் புகுந்திடுவாயே
கானம் வானத்தைக் கவர்ந்திடும் நேரம்
கருணை மழையாய்ப் பொழிந்தருள்வாயே
வேதம் நான்கிலும் விளை பொருளானாய்
ஆகம விதிக்குள் அமர்ந்திருப்பாயே
மந்திரப் பூசையில் நீ மகிழ்ந்திருந்தாலும்
மௌன அன்புப்பூசையை விரும்பியே கேட்பாய்!

அலையற் அசைவற் அனுபூதி பெறும்
அடியார் முடிவாழ் வைடூரியமே
ஆற்றலை தினம் உந்தன் சேவடி தொழவே
தொண்டைமானாற்றிலே குடிகொண்டாயே
ஸ்ரீ செல்வச் சந்நிதி பெயருமென்றாயே
வந்தவர் சந்ததி வாழும் என்றாயே

நினைப்பவர் நெஞ்சத்தில் நிதமும் தோன்றும்
நித்திலமே எங்கள் நெஞ்சத்து நிழலே!

எவர் எத்தினமும் இசைவாய் வேலன்
நவரத்னமாலை நவின்றிடுவார்
அவர் அற்புத சக்தியெலாம் அடைவார்
குகரத்தினமாய்த் திகழ்வார் புவியில்
தொண்டைமானாற்றில் தோன்றிடும் வேலன்
கோலத்தைக் கண்டவர் காலத்தை வெல்வர்
இடையனாய் வந்தன்று கதிர்காமரையே
கவர்ந்தவன் உன்னையும் காத்திடுவானே!
(சந்நிதி வேலே சரவணபவமே
எந்நிதியும் தரும் சுப்ரமண்யமே
நின் ஒளி கண்டேன் மின்னிடும் ரத்னம்
முக்கண்ணின் ஒளியே முடிவே சரணம்)

***************

**சந்நிதியும் குகனருளும் எந்நிதியே** - அங்கே
ஊறிடும் ஆறெழுத்தை நெஞ்சமதில் கொண்டார்க்கு
இருமலையும் இணைந்தங்கே இதயத்தில் தோன்றிடுமே
இன்பநிலை ஆற்றருகே இருப்பதை நீ உணர்வாயே!

அன்னமலை சொர்ணமலை சிவசக்தி கிரிகளாக
அண்ணாமலை ஆண்டவனும் அவன் சக்தி துணையோடு
மூலவர் ஸ்தானத்தில் முச்சக்திச் சங்கமமாய்
மாலவன் மருகனை நீ மனதினிலே இருத்திவிடு!

வேலவனே உன் மனத்தில் விரும்பியே இருக்க வந்தால்
சோலைவனமாகி அங்கே சொர்க்கமும் தோன்றிடுமே
ஆலமிலை அமுதுனக்கு அன்றாடம் உணவாக
ஆனந்த நிலை காண அங்கே ஆறெழுத்தே அடிக்கல்லோ!

வேறெழுத்தை வேண்டாது ஆறெழுத்தே ஆழமாக
அடிமனத்தே அது வேகமாக நிலை கொள்ள
யோகங்கள் எல்லாம் உன்னிடம் மோகமாகிச்சேரவே
கானத்தின் எல்லையிலே கந்தனருள் சுரந்திடுமே!

சரவணபவ என்று உன் மனத்தைப் பண்படுத்த
சாயுச்ய நிலை என்று அவனங்கே குடியிருக்க
பூவரசாய் உன் மனம் பூப்பூத்த நிலையினிலே
புண்ணியனார் உன் நிலையைத் தன் நிலையாய் ஆக்கிடுவர்!

***********

**சந்நிதி வேலனின் சண்முகார்ச்சனை** கண்டால்
சந்தேகம் தர்ந்திடுமே சர்வ மங்களம் கூடும்
வருமடியார் குறைகளையும் வரமுன்னே தீர்த்து வைக்கும்
வள்ளலவன் கருணை வெள்ளம் ஆறாகி ஓடிடுமே
தொண்டைமான் ஆறாகிப் பாய்ந்திடுமே!
சண்முகார்ச்சனையினிலே ஆறு பஞ்சாராத்தி
ஆறுவித மலர்களும் வில்வமும் அங்கு வருமே
கற்பூர ஜோதியில் கந்தன் கனகமழை பொழிவானே
வேற்படையில் தோன்றிடும் ஒளியே வேகவைக்கும்
வினைகளையே!

இந்துமத ஆறுகிளைகளும் இணைந்து நிற்கும் சந்நிதியில்
ஐங்கரனும் நாரணனும் அம்பிகையும் சண்முகனும்
சங்கரனும் சூரியனும் அகமகிழ்ந்து ஆர்ப்பரிக்க
கைலாச வைகுண்டக் காட்சி காண்பாய் சந்நிதியில்!

ஆற்றங்கரை வேலவனே ஆறுமுகத் திருவுருவே
ஆறாத துயரங்கள் ஆற்றருகே இனியேது
ஆடிவரும் காவடியில் உன் அழகு நடை காண்போமே
கற்பூரச் சட்டிமேலே கந்தா உன் ஜோதிமுகம்
அங்கப் பிரதட்சனையாலே சொந்தப் பிரச்சனை தீர
வீதியெலாம் திருநீறாக வெந்திடாதோ வினைகளெல்லாம்!
தங்கிடாதோ வேலன் அருள்!

***************

**சர்வம் சந்நிதியே சர்வம் சந்நிதியே சர்வம் சந்நிதியே**



எந்நிதியும் தரும் சந்நிதியான் புறப்பட்டுவிட்டான்
தன் மந்த காலம் தாண்டியதும் வேலில் வேகம் கண்டேன்
ஓசையற்று அவன் ஓய்ந்திருந்த காலம் மாறிடவே
புத்தம் புது மணியின் புதிய நாத ஒலி கேட்டேனே!

கலியுக தெய்வம் கந்தன் என்றால் அது வேதாந்தம்
கண்ணனும் கந்தனும் யுகங்களைப் பகிர்வது நாதாந்தம்
சைவமும் வைஷ்ணமும் இணைவது லோக ஷேமம்தான்
இந்து மதத்தின் இணைவில் சிவனார் தாண்டவம்!

சிவனைச் சரவணன் துதித்த இடம் செல்வச் சந்நிதியே
தேவர்க்கு அபய கரமும் காட்டவோர் சந்நிதியே
தேவரும் மனிதரும் தினம் பூசை செய்யவோர் சந்நிதியே
தொண்டைமானாற்றம் கரையில் தோன்றிய சந்நிதியே!

ஆனைமுகம் ஆறுமுகம் அங்கே ஐந்துமுகம் வேலாகும்
அன்னையும் அப்பனும் ஆனந்த தாண்டவ அரங்கேற்றம்
சலங்கை ஒலிதான் சீமையிலிருந்து வந்ததுவோ
தமிழரின் வாழ்வில் மாற்றத்தின் ஏற்றம் மாமணியோ!

******

**சண்முகனார் சந்நிதியில் சங்கடம் தீர்க்கவென்று**
வருடத்தில் இருமுறைதான் வீதி வலமோ
போருக்கென ஒரு நாளும் தேருக்கென ஒரு நாளும்
தோன்றுவான் ! தோன்றினால் வினைகள் தொலையும்!

ஷண்முகனார் சித்திரத் தேர் ஏற வேண்டுமென்று
கட்டுத்தேர் சரிந்த அன்றே அடியர் மனம் சொல்லியதே
அரசாங்கக் கணக்கினிலே வேலன் தேர் வருமென்றார்
ஐங்கரன் ஷண்முகன் தேர் அடியவர் கணக்கென்றோம்

அன்றிருந்த குழப்பத்தை ஆரிடம் சொல்லி அழ
அன்றே நிதி சேர்க்க என்றோம் ஆதரவு வரவில்லை
அன்பர்களைத் தேடி அலைந்த விதத்தை எல்லாம்
ஆதாரமானவனோ ஆற்றருகே அமர்ந்திருந்தானே!

கொண்டு வந்த நிதி மாணிக்க விநாயகன் தேராக
தந்த பாமலரையே ஷண்முகனார் தேருக்கென்றே
அர்ப்பணிக்க வைத்தான் அன்றே நிதி ஆரம்பம்
போருக்கு வந்த நாளினிலே அங்குரார்ப்பணம் ஆனதோ!

கந்த சஷ்டி காலத்தே ஷண்முகனார் தேருக்கு
அங்குரார்ப்பணம் என்று அன்பரெல்லாம் கூடிவிட்டார்
போருக்கு வந்தவன் தேர் உதய விழாக் கண்டான்
தேருக்கு வரும் நாள் தேர் அங்கே நிற்குமன்றோ!

சித்திரத் தேரேற சிருங்கார வேலழகன்
சீக்கிரமே வரவேண்டும் என்று கேட்ட அடியர்
சித்தம் இரங்கியே முன்பே தந்தாலும்
இன்று காணும் கோலம்தான் எந்நாளும் எம்மனத்தே!

கேட்டதைக் கொடுப்பதற்கு இவன்போல் தெய்வமில்லை
காலம் கனியமுன்னும் காட்சிகளைக் கொடுத்திடுவான்
கொடுத்தது காலத்தின் கோலத்தால் அழிந்தாலும்
கண்கொள்ளாக் காட்சிதனை எந்நாளும் காட்டிடுவான்!

கட்டுத்தேர் சரிந்ததைக் கண்டுகலங்கியவர் மனம் குளிர
இரு தேரை ஓடவைத்து இன்பநிலை தான் படைத்து
ஷண்முகனார் சித்திரத் தேரேறி வரும் போது
சங்கடங்கள் தீரும் நிலை நாட்டினுக்கும் வந்திடுமே!

ஷண்முகனார் சித்திரத் தேரேறி வருவதென்றால்
ஐங்கரனும் அம்பிகையும் சங்கரனும் நாரணனும்

இந்திர லோகமுமே முக்கோடி தேவரோடு
மருதர் கதிர்காமரோடு மனம் மகிழ்ந்து நின்றிடுவர்!

நந்தியோடு நாரதாதி முனிவர்கள் இன்னிசைக்க
இந்திரன் மயிலாகி தேரேறிக் காத்திருக்க
அகத்தியரும் ஔவையுமே செந்தமிழ்த் துதிபாட
அருணகிரித் திருப்புகழ் அலைபாயும் ஆற்றருகே!

யோகரும் போகரும் இங்கிருந்த சித்தரெல்லாம்
யாகங்கள் ஹோமங்கள் கும்பத்தில் கொணர்ந்திடவே
ஷண்முகார்ச்சனையினால் ஷண்முகன் கண்களிலே
சுரந்திடும் கருணையெலாம் அடியவர் நெஞ்சிருக்கும்!

சுப்ரமண்யம் அங்கே சுரந்திடும் கருணையினை
திருப்புகழமிர்தமாக்கி தந்திடுவார் வாரியார்
அமுதசுரபியாம் சந்நிதியில் லக்ஷ்மியாள்
அள்ளி வழங்கும் நிதியெல்லாம் வேலன் அடியருக்கே!

சுகப்பிரமமாய் அமர்ந்த பூவரச மரத்தருகே
பாவலர்கள் பாடுவது பாமலையாத் தோன்றிடவே
பூக்காரர் படைக்கின்ற பூமலைகள் மறுபுரமோ
வேலவன் விளையாட அத்தனையும் அன்னமலை!

சொர்ணமலை படைக்கும் சுப்ரமண்ய சுகப்பிரம்மம்
அன்னமலை படைத்து அடியர் பசி போக்கியுமே
ஞானப் பசி கொண்டவர்க்கு வேலாக விளையாடி
பேரின்ப வீடருள்வான் ஷண்முகப் பெருமானே!

*************

**சந்நிதி வீதியைத் தினமும் சுற்றி வர ஆசை**
அரிதுயில் கொள்ளும் வேலனின் அழகு முகம் காண ஆசை
திருப்பள்ளி பாடி அவனை தினமுமே எழுப்ப ஆசை
அன்னை மடி இருந்து அவன் ஆலமிலை அமுதுப்பாலை
அருந்தும்போது கடவாய் வழியே சிந்தும் பாலைக் காண ஆசை

பிஞ்சுப்பிஞ்சுக் கரத்தினாலே வேலை எடுக்கும் காட்சிதனை
நந்தியருகே யானிருந்து ரசித்து மகிழத் தனி ஆசை
வேலெடுக்க மயிலும் வர சின்னஞ் சிறு பாதமெடுத்து
மயிலேறி வரும் காட்சி காண மனதில் நிறைய ஆசை

சங்கரனும் நாரணனும் துயிலெழுந்த அழகில் மூழ்க
கூட நின்ற கருடனும் பாம்பும் குதித்தாடும் அழகையெல்லாம்
இருவரையும் அணைத்த வேலனில் பூத்த புன்முறுவல் காண
அடியாரின் முகப் பொலிவின் மலர்ச்சி காணத் தனி ஆசை

திருப்புகழால் துதி பாட தெவிட்டாத தேனமுதம்
பாலாகித் திருநீறாகி பாலனுக்கு அபிஷேகம்
எண்ணங்கள் எண்ணையாகி தணிந்து தண்ணீராக
வேலனுக்கு அபிஷேகம் வேதனைகள் வெந்ததுவே

பட்டாடை தனை உடுத்தி பாலனுக்கு அர்ச்சனைகள்
ஆறு நிற மலர்களுமே அவன் பாதம் வருடி வர
சண்முகார்ச்சனையிலே சண்முகன் ஜொலிக்கின்றான்
வேண்டும் அடியாரிடமே வேலின் ஒளி தோன்றியதே

பக்தி தந்த ஒளியுடனே அடியவர் கடமைதனை
கர்மயோகம் தனில் நின்று பலன் கருதாப் பணி புரிந்து
ஞானயோகம் தனை நாடித் தியானித்து நிற்கையிலே
வேலன் அருள் வேதமாகி நெஞ்சகத்தில் நிறைந்ததுவே!

******

**சந்நிதி வேலன் தான் சத்ரு சம்ஹாரன் தான்** - என்னுள்
இணைந்தங்கே இருந்தானம்மா
வினை ஒன்று தான் ஓர் திரை போலவே
என் இதயத்தை மறைக்கின்றதே
இசை ஒன்றாலே திரை அசைகின்றதே
நீ ஒளி தந்தால் விரைந்தோடியே
உள்ளொளி கண்டாலே நீ விழி தந்தாலே
நான் என்னுள்ளே உனைக் காண்பேனே முருகா . . .

பாரெல்லாம் திரிந்தாலும் நெஞ்சத்தில் நிதம் உன்னையே
நினைக்கின்றேன் பூவரசோரம் உனைப் பாடித்துதிக்கின்றேனே
தொலையாத என் வினையைத் தொலைத்தாலென்ன
தொண்டைமானாற்றில் அவை கரைந்தாலென்ன
அமுதூட்டத்தான் நீ வரமாட்டாயோ
திருநீற்றைத்தான் இடமாட்டாயோ முருகா முருகா
அலைந்தேன் அறிந்தேன் அருள்வாய் . . .

நீ தானே துணை தந்து உன் அருகில் வைத்தாய் என்னை
குழந்தைக்கு குருவாகி வளர்த்தாயய்யா
காலங்கள் பகைத்தாலும் கருணை செய்தாய்
கனதூரம் தான் என்னை அனுப்பினாலும்
நெஞ்சுக்கும் நினைவுக்கும் தூரமில்லையே முருகா முருகா
உனை நான் மறவா வரம் தா . . . .

*******

**சந்நிதி வேலழகா உந்தன்**
தயை என்றும் வேண்டுமையா
கலி தீர்க்க வந்த பாலகா . . .

ஆடல்கள் காட்ட ஓர் ஆற்றங்கரை தேடி
ஆற நீ வந்தாயோ ? . . . யான் கடை
தேற நீ நின்றாயோ?

கரையேற நீ வைத்திடாயோ? . . .எந்தன்
கறையெல்லாம் கரைந்திடாதோ? . . உந்தன்
கருணையும் புரிந்திடாதோ?
கலி தீர்க்க வந்த பாலகா. . .

வேண்டும் வரமருளும் வேலவன் நீ யன்றோ
தாண்டும் வழி தருவாயே! . . .குமரா
தாண்டும் வழி தருவாயே
பாமலர் கொண்டு பூசை செய்வேன்
உந்தன் பொன்னடி காட்டுவாயே
அங்கே புகலிடம் வேண்டுமையா!
கலி தீர்க்க வந்த பாலகா . . .
**********

**சித்தம் இரங்கிச் சந்நிதியான் புத்தம்** புதுத்தேரில் வந்திடணும்
நித்தம் போற்றும் அடியவர் எல்லாம் சித்திரத் தேர்க் காட்சி கண்டிடணும்

அழகின் உருவம் சந்நிதித் தேர்
அறிவின் வடிவம் சந்நிதித் தேர்
இருளையும் அகற்றும் சந்நிதித் தேர்
அடியரை ஈர்க்கும் சந்நிதித் தேர் (சித்தம் )

மனமெல்லாம் நிறைந்தது சந்நிதித் தேர்
நிதம் வேண்டும் வரமே சந்நிதித் தேர்
கனவில் தினம் வரும் சந்நிதித் தேர்
கண்ணெதிரில் காணவேண்டும் சந்நிதித் தேர் (சித்தம் )

அண்ணனும் முன்வர சந்நிதித் தேர்
ஆடி ஆடி வருமே சந்நிதித் தேர்
அறுமுகன் பின் வர சந்நிதித் தேர்
ஆனந்தக் காட்சியே சந்நிதித் தேர் (சித்தம் )

மணியோசையுடன் வரும் சந்நிதித் தேர்
வாகை மாலை ஆடி வரச் சந்நிதித் தேர்
எண் திசையிலும் பூசை சந்நிதித் தேர்
பச்சை சாத்தி வரும் சந்நிதித் தேர்

(சித்தம் )

***************

**சிவனை வேலன் வணங்கிய ஸ்தலமே ஸ்ரீ செல்வச் சந்நிதி ஆகும்**
அங்கே சிவனடியார்கள் அறுபத்தி மூவரை அழைத்தவன் வேலன் ஆகும்
அவனன்றி அணு அசையாதே-அவன்
மகனன்றி மனம் அடங்காதே..

அன்னமலை படைத்து அடியர் பசிபோக்க வந்தவன் வேலன் ஆகும்
ஞானத்தை நல்க நான்மறை தந்த நாயகன் வேலவன் ஆகும்
அடியர் பசியையும் தீர்ப்பான்
ஞான சித்தனாய் தகப்பன் சுவாமியே
ஆறுபடை வீட்டில் ஆடியபின்னர்
ஆற்றங்கரையிலே வேலானான்

அமரர் இடர்தீர அபயம் காட்டிய ஸ்தலமே சந்நிதி ஆகும்
அங்கே அன்னை தந்த சக்தி வேலே எழுந்து சந்நிதி அருளே ஆகும்
மூலமும் வேற்படை ஆகும்
ஞாலமும் காத்திட மயிலாகும்
காலமும் காட்ட சேவல் ஆகும்
காற்படையே வேற்படை ஆகும்

வெற்றிலை அம்பு மந்திரம் ஜெபிக்க வேலாகி யானையைத் துளைக்கும்
வெற்றிலை அம்பு வேலோடு இணைய சந்நிதி வேல் எழுந்தருளும்
சங்கர நாரண அபிஷேகம்

கண்டிட கர்ம வினை தீரும்
கண்டவர் கந்தர்வன் சமாதிநிலை
மேலே பூவரசம் ஸ்தல விருக்ஷம்

வேலாக அருகே வீற்றிருப்பேன் என சொன்னவன் சந்நிதி வேலவன்
பாலாக ஓடும் மனத்தை அடக்க உகந்த இடம் பூவரசமே
இலை அமுதே பஞ்சாமிர்தம்
திரு நீறும் தீர்த்தமும் சரணம்
வேலும் மயிலும் சரணம்
வேற்படை ஆனவா சரணம்

******

**சின்னஞ்சிறு வயதில் உன்னை நிதம் காண**
ஆற்றங்கரை வருவேனே
தொண்டைமான் ஆற்றங்கரை வருவேனே
கல்லோடைக்கரையதனில் காணும் உந்தன் கோலம் போலே
காட்சியை வேறெங்குமே காணத்தான் முடியுமா
பென்னம் பெருவயதில் தன்னம் தனியனாக்கி
தடைபல தருவதும் ஏனோ
உன்னைக்காண தடைபல தருவதும் ஏனோ
காணாத துயரை உந்தன் அருள் வெள்ளம் மறைத்தாலும்
மனம் மட்டும் என்றும் உந்தன் மண்ணைத்தான் தேடுமே
தன்னந்தனியனாய்ச் சின்னஞ் சிறு வயசில்
தேடி நான் வந்திருந்தேனே
சந்நிதியைத் தேடி நான் வந்திருந்தேனே
காணாத காட்சிகளை நான் காண என்றோ
கனதூரம் என்னை இன்று அனுப்பி வைத்தாயோ
காணுகின்ற காட்சி எல்லாம் கண்ணுக்கு இனித்தாலும்
உன்கோலம் ஒன்றே எந்தன் மனம் நிறையப்போதுமய்யா
தூர இருக்கையிலே மாறாப்பெருஒளியை
காட்டி நீ என்னைக்கவர்ந்தாயே

அன்று காட்டி நீ என்னைக்கவர்ந்தாயே
கோலங்கள் பல காட்டும் சந்நிதியை நினைப்பவர்க்கு
காலங்கள் மாறினாலும் எந்நிதிக்கும் குறைவுமில்லை
தூர இருத்தி உந்தன் வாசல் மறைத்தாலும்
சோராமல் அருள் தருவாயே
என்றும் மாறாமல் அருள் தருவாயே
நீறிட்ட பின்னாலே அமுதுண்ட அடியவர்க்கு
வேறுபட்ட மனநிலையும் வேதனைகள் தருவதில்லை
வாராது இடர் என்று வாயாரப்பாட வைத்து
காணாத துயர் துடைப்பாயே
உன்னைக் காணாத துயர் துடைப்பாயே
பூவரச மரத்தடியின் பூசையின் சிறப்பை எல்லாம்
பூவுலகில் வேறெங்குமே காணத்தான் முடியுமா

***********

**சின்ன வண்ண அடி எடுத்து வாராய்**
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் தாராய்
தப்பு செய்தேனோ தண்டனை பெற்றேனோ
இனிமேல் சோதனைகள் போதும் வேலா! . . .

பட்டதெல்லாம் நின்னருளால் ஒளிகண்ட பனியாக்கி
தொட்டதெல்லாம் துலங்கிடவே துணை புரிவாயே
விட்டதெல்லாம் வினைப்பயனோ
விளையாட்டென்றெண்ணவோ
கண்டதெல்லாம் கந்தனருள் கடல் மடை தானோ
என்றும் நீயே துணை . . .நான் வாழும் வரை . . .
உனை என்றும் நான் மறவேன்! . . .

ஆற்றங்கரை ஓரத்திலே அன்னமலை தான் அமைத்து
அடியரின் பிணியெல்லாம் அன்றாடம் தீர்ப்பாயே
நாடி வந்த என்னையுமே நாயாக்கி அலைய வைத்து
நல்ல குருநாதன் தந்து நாயகனாய் மாற்றி

ஏற்றம் நீ தந்தாய் . . . ஏணி நீ ஆனாய் . . .
உனை என்றும் நான் மறவேன்! . . .

வேற்கரணித் தீர்த்தமதை பூவரசில் தான் ஊற்ற
வேற்கருணை வீடுவரை தேடியுமே வந்திடுமே
பூவரச மரத்தடியில் புகழ் பாடி நானிருக்க
ஆலமிலை அமுதினிலே அத்தனையும் தருவாய்!
என்றும் நீயே துணை . . . நான் வாழும் வரை . . .
உனை என்றும் நான் மறவேன்! . . .

***********

**சின்னஞ்சிறு வேலவனே என் சிந்தையிலே** நின்றிடையா
ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கு வந்திடுவேன் தந்திடையா

அன்னை தந்தை உலகமென்று அண்ணன் பழம் பெற்றானே
உன்னடியார்க்கோர் உலகம் நீ அமைத்தாய் பழனியிலே

தென்னாடுடை சிவனும் உண்ணாமுலையாளும்
தேடியே வந்தாலும் தென்பழனி அமர்ந்தாயே
பழம் நீ என்றாலும் பதிவிட்டு ஏகாமல்
எம்பசி தீர்த்திடவே இருந்தாயே எம்முடனே

வீரபாகு தேவர் இங்கு தூதுசெல்லும் வழியிலே
சந்திகாலப் பூசைசெய்தார் ஸ்ரீ செல்வச் சந்நிதியில்
அமரர் குறைதீர அபயகரம் காட்டி
அன்றுமுதல் இன்றுவரை ஆதரவும் தருகின்றாய்

பூவரச மரத்தடியில் புண்ணியனார் சமாதி கண்டார்
வேலாக அவரருகே வீற்றிருப்பேன் என்றாயே
வேண்டும் அடியவர்க்கு தாண்டும் வழி காட்ட
கல்லோடைக்கரையினிலே காலடியும் தந்தாயே

தொண்டைமான் ஆற்றருகே வேண்டுகின்றார் தொண்டரெல்லாம்
வேலவா உனையன்றி வேறு கதியேது
அன்னையாய் தந்தையாய் அருட்குருவாய் தெய்வமாய்
ஆற்றருகே அமர்ந்தவனே ஆறாதோ எம் துயரம்

************

**சுப்ரமண்யம் சுப்ரமண்யம் சந்நிதி வேலா** சுப்ரமண்யம்
சுப்ரமண்யம் சுப்ரமண்யம் சங்கடம் தீர்ப்பாய் சுப்ரமண்யம்

அப்பன் கண்ணிலே சுப்ரமண்யம் ஆறுபொறியான சுப்ரமண்யம்
சரவணப்பொய்கையில் சுப்ரமண்யம் தாமரை மலர்மேல்
சுப்ரமண்யம்
ஆறு குழந்தைகளும் சுப்ரமண்யம் அன்னை அணைத்ததால்
சுப்ரமண்யம்
ஆறு முகம் கொண்ட சுப்ரமண்யம் ஒரு திரு முருகன் சுப்ரமண்யம்

காரண காரிய சுப்ரமண்யம் நாரணன் மருகா சுப்ரமண்யம்
அசுரரை அழிக்க சுப்ரமண்யம் அவனிக்கு வந்தான் சுப்ரமண்யம்
பழம் தந்த போட்டியால் சுப்ரமண்யம் பழனிக்கு வந்த
சுப்ரமண்யம்
சுவாமி மலையிலே சுப்ரமண்யம் சிவகுருநாதன் சுப்ரமண்யம்

செந்தூர்ச்செல்வம் சுப்ரமண்யம் சேனாபதியே சுப்ரமண்யம்
சந்தி காலத்தில் சுப்ரமண்யம் சந்நிதி நின்ற சுப்ரமண்யம்
அப்பனை வணங்கிச் சுப்ரமண்யம் அபயகரம் தந்த
சுப்ரமண்யம்
தேவரும் மனிதரும் சுப்ரமண்யம் தினமிங்கே பூசை சுப்ரமண்யம்

ஸ்ரீ செல்வச் சந்நிதி சுப்ரமண்யம் அன்னமலை படைக்கும்
சுப்ரமண்யம்
உடல் பசி போக்கும் சுப்ரமண்யம் அருட்பசி போக்கும்
சுப்ரமண்யம்

ஞானியரைப்போல் சுப்ரமண்யம் நடமாடும் தினமிங்கே
சுப்ரமண்யம்
கல்லோடைக்கரையினில் சுப்ரமண்யம் காலடி வைத்தான்
சுப்ரமண்யம்

காப்பேன் என்றான் சுப்ரமண்யம் சேவடி துணையே
சுப்ரமண்யம்
பூவரச அருகில் சுப்ரமண்யம் வேலாக வீற்றிருக்கும்
சுப்ரமண்யம்
பாடும் அடியார்க்கு சுப்ரமண்யம் பதநிலை தருகின்ற
சுப்ரமண்யம்
வேண்டும் அடியார்க்கு சுப்ரமண்யம் வேண்டுவன தருகின்ற
சுப்ரமண்யம்

கதவில்லா வாசலில் சுப்ரமண்யம் காத்து நிற்பவனே
சுப்ரமண்யம்
நினைக்க முன் வருவான் சுப்ரமண்யம் நீலமயிலேறி சுப்ரமண்யம்
அன்னமலைச்செல்வம் சுப்ரமண்யம் ஆற்றங்கரை வேலன்
சுப்ரமண்யம்
ஏறுமுகமாக சுப்ரமண்யம் ஏமகூடத்தில் சுப்ரமண்யம்

அவுணரை அழித்து சுப்ரமண்யம் சேவல் மயிலாக்கிய
சுப்ரமண்யம்
கதிர்காமத்துறை சுப்ரமண்யம் கதிர் ஒளியான சுப்ரமண்யம்
பொறியாய் வந்த சுப்ரமண்யம் ஒளியாய் மாறிய சுப்ரமண்யம்
நல்லூர்க்குமரா சுப்ரமண்யம் நல்லவை தருவாய் சுப்ரமண்யம்

மாவிட்டபுரத்து சுப்ரமண்யம் மாயை போக்கும் சுப்ரமண்யம்
கந்தவனத்துறை சுப்ரமண்யம் கவலைகள் மாற்றும் சுப்ரமண்யம்
குறிஞ்சிக்குமரா சுப்ரமண்யம் குறைகள் தீர்க்கும் சுப்ரமண்யம்
வெருகல் நகரில் சுப்ரமண்யம் வேதப்பொருளே சுப்ரமண்யம்

மண்டூர் மாணிக்கம் சுப்ரமண்யம் சித்தாண்டிச்சுந்தரம் சுப்ரமண்யம்
வில்லூண்டி வேலா சுப்ரமண்யம் வித்தகா நர்த்தகா சுப்ரமண்யம்
ஆறுபடையெல்லாம் சுப்ரமண்யம் ஆள வந்தவா சுப்ரமண்யம்
ஆறி அமர வந்த சுப்ரமண்யம் தொண்டைமானாற்றுச் சுப்ரமண்யம்

ஆண்டியாய் வருவோரை சுப்ரமண்யம் அரசனாய் ஆக்கும் சுப்ரமண்யம்
வேண்டி வணங்கிட சுப்ரமண்யம் தாண்ட வழி காட்டும் சுப்ரமண்யம்
சுப்ரமண்யம் சுப்ரமண்யம் சந்நிதி வேலா சுப்ரமண்யம்
சுப்ரமண்யம் சுப்ரமண்யம் சங்கடம் தீர்ப்பாய் சுப்ரமண்யம்
************

**செல்வச் சந்நிதியில் செவ்வேளைத் துதிப்பவர்க்கு**
செல்லா நின்ற வினையகல சொல் எழா நிலை தோன்ற
சாயுச்யம் தந்திடுவான் சக்தி உமைபாலனவன் . . .

நீ அமர்ந்த திண்ணை அருகே யான் இருந்து பாடுகையில்
செந்தமிழ்ப்பாவெல்லாம் செந்தணலாய்த் தோன்றுதையா
செந்தணலும் செவ்வேளாய் சிந்தையிலே தோன்றிடவே
செங்கதிர்கள் அங்கிருந்து என் நாவைச் சென்றடைய

எந்நாவும் செந்நாவாய் மாறுகின்ற வேளையிலே
சின்னஞ்சிறு வேலனங்கே சதிர் ஆட வருகின்றான்
சரவணப் பொய்கையிலே அவனாடும் ஆட்டத்திலே
தாமரை மலரிதழ்கள் பாமலராய் உதிர்ந்தனவே

கடல் மடை திறந்ததுபோல் அருள் வெள்ளம் ஓடயிலே
கந்தா உன் புகழ் பாட நாயேனுக் கேது பயம்
கந்தன் என்றால் கருவாகும் உமை மைந்தனென்றால் உருவாகும்
முருகனென்றால் மூச்சாகும் முத்துக்குமரனென்றால் பாட்டாகும்
*****

**செல்வச் சந்நிதியில் செல்வங்கள் குறைவதில்லை**-செவ்வேளின்
சேவடியைப் பற்றியோர்க்கு செல்வங்கள் அழிவதில்லை
மெள்ளமாய் மெள்ளமாய் செல்வனை மனத்தில் இருத்த
பள்ளமாய் மனத்தையாக்க செல்வங்கள் தனைக் குவிப்பான்!

அன்னமலைகள் அள்ள அள்ளக் குறைவதில்லை
சொர்ணமலைகள் நடுவினிலே சுப்ரமண்யன்
வேற்படையாய் அமர்ந்த காட்சிச் சிறப்பதனை
சொல்லச் சொல்ல வாயினிமை குறைவதில்லை!

பூவரச மரத்தடியின் சிறப்பையெல்லாம்
பாவரசர் பாடிவைத்தார் பாமலையாய்
பாமரர்கள் பகுத்தறிவால் பகிர்ந்து சொன்னார்
அறிய அதுவே அறிவாகும் அன்னமலை வேலாகும்!

அறிவுக்கு மறுபெயரே வேலாகும் - அதைக்
குறைவின்றி நீ கொள்ள வேண்டுமென்றால்
பார்க்க வந்த பாருலகாம் மனத்திருளில்
மறைந்திருக்கும் செல்வனையே காண முயல்!
**************************

**தங்கமயில் வாகனனே ஆற்றங்கரை தங்க** வந்த தங்கவேலா - நீ
தங்கு தடையின்றி வேலா வரம் தர தங்கமயில் ஏறி வருவாய்

ஏங்காத மனம் தரவே சந்நிதியில் பூங்காவனம் ஆட வந்தவா
பாங்காக நின்ற வேலா தாங்குவாயே எங்களது வினையெல்லாம்

ஆறுபடை வீடுவிட்டுமே தங்கவேலா ஆற்றங்கரை வந்தமர்ந்தவா
கதிர்காமர் மௌனப்பூசையில் மனம் மகிழ்ந்து தங்கிவிட்ட
தங்கவேலா

ஆலமிலை அமுதுண்ண அந்த அறுபத்திமூவர் வந்தார்
அன்னமலை நீ அமைக்க அந்த அண்ணாமலையானும் நின்றான்
அண்ணாமலையானோடு உண்ணாமுலையாளும் நின்றாள்
நந்திதேவர் கூட வந்து அந்த பலிபீடமாக நின்றார்
தங்கமயில் தம்பி வேண்ட தும்பிக்கை ஆண்டவனும் கூட நின்றார்
மாணிக்கப் பிள்ளையாராய் எங்கள் காணிக்கை தனை ஏற்க

பூவரச மர நிழலிலே பாவரசர் பாவாரம் தொடுக்கவென்றார்
அருணகிரியாரும் வந்தார் நின்றார் திருப்புகழால் துதிக்க
பாடுகின்ற அடியர் கூட்டம் அருள்வேண்டி அலை அலையாய்
வருகுதையா
தேடுகின்ற பக்தருக்கெல்லாம் இது சொர்க்கபூமி ஆகுதையா
ஆற்றங்கரை ஓரத்திலே என் அன்பான சந்நிதிவேலா - நீ
அலையா மனம் தந்தாய் உனக்கனந்த கோடி நமஸ்காரம்

*************************

**திக்குத் தெரியாத காட்டில் நின்றேன்**
பக்குவமாய் அங்கோர் பாலன் வந்தான்
தித்திக்க சித்திக்க அமுது தந்தான்
வேல் அழகன் . . .வேல் அழகன் . . .

அமுதுண்ட களைப்பினிலே அயர்ந்துவிட்டேன்
பூவரச மரத்தருகே ஒளியானான்
பூவாகி நானுமங்கே ஓடக் கண்டேன்
வேல் அழகன் . . .வேல் அழகன் . . .

காயாகிப் பழமாகிக் காவல் நின்றேன்
காலடியில் சரண் என்றால் கனியுமென்றான்
காப்பதுன் கடன் என்றேன் காட்சி தந்தான்
வேல் அழகன் . . .வேல் அழகன் . . .

ஆற்றின்ப வெள்ளத்தில் நீந்தக் கண்டேன்
வேற்கரணித் தீர்த்தமாக மாறக் கண்டேன்
வேலும் மயிலும் என்றேன் விழித்து விட்டேன்
வேல் அழகன் . . .வேல் அழகன் . . .

******************************

**தெய்வத்தைத் தேடி வருகின்றேன் - செல்வச்**
சந்நிதி தீரத்தில் நிற்கின்றேன்
வேலா என் வினை தீர்ப்பதற்கு
வேளை இன்னும் வரவில்லையோ . . .

ஆற்றங்கரையினில் அருள் வடிவாய் - நீ
அமர வந்தாய் என்று அறிந்திருந்தும்
ஆணவம் என்னை இன்னும் விடவில்லையோ- அதை
அழித்திட உனக்கின்னும் மனம் இல்லையோ

பழனிக்கு ஆண்டியாய் வந்தவனே - எங்கள்
பழவினை தீரவேண்டி மலை ஏறினேன்
ஔவைக்கு பழம் கொடுத்து அருள் செய்தவா
இந்த அடியேனுக்கும் தர மனம் இல்லையோ

ஆறுபடை வீடெல்லாம் தேடி வந்தேன் - நீயோ
ஆறி அமர சந்நிதி சென்றாய் என்றார்
சந்நிதியில் உன்னை வேண்டி நின்றால் - அங்கே
என் நிதியும் தருவாய் என்றார்
சங்கநிதி பதுமநிதி கேட்கல்லையே - உந்தன்
பொன்னடி கண்டாலே போதும் வேலா

அருணகிரித் திருப்புகழில் ஆடி நின்றாய் - முருகா
கதிர்காமர் பாடலிலே களிப்படைந்தாய்
உனைத் தேடி பூவரச மரத்தடியிலே - வேலா
நானும் தான் பாடுகிறேன் வரமாட்டாயோ

*********

**தேரோடும் தேரோடும் சந்நிதியில் தேரோடும்**
தேடிவரும் அடியவர் கண்களிலே நீர் ஓடும்

பாலாறும் தேனாறும் பாரிஜாத மலர் ஆறும்
பாதை யெல்லாம் கரை புரண்டு பாய்ந்தோடும்

போருக்கென்றே வந்த வேலன்
போருக்கென்றே பிறந்த தேரில்
ஆரோகணம் ஆகி நின்றே
ஆவாகனம் ஆக அமர்ந்தான்

மஹாரதம் மறைந்த பின்னே
கட்டுத் தேரும் கரைந்த பின்னே
புத்தம் புதுத்தேரில் - வேலன்
நித்தம் சித்திரமாகி நின்றான்

புத்தம் புது மணியின் ஓசை
நித்தம் பல அர்த்தங்கள் தோன்றும்
சித்தத்தில் சப்தங்கள் அடக்கம்
அத்தன் அங்கே குடியேற்றம்

ஓசை அடங்கிடவே ஓங்காரத் தாண்டவத்தில்
ஆசை அழிந்திடவே ஆங்காரம் அகன்றிடவே
இசையின் அசைவினிலே எழுகின்ற பாமலைகள்
ஒலியின் அசைவினிலே ஓங்கார மாகிவிடும்

வேலன் தேரேற வந்தான்
பாலன் படை நடத்த வந்தான்
காலன் களிகூர்ந்து பின்னே
கடா மேலே ஏறி அமர்ந்தான்

வேலொன்று போரங்கே புரியும்
காலடியில் ஓர் குலமங்கே குவியும்
அழித்தாலும் அருளங்கே தெரியும்
சேவல் மயிலாகும் வேலன் பணிபுரியும்!

அண்ணனைத் தேரேற்றி முன் விட்டால்
விக்கினங்கள் விலகிவிடும் என்பதாலோ
சித்திரத் தேரேறி சித்திவிநாயகன் செல்ல
விஸ்வரூபமாகி வேலங்கே வெளிப்பட்டதோ!

வெளிப்பட்ட வெள்ளிவேல் வினை ஓட்ட
பழிப்பட்ட அவுணர்குலம் வழிந்தோட
அழிப்பட்ட மாமரமே சேவல் மயிலாக
களிப்புற்ற வானுலகம் பூமாரி பொழிய!

இத்தனையும் இயக்கிய ஆறுமுகத்தோன்
பத்திரமாய் சித்திரமாய் புதுத்தேரேறி
பவனி வந்தான் ஸ்ரீ செல்வச் சந்நிதியில்
அவனியெல்லாம் ஆற்றோரம் காத்திருக்க!

மும்மலங்கள் களைவதற்கு முத்தேரோ
நாற்திசையும் வீதிவரும் நான்கு வேதங்களோ
எத்திசையும் புகழ் மணக்கும் சந்நிதியான்
அஞ்சுதலைப் போக்கி ஆறுமுகமாகும் அனாதியே!

சந்நிதியில் மூன்று தேரும் ஓடிவிட்டால்
மும்மலமும் முக்குணமும் முனகிவிடும்
எக்கணமும் சற்குணமும் எமை ஆள
அக்கணமே அவன் கருணை கடல் மடையே!

***********

**தேரோடும்  வீதியெல்லாம் மயிலாடும்** - அந்த
மயிலாடும் வீதியெல்லாம் மனமோடும்
மனமோடும் வீதியெல்லாம் நினைவாடும் - அந்த
நினைவாடும் வீதியில் கண்ணீர் ஓடும்

நீர் ஓடி வேலன் புகழ் பாடவென்றால்
மனமெல்லாம் மயிலாக மாறுமன்றோ
மயிலாகும் மனமெல்லாம் ஒயிலாகப் - பின்
குயிலாகிக் குமரன் புகழ் பாடுமன்றோ

கதிரமலைக் காட்டினிலே வள்ளியம்மா
பதிவிட்டு சந்நிதிக்கு வந்துவிட்டாள் - தன்
பதியிங்கே வேலாகி தேரேறும் காட்சி கண்டு
விதி மதிக் கப்பால் ஓர் வெளிதனைக் காண

வேதாந்த நாதாந்த வெளி தன்னில்
வேடனாய் விருத்தனாய் வேடந்தாங்கி
விளையாட வந்த ஓர் வேதப் பொருள்
ஓங்கார நாதத்துள் ஒடுங்கியதோ

தேவலோகமே திரண்டு இங்கே வந்ததோ
தேவ யானையும் தேரோட்டம் காணவந்தாள்
அன்று மயிலாக மாறிய இந்திரன் மக்களெல்லாம்
இங்கு மயிலாக மாறக்கண்டு மயங்கிவிட்டான்

வேலிங்கு தேரேற வருவதென்றால் - அந்த
வேதப் பொருளிங்கு வருவதும் இயற்கையன்றோ
அம்மையும் அப்பனும் அண்ணனும் இங்கு
மடங்களில் இடம் கேட்டு வந்தனரே

நாடே வருவதென்றால் நான்முகனும் நாரணனும்
கடே கதியென்று காத்து நிற்கும் சங்கரனும்

வீடு காண வேண்டுமென்று வீதியோரம்
பாடுபட்டு நிற்கின்றார் ஓரமாய்த்தேர் காண

**********************

**தேராக நான் மாறவேண்டும்** - சித்திரத்
தேரேறி வேலவன் வந்த காட்சி கண்டதினால்
மனமேறி வருகின்ற வேலவன் சந்நிதியில்
தேரேற நாவேறி நாலு வார்த்தை யான் பாட!

தேராக யான் மாறாவிட்டால் வேலன் போருக்கு
தேவ சேனாபதியாகி படை நடாத்தும் விதம் எல்லாம்
காணத்தான் எந்தனுக்கு வழியுமுண்டோ - அந்தக்
கனகவேல் களம் புகுதல் காண்பதுதான் எப்படியோ!

கனகாலமாய் வேலன் கட்டுத் தேரில் வருவான்
காலம் காலமாக அங்கே சம்ஹாரக் கோலம் காண்போம்
உக்கிரமான ஓர் போரை எந்தனுக்குக் காட்டவோ
சித்திரத் தேரேறி வேலன் சிந்தையில் புகுந்தனன்!

கலியிலே அதர்மங்கள் வெறியாட்டம் கொள்ளவே
கந்தனவன் உக்கிரமாய் கோலம் கொண்டால் தானே
வந்த அந்த அதர்மங்கள் அடியோடு மடிந்தாலன்றோ
மன்னனவன் அரசாங்கம் சந்நிதியில் நடக்குமன்றோ!

எனவேதான் சந்நிதியில் வேலன் சில காலம்
சித்திரத் தேரேறி சத்ரு சம்ஹாரம் செய்ய வந்தான்
தன்மந்த காலம் அங்கே தடை பல தந்ததினால்
சித்திரத் தேரேறியும் வேலன் வேலை முற்றாக முடியவில்லை!

எனவேதான் மீண்டும் வேலன் கட்டுத் தேர் ஏறினான்
காலத்தின் கோலத்தில் மாற்றங்கள் ஏதுமில்லை

தன் மந்தம் மாறவே காலங்கள் கனியவே
கட்டுத் தேரைச் சரித்தான் சித்திரப் பெருந்தேர் தோன்றவே!

***************

**தேர் ஒன்று வேண்டும் தேவ சேனாபதிக்கு**

பார் தனில் தோன்றும் பஞ்சமா பாதகங்களை அழித்திடவே
யார் எல்லாம் கலி முத்தி அதர்மங்களை அவிட்டதனால்
தேர் ஒன்று வேண்டும் சத்ரு சம்ஹாரம் சித்திக்க!

தேர் ஒன்றில் தானே அவன் போருக்குப் போக
வேல் ஒன்று தானே அசுரரை சேவல் மயில் ஆக்க
முகம் ஆறு தானே எண் திசையையும் அவதானிக்க
பாதம் இரண்டு தானே அடியர்க்கு சரணகமலாலயம்
கை பன்னிரண்டும் தானே அடியரைத் தாங்க
கரம் பல இருந்தும் அடியர்க்கு அபயகரம் ஒன்றே!

அதைச் சந்நிதியில் காட்டினான் பெற்றோரை வணங்கிய பின்
அன்றே சம்ஹாரம் முடிந்ததாக தேவர்கள் ஆர்ப்பரிக்க
தேர் ஒன்று வேண்டும் தேவ சேனாபதிக்கு
பார் உலக அடியார்க்கு பாதுகாப்பாய் தான் இருக்க!

அன்றெரு நாள் வேலனுக்கு சித்திரத் தேர் நிதி என்றார்
நீ தந்து பூட்டி வைத்த பெட்டகத்தை திறந்துவிட்டேன்!
வேலழகன் பாமலர்கள் வேகமாக வந்தனவே
சித்திரத் தேர்த் திருப்பணிக்கு செவ்வனே உதவிடவே!

*************

**தை பிறந்ததும் தயை மலர்ந்ததோ**
கலி மலிந்தாலும் கந்தன் கருணை மலர்ந்ததோ
கலி பிறந்ததும் அஞ்ஞானம் பிறந்ததோ
கந்தன் வந்ததால் கதையாகி நின்றதோ! . . .

வேலன் வந்ததும் எனக்கு வேளை வந்ததும்
வேண்டி நின்றதும் எந்தன் வேதனை தீர்ந்ததும்
உந்தனை நினைக்கவே நீ சிந்தனை தந்ததுமே
சிந்தனை கந்தனையே அங்கே சித்தம் தெளிந்ததுமே! . . .

சிந்தனை தெளியவே அங்கே வந்தனை நிறையவே
வந்தனை எந்தனிலே ஓர் வண்ணவடிவழகாய்
வண்ணவடிவழகாய் செல்வச் சந்நிதி வேலழகாய்-வந்ததும்
என்னுள்ளத்தை உன் கோயிலாய் மாற்றிவிட்டேன்! . . .

சஞ்சல மனத்தையும் பூவரசாய் மாற்றியே
தெளிவை வேண்டவே சிந்தை வேற்கரணியாகவே
பாலான மனத்தினால் பாலனுக் கபிஷேகம்
பாமலர் அங்குதயம் அவை பாதாரம் சென்றடைய! . . .

பாதாரம் சென்றதுமே பூமாலையாய் ஆகியதோ
மாலையாய் மாறியதால் மால்மருகன் மகிழ்ந்தானோ
வேலவன் ஆனந்தத்தால் அங்கே ஆற்றருகே சிரிக்க
அன்னமலைகளெல்லாம் அங்கே மடங்களில் உதித்ததோ! . . .

அன்னமலைகளெல்லாம் சொர்ணமலைகளாக
அஷ்டலக்ஷ்மிகளும் தம் அடியாரைச் சென்றடைய
செல்வங்கள் பெற்றாலுமே செல்வனை மறவாமல்
அன்னமலை படைக்க அங்கே அடிக்கடி வந்தனரோ! . . .

திசையை மாற்றியுமே நின்ற தெண்டாயுதபாணியை
இசையில் கூட வைத்தேன் இசைவாக வந்திடையா

வசைகள் பாடவில்லை வந்தருள் வேலழகா
திசையெல்லாம் காட்சி தர நின்றருள் ஆற்றருகே! . . .

தைபிறந்ததும் வழி பிறந்ததா
வழி பிறந்ததால் விழிகள் நிறைந்ததா
விழிகள் நிறைந்ததால் வேலவன் வந்தானோ
வேலவன் வந்ததினால் வேதனை தீர்ந்ததுவோ! . . .

*******

**தைப்பூசத் திருநாளிலே தகப்பன் சுவாமி சந்நிதி தேடி**
சென்றவர்கள் சந்திப்பர் சந்நிதியான் நிதியை எல்லாம்
திருவிழாக் காலத்திலே தெய்வயானை பெற்ற வரம்
சங்க நிதி பதும நிதி சந்திக்கும் ஆற்றருகே
சித்திக்கும் வேற்படையில்

எந்நிதியும் தரவல்ல சந்நிதியான் கருணை வெள்ளம்
தொண்டைமான் ஆற்றருகே காலமெல்லாம் சுரந்திடுமே
அலை அலையாய்த் தோன்றும் அந்த அடியவர்கள் திருக்கூட்டம்
சொர்ணமலை கண்டதுமே சொக்கி அவனை வணங்கிடுவர்
அருளைத் தேக்கிச் சென்றிடுவர்

தித்திக்கும் தேனமுதம் தெவிட்டாத இலையமுது
முக்திக்குத் திருநீறு முன் நிற்க பழுத்த இலை
பெற்றுவிட்டால் பிணியேது பேரின்பம் சூழ்ந்திடுமே
அருளாற்றுச் சந்நிதியில் வேலன் அலையா மனம் தந்திடுவான்
சும்மா இரு என்றிடுவான்

தெய்வானைத் தேவியர்க்கு சொன்ன நிதி எந்த நிதி
வள்ளியம்மன் வாசலிலே நின்றதாலே வந்த நிதி
அன்பாலே அவள் மாற அடியர் கூட்டம் அலைமோத
தைப்பூச நந்நாளில் நிதியெல்லாம் சந்நிதியே
அவன் பதி என்றும் சந்நிதியே

மருகன் வேலன் வாசலிலே மாமியார் லக்ஷ்மியாள்
மருவி நின்று செல்வத்தை வாரி வாரி வழங்கிடவே
அடியருக்கு வரும் நிதியெல்லாம் வேலனே என்றிடுவர்
தெய்வானைக் கென்ற நிதி சொர்ணமலை ஆகிடுமே
அங்கே சுப்ரமண்யம் தோன்றிடுமே!

***************

**தொண்டை மானாற்றம் கரையோரம்**
தொலையா வினைதீர அருள்வாயே

அண்டை நாடெங்கும் அலைந்தாலுமே
அங்கெல்லாம் சந்நிதியை நான் காணுவேன்

உன்னை நினைக்காத நாளில்லையே
உன் புகழைப் பாடாத வாயில்லையே
பா தந்து என் வாழ்வைப் பகலாக்கினாய்
நாவார உன் எழிலை நான் பாடுவேன்

அவனன்றி அணுவொன்றில் அசைவில்லையே
இவனன்றி என் வாழ்வில் நிறைவில்லையே
மகனாகி வந்தெந்தன் மனமேறினாய்
குகனாகி வந்தென்னுள் குருவாகினாய்

********

**தொண்டைமானாற்றம் கரையினிலே-** எங்கள்
சந்நிதி வேலனின் ஒயிலாட்டம்
தொண்டரின் குறைகள் தொலைப்பதற் கிங்கே
தோகை விரித்தோர் மயிலாட்டம்

கவலைகள் தீரக் கனத்த மனங்களின்
கண்களில் தோன்றும் நீரோட்டம்

கனிந்த மனங்களில் காட்டிடும் லீலையின்
காரணமாய் வந்த பாவோட்டம்

இருமலை கொணர்ந்த இடும்பனைப் போலே
எண் திசையிலும் காவடியாட்டம்
பஜனையால் மகிழ்ந்து பாடுவோர் நெஞ்சில்
பக்குவமாய் வரும் அருளோட்டம்

அன்னதானத்தில் சிறந்த இடம் - அவன்
அருள் மழை பொழியுமிடம்
ஆவணி மாதத்திலே அப்பன்
பெரு விழாக் காணுமிடம் - வேலன்
திருவிழாக் காணுமிடம்

******************

**தொண்டைமானாறும் சந்நிதி வேலனும்**
தொண்டருக்கே என்றும் சொந்தமன்றோ
சந்நிதியில் வந்து வேண்டி நின்றாலே
எந்நிதியும் தருவேன் என்றானே! . . .

ஆறுதல் தர அன்னதான மடங்களும்
ஆலமர நிழலும் போதாதோ
நீறுதனைப் பூசி நிம்மதி பெறவே
சொன்ன இடம் செல்வச் சந்நிதியுமே! . . .

பூவரச மரத்தடியினிலே உனைப்
பூவாக மாற்றி அர்ப்பணித்தே
காயான மனத்தைக் கனியாக்கவே
நீ கவியாகி அவன் புகழ் பாடிடவே
கனிந்த இதயத்தில் கருணை மழை பொழிய
கந்தனுமே அங்கு வந்திடுவான்

கானத்திலும் அன்னதானத்திலும் அவன்
காவடி ஆட்டத்தைக் கண்டிடலாம்
ஆற்றருகே அந்த ஆட்டத்தைக் கண்டால்
ஆடாத மனமெல்லாம் ஆடிடுமே
ஆடிமுடிந்ததும் தேட முயன்றால்
ஆறுமுகனை அங்கு கண்டிடலாம்! . . .

*****************

**தொண்டைமானாற்றம் கரையில் தோன்றிய முருகன் ஆலயமே-அங்கே**
இந்து சமயத்தின் ஓராறு கிளைகளும் நித்தம் மலர்ந்திடுமே
தந்தையை வணங்கி மூலஸ்தானத்தில் லிங்கோற்பவ நிலையோ
அன்னையும் இருக்க தேவயானையும் கூடவே நின்றாளே
வேலாய் வீதி வந்தவா--வேற்
படையாய் மூலம் அமர்ந்தவா

மூலத்தில் லிங்கோற்பவத்தைக் கண்ட நந்தி தேவருமே
பலிபீடத்தருகே பக்குவமாகவே அமர்ந்திட வந்தாரே
மூலத்தில் அன்னையின் ஆட்சியைக்கண்ட வைரவசுவாமியுமே
வீதி ஓரத்தில் விரும்பியே கோயில் கொண்டுமே நின்றாரே
வள்ளியின் கோவிலில் மாமன் நாரணன் நாகபடமாக
சிவனோடிணைந்து சிவநாகதம்பிரானாய் காட்சியும் தருவாரே
சிவனோடு நாராயணம்--இணைந்தால்
ஐயப்பனும் அருள்வான் அங்கே

சைவமும் வைணவ இணைப்பால் மாமியார் லக்சுமித்தாயுமே
மருகனின் கோவிலில் சங்கநிதி எல்லாம் அடியர்க்கு தருவாளே
அண்ணனை வணங்கி அடியர்க்கு அருளை வாரி வழங்கிடவே
தொப்பைக்கு முன்னால் தெப்பக்குளத்தை தோற்றியும்
மகிழ்ந்தானே
கணபதியே கனிந்தருள்வாயே--கர்ம
வினை தன்னை களைந்தருள்வாயே

திருவேற்கரணித் தெப்பக்குளத்தின் தீர்த்தத்தை யெல்லாமே
பூவரச தல விருக்சத்தில்  ஊற்ற  பூவாக மாற்றுவாயே
பூவாக நான் மாறியே--வேலா நின்
பாதாரம் தொழ வருவேனே

ஊற்றிய தீர்த்தம் சேர்ந்திடுமே நவக்கிரகங்கள் அனைத்துக்குமே
சூரியன் மகிழ்ந்து சூட்டினைத் தணிக்க நோய்கள் அகன்றிடுமே
அன்னமலைகளும் சொர்ணமலைகளும் படைத்திடும் வேலழகா
பாதம் பணிந்து நான் பாமாலை படைப்பேன் ஏறி விளையாட வா
கருவாகா உருவானவா--வேலா
குருவாகும் திருவே  துணை
*******************

**தொண்டைமாற்றருகே எங்கள் செல்வச்சந்நிதி**
தொண்டரைக் காக்க வந்த கந்தனின் சந்நிதி
அன்னமலை அருகமர்ந்த ஆண்டவன் சந்நிதி
அடியரைக் காக்கும் எங்கள் செல்வத்தின் சந்நிதி
சந்நிதி  செல்வச்சந்நிதி
சந்நிதி செல்வச்சந்நிதி
வேற்படை அருகிலே தெய்வயானை சந்நிதி
முன்னிற்கும் மூத்தவன் விநாயகன் சந்நிதி
வள்ளிக்குறத்தி முன்னே ஹரிஹரன் சந்நிதி
அனைத்தையும் அள்ளித்தரும் ஆறுமுகன் சந்நிதி

பூவரச மர நிழலில் குமரனின் சந்நிதி
புண்ணியனார் சமாதிமேலே சுவாமிநாதன் சந்நிதி
பாடுவோர் நெஞ்சங்களில் குகனார் சந்நிதி
தொண்டரைக் காக்க தொண்டை மானாற்றில் சந்நிதி

************************

**நல்லவையே நினைத்தாலும் நன்றிக்கடன் கழித்தாலும்**
சொல்லொணா துயர் கொடுத்தே சோதிப்பதேனய்யா!

இருப்பதை எடுப்பதை என் மனம் நாடல்லையே
கொடுப்பதை எடுத்தாலும் என் வினை என்று கொள்வேன்
நடப்பதை நினைக்கையிலே நான் படும் வேதனையை
உன்னுடன் பகிர்ந்தாலே என் மனம் ஆறுமன்றோ . . .

இப்பிறப்பில் மட்டுமே அத்தனையும் தந்தென்னை
நல்லவனாய் மாற்றுதற்கோர் நாடகத்தை ஆடுகின்றாய்
நீ ஆடும் ஆட்டத்தில் எந்தனையோ ஆட வைத்தாய்
என்னுடல் தாங்கிடுமோ ஏன் இந்த விளையாட்டு?

மனம் சோர்ந்து உடல் வாடி உன்னையும் மறவாமல்
நின்றதனால் காக்கின்றாயோ! - கடமைகள் முடியும்வரை
பழமாகி நின்ற நீயே ஆண்டிக் கோலம் கொள்வதென்றால்
பசியோடு நின்றவர்கள் பாதி வழி வருவோமோ
உடலையும் காத்துப்பின் ஊன் உருக்க வழி செய்து
பாதாரம் வந்தடைய பாபிக்கு அருளய்யா! . . .

கள்ள வழி மார்க்கத்தால் மெள்ளமாக நான் உயர்ந்தால்
உள்ள உன் அருள் கூட என்னை விட்டுப் பறந்திடுமே
உள்ளதே போதுமென்று உள்ளன்போடு உனைத்துதித்தேன்
எந்தன் குறை தீர்ப்பது உந்தன் கடன் தானய்யா!

**********

**நான் மறைந்து தானாக வேண்டுமையா**
மான் வள்ளி நாயகா நீ தான் வழி கூறையா . . .

பிரணவத்தின் பொருள் கூறா பிரமனைச் சிறை வைத்தாய்
என்னையே உணரவைக்க சிறை வைத்தாய் சரவணத்தில்
தன்னையே அறியாமல் தற்குறியாய் வாழாமல்
உன் சிறை வாழ்ந்தாலே என் குறை தீருமன்றோ . . .

அறிந்தவர் கூறுவது அறிவுக்கு எட்டவில்லை
தெரிந்தவர் சொல்வதெல்லாம் தெருக்கூத்தாய் தெரிகிறது
உணர்ந்தவர் உரைப்பதெல்லாம் உண்மையாக இருந்தாலும்
உன் அருள் ஒன்றேதான் ஓங்கார நுளைவாசல் . . .

செல்வத்தின் சந்நிதியில் சத்தத்தால் வணங்கி நின்றேன்
ஸ்ரீசெல்வச் சந்நிதியில் சித்தத்தை அடக்கு என்றாய்
பூவரச மரத்தடியில் புண்ணியரை தியானித்தால்
சப்தங்கள் அடங்கிய பின் சித்தம் தெளிவிப்பாயோ?
*****************

**நீலமயில் வாகனனே எங்கள் நெஞ்சம் நிறை** வேலழகா
கொஞ்சிக் கொஞ்சிப் பாடிடுவேன் அருளைக்
கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டிடுவேன் (நீலமயில்)

கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டுவிட்டால் நீ மிஞ்ச மிஞ்சத் தந்தருள்வாய்
சந்நிதிக்கு வந்ததினால் எந்தன் சந்தேகம் மறைந்ததப்பா
(நீலமயில்)

அஞ்சி அஞ்சி அலறிவரும் அடியவர்கள் கெஞ்சிக் கெஞ்சி
உனைவேண்ட
நெஞ்சமதில் நீ நிறைந்தால் பஞ்சம் அங்கே பறந்திடாதோ
(நீலமயில்)
நினைத்தாலே மோட்சம் தரும் அந்த அண்ணாமலைக் கிணையாக
அன்னமலை அமைத்து வேலன் இங்கே ஆறவந்தான் அறியாயோ
(நீலமயில்)

அண்ணனையும் அருகிருத்தி வேலன் இங்கே ஆடுகின்ற ஆட்டமெல்லாம்
பசிப்பிணிதனைப் போக்கி அடியருக்கு ஞானத்தையும் அள்ளித்தரவே

(நீலமயில்)

விக்கினங்கள் தனைப் போக்கி விளைகின்ற கர்மவினைதனை நீக்கி
மௌனப் பூசைதனை ஏற்று உன்னையும் சும்மா இரு என்றே சொல்வானே

(நீலமயில்)

யாமிருக்க ஏதுபயம் என்று உந்தன் பக்திக்கோர் பரிசளித்து
சும்மா இரு என்று சொன்னான் அந்தச் சுகத்திற்கோர் எல்லையுண்டோ

(நீலமயில்)

வரமுன்னே குறை தீர்க்கும் வள்ளல் நீயன்றோ வேலழகா
வந்தவர்க்கு வாரி வழங்கும் உனை வாயார வாழ்த்திடுவேன்

(நீலமயில்)

வாயார வாழ்த்துதற்கே எனக்கு சொல்லெடுத்துத் தந்தவனே
நெஞ்சாரப் போற்றிடுவேன் வந்தவர்க்கு நிம்மதியைத் தந்தருள்வாயே

(நீலமயில்)

ஆற்றங்கரை ஓரத்திலே என் அன்பான வேலழகா-நீ
அலையா மனம் தந்தாய் உனக்கு அனந்த கோடி நமஸ்காரம்

(நீலமயில்)

***************

**நீ ஆறானால் நான் தொண்டைமானாற்றம் கரையாவேன்**
பூவரசானால் நான் நிலமாவேனே வேல் அழகா
நீ அமுதானால் நான் ஆலமரத்து இலையாவேன்
நீ வேலானால் நான் சந்நிதியில் திருநீறாவேன் . . .

கரையாகி நான் அங்கே என்றும் காத்திருந்தால்
நீ அலையாகி என்னை அடிக்கடி வந்து அணைப்பாயே
பின் சிலையாகி அங்கு நீயுமே நின்று சிரித்தாலோ
நான் மடங்களில் தோன்றும் அன்னமலைகளாய் மாறிடுவேன்

நானாகாமல் தானாகி உன் நினைவொன்றால்
அது ஏனாகி என் சிந்தையில் தெளிவைத் தர முன்னே
நானாகி நிற்கும் ஆணவத்தையுமே நாணவைத்து
நீயாகி என் நெஞ்சத்தில் நிம்மதி தருவாயே

பூவரசத்து இலையாகி எனைக் காத்து நின்றால் - நான்
பாவரசாகிப் பூவரச மர நிழலினிலே
பாமலரைத் தினம் தினம் பாடிப்பாடி நின்றிடுவேன் - அது
பூவரசாய் உன் பொன்னடிக்குத் தினம் வந்திடுமே
************

**நீ தான் அன்பு நீ தான் அறிவு**
நீ தான் ஞானத் தெளிவு

வா என்று சொன்னேன் வந்தாய் என் உள்ளே
தா என்று கேட்டேன் தந்தாய் உன் அருளை
சஞ்சலம் தீர்க்க சந்நிதி நின்றாய்
சந்தேகம் தீரும் வழி சொன்னால் போதும் . . .

நாதாந்த முடிவே நாயகனாய் வருவாயே
வேதாந்த விளைவே முத்தெல்லாம் தருவாயே
தொண்டைமானாற்றருகே தொழுவோரின் வினை தீர்த்து
ஏகாந்த எழிலே என்னையுமே காட்டிடுவாய் . . .

உன்னையே நினைப்போரின் மனைநாடி வருவாயே
உன் வாசல் வருவோரின் உள்ளத்தில் உறைவாயே
உறைந்தோரின் நெஞ்சத்தில் நிம்மதியும் தான் வருமே
கடைந்த பின் கந்தன் அருள் கடல் மடையாய்ப் பாய்ந்திடுமே
*************

**பழம் தந்த போட்டியினால் பதிவிட்டவா** - ஞானப்
பழம் நீயாகி இன்ப நிதியானவா . . . .
நாவசைக்க வருவதெல்லாம் உன் புகழே
நானிசைக்க மாறிவிடும் திருப்புகழாய் . . .
நாளடைவில் திருப்புகழாம் வேலன் அருளால் . . . .

அறம் பொருள் இன்பம் வீடு அத்தனையும்
அமரரும் அடியவரும் வேண்டிப் பெறவே
ஆறு படை வீடெல்லாம் ஆடிய பின்
ஆற வந்தாய் தொண்டைமான் ஆற்றருகே . . .

செந்தூரனாகி அங்கே படைத்தளம் அமைத்த பின்னே
சந்நிதியானாகி இங்கே சந்திகால வந்தனமோ
சிவபூசையும் செய்து அபயகரமும் காட்டி
வேலைத் தொழவேண்டி வேற்படை ஆனவனே!

வேலை இங்கு விட்டு படையையும் அங்கனுப்பி
ஏமகூடத்தில் துஷ்ட நிக்கிரகம் செய்து
சூரபத்ம அசுரனை சேவலும் மயிலுமாக்கி
சத்ரு சம்ஹாரனாய் சந்நிதியில் அமர்ந்தவனே!

தன்னை உணர வந்த கந்தர்வனுக் கருள் செய்ய
அன்னவன் சமாதிநிலை அங்கோர் பூவரசம்
சமாதிக் கோவிலாய் சந்நிதி அமைவதினால்
சங்கடம் தீருதிங்கே சாயுச்யம் கிட்டுதிங்கே!

சிவாயநம வொன்றால் அபாயம் அகன்றாலும்
சடாக்ஷரம் ஒன்றாலே அத்தனையும் அள்ளித்தர
எழுகோடி மந்திரத்தால் எட்டாத இன்பநிலையை
அன்னமலை அருகினிலே அடியவர் பெறுகின்றார்!
**********

**பழனி மலை மீதிலே  பழம் ஆகினாய்**
சுவாமி மலை மீதிலே தகப்பன் சுவாமி ஆகினாய்
செந்தூரில்  சேனாபதி சிவனாரின் செந்தணலாகினாய்
ஸ்ரீசெல்வச் சந்நிதியில் பெற்றவரை வணங்கி சக்தி வேலாகினாய்
தேவரைக்காக்கும் பாற்கடலாகினாய்-- அபய கரம் தந்தாய்
தீயவை ஒழிய மோட்ச நிலை கண்டு தெய்வயானை கொண்டாய்
கதிரமலைக் காட்டினிலே அன்பு மயமாகி வள்ளியோடு வந்தாய்
ஆடினாய் ஆறுபடை வீடெல்லாம் , ஏறாத மலையுமில்லை
கதிர்காம இச்சைகொண்டு ஏழு திரைக்குள் ஏகாந்த நிலைக்கு முன்
ஆற என்று ஆற்றங்கரை தேடினாய் ,லிங்கோற்பவத்தோடு
வல்லியாற்றம் கரையிலே வல்லை வெளி விழிம்பிலே
கதிர்காமர் பெற்ற வேலானாய் , வேற்படையானாய் !
ஸ்ரீ செல்வச்சந்நிதியில் கந்தன் கருணை ஆறாகப் பாயவென்றோ !
ஆறுதலும் ஆனந்தமும் இணைபிரியா என்றென்றும் அடியரோடு
நிலைத் தோங்க எழுந்தருளும் சர்வேஸ்வரா சந்நிதி வேலா !
கல்லோடைக் கரை அமைந்த நின் பாதார விந்தங்கள்
காலங்கள் உள்ளவரை நின் தொழுகோடி அடியரைக்காக்கட்டும் !
தில்லையின் கூத்தனாய் ஸ்ரீ ரங்கம் பள்ளி கொள்ளும்
பரந்தாமனாய்
உறங்கும் மனத்தோடு இயங்கும் இளையவனே !
மயங்கும் மனங்களாகும் மாயாஜாலச் சூரனை வதைக்க
வேற்படையான வேலழகா ! சந்நிதி வேலே நின் தாள் சரண் !

************

**பழநி ஆண்டவா பழம் நீ ஆண்டவா**

பழமுதிர்ச் சோலையின் பன்னிருகை ஆண்டவா
சுவாமிமலை தன்னிலே சுப்ரமண்ய ஆண்டவா
சூரசம்ஹாரம் செய்த செந்தில் வேல் ஆண்டவா
பரம் குன்றம் தன்னிலே தெய்வயானை ஆண்டவா
வினை வேட்கை தணிவிப்பாயே தணிகையின் ஆண்டவா
வேலாக நின்றாய் செல்வச் சந்நிதியில் ஆண்டவா
கதிர் ஒளி ஆனாயோ கதிர்காம ஆண்டவா
அன்பே உருவானவளாம் அன்னை வள்ளி ஆண்டவா
என்னையும் ஏற்பாயோ எந்தையே ஆண்டவா
தாயும் நீ தந்தையும் நீ குருவும் நீ ஆண்டவா
தயைபுரியத் தாமதமேன் கலியுகத்து ஆண்டவா

ஏறுமயில் ஏறிவிளை ஆட வந்த ஆண்டவா
ஈசனுடன் ஞானமொழி பேச வந்த ஆண்டவா

கூறுமடியார்கள் வினை தீர்க்க வந்த ஆண்டவா
குன்றுருக வேல் வாங்கி நின்ற சந்நிதி ஆண்டவா

மாறுபடு சூரரை கூறு செய்த ஆண்டவா
வள்ளியை மணம் புரிய வந்த எங்கள் ஆண்டவா

ஆறுமுகம் ஆனபொருள் கூறிவிட்டால் ஆண்டவா
வேறுபட்ட என் மனது வேலாக மாறாதோ

************

**பக்திக்கோர் பரிசாக முக்தி தருவாயே**
சக்தி உமை பாலகனே சந்நிதி வேலவனே . . .

தேவர் குறை தீர்க்க என்று முக்கண்ணில் உதித்தவனே
தேவர் இங்கு பூசை செய்ய தீரும் குறை என்று சொன்னாய்
அருள் நதி வழிந்தோட சிகண்டியும் இங்கு வந்தான்
பூசையின் சிறப்பறிய பொன்னுலக வாழ்வு பெற . . .

முருகநாகர் பெயரிலே முனிவனும் சிறப்பறிந்தான்
முருகனை வேண்டி நிற்க மோன நிலை அடைந்தான்
அன்னவன் சமாதியிலே பூவரசைத் தோற்றுவித்து
ஜீவ ஒளியூட்டித் திருத்தலமாக்கி வைத்தாய் . . .

எங்கிருந்தோ வந்தாய் இடைச்சாதி நான் என்றாய்
கதிர்காமர் கரைசேர இக்கரைக்கு அழைத்து நின்றாய்
மாயங்கள் பல செய்து விதியையே மாற்றிய பின்
ஆசையோடு நீ அழைக்க அன்னவனும் பூசை செய்தான் . . .

எவர் எதைக் கேட்டாலும் அள்ளிக் கொடுப்பதற்கோ
வேலையும் இங்கு விட்டு கதிரமலை சென்றாய்
வேலைத் தொழுவதன்றி வேறென்ன வேலை ஐயா
செல்வச் சந்நிதி வாழ் வேலவா சரணம் ஐயா . . .

*************

**பச்சைமயில் வாகனனே மாம்பழ சர்ச்சையெல்லாம்** தீர்ந்தபின்னே
நீ இச்சை கொண்டு நின்ற இடம்தான் எங்கள் வல்லியாற்றம் கரை ஓரமே

(பச்சைமயில்)

இச்சை கொண்ட இடம் ஆதலால்
வேலா உனைக் கொச்சை மொழியால் பாடுவேன்
என் சர்ச்சையெல்லாம் மறைந்ததப்பா
இங்கு சாந்தம் நிறைந்ததப்பா..... (பச்சைமயில்)

நெஞ்சமதில் கோவில் அமைத்தேன்-அங்கு
உள்ளமதில் உன்னை வைத்தேன்
உன்னை அங்கு வைத்ததினால் வேலா எந்தன்
கள்ளம் எல்லம் கரைந்ததப்பா... (பச்சைமயில்)

தூது செல்ல வந்த நேரம் - இங்கே
சந்திகாலப் பூசை நேரமே
வீரபாகு பூசை செய்தார்-பின்னே
ஏம கூடம் ஏகிச் சென்றாரே.. (பச்சைமயில்)

வாது செய்ய வந்த வேலன்-இங்கே
தந்தையாரை வணங்கிவிட்டு
அபயகரம் காட்டி நின்றானே-அசுரரை
அழிப்பேன் என்று உறுதி மொழிந்தானே. (பச்சைமயில்)

அபயகரம் காட்டியதால் இந்த இடம்
ஸ்ரீ செல்வச் சந்நிதி என்றாய்
தேவரும் மனிதரும் இங்கே தினம் தினம்
வேண்டுவன பெறுகின்றார்... (பச்சைமயில்)

வல்லியாறு பெயர்மாறி இன்று
தொண்டைமான் ஆறானதோ-இங்கே
தொழு கோடி அடியவரின் வினைகள்
ஆற்றோடு கலக்குதய்யா.. (பச்சைமயில்)

ஆற்றங்கரை ஓரத்திலே ஆதி அந்தமில்லா அறுமுகவா-நீ
அலையா மனம் தரவே உன்னை வாயார வாழ்த்திடவே-நீ என்
நெஞ்சகத்துள் நிறைந்தருள்வாய்... (பச்சைமயில்)

*****************

**பார்க்க என்று வந்த பாருலக மாயையில்**
தேர் ஒன்று கேட்டேன் பார் என்று தந்தாய்
யார் செய்த மாயமோ அசுரரால் அழிந்ததோ-மீண்டும்
தேர் என்று கேட்பேன் கொடுப்பதுன் கடனே!

ஆசைகளை அறுத்திடென்று ஆன்றோர் சொன்னாலும்
ஆசைகளைப் பூர்த்தி செய்ய ஆறுமுகன் உண்டென்று
சந்நிதிக்கு வந்தவர்க்கு சங்கதி எல்லாம் தெரியும்
எனவே தான் கேட்கின்றேன் என் ஆசை உன் தேரே!

கட்டுத் தேரிலே நீ கனகாலம் வந்த போதும்
சித்திரத் தேரேறியதை சில காலம் கண்டதினால்
கண் கொள்ளாக் காட்சி எல்லாம் கண்ணுக்குள் இருப்பதினால்
கட்டுத்தேர் சரிந்ததுமே கவலை கண்ணில் நீரானதே!

சித்திரத்தேர் ஒன்று சீக்கிரமே கட்டிடுவேன்
சித்தம் இரங்கி நீ சரி என்று சொன்னாலே
பத்திரமாய் நீ தந்த பாநூறை மரமாக்கி
சித்திரமாய் நீ தந்த சிந்தனையை இரும்பாக்கி!

அறம் பாடவே மரங்களெல்லாம் துண்டாகும்
கவிதைக் கனலால் இரும்பதனை உருக்கிடுவேன்
இரும்பாலே அச்செல்லாம் திறம்படத்தான் அமைத்துமே
மரத்தாலே சித்திரத்தேர் மனத்திலே வளர்ந்ததே!

சிந்தனையை சித்திரங்களாக செவ்வனே செதுக்கி
வந்தனையை வடிவங்களாக்கி வரலாறுதனைக் காட்ட
எந்தனையே ஏழாவது படிச் சிம்மாசனம் ஆக்க
உந்தனையே வந்தமர்க என்று கேட்டால் வாராயோ!

************

**பாவாரம் தந்துந்தன் பாதாரம் நான் காண**
பாதை வழிதன்னைப் பாவி நான் கண்டுணர
பாசத்தால் நீ தந்த அருள் விளக்கின் ஒளியதனால்
இருளான பாதையெல்லாம் பகலாகத் தோணுதய்யா

அணையாத அகல் விளக்கின் தீபத்தின் ஒளிதன்னில்
தொலையாத பாதை முடிவில் சந்நிதியை நான் காண
நான் காண என்றதை நீ காட்ட விரும்பியே
அணையாத ஒளி தந்தாய் அலையாமல் வழி கண்டேன்

விழி தந்தாய் ஒளி தந்தாய் வினையகலத் துணை நின்றாய்
கண்மூடி முழிக்கையிலே சந்நிதியில் நான் நின்றேன்
வந்தவனை அணைத்திடவே வழிமேலே விழிவைத்து
கதவில்லா வாசலிலே கன நேரம் காத்திருந்தாய்

எனைக்காக்க வந்தவனை காக்க வைத்த பாவிதனை
கண்ணீரால் நனைப்பதற்கோ கருணைவெள்ளக்கடலானாய்
ஆறி அமர வந்த ஆற்றங்கரை யருகே
ஆறாடும் கடலாடும் நிழலாடும் பூவரசம்

அருகோரம் அமர்ந்திருந்து அசையாத நினைவொன்றால்
இலையெல்லாம் சருகாக இன்பநிலை தான் கூட
மன ஆட்டம் அடங்கவரும் நினைவோட்ட ஒடுக்கத்தில்
வேலவனின் பொன்னடியை வேண்டும்வரை கண்டிடலாம்

நீ எந்தன் தந்தை நான் உந்தன் சேயே
பேயாகி அலைந்தேன் இனிப் பேரின்ப வீடருள்வாய்

நீ அந்த இடையன் நான் ஆட்டுமந்தை
அலைச்சலைப்போக்கி ஞான உழைச்சலை மீட்டு
ஊனக் கண் போதாது ஞானக்கண் தந்தருள்வாய்
கண்ணார நான் கண்டு காலடியில் தான் உறங்க *****

**பாடும் அடியவர் தேடி வருகையில்**
பாதி வழி வரும் பரமேசா
தேடும் அடியவர் கூடி வருகையில்
நாடி நலம் தரும் குக நேசா
காடும் கனதூரம் காலம் வெகு நேரம்
காலை வழிபட வருவோர்க்கு
வீடும் விளைபொருளும் மாலை வருமுன்னே
வீதி வழியோரம் தருவாயே

ஆறுபடை விட்டு ஆற்றங்கரை தேடி
ஆறி அமர வந்த அறுமுகவா - நீ
ஆடி அமாவாசை கதிரமலை தேடி
ஏறிமயிலேறிச் சென்றவா - பின்
தீர்த்தம் ஆடியதும் தொண்டைமானாற்றம்
கரையைத் தேடியே வந்தவா
எங்கு சென்றாலும் எண்ணம் மலையாக
அன்னமலையாகி அருள் தருமே
அன்னமலையிங்கே ஆலமிலைமீது
அமுதம் ஆகி அருள் தரவேண்டும்
வரவேண்டும் வரவேண்டும் வரவேண்டும் வடிவேலா
தரவேண்டும் தரவேண்டும் தரவேண்டும் நினதருளே
ஏழையடியோமை சூழும் வினை மாள!
அகிலம் முழுதாள வரவேண்டும்

*************

**பிஞ்சுப் பிஞ்சுக் கையும்**
என் சந்நிதி ஐயன் வேலும்
கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டால்
அள்ளி அள்ளித் தருவான்

அள்ளி அள்ளித் தருவான் - அது
அமுதோ அறிவோ அறியேன்

ஆடி அடங்கிய பின்னே - அவன்
ஆலய முன்றலில் நின்றால்
அள்ளி அள்ளித் தருவான்
அன்னதானக் கந்தனின் அமுதை

உடற்பசி ஆறிய பின்னே - அவன்
ஆலயம் தேடிச் சென்றால்
அள்ளி அள்ளித் தருவான் அந்த
வேலழகன் ஞான அறிவை

கந்தா கடம்பா என்று
கதறியே வரும் அடியாரின்
கவலைகள் தீருது இங்கே
எரிந்த பின் கற்பூரம் எங்கே

கற்பூரச் சட்டியின் ஒளியில்
காவடி ஆட்டத்தின் அழகை
கண்ட பின் அதுதான் கந்தன்
அழகென்பதை அறியாயோ

*************

**பூக்கும் மலர்கள் தாமரையாகும்**
தோற்றும் கரங்கள் பன்னிரண்டாகும்
நோக்கும் விழிகள் அடியரைக் காக்க
காக்கும் கணநாயக வாரணமே

அபயம் தேடும் தேவர்க் கருள
சமயம் வரவே சிவனார் நுதலில்
உதயம் குமரன் ஆறு பொறிகளாய்
உதித்தான் சரவணப் பொய்கை தனிலே

ஆறு தாமரை மலர்களில் குழந்தைகள்
ஆராட்ட அங்கே கார்த்திகைப் பெண்கள்
வந்தாள் அன்னை சிவனாருடனே
கண்டதும் கட்டி அணைத்து நின்றாளே

நாதா ஜெய ஓம் சந்நிதி வேலா
தேவா ஜெய ஓம் சத்ரு சங்காரா
பாலா ஜெய ஓம் பன்னிரு கரத்தோய்
ஐயா ஜெய ஓம் ஐங்கர சோதரா

அணைத்ததும் இணைந்தன ஆறுகுழந்தைகளும்
இணைத்ததும் ஓர் உடல் பெற்றுமே நிற்க
ஆறுமுகங்களும் திக்கெல்லாம் நோக்க
ஆனைமுகத்தோனும் அருளி நின்றானே( நாதா ஜெய)

வேலா வெற்றி வடிவேலா சரணம்
வேண்டும் வரம் தரும் பாலா சரணம்
தாண்டும் வழி காட்ட வா வா சரணம்
தயாநிதியே சரணம் சரணம்   (நாதா ஜெய )

தோகை விரித்ததோர் மயிலதுவாகி
வாகை சூட வந்த எம் எழிலே

ஓசையின்றி உள்ளே நாம் புக
ஆசையாய் அங்கே அமர்ந்ததைக் காண்பேன்(நாதா ஜெய)

****************

**பூசகரின் திருவடியைத் தொழுகின்றேன் -அதில்**
வேலன் இடும் திருநீற்றைப் பெறுகின்றேன்
ஆலமிலை அமுததனை உண்கின்றேன் - கர்ம
வினை தீர்ந்த பயனை நான் பெறுகின்றேன்

பூவரச மர நிழலில் பாடி நின்றேன் - அந்த
வேலவனும் பாலகனாய் ஆட வந்தான்
அந்த சுகம் உலகினிலே சொர்க்கமம்மா - அதை
மீண்டும் எமக்கு அளிக்கும் நாள் எப்போதையா

தொண்டைமானாற்றில் நீர் ஆடுகின்றேன் - திருச்
செந்தூரின் கடலலையைக் காண்கின்றேன்
வேற்கரணித் தீர்த்தக் குளத்தைப் பார்க்கின்றேன் - அங்கே
சரவணத்தின் பொய்கைதனை அறிகின்றேன்

அன்னமலைச் செல்வத்தையே நினைக்கின்றேன் - அங்கே
அடியர் பசி ஆறுவதைக் காண்கின்றேன்
அன்னம் படைத்த அடியர் மனை தேடுகின்றேன் - அங்கே
சொர்ணமலை குவிவதையே காண்கின்றேன்
************

**பூவரச மரத்தருகே பூசைக்கு வந்தவனே**
புண்ணியனே என் குருவே முருகையா
பூவாக என்னை நீ மாற்றி விட்டாலோ
பூசைக்கு நானே வருவேனே

வீரபாகு தேவர் இங்கு சந்திகாலப் பூசைசெய்ய
சந்நிதி தோன்றியதோர் விளையாடலோ

கதிர்காமரை நீ கலங்க வைத்த பின்னே
கவர்ந்தவிதம் ஓர் விளையாடலோ

பக்தரைக் காத்தபின்னே முக்தி தருவதற்கோ
ஸ்ரீ செல்வச் சந்நிதியைத் தோற்றுவித்தாய்
அக்கரையில் நின்றவரை இக்கரைக்கு அழைத்தபின்னே
ஆடல்கள் காட்டியதும் இத்தலத்திலோ

வேலைத் தொழுவதன்றி வேறென்ன வேலைவேண்டும்
வேதனைகள் தீர்ப்பவனே வேலைய்யா
மாலைப் பொழுதினிலே மந்தகாச வேளையிலுன்
பூசை கண்டால் பாபங்கள் தொலையாதோ

காலைப் பொழுதினிலே கந்தா உன் கோலம்
கண்டால் கவலைகள் தான் அழியாதோ
உச்சிக்காலப் பூசையில் நீ அருட்பிச்சை கொடுக்கும்
விதம் வார்த்தைகளிலே அடங்கிடுமோ

தொண்டைமானாற்றருகே ஆறவந்தாயோ
ஆடிமுடிந்த பின்னே அறுமுகனே
தொண்டரின் மனக்குறைகள் தொலைப்பதற்கோ
இங்கு வேலாக நின்றாயோ வடிவேலனே

கற்பூரச் சட்டிமேலுன் அழகு முகம் கண்டால்
கவலைகள் மறைந்திடுமே கதிர்வேலனே
காவடி ஆட்டத்தில் நின் அழகு நடை கண்டால்
மனச்சுமை மறையாதோ முருகேசனே

தேரில் உன் கோலம் காண தேவாதி தேவனே
ஆயிரம் கண்கள் வேண்டாமோ
தீர்த்தமாடும் காட்சி கண்டால் அடியரின் வினை
எல்லாம் தீர்ந்திடுமே தீர்த்தக் கரையினிலே ****

**மனமென்ற ஒன்றைத் தந்து**
என்னையே மறக்க வைத்தாய்
குணமென்ற ஒன்றை எந்தன்
குருதியிலே கலக்க வைத்தாய்
சினமென்ற தொன்றாலே
சிந்தையைக் கலக்கி நின்றாய்
சித்தத்தில் சிவத்தை யான்
காண்பது எப்போ ஐயா?

ஆழ்கடல் அமைதி என்றாய்
அதுவே தான் சிவம் என்றாய்
ஆக்கமே அலைகடல் என்றாய்
அதுவேதான் சக்தி என்றாய்
சோமாஸ்கந்தம் ஞானம் என்றாய்
அது ஜோதி வடிவான தென்றாய்
பார்த்து யான் வதியும் இடம்
புரியலையே வேல் அழகா!

மனம் அடங்க வேண்டுமென்றாய்
மதி மயங்கி நிற்கிறதே
குணம் கடந்த நிலையொன்று
குன்றேறியும் கிட்டவில்லை
ஆராரோ பாடி என்னை
அஞ்ஞானத் தொட்டிலிலே
ஆட்டியது போதுமையா
தூக்கிவிட மாட்டாயோ!

கர்மயோக மார்க்கத்தால்
கடமைதனை ஓரளவு
கடந்தாலும் கர்மவினை
களைக்க வைத்து கலக்குதையா
பக்தி யோக மார்க்கத்தால்

குருநாதன் துணையுடனே
பற்றி நின்ற அருளாலே
இரவு பகல் ஆனாலும்
அஞ்ஞானத் திரைமட்டும்
அகல இல்லையே!

ஞான யோக மார்க்கத்தால்
செவி மடித்து நின்றாலும்
கேட்டதை இரைமீட்டு
கேள்விகளைக் குறைத்தாலும்
அது எது என்பதை
அரை குறையாய் அறிந்தாலும்
உணரும் ஓர் மார்க்கத்தை
நீ உரைக்க மாட்டாயோ!

அவன் தாள் வணங்குதற்கும்
அவன் அருள் வேண்டுமென்பர்
அவன் அருள் இல்லாமல்
அகிலத்தில் இயக்கமில்லை
இசையின் அசைவுடன் - அவன்
திசையை நோக்குகிறேன்
வேலின் ஒளி வேண்டுகிறேன்
வேலா நீ தந்தருள்வாய்!
*************

**மலைதனைத் தேடும் மாயவன் விரும்பும் மருகா வேலப்பா**
மலையினில் வாழ்ந்தும் குகையினில் உறையும் கந்தா வேலப்பா

அமரர் குறைதீர அப்பன் கண்ணிலே பொறியுருவானாய்
வேலப்பா
சரவணப் பொய்கையில் ஆறு குழந்தையாய் உதித்தாய் வேலப்பா

அன்னை அணைத்ததால் ஓர் உடல் பெற்றாய் முருகா வேலப்பா
அடியவர் இதயக்குகையினில் வாழும் குகனே வேலப்பா

கொஞ்சம் என்னைத் திரும்பிப் பார்ப்பாய் அப்பா வேலப்பா
தஞ்சம் தந்தாய் என்றே கொள்வேன் ஷண்முகா வேலப்பா

தந்தைக்குபதேசம் செய்த சுவாமி நாதா வேலப்பா
எந்தனுக்கும் தருவாயே சந்நிதிநாதா வேலப்பா

****************

**மாமயில் வாகனனின் ஓங்காரச் சந்நிதானம்**
மாமணி ஓசை மனதை ஈர்த்திடும் சந்நிதானம் (மாமயில்)

எந்தவேளை வந்தாலும் குறைதீர்க்கும் சந்நிதானம்
கந்தவேளை நினைப்போர்க்கு கருணைகாட்டும் சந்நிதானம்
(மாமயில்)
தொண்டைமானாற்றருகே தோன்றிய சந்நிதானம்
தொண்டரின் குறைதீர்க்கும் ஸ்ரீ செல்வச் சந்நிதானம்
மாயையை மாய்க்க மாணிக்க பிள்ளையார் சந்நிதானம்
அறுபத்தி மூவருக்கு அமுதுபடைக்கும் சந்நிதானம்
(மாமயில்)
வேற்படைச் சந்நிதானம் விநாயகர் சந்நிதானம்
வள்ளிஅம்மன் சந்நிதானம் வைரவர் சந்நிதானம்
சங்கரனும் நாரணனும் இணைந்தவோர் சந்நிதானம்
புண்ணியனார் சமாதிமேலே பூவரசச் சந்நிதானம்
(மாமயில்)
தேவரின் குறைதீர அபய கரம் தந்த சந்நிதானம்
தேவரும் மனிதரும் தினம் பூஜிக்கும் சந்நிதானம்
மௌன அன்புப் பூசைமுறைகாட்டிடும் சந்நிதானம்
வாய்கட்டி மருதர் கதிர்காமர் வழிபட்ட சந்நிதானம்
(மாமயில்)

கதவில்லா வாசலோடு காத்து நிற்கும் சந்நிதானம்
கல்லோடைக் கரையில் கால் அடி தந்த சந்நிதானம்
எல்லையில்லா மாந்தரின் இன்னல்தீர்க்கும் சந்நிதானம்
கலியுகவரதன் கந்தனின் அன்னதான சந்நிதானம்
(மாமயில்)

மாமயில் வாகனனின் மயிலோசைச் சந்நிதானம்
மாமணி ஓசை மனதை ஈர்த்திடும் சந்நிதானம்
சந்நிதானம் வேற்படைச் சந்நிதானம்
சந்நிதானம் சந்நிதியான் சந்நிதானம்
(மாமயில்)

***********************

**முருகநாமம் உருகிக் கூறின் கருகும் வினையெல்லாம்**-அங்கு
பெருகும் அமைதியில் வேலும் தோன்றுமே! சந்நிதி அருளும்
புரியுமே

வேலவன் புகழ் பாடுவதன்றி வேறென்ன வேண்டுமோ-அந்த
வேலைத்தானே தொழுவதன்றி வேறென்ன வேலையோ
வேல் முருகா...வா! வேல்முருகா.. வா! வடிவேலழகா வா...

கந்த புராண காலத்தே இருந்தே காவலனாகவே-வேலன்
கல்லோடைக் கரையிலே காலடி வைத்துமே காத்து நிற்கின்றான்
(வேல்முருகா..)

தொண்டைமானாற்றம் கரையினில் தோன்றிய சந்நிதி எம் நிதியே
தொண்டரைக் காத்திட கதவில்லா வாசலில் வேலவன் நிற்பானே!
(வேல்முருகா..)

பூவரச மரத்தடியினிலே வேலன் புகழ் பாடி நின்றுவிட்டால்
ஆலமிலையிலே அமுதெல்லாம் தந்துன்னை ஆதரிக்க வருவான்
(வேல்முருகா..)

ஆறெழுத்து மந்திரத்தில் அர்த்தம் புரியுதோ-இனி
வேறெழுத்து வேண்டுமோ உன் வேதனைப் போக்க
(வேல்முருகா..)

ஆழ்கடலில் அமைதிதர ஓர் முருக நாமமே-இந்த
நீழ் உடலில் பெருக வேண்டுமே முருக தியானமே
(வேல்முருகா..)

அன்னையாகி தந்தையாகி ஞான குருவுமாய்-எந்தன்
இதயக்கோவில் தன்னில் உறையும் அன்பு தெய்வமே
(வேல்முருகா..)

வேல்முருகா..மால் மருகா...தாள் பணிந்தோமே
வேல்முருகா..மால் மருகா...தாள் பணிந்தோமே

**************

**முருகா சரணம் முத்துக்குமரா சரணம்**
கந்தா சரணம் கதிர்வேலா சரணம்

தச்சகொல்லை நாயகனின் தாள் பணிந்தோமே - அன்னை
சக்தி வீரமாகாளியை வேண்டி வந்தோமே
கூறுமடியார் வினைகள் தீர்த்த வேலவா
ஆற்றங்கரை ஓரத்திலே அமைதியைத் தாராய்
முருகா . . .முருகா . . . முருகா . . .

வேண்டுமடியார்களெல்லாம் தாண்ட ஓர் வழி
வேண்டுமட்டும் தருவேன் என்று விரும்பியே சொன்னாய்
தானத்திலும் கானத்திலும் மகிழ்ந்தது போதும்
ஞானத்தையும் தந்தருள வேலவா ஓடி வா . . .

தொண்டைமான் ஆற்றருகே தொண்டர் கூடுகின்றார்
தொலையா வினை தீர்க்கும் உந்தன் நீறணிகின்றார்

கற்பூர ஒளியில் கந்தன் கருணை தோன்றவே
சொற்பூவால் தோத்திரங்கள் பாடி மகிழ்கின்றார் ******

**மூலத்தில் முதல்வனை வைத்தான்** - வணங்கி
ஞாலத்தின் தலைவனாய் நின்றான்
நந்தியை வாசலில் வைத்தான் - அவன்
நாதத்தில் அரிதுயில் கொண்டான்! . . .

வள்ளியின் வாசலின் முன்னே - சந்நிதியில்
பூவரச மரத்தடியின் அருகே
புண்ணியனார் சமாதியின் மேலே
சிவனார் அமைதி கொண்டாரே! . . .

வள்ளியைக் காண வருவானே - அங்கே
நாகபடம் தனைக் கண்டு களிப்பான்
தன்னைப் போல் வள்ளியும் தந்தையை
வணங்குவதை எண்ணி மனம் குளிருமே! . . .

நாகபடம் சிவனோடு இணையுமே
அங்கே சிவநாகதம்பிரான் உதயமே
இருவரையும் அபிஷேகித்து மகிழ
தன் அன்பரை வேலவன் அழைக்கின்றான்! . . .

அவர் எடுக்க இவர் அபிஷேகம்
வள்ளி மாவிளக்கு ஏற்றி ஆராதனை
ஸ்ரீ செல்வச் சந்நிதியின் அபிஷேகம்
தேனாறும் பாலாறும் பாயும்! . . .

பார் காக்க வந்த பரந்தாமனும்
பள்ளி கொண்டருள வந்த சிவனாரும்
சேர்ந்தே அனுபவிக்கும் அபிஷேகம்
ஞால அமைதிக்கோர் அருமருந்தே! . . .

பூவரசாகி ஆதிசேஷன் நிழல் கொடுக்க - நவக்
கிரகங்கள் அருகிருந்து சாமரை வீச
சரவணப்பொய்கையுமே திருவேற்கரணியாக
சந்நிதியின் அபிஷேகம் சஞ்சலம் தீர்க்குமே! . . .

**************

**மூலவனும் வேலவனே எழுந்தருளும் வேலவனே**
ஆனமட்டும் தொழுதழுது பாருங்கள் - அவன்
ஆலமிலை அமுதுண்டு தேறுங்கள்
ஐயன் திரு நீறணிந்து அன்னமலை அமுதுண்டு
ஆனந்த நிலை காண வாருங்கள் - சந்நிதியில்
ஆறுதலும் தந்திடுவான் தேறுங்கள் . . .

பூவரச மரத்தடியில் பூவாக உனை மாற்றி
புண்ணியனின் பாதத்திலே சாற்றுங்கள் - அப்போ
புது வாழ்வு தான் வருமே பாருங்கள் - இனி
புவி ஆள அடி எடுத்துப் புறப்படுங்கள் . . .

வேற்கரணித் தீர்த்தமதில் வேண்டுமட்டும் தான் குளித்து
வேதனையை ஆனமட்டும் தீருங்கள் - பின்னே
வேலவனின் வாசலுக்கு வாருங்கள் - அவன்
வேண்டுமட்டும் தருவதெல்லாம் கொள்ளுங்கள்

புத்தம் புது பா சமைத்து சின்னஞ் சிறு வேலவனை
மனதாரப் பாடியுமே நில்லுங்கள் - அப்போ
தாய் தேடும் கன்றினைப் போல் தானாக உன் பின்னால்
வேலவனே வந்திடுவான் பாருங்கள் - உன்னைத்
தானாக்கித் தந்திடுவான் தேறுங்கள்

சந்நிதியை நினைத்தவர்க்கு சந்நிதியான் தண்கருணை
வேகவைக்கும் வினையை எல்லாம் பாருங்கள்
பாதி வழி வரமுன்னே வீடுவரை அவன் கருணை

ஜோதியாய்ச் சூழ்ந்திடுமே பாருங்கள்
வீதி வரை வந்துவிட்டால் மீதி ஏதும் இல்லாமல்
சோதியாய் மாற்றிடுவான் நில்லுங்கள் - கற்பூர
ஜோதியிலே அவனாக மாறுங்கள் . . .

*****************

**வள்ளியம்மா எங்கள் குலதேவியம்மா**
அன்புமயமாக வேல் அழகனோடு இணைந்தவளே
வள்ளியம்மா எங்கள் குலதேவியம்மா

மாவிளக்கு ஏற்றட்டும் மனமாயை ஓடட்டும்
மணங்கள் இங்கே கூடட்டும் மக்கள் குறை தீரட்டும்

மாங்கல்ய பாக்கியம் உன் வாசல் அருகே - அம்மா
தாம்பத்யம் தலைசிறக்க தயை புரிவாய்
இல்லறங்கள் இன்பமாய் அன்பு நிலையில்
நல்லறங்கள் தான் மலிய அருள்வாயே
வல்வினைகள் தான்மடிய செய்வினைகள் சென்றழிய
பூர்வ ஜென்ம பாபங்களும் பூண்டோடு தானழிய
உற்றதுணை நீ எனக்கு உன்னையன்றி யாருமில்லை

ஆற்றங்கரை வேலன் இங்கே ஆறவந்தான் - அம்மா
மோட்சநிலை காண தெய்வயானை கொண்டான்
அசுர அழிவின் பின்னே மோட்ச நிலையோ
அன்பு மயமாக பின்னே இச்சை கொண்டான்
வள்ளிக் குறமாதின் கையைப் பற்றி நின்றான்
கொள்ளை இன்பம் கொள்ள காலடியும் தந்தான்
தேவரும் மனிதர்களும் பூசை செய்ய
செல்வச் சந்நிதி என்று கோயில் கொள்ள
பூவரசை விருக்ஷமாக்கி அவரருகே அருள நின்ற
உற்றதுணை நீ எனக்கு உன்னையன்றி யாருமில்லை

வேண்டும் மௌன வழிப் பூசை என்றான் -அம்மா
தாண்ட வழி தானாய்ப் பிறக்குமென்றான்
கதிர்காமர் பரம்பரைக்கோர் கடும் விரதம்
கதிர்காமப் பயணம் இங்கே தனிக்கோலம்
ஆகம விதிக்கப்பால் அன்புவழிப் பூசை காட்டி
அன்னை உந்தன் வாசலுக்கு அடிக்கடியே தானும் வர
வேலனோடு கூட நின்று வேண்டும் வரம் தந்தருளும் . .

*******************

**வள்ளி மலை மீது பள்ளி கொள்ளும் வேலவா**
துள்ளி வரும் அடியருக்கருள் அள்ளித்தரும் ஆறுமுகா . . .

தெள்ளு தமிழ்ப் பாட்டெல்லாம் வாசமிகு மாலையென்றாய்
மெள்ள மெள்ள மயக்குதையா பால் வடியும் முகம் காண
மனமோ மயங்கையிலே எண்ணங்களும் உறங்கிடவே
வேதாந்த நிலை காணும் ஏகாந்த மயக்கமிங்கே . . .

தூங்காமல் தூங்கி நின்றால் துரிய நிலையொன்றை
தானாகத் தருவதற்கோ தாலேலோ பாடச் சொன்னாய்
தாலேலோ பாடுகின்றேன் நானே தூங்குகின்றேன்
நானே தூங்கி விட்டால் நல்லவையே தோன்றிடுமே . . .

தாலேலோ தாலேலோ வேலழகா தாலேலோ
செல்வச் சந்நிதியின் செல்வமே தாலேலோ
எனையாளும் தெய்வமே எந்தையே தாலேலோ
அப்பனே தாலேலோ ஆறுமுகா தாலேலோ . . .

உன்னையே தூங்க வைக்க என்னையே தூங்க வைத்து
உண்மை நிலை உணர வைக்கும் உத்தமா தாலேலோ
உன் பாதம் நான் தாங்க உலகையே நீ தாங்க
தூங்குகின்ற மனம் தந்தால் துன்பமெல்லாம் மறைந்திடுமே . . .

அன்பால் அணைப்பதற்கோ குழந்தை வடிவெடுத்தாய்
பண்பாய் பழகிடவோ குமரனாய்த் தோற்றம் கொண்டாய்
அறிவை அள்ளித்தர கிழவனாய் வேஷம் பூண்டு
இதயத்தில் வாழும் எந்தன் குகனே நீ தாலேலோ . . .

**********************

**வள்ளி மோகனா புள்ளி மயில் வாகனா**
ஆறுமுகக் கந்தனே சுந்தர வதனா
குமர குருபர சண்முக வடிவேலவா- சண்முகா
முருகா ஹரி மருகா சிவ சக்தி பாலகா

எங்கிருந்து வந்தான் இந்தச் சின்ன முருகன்
இதயம் தன்னில் வாசம் செய்யும் அன்பு முருகன்
சந்நிதி தீரத்திலே வந்த முருகன்
சஞ்சலங்கள் தீருமென்று சொன்ன முருகன்

அங்கிருந்து பார் அவன் அன்னமலையை
அடியர் பசி ஆற்றிடும் ஓர் சொர்ணமலையை
வந்திருந்து பார் அவன் வடிவழகை
தந்திடுவான் உந்தனுக்கோர் இலையமுதை

ஆறாத பசி எல்லாம் ஆறிடும் பாரு - அந்த
ஆறுமுகன் திரு நீறைப் பூசியும் பாரு
கவலைகள் ஆற்றோடு கலந்திடும் பாரு
காலமெல்லாம் உந்தனையே காத்திடுவானே!

ஆறு பொறியாய் வந்த திரு அவதாரம்
அன்னையவள் அணைத்ததினால் ஒன்றாகியே
கூறுமடியார் வினையைத் தீர்க்க என்றோ
கூறு செய்தான் அசுரனையே சேவல் மயிலாய்

செந்தூரில் படைத் தளத்தை அமைத்தவனே
சந்நிதியில் அபயகரம் காட்டி நின்றானே
அபயகரம் காட்டியதால் இந்த இடம் இனி
ஸ்ரீ செல்வச் சந்நிதி ஆகும் என்றானே!

சந்நிதியில் வேலவனை வணங்கி நின்றாலே
சங்கடமும் சஞ்சலமும் தீர்ந்த பின்னாலே
பசி தீர்த்து ஞானத்தையும் தந்திடுவானே
பக்தி நெறியால் வேலனோடு இணையலாமே!
**************************

**வருவாய் முருகப்பா அருள் வரம் தருவாய்** குமரப்பா
வள்ளி மணாளா புள்ளி மயிலேறி வருவாய் வேலப்பா

குஞ்சரிநாதா குறைகளைப் போக்கும் குருவே நீயப்பா
குன்றுகள் தோறும் குகையினில் எல்லாம் உறைபவன் நீயப்பா

அஞ்சுதல் போக்க கெஞ்சி நின்றார்க்கு அருளும் கந்தப்பா
ஆறுதல் கொடுக்க அறுமுகமான அப்பனே வேலப்பா

நினைத்தால் நீல மயிலேறி வரும் எங்கள் நீலகண்டன் மகன்
நீயப்பா
கலியுக வரதா வரமது தர இனித் தாமதம் ஏனப்பா

*************************

**வண்ண மயில் ஏறிவா - வேலா**
கந்தா முருகா கதிர்வேலா எழில் குமரா . . .

கந்தவனம் கடந்து நல்லை மாவை நடந்து
வெருகல் மண்டூர் கடந்து கதிரமலை கலந்து . . .

வண்ணமயில் ஏறிவா - சந்நிதிக்கு
ஆறி அமர என்று ஆற்றங்கரை தேடி . . .

எண்ணம் எல்லாம் உனது வண்ணத்திலே கலந்து
என்னை உணர்த்த உனைத் தந்தவா
உள்ளத்தில் ஒளி காட்டி உணர்வுக்கு உயிர் ஊட்டும்
இன்பக் கனி ரசமே வா . . .

ஆதி அந்தம் இல்லா இன்பப் பெருவெளியில்
அணைத்து சுகம் தந்த முருகேசனே!
ஊரற்ற பெயரற்ற வேதாந்த வெளி தன்னில்
நாதாந்த மழை பொழிய வா . . .

கடமைதனை முடிக்க காலத்தை அதில் கரைத்து
ஞாலத்தில் எனைக் காத்த வடிவேலவா!
நன்றி என நாவார நாயேனும் தான் கூற
ஓர் பொருட்டாக்கி எனைஏற்ற அழகேசனே! . . .
காயான என் மனத்தை
கனியாக்கும் கருணைக்கு -காலம் எல்லாம்
நின் கால் அடியிலே! . . .
**************

**வினை போக்க வந்த வேலா**
துணை வேண்டும் தூய மணியே

என் இச்சைக்குகந்த வேலா - நீ
கொச்சை மொழி பேச வாராய்

தினம் சந்நிதிக்கு வருவேன் - ஆலம்
இலையில் அமுது தாராய்

கொச்சை மொழி பேசும் பருவம் - அங்கே
பிச்சை கேட்கும் ஆண்டிக் கோலம் - நீ
இச்சை கொண்டு வந்தாயோ - மாம்பழச்
சர்ச்சை தீர்ந்த பின்னே

தந்தைக் குபதேசம் செய்த எங்கள்
சிந்தை கவர் சுவாமிநாதா
பழம் வேண்டியே ஆடிய நாடகம்
ஞானப் பழம் நீயே என்பதாலோ!

பிள்ளைக் கோலம் தனில் காண - ஓர்
கொள்ளை இன்பம் குமரா - பாட்டிக்கு
சுட்ட பழம் கொடுத்த வேலா - எனைநாடி
எட்டி அடி வைத்து வாராய்!
***************************

**விரும்பிக் குன்றேறும் குறிஞ்சிக்குமரா - நீ**
கரும்புச் சாறாகி கருணையின் வெள்ளமானாய்!

அரும்பும் உன் புன்சிரிப்பில் அசையும் அகிலத்தின்
இயக்கமெலாம் தந்தெம்மை வாழ்விக்க வந்தவனே!

சொல்லும் சுவையெல்லாம் உன் அருள் ஆகவேண்டும்
கல்லும் பொன்னாகி வாழ்விக்க வரவேண்டும்
ஆலம் இலையெல்லாம் அமுதினைத் தாங்கவேண்டும்
அடியவர் பசியெல்லாம் ஆற்றருகே ஆறவேண்டும்!

கதிரமலையிலே நீ கருணை மழை ஆனவனே
ஸ்ரீசெல்வச் சந்நிதியில் செந்தமிழின் காவலனே

தேடி வரும் அடியர்க்கு தொண்டைமான் ஆற்றருகே
தென்றலாக நீ மாறி ஆறுதலைத் தரவேண்டும்!

ஆறுபடை வீடெல்லாம் ஆடியது போதும் ஐயா
குன்றேறி விளையாடி கண்டதெல்லாம் விருந்தாக
ஆற்றருகே நீ அமர ஆறிடுமே பசியெல்லாம்
ஞானத்தைத் தந்தருளும் வேலவனே துணை எமக்கு!

************************

**வா எந்தன் வடிவேலனே - வந்து**
தா உந்தன் அருள் தன்னையே
நீ எந்தன் தெய்வம் அல்லவா - பின்
ஏனிந்த பாராமுகம்

கனவாகி நினைவாகியே - கந்தா
கருவாகி பூவாகியே - பின்னர்
காயாகி கனியாகியே - எனைக்
கவர்ந்தாயே கதிர்வேலனே

பூவாகி மணமாகியே - உள்ளக்
குகைதன்னில் குடி வந்தவா
அதுவாகி அனலாகியே -பின்னர்
உணர்வாகி உருவானவா

உருவாகி உளம் தன்னிலே
நீ குடியேறி அமர்ந்தாலுமே
அனலாகி அறிவாகியே - நீ
ஒளியாகி வேலாகினாய்!

************************

**வெள்ளிமயில் வாகனனே எந்தனுக்கு** வெள்ளையுள்ளம் தந்தருளவா
தள்ளி இனி வைத்திடாதே வெள்ளிவேலா கள்ளமெலாம் கரைத்திடையா

பூசைமுறை காட்டவென்று கதிர்காமம் கூட்டிச் சென்றாய் கதிர்காமரை
காட்டியபின் கதிர்காமர்க்கு பூசை பண்ண தங்கவேலை நீ கொடுத்தாய்

தங்கவேலை நீ கொடுக்க மருதர் கதிர்காமர் பயந்ததினால்
திருப்பியே பார் என்றாய் அக்கணமே வெள்ளிவேலாய் மாறி விட்டதோ

கதிர்காம காட்டு வழியால் திரும்பியே கதிர்காமர் வேலைச் சுமந்து
சந்நிதியில் உனை வைத்து பூஜிக்கவே வெள்ளிவேலாய் காட்சி தருகின்றாய்

பூசை செய்யும் வேளையிலே ஓர் நாள் வெள்ளிவேலை நீ மறைத்தாய்
வேதனையால் அவர் வேண்ட இது தட்டான் செய்த வேல் தானே என்றாய்

உன்னோடு நான் இருக்கையிலே உந்தனுக்கு ஏன் இந்தக் கவலை என்றாய்
உண்மைதனை உணரவைக்க அது உந்தன் திருவிளையாடல் தானோ

வேலை வைத்து வேண்டுகின்றார் சந்நிதியில் வேற்படையாய் காட்சி தந்தாய்
வேளை வரும் வரையிலுமே காத்திருப்பேன் சேவடியில் சரண் அடைய

ஆற்றங்கரை ஓரத்திலே என் அன்பான வெள்ளி வேலா
அலையா மனம் தந்தாய் உனக் கனந்த கோடி நமஸ்காரம்

**********************

**வெற்றிவேல் முருகனுக்கு மல்லிகை மாலை**

வீரனின்  வெற்றியை பறைசாற்றும் மாலை
முத்தாக மார்பினில் முழுங்கிடும் மாலை
மொட்டு மல்லிகைப் பூவினால் ஆன மாலை

கட்டழகன் வேலனுக்கு கடம்ப மலர் மாலை
முத்துக்குமரனின் மணம் வீசும் மாலை
வண்ண வடிவேலனின்  முத்து  மாலை
கண்ணாரக்காணவோர்  காந்தமணி மாலை

சந்நிதி வேலனின் ஆலயப் பூங்கொல்லை
பூத்துக்குலுங்குமே செண்பகப் பூவிதழ்
நாகலிங்கப் படத்தோடு பூத்திடும் பூவுமே
நாயகன்  வேலனின் தோள் மீது தவழுமே

வேலவன் வீதிவலம் பூவினமும் இலைகளுமே
அலங்காரமாகவே அழகனுக்கு எழிலூட்ட
வேலனுக்கு முன்னாலே எருக்கலம் பூவுமே
தொங்கிடும் அலங்காரம் தோரணம் ஆகிடுமே

மொட்டு மல்லிகைப்பூவால் கட்டிடும் மாலை
மோகனன் வேலவன் விரும்புவான் என்றுமே
தொண்டைமான் ஆறுதோறும் வீடுகளில் மல்லிகை
மரம் நாட்டி வேலவனை வரவேற்று நிற்பரே
*******

**வேல் வேல் வந்திடணும் சித்திரத் தேரேறி வந்திடணும்**
வெள்ளி வேல் இங்கு வந்திடணும் வேதனை போக்கி நின்றிடணும்

அழகிய அலங்காரம் ஆபரணம் அணிந்து
அண்ணனுடன் வீதி வலம் வந்து
அன்னை வள்ளியிடம் அனுமதி பெற்று
ஓங்கார மணி யோசை வரவேற்க (வேல் வேல்)

ஒரு நூறு பாவால் ஒரு படி கட்டி
எழுநூறு பாவால் ஏழுபடி அமைக்க
ஏழு லோகம் காக்கும் சந்நிதிவேலன்-அந்த
ஏழுபடி ஏறி வந்திடணும் (வேல் வேல்)

அழகான ரூபம் சித்திரத் தேருள்
அழகன் அமர கண் கொள்ளாக் காட்சி
அந்த அற்புதக் காட்சியை கண்டவரெல்லாம்
ஆனந்தத்தில் அங்கு அடித்தனர் தேங்காய் (வேல் வேல்)

சித்திரத் தேரில் வேலனைத் தாங்க
வீதி மண் என்ன தவம் செய்ததோ
அந்த மண்ணைத் தங்கள் அங்கத்தில் தாங்கி
ஆடவர் அங்கே அங்கப் பிரதட்சனை (வேல் வேல்)
************************

**வேலா உனை நினையாத நாளில்லையே வேலை**
வணங்காத வேலை வேறு எனக்கில்லையே . . .

ஆற்றங்கரையில் அன்னமலையில் அவன்
அமுதுக்கும் நீறுக்கும் இணையேதப்பா! . . .

பழமாகி பொருளாகி பழிபோக்க செந்தூரில்
தளமாக்கி வேல் கொண்ட வடிவேலவா
சந்நிதியில் வேண்டுவோர்க்கும் தேவர்க்கும் அபயகரம்

அருளீட்டி நின்ற எங்கள் அருள் தெய்வமே!
கடலூரில் நின்றவரை கரையூருக் கழைத்து வந்து
உடலூரில் உனைக் காட்டி அருளீட்டவே
மௌனப் பூசை முறையொன்றை மௌனமாக எடுத்துரைத்து
சந்நிதிக்கு சாயுச்ய நிலை தந்தாயே!
அதை நீயே தருவாயே . . . .

கருணைக்கு கடலாகி நின்றாலும் திரிந்தாலும்
கடல் நீரால் எம் தாகம் தான் தீருமா? . . .
அதற்காக நெருப்பாகி கடல் நீரை மழையாக்கி
ஆறாக்கி குளமாக்கி அருள்கின்றாயே! . . .
உணவுக்கு உப்பெல்லாம் உறைகின்ற கருணையில்
கடலாகி மீண்டும் நீ ஆறாகின்றாயே
மழை கண்டு பயிர் வாழ்ந்து நாமுண்டு பசி போக்க
சுடராகத் தோன்றி வந்த சுப்ரமண்யனே
உனையே மறவாத வரம் வேண்டுமே . . . .
*************

**வேலா வெற்றி முருகா – நின் பாதம்**
பற்றினேன் காத்தருள்வாய்

தூது செல்லும் வழியினிலே வீரபாகுதேவர் இங்கு
சந்திகாலப்பூசை செய்து சரவணனை வணங்கி நின்றார்
வாது செல்லும் வழியினிலே வேலன் சிவ பூசை செய்து
தந்தையை வணங்கி விட்டு தேவர் குறை தீர்ப்பேன் என்றான்!

அபயகரம் காட்டியதால் அன்றுமுதல் உள்ளவரை
ஸ்ரீ செல்வச் சந்நிதியாய் என்றும் இது வாழும் என்றாய்
தேவர்களும் மனிதர்களும் தினம் பூசை காண்பதினால்
ஆறுபடைவீட்டின் பின்னே ஆறவந்த ஸ்தலம் என்றான்!

மருதர் கதிர்காமரின் மௌன அன்புப் பூசைதனை
மால்மருகன் கண்டு மனம் களித்திருக்கும் வேளையிலே
அடியரின் குறை தீர்க்க அன்னதான மடம் அமைத்து
அன்னமலை மீதேறி வேலன் விளையாடுகின்றான்! . . .

வல்லியாற்றம் கரைதேடி வந்த அந்த வடிவேலன்
தொண்டைமான் ஆறாக மாறிய இந்தக் கரையினிலே
சாபத்தால் யானையாக மாறிய ஓர் கந்தர்வனை
மௌனப்பூசை காணவைத்து பொன்னடியில் சேர்த்தானே!

பொன்னடியைக் கண்ட அந்த கந்தர்வன் சமாதி மேலே
பூவரசைத் தோற்றுவித்து ஸ்தல விருக்ஷம் என்று சொன்னான்
அதன் அருகே வேலாக வீற்றிருப்பேன் என்றானே
ஸ்ரீ செல்வச் சந்நிதி ஓர் புண்ய ஸ்தலம் ஆனதையா!

காலடியும் தந்துவிட்டு காவடியாய் ஆடவைத்து
காட்டுகின்றாய் விந்தை பல காலமெல்லாம் காப்பதற்கு
வேண்டுகின்றார் பக்தர் எல்லாம் வேலா நின் அருள் வேண்டி
தொண்டைமான் ஆற்றருகே தொலையும் வினை என்று
சொன்னாய்!

கதிர்காமக் கொடியேற்றம் காண வேண்டிப் புறப்பட்டு
காட்டு வழித் தூரம் எல்லாம் மின் ஒளியைக் காட்டிவிட்டு
திரும்பி வரும் வழியினிலே கொழும்பினிலே ஆடிவேலாய்
ஆடிவிட்டு ஆற்றங்கரை தேடி வேலன் வருவானே!

தன்மந்த காலம் இன்று தளர்ந்து வரும் வேளையிலே
மாமணியின் ஓசை மீண்டும் அலைஅலையாய் வரும் வேளை
ஈழமணித் திருநாட்டில் யாம் இழந்த அமைதி நிலை
மீண்டும் வரவேண்டி வேலன் தாள் பணிந்து வணங்கிடுவோம்!

**********************

**வேல் முருகா வேல் முருகா வேல் முருகா வடி வேலழகா**
வேல் முருகா திருமால் மருகா வேல் முருகா வெற்றிவேலழகா

சிவமுருகா ஓம் சிவமுருகா சிவமுருகா சிவசக்தி முருகா
சக்தி மகனே ஆனைமுகன் தம்பியே முக்கண்ணில்
உதித்த எங்கள் வேல் முருகனே

நல்லைக்குமரா தொல்லை தீர்க்கும் முருகா
மாவைக்கந்தா மாயை போக்கும் முருகா
எல்லை தன்னிலே வட எல்லை தன்னிலே
அன்னதானக் கந்தனோ நீ ஞானஸ்கந்தனோ

ஞானஸ்கந்தனோ நீ மோனஸ்கந்தனோ
சந்நிதியில் வாழும் எங்கள் வேலழகனோ
ஆற்றங்கரையோ அருகே பூவரசமோ -அங்கே
ஆறுதல் கூற வந்த ஆறுமுகனோ

கதிர்காமமோ ஓர் தனி மோகமோ தினைப்
புனத்தில் வள்ளி கொள்ளை கொண்டாளோ
ஏழு திரையோ உள்ளே ஏக நிலையோ - ஞான
மழையே இங்கு மோன நிலையோ

சரவண பவனே ஷண்முகனே சடுதியில்
வந்தருளும் வேல் முருகனே
அரோகரா என்று கூறும் அடியவரின்
அல்லல்களைத் தீர்க்கும் எங்கள் ஆறுமுகனோ

ஓம் என்ற தத்துவத்தின் உட்பொருளே வா
ஆங்காரம் அழிந்திடவே ஆடி ஆடி வா
பாடிப் பாடி வா முருகா நாடி நாடி வா
பக்குவத்தைத் தரும் அந்தப் பதநிலை தா
ஓடி ஓடி வா முருகா ஆடி ஆடி வா
ஓங்கார நாதத்துள்ளே கூட்டிச் செல்ல வா *******

**வேலெடுத்து வீச வந்தாய் வெருகல் நகரிலே - முருகா**
யாமிருக்க பயமில்லை என்றாய் எந்தன் மனத்திலே

கவலைகள் தீர்க்க வந்தாய் கந்தவனத்திலே - முருகா
கந்தவனம் ஆக்கிடையா எந்தன் மனத்தையே

நல்லவையே தருவாயே நல்லை நகரிலே - முருகா
வல்லமை யெல்லாம் தருவாய் எந்தன் மனத்திலே

அபிஷேகச் சிறப்புக் கண்டேன் மாவை நகரிலே - முருகா
அலங்காரத் தோற்றம் கண்டேன் நல்லை நகரிலே

அடியவர்கள் குறை தீர்த்தாய் சந்நிதியிலே - முருகா
அன்னதானக் கந்தன் ஆனாய் மடங்களிலே

அருவாகி இலதானாய் கதிரமலையிலே - முருகா
இலதாகி உருவானாய் எந்தன் மனத்திலே

*****************

**வேலவனே வரலாமே வேண்டும் வரம் தரலாமே**
வேண்டும் நிலை தாண்டியதால் வேலா உன் சந்நிதி
கண்டதினால் - வேலா வா பாலா வா வேகமாய் ஓடியே வா

உள்ளம் கவர் கள்வனாகி என்றும் என்னுள் இருப்பதினால்
பள்ளம் தனை மேவ அருள் வெள்ளம் நித்தம் வருவதினால்
வள்ளம் தனில் நீ வருவாய் வழிகாட்டியாய் இருப்பாய்
கள்ளம் எல்லாம் கரைந்ததினால் கவலைகளும் இனி ஏது

சந்நிதியை நினைத்தாலே சாயுச்யம் வரும் என்றால்
சந்நிதியில் நின்றவர்க்கு சங்கடங்கள் இனி ஏது
அன்னதான மடமும் உண்டு ஆலமிலை அமுதும் உண்டு
நோய் மாற தீர்த்தமுண்டு பூவரச நிழலுமுண்டு

பூவரச நிழல் வேண்டின் தீர்ந்திடும் உன் நோய்களெல்லாம்
பூவரச இலை வேண்டின் சுகபோக வாழ்வு வரும்
பூவரச அடி வேண்டின் வேலன் அருள் தான் சுரக்கும்
புண்ணியனை வேண்டி நின்றால் பொன்னுலக வாழ்வு வரும்

பூவரசப் பூ வேண்டின் பாமலரைத் தந்தருள்வான்
பூவரசாய் மாறிவிட்டால் அருகினிலே தான் அமர்வான்
உள்ளே உள்ளே சென்றாலோ சமாதி நிலை தான் புரியும்
இன்னும் உள்ளே சென்றாலோ தன்னையுமே தந்திடுவான்

*************************

**வேலவனைத்தினம் வேண்டி நின்றால்**
அங்கே வேதனைகள் தீராதோ?
சோதனைகள் தோன்றுவதும் சாதனைகள்
ஆகுவதும் சத்ரு சம்ஹாரம் அன்றோ! . . .

பாலகனை வேண்டி நிதம் பதமலரைத் தான் பற்ற
பக்குவமும் தந்தருள்வாய் - அதை
நித்தியமாய் ஆக்குதற்கோ சத்தியத்தைச் சரவணத்துள்
பக்குவமாய் பதுக்கி வைத்தாய்
சத்தியமும் நித்தியமும் பக்குவமும் பதநிலையும்
ஆறெழுத்தில் அடக்கமன்றோ - அது
நீறிட்ட நெற்றிதனின் மத்தியிலே நின் ஒளியைத்
தானாகத் தான் தருமோ! . . .

பாருக்குள் பார்க்க வைத்து பாபி எனைத்தான் மாற்ற
பாமலையைப் படைத்தாயோ - அதில்
நான் ஏறித் தான் தவழ நீ அங்கே படியாகிக்
காலடியும் பதித்தனையோ
அன்னமலை அருகினிலே ஆற்றின்ப அருள் வெள்ளம்
ஆறாகிப் பாய்வதென்றால்

சரவணத்தின் பொய்கையுமே சரிபாதி இருள் நீக்க
வேற்கரணியாய் ஆனதோ! . . .

புண்ணியனார் அடங்குவதும் பூவரசு தோன்றுவதும்
அருகினிலே அமர்வதற்கோ
பாவி எனை இருத்தியுமே பூ இலையை பாமலையாய்
எனக்குள்ளே தேட வைத்தாய்
ஏறி அங்கே தேடுகின்றேன் இமயத்தின் இடையினிலே
மடையாகப் பாய்கின்றதோ
அந்த வெள்ளத்தின் வேகத்தில் வேரூன்றி யான் நிற்க
வேண்டுவதும் நின் துணையே! . . .

சந்நிதியை நினைத்தாலே சங்கடமும் சஞ்சலமும்
சரிபாதி ஆகுமன்றோ - பின்
சந்நிதியில் நின்றாலோ மறுபாதி நீறாகி
ஆறாகி ஓடுமன்றோ

வாழத்தான் வழி கேட்டால் மீளத்தான் வழிசொல்வேன்
ஈழத்தின் வட கரையில்
ஆழத்தை அறியவைத்து ஆண்டியாய் வந்தோரை
அரசனாய் ஆக்கிடுவான்! . . .

**********************

**வேலா உனை வணங்க நின் தாள்மேல் தலை வைத்தேன்**
தாள்மேல் தலை வைக்க என் வாழ்வே வளரக் கண்டேன்

வளர்ந்த என் வாழ்வெல்லாம் மலர்ந்தது நின் அருளால்
தளரா மனத்துடனே நின் புகழ் பாடும் பணி தாராய்

நீயே என் நிதியே நிதம் வருவேன் உன் சந்நிதிக்கே
புத்தம் புதுக் கவிதையெல்லாம் நீ நித்தம் நித்தம் தந்தருள்வாய்

பாடும் பணியென்றால் நீ வீடும் தருவாய் என்றார்
பாவடி நான் படைக்க நின் காலடி காட்டிடுவாய்

காலடிக் கரையினிலே நின் காவடி ஆட்டமெல்லாம் - எனைக்
காண நீ வைப்பதெப்போ மனக் குறையெல்லாம் மறைவதெப்போ

**********************

**வெள்ளி மயிலே துள்ளி ஆடும் மயிலே**
சந்நிதியான் வெள்ளி வேலைத் தாங்கும் மயிலே

அண்டங்களைத் தாங்கும் அழகனின் வேலை
அழகாய்த் தாங்கும் வெள்ளி மயிலே
எந்தத் தவம் செய்தாய் இந்தப் பேறு பெற
அந்த வழி சொல்வாய் நானும் அடைந்திட
வேலால் மயிலாகி வேலைத் தாங்குகின்ற (வெள்ளி)

வெள்ளி வேலும் மயிலும் பச்சை மயில் மீது
வீதி வரும் காட்சி காண கோடி இன்பம்
அந்தக் காட்சிதனை நானும் காண்பதற்கோ
கந்தன் கருணையை வேண்டுகின்றேன் என்று
வேலனிடம் நீ தூது செல்லாயோ (வெள்ளி)

கந்தன் அழகை தினம் காண்பதற்கோ
தோகையெல்லாம் ஆயிரம் கண்ணாக்கினாய்
அந்த அழகுக்கு பாமாலை சூட்டி-அவன்
தந்த அருளால் வாழ்வும் அமைந்திட
உன்னைப் போல் என்றென்றும் அவனடியே வாழ்ந்திடனும்
(வெள்ளி)

*************

**வேலவா வேலவா வடி வேலவா பாலகா**
உந்தன் காலடி தேடி வருவேன் - சந்நிதி
வேலவா வேலவா வடி வேலவா பாலகா
உந்தன் காலடி தேடி வருவேன் - என்
இதயம் உந்தன் அகமல்லவோ - உன்
உதயம் எந்தன் மூச்சல்லவோ
நான் உந்தன் உடமையே - என்றும்
உந்தன் அடிமையே

சந்நிதி வேலவா எங்கள் சஞ்சலம் தீர்க்க
நீயும் சடுதியில் தான் வர வேண்டும்
எந்நிதி தரும் வள்ளல் சந்நிதியானிடத்தில்
வந்த வினை பறந்தோடும்
பின் ஏனிந்த விளையாட்டு ஐயா
போதும் உன் சோதனை தானய்யா
நீ எங்கள் குலதெய்வமே - நெஞ்சில்
குடிகொள்ளும் வடிவேலனே!
********************

**வேலவனை வேண்டி நின்றேன் ஏது பயம் - சந்நிதி வேலே**
நஞ்சு கொண்ட நாகத்திற்கும் நான் அஞ்சேன் அது மயிலடியில்
யாமிருக்கப் பயமேன் என்றவன் சொன்னதினாலே
ஞாலமெல்லாம் அவன் புகழ் பாடித் திரிந்திடுவேனே . . .

சோதனைகள் பல அவன் எனக்குத் தந்திருந்தாலும்
சாதனையில் அவனே நிற்பான் சத்தியமே! நிச்சயமே
சமநிலைக்கு தென்னகம் வந்த இருமலை போலே- இங்கோ
அன்னமலை அருகே கந்தன் அருளே தருவான்

மந்திரப் பூசையிலே அவன் மகிழ்ந்திருந்தாலும்
மௌன அன்புப் பூசையை இங்கு விரும்பியதால்
வந்து சேரும் மலர்களுமோ இங்கு பலவிதமே-அடியர்
இதயங்களும் பாமலரும் அதில் அடங்கிடுமே

சரவணபவாய . . . சந்நிதி வேலாய . . .
பவாய நமஓம் . . . குகாய நம ஓம் . . .

**********************

**வேலா வேண்டுகின்றேன் வேண்டும் வரம் தாராய்**
பாலா பற்றி நின்றேன் தாளே கெதியன்றோ

தொண்டைமானாற்றம் கரையில்
தொழவினை தீர மனம் கொண்டோ
ஆறுபடை வீட்டினுக்கு அப்பால்
ஆற வந்தாய் சந்நிதியில் அழகா

ஆலமிலை தருவது அமுதென்றால்
ஆற்றங்கரை பூவுலகில் சொர்க்கமோ
பூவரசே கற்பகத் தருவானால்
வேற்கரணி சரவணப் பொய்கையாகுமே

கார்த்திகைப் பெண்களிடம் வளர்ந்ததை
காட்டவோ சின்னஞ் சிறு பெண்களின்
கைகளில் நெய்விளக்கும் ஏற்றியே
காட்டுகின்றாய் சந்நிதியில் வேலவா

ஆண்டிக்கோலம் கொண்ட அந்த நாளிலே
இருமலை கொணர்ந்த ஓர் இடும்பனை
இருத்தியே இருப்பிடம் கொண்டவா
இதமாகப் பழனியும் ஆனவா

பழனிபோல் பாரோர் பாபம் தீர்க்கவே
ஈழத்திலும் இன்னல்களைப் போக்கவே
சந்நிதியைச் சொர்க்கபூமி ஆக்கியே
அன்னமலை சொர்ணமலை அமர்ந்தவா

மடங்களில் அன்னமலை தோன்றவே
வாசலெல்லாம் சொர்ணமலை ஆனதோ
வருமடியார் குறைகள் பாதி தீருமே
கோலம் கண்டால் கற்பூரமாய் ஆகுமே

தீராவினை தீர்க்கக் கோயில் கொண்டுமே
மாறாநோய் மாற்றத் திருநீற்றையும்
அவர் எடுக்க நீகொடுக்கும் விந்தையை
காட்டுகின்றாய் சந்நிதியில் வேலவா

பாதம் பற்ற பாபம் தீரும் என்பதை
பாரோர் காணக் காட்டுகின்றாய் பாலகா
தீர்க்கமான தெளிவைத்தரும் தீர்த்தத்தை
உண்டோர் வாழ்வில் சஞ்சலங்கள் ஏதுமுண்டோ

காலடியும் தந்த அந்தக் கரையினில்
காவடியாய் மனங்களையும் மாற்றியே
பாவடியால் பாபங்களைப் போக்கவே
பாடவைத்தாய் எங்களையும் வேலவா

************************

**ஸ்ரீ செல்வச் சந்நிதியிலே - வேலா**
ஆறுமுகத்தோடு வருவாய் - வந்து
ஆறுதலும் தருவாய்

பூவரச மரத்து அருகினிலே - உந்தன்
புகழ்பாட நான் வருவேன்
பூவாக எனை மாற்றுவாயோ - பின்
காயாக்கி கனிய வைப்பாயோ
கந்தா உன் அருள் வேண்டியே - நான்
அங்கே காத்து காத்து நிற்பேன்

காயான மனத்தை கனியாக்கவே உந்தன்
கருணை மழை வேண்டுமே
பின் ஏன் இந்த விளையாட்டு குமரா
ஏழைக்கருள வருவாய்
மயிலேறி வருவாயே முருகா
ஆற்றங்கரையில் காத்து நிற்பேன்

சந்நிதியின் எழிலே சரவணபவமே
அன்னை அணைத்த அழகே - இங்கே
வினை போக்க வருவாயே வேலா
உனையன்றி எனக்கேது கதியே - கால்
அடி தந்த கல்லோடை அருகே
உனைக் காத்து காத்து நிற்பேன்

சந்நிதியில் உன்னைச் சரண் அடைவோரின்
குறை தீர்ப்பேன் என்று சொன்னாயே
அதனாலே ஓடோடி வந்தேன்
எதனாலே தாமதம் இன்னும்
அமுதாகி ஆலம் இலைமீது
தருவாயே உந்தன் அருளை

**குகரத்ன மலர்**

தொண்டைமானாற்றின் கரையினிலே
தொண்டரைக் காக்க வந்தவனே
வண்டமிழ்த் தெய்வம் சரவணனே
கண்டவர் விண்டில்லா மெய்ப்பொருளே

ஆதியில் அசுரரை அழித்திடவே
தேவர்கள் செல்லும் வழிதனிலே
சந்தி காலப் பூசை செய்ததினால்
சந்நிதி என்ற பெயர் வந்ததுவோ

சீர்பெற்ற இந்தத் தலத்தினிலே
சிறப்பறிய வந்தான் ஓர் முனிவன்
அறிந்தபின் அடைந்தான் சமாதி நிலை
அதன் மேல் பூவரசும் வளர்ந்ததோ

ஆலமரத்தின் நிழலினிலே
ஆவினம் மேய்க்கும் இடையனைப் போல்
ஆதியில் அற்புதம் காட்டிய பின்
ஆண்டு கொண்டார் கதிர்காமரையே

வேண்டுவார் கேட்பது கொடுப்பதினால்
எந்நிதியும் தரும் சந்நிதியோ
ஸ்ரீ செல்வச் சந்நிதி பெயரென்றாய்
தீராத வினையில்லை இத்தலத்தில்

பூவரச மர அருகினிலே
வேலாக வைத்துன்னைப் பூஜிப்பதை
விரும்பியே சொன்னாய் கதிர்காமர்க்கு
வேலவன் ஆலயம் உதித்ததோ

பூசைமுறை அறியா உன் அன்பனுக்கு
கதிர்காமம் கூட்டிச் சென்று காட்டினாயோ
வாய்கட்டிப் பூசை செய்கின்றார்
மௌனப்பூசையின் சிறப்பறிந்தோம்

அன்னதானக் கந்தனின் ஆலயத்தில்
மாறாத நோயென்று ஏதும் உண்டோ
எங்கிருந்தோ வந்த என்னையுமே
ஈர்த்துவிட்டாய் இனி ஏற்றிடையா

சிந்தனை அடக்கி ஓர் மனதாய்
சீருடன் இதனைப் பாடிடுவோர்

குகையுறை வேலவன் திருவருளால்
குகரத்தினமாய்த் திகழ்வாரே

## சந்நிதி திருப்புகழ்

இடையனாய் வந்து கதிர்காமரை
இரட்சித்த முகமொன்று!
கதிர்காமம் தன்னில் பூசை முறைகாட்ட
அழைத்த முக மொன்று!
கதிரமலைக் கொடியேற்றம் காணச்
சென்ற முகமொன்று!
களைத்துத் துவையல் உண்ண
ஓடி வந்த முகமொன்று!
அடியவர்க்கு அன்ன தானம்
அளிக்கும் முகமொன்று!
புண்ணியனார் சமாதி கண்ட பூவரச மரத்தருகே
கோயில்கொண்டு வீற்றிருக்க வந்த முகமொன்று!
ஆறுமுகமாகி ஏறு மயிலேறி வள்ளி
தெய்வானை மங்கையுடன் வேலாகி நிற்க
அடியவரும் தேவர்களும் அகமகிழ்ந்துறவாடும்
செல்வச் சந்நிதிவாழ் வேலவா சரணம்!

*******

## சந்நிதி திருப்புகழ்

-------------------

கருவாகா உருவுமானது
உருவாகி திருவுமானது
திருவாகி ஆடல் காட்டிடும் கந்தவேலா

ஆறாகி உருவுமானது
வேறாகி தனித்து நின்றது
அன்னையவள் அணைத்ததினால் ஒன்றாகியே

ஒன்றாகி அறுமுகத்தோடு
வென்றதுமே அசுரரையே
கொன்றதுமே கொடியன எல்லாம் குமரேசனே

அசுர அழிவின் விளிம்பினிலே
அமரத்தன்மை அணைத்திடவே
தெய்வானை திருமணமோ திருப்பரம் குன்றத்திலே

வேடனாய் விருத்தனாய்
வேண்டும் விளையாடல் காட்டி
அன்பு மயமாகி வள்ளியை அணைத்தானே

ஆறுபடை வீடெல்லாம்
ஆடிவிட்டு ஆறவென்று
தொண்டைமான் ஆற்றருகே அமர்ந்தவனே

அன்னவனாம் வேலழகன்
சொன்னதெல்லாம் சுப்ரமண்யம்
தொழ வினை தொலைந்திடுமே ஆற்றருகே

பூவரச மரத்தருகே
பூவாக உனை மாற்று
பொன்னுலக வாழ்வை உனக்கு தந்தருள்வான்

தருவதனை கருவாய்க் கொண்டு
சும்மாயிருந்து சுகம் காணவே
சந்நிதியை நினைத்திடுவீரே ஜெகத்தோரே

*****************

## சந்நிதி திருப்புகழ்

வேளைக்கே பொறியுமானவன்
பொய்கைக்குள் குழந்தையானவன்
மலருக்குள் மலர்ந்தவன் தான் எங்கள் முருகன்

நெஞ்சகத்தில் நினைவலையடக்கி
குண்டலினிக் கனலை எழுப்ப
நெற்றியிலே முக்கண்ணில் தோன்றிடுவான்

ஆகம விதிக்கு அப்பால்
அன்புத் ஸ்தலம் ஒன்றுண்டு
தொண்டைமானாற்றருகே கண்டிடலாம்

கண்டவர்கள் விண்டில்லாத
வேதப்பொருள் வேற்படையாக
வீற்றிருக்கும் காட்சி கண்டால் வினை அகலும்

வினை அகன்ற பின்னாலே
துணை என்று கொண்டார்க்கு
ஆனந்த அமைதி அங்கே தோன்றிடுமே

தோன்றிடும் அமைதியிலே
தொண்டனாக நீ துணிந்தால்
கற்பூரமாய் உருக வரம் தருவான்

வரமதனைப் பெற்ற பின்னே
வந்த வழி நீ அறிவாய்
போற வழி நீ புரியாமல் அலையலாமோ

அலை அலையாய் வரும் அந்த
எண்ணத்தையே எண்ணிவிட்டால்
சிந்தனையே சிவமாகும் - ஜெகத்தோரே

சிவமாகி நின்றதுமே
சந்நிதிக்கு சென்றதுமே
கதவில்லா வாசலிலே காத்திருப்பானே

தொண்டைமான் ஆற்றருகே
தோன்றிய ஸ்ரீ செல்வச் சந்நிதியில்
தொழ வினை தொலையுமே அறிவாயே

********************

**ஆரத்தி**

ஞான பண்டிதா சரணம் சரனம்
ஞானஸ்கந்தா சரணம் சரணம்
ஞான வேலா சரணம் சரணம்
ஞான சத்குரு சரணம் சரணம்

ஓங்கி அகன்று ஊன்றியதே ஞான அறிவு ஆனதினால்
வேலின் வடிவம் கொண்டாயோ வேல்முருகா சந்நிதியில்
ஆலமிலையில் அமுதூட்டும் ஆண்டவனே வேல் அழகா
ஆண்டியாக வருபவனும் நீ அன்னதானக் கந்தனும் நீயே

அன்னதானக் கந்தனாகி அடியர் உடற்பசி போக்கியபின்
அருட்பசிக்கு விருந்தாக ஞான வேலாய் வந்தாயோ

ஓமென்றொலிக்கும் மணியோசை உள்ளே எம்மை அழைத்துச் செல்ல
வாவென்றழைக்கும் பாலனாகி வாசலிலே நிற்பாயே

மனதில் தோன்றும் எண்ணங்களை மலர்களாக்கிச் சூட்டியபின்
தூபதீபம் ஏற்றியுமே தோத்திரங்கள் பாடிடுவேன்
பாடப்பாட பாவி எந்தன் பழவினைகள் தீர்ந்தபின்னே
ஜோதியிலே உன் உரு காட்டும் கற்பூரமாய் ஆக்கிவிடு

**ஆரத்தி**

வாய் கட்டி மௌனமாக, உந்தன் மூலத்தை மனத்துருத்தி
சொல் எழா நிலையினிலே, வேலா நீ ஓர்,மௌன அன்புப் பூசைதனை
மருதர் கதிர்காமரைக், கொண்டு நீ,ஞாலத்தில் ஏற்றி வைத்தாய்-அது
ஆழ்ந்து ,அகன்று,ஊன்றியுமே இன்று,அடியரைக் காக்குதையா
சந்நிதியில் மனமாயை அகலுதையா
சந்நிதி வேலா அரோகரா, சங்கரிபாலா அரோகரா
ஆற்றங்கரையோனே அரோகரா, அன்னமலைக்கந்தா அரோகரா

மந்திரப் பூசையினை, நீஅணைப்பது, வேதாகம மரபோ
மௌன அன்புப்பூசையினால், நீ மகிழ, மனாலயம் திறக்குதையா
முருகா மக்கள் குறை தீருதையா
சந்நிதி வேலா அரோகரா,சங்கரன் புதல்வா அரோகரா
வேற்படையானாய் அரோகரா, வேலாயுதமே அரோகரா

படை நடத்தி வந்த, செந்தூரன், விடை கொடுத்த இடமே
ஸ்ரீ செல்வச் சந்நிதி ஆகுமென்றாய், இங்கே, வேகும் வினைகளென்றாய்
முருகா வேதனை தீருமென்றாய்
தேவரும் மனிதருமே, இங்கே, தினம் பூசை செய்வர் என்றாய்

கேட்ட வரம் கொடுக்கும், பூலோக, புண்ய ஸ்தலம் இது என்றாய்
இங்கே பொற்பதம் காட்டுகின்றாய்
சந்நிதி வேலா அரோகரா, ஐங்கர சோதரா அரோகரா
காலடி தந்தாய் அரோகரா, கல்லோடைக்கரையே அரோகரா

ஆலையும் அரசையுமே, ஒன்றாக்கி, பூவரசாக்கி வைத்தாய்
பூவரசே ஸ்தல விருக்ஷமென்றாய், கீழே, புண்ணியனார் சமாதி என்றாய்
இங்கே புண்ணியங்கள் சுரக்கும் என்றாய்
சந்நிதி வேலா அரோகரா, வள்ளி குஞ்சரி அரோகரா
புள்ளி மயிலுமே அரோகரா, சேவற் கொடியோனே அரோகரா

அன்னமலை படைத்து, அடியர், பசிதனைப் போக்குதற்கோ
மடங்கள் பல அமைத்து, மாலவனை,வள்ளி ஆலயத்தில் வைத்தாய்
முருகா கொள்ளை இன்பம் கூட்டுகின்றாய்
சந்நிதி வேலா அரோகரா,சிவநாகதம்பிரான் அரோகரா
பூவரச விருக்ஷம் அரோகரா, புண்ணியனார் சமாதி அரோகரா

பூவரச நிழலினிலே, பாவலர்கள், சூட்டுகின்ற பாமலைகளோ
பூமலைகளாய் மாறி, உந்தன், பாதாரம் தேடுதையா
பாமாலை படைத்தவரை, வேலா நீ ,சொர்ணமலை தனில் ஏற்றி
சுகங்களைக்காட்டிடவே, சொர்க்க, வாசல் திறக்குதையா
முருகா பரசுகம் புரியுதையா
சந்நிதி வேலா அரோகரா, அபயகரமுமே அரோகரா
சோமாஸ்கந்தம் அரோகரா, சுகப்பிரமமே அரோகரா

பசி எல்லாம் ஆறிய பின், முருகா, ஞானப் பசி தோற்றிடவே
வேலாக வீற்றிருந்தாய், ஒளி அங்கே, தானாகப் பரவுமென்றாய்
முருகா ஞானத்தின் மறு வடிவே
சந்நிதி வேலா அரோகரா,சங்கடம் தீர்ப்பாய் அரோகரா
வேல் வேல் முருகா அரோகரா, வடிவேல் குமரா அரோகரா

இத்தனை ஏற்பாடெல்லாம், கந்தன், கருணையின் இலக்கணமோ
கனலாய் வந்த கடலே, கருணை வெள்ளமாய் ஓடுகின்றாய்
சந்நிதியில் வேதப் பொருளானாய்
சந்நிதி வேலா அரோகரா, கந்தா முருகா அரோகரா
கதிரமலையோனே அரோகரா, சுப்ரமண்யம் அரோகரா

பூசையின் இறுதியிலே, பூசகர், பாதம் பற்ற வைத்தாய்
பற்றிய பாதம், நின் பாதக்கமலம், பாபங்கள் பறந்ததையா
முருகா பாசங்கள் நிறைந்ததையா
சந்நிதி வேலா அரோகரா, சரவணபவமே அரோகரா
சத்ரு சம்ஹாரா அரோகரா, கதிர் ஒளிச் சுடரே அரோகரா

மங்கள ஆராத்தியில், எங்கள், மனமாயை கரையுதையா
அரோகரா கோஷத்தின் எல்லையில், எங்கள், ஆணவம் அகலுதையா
முருகா ஆனந்தம் பெருகுதையா
சண்முக அர்ச்சனையில், எங்கள், சங்கடம் மறையுதையா
என்முக மாகிட, கடந்து என்னுள்ளே, கலந்து நிற்குதையா
கந்தன் அருள் சுரந்தே பாயுதையா
சந்நிதி வேலா அரோகரா, சரவணப் பொய்கை அரோகரா
வெற்றி வடிவேலன் அரோகரா, வேற்கரணித்தீர்த்தம் அரோகரா

அவர் எடுக்க நீ போடும், திருநீற்றால், அஞ்ஞானம் அகல்கின்றதே
கருணையே வேற்கரணியாய், வேழமுகன், வாசலிலே சுரக்கின்றதே
சுரந்த வேற் கருணையெல்லாம், தொண்டைமான், ஆறாகி ஓடுகின்றதே
ஆறாக ஓடி, கடலோடு கலந்து ஆழ்கடலாய் மாறுகின்றதே
மாறி ஆறுமுகம் ஆகின்றதே - ஆகி
அகிலத்தைக் காக்கின்றதே
சந்நிதி வேலா அரோகரா, சங்கரி பாலா அரோகரா
ஆற்றங்கரையோனே அரோகரா, அன்னமலைக்கந்தா அரோகரா

**ஊஞ்சல்**

வேலாக நின்றவனே வினை தீர்க்க வந்தவனே
வெற்றி வடிவேலழகா ஆடீரோ ஊஞ்சல்
பாலாக ஓடும் இப்பாவியின் மனமதனை
ஆடாமல் ஆக்கிவிடும் ஆண்டவா வாராயோ

கோலாகக் காலாக அற்புதம் பல காட்டி
ஆட்கொள்ள வந்தவனே ஆடீரோ ஊஞ்சல்
தாலாட்டுப் பாடவே இது தருணம் என் குருவே
தயை புரிந்து வந்துமே ஆடீரோ ஊஞ்சல்

உணர்வென்னும் ஊஞ்சலிலே உள்ளமென்னும் கோவிலிலே
ஆட நீ வாராயோ கருணைமிகு கந்தா
இதயக் குகைதனை விரும்பிடும் குகனும் நீ
என் இதயக் குகைதன்னில் ஒளியூட்ட வாராயோ

வேதாந்த சாரமே நாதாந்த ரூபமே
கலி தீர்க்க வந்தவனே ஆடீரோ ஊஞ்சல்
ஆட்டத்தின் எல்லையிலே ஆனந்த வெள்ளமே
மன ஆட்டம் மாற்றும் ஓர் அருமருந்தாகாயோ

அகிலத்தின் இயக்கமெல்லாம் ஆண்டவா உந்தனின்
ஆட்டத்தில் தான் அடக்கமோ
இயங்கிடும் உலகிலே உறங்கிடும் மன நிலையை
உணர்த்தவே வந்திங்கு ஆடீரோ ஊஞ்சல்

அலையாத மனம் தந்து நிலையாக நிற்கவே
ஸ்ரீ செல்வச் சந்நிதியில் ஆடீரோ ஊஞ்சல்
தொலையாத வினையெல்லாம் தொலையுமே உன் அருளால்
தொண்டைமான் ஆற்றருகே ஆடீரோ ஊஞ்சல்

*********

**அன்னமலை அருகமர்ந்த** ஆறுமுக வேலழகா
சொர்னமலை தனைப் படைக்கும் சுப்ரமண்ய சுவாமிநாதா
எண்ணமலைச் சிந்தனையில் தான் மலரும் பாமலையில்
ஏறிவிளையாட வரும் ஐங்கரனின் இளையோனே

சங்கரனும் நாரணனும் ஒன்றிணைந்த சந்நிதியில்
அன்னையவள் அருள் சுரக்க நாடிவரும் அடியவரை
தேடி வந்து இருள் நீக்க ஆறு பொறியாக வந்தாய்
ஆறாகிக் கரையாகி ஆற்றங்கரை வேலாகி
ஆலமிலை அமுதாகி பூவரச நிழலாகி
வேலாகி வேழமுகன் பின்நிற்கும் பெருவடிவே
காலாகிக் கோலாகி அற்புதங்கள் பல காட்டி
நீயாகி நானாக்கி நின்றருளும் நிர்மலனே

தானாக்கி தயைபுரிய தொண்டைமான் ஆற்றருகே
வீதி ஓர மடங்களிலே விருந்துண்ணும் அடியராகி
அன்பரோடு அருகமரும் ஆரமுதே வேலழகா
சோர்ந்து வரும் அடியரையும் சார்ந்து நின்ற தேவரையும்
காக்க என்று காலடியும் தந்த பெரும் கருணையே
காவடிகள் மத்தியிலே காட்சி தர வருபவனே
காலடியே துணை எனக்கு காலங்கள் உள்ளவரை
காத்து நிற்பேன் வேற்கரணிக் குளத்தருகே வேலழகா
வள்ளி தெய்வ யானையுடன் வல்வினைகள் தீர்க்க என்று
உள்ளம் என்னும் கோவினிலே உணர்வென்னும் ஊஞ்சலிலே
மெள்ள மெள்ள ஆடிடுவாய் மேன்மையெல்லாம் நிறைந்தவனே
துள்ளி வரும் எழில் உருவே தொடர்ந்து வரும் நல்லிசையே
அள்ள அள்ளக் குறையாத ஆனந்தமே வந்திடுவாய்
கோபமில்லா உள்ளத்திலே கொஞ்சி நிற்கும் குமரனே
பாபமில்லா நல்லெண்ணத்தை தூபதீப மாக்கிடுவேன்
ஐந்து பெரும் தொழில் வல்ல ஆதி சக்தி பாலகனே
நெய்வேத்யம் காட்டிடுவோம் நாமுமக்கு அடிமையப்பா
கல்ப கோடிக் காலமெல்லாம் கருணை வெள்ளம் ஆனவனே

சொற்பூவால் அர்ச்சனைகள் தோத்திரங்கள் பாடிடுவேன்
பற்பலவாய் எண்ணமிடும் பாபிமனச் சிந்தனையை
கற்பூரமும் ஆக்கிடுவேன் கர்வமதில் எரிந்திடுமே . . .
முருகா . . . முருகா . . .முருகா . . .

**********

**ஓம் மங்களம்** ஓங்கார மங்களம், ஓம் சரவணபவ குகாய மங்களம்
-சந்நிதி அருளே மங்களம்

ச மங்களம் சகார மங்களம்
சர்வ மங்களம் ஈட்டும் குரவே மங்களம் (மங்களம்)
ர மங்களம் ரகார மங்களம்
ரக்ஷித்தருள வந்த குரவே மங்களம் (மங்களம்)
வ மங்களம் வகார மங்களம்
வல்வினைகள் தீர்க்க வந்த குரவே மங்களம் (மங்களம்)
ண மங்களம் ணகார மங்களம்
எண்ணங்களில் நிறைந்தருளும் குரவே மங்களம் (மங்களம்)
ப மங்களம் பகார மங்களம்
பள்ளம் மேவி உள்ளம் நிறை அருளே மங்களம் (மங்களம்)
வ மங்களம் வகார மங்களம்
வருமுன்னே வரம் தரும் வேலோய் மங்களம் (மங்களம்)

சங்கராய சங்கராய சங்கராய மங்களம்
சங்கரி மனோகராய சாஸ்வதாய மங்களம்
ஐங்கராய ஷண்முகாய ஐயப்பாய மங்களம்
ராதா கிருஷ்ண மங்களம் சீதா ராம மங்களம்
ஆஞ்சனேய மங்களம் எங்கள் ஐயாவுக்கு மங்களம்
ஆதி சக்தி அம்பிகைக் கனந்த கோடி மங்களம்
அருகிருக்கும் வள்ளி தெய்வயானைக்கும் மங்களம்
ஜோதி சக்தி வேலவர்க்கு வேண்டுமட்டும் மங்களம்
பூவரச மரத்தடியின் புண்ணியர்க்கு மங்களம்

வெற்றிலையை அம்பாக்கிய சிகண்டியர்க்கு மங்களம்
கதிர்காமப் பூசை கண்ட கதிர்காமா மங்களம்
அவர் வழியே வந்த அன்பர் அனைவர்க்கும் மங்களம்
பாமாலைச் சூட்டும் அந்த பாவலர்க்கு மங்களம்
பூமாலைச் சாற்ற வந்த பூக்காரர் மங்களம்
தொண்டுக்கென்று வந்த அடியர் அனைவர்க்கும் மங்களம்
தீபமேற்றி வணங்க வந்த சிறுமியர்க்கு மங்களம்
மாவிளக்கு ஏற்றுபவர் மனைவாழ மங்களம்
சந்தி காலப் பூசை செய்த வீரபாகு மங்களம்
சிவலிங்கப் பூசை செய்த சரவணாய மங்களம்
காலடியே தந்த கார்த்திகேயனே மங்களம்
சந்நிதிக்கு வந்தமர்ந்த தெய்வர்கட்கு மங்களம்
ப்ரம்ம விஷ்ணு மகாதேவ பரப்பிரம்ம மங்களம்
சுகப்பிரம்மமாய் அமர்ந்த வேற்படைக்கு மங்களம்
குறுமுனியாம் அகஸ்தியர்க்கும் ஔவையர்க்கும் மங்களம்
சந்நிதியில் வாழும் காவல் தெய்வங்களே மங்களம்
இடும்பனுக்கும் மங்களம் சிவ கணங்களுக்கும் மங்களம்
வாய்கட்டிப் பூசை செய்யும் பரம்பரைக்கும் மங்களம்
அவர் எடுக்க நீ போடும் திருநீறே மங்களம்
ஆலமிலை அமுதும் அபிஷேகத்தீர்த்தம் மங்களம்
தலவிருக்ஷம் மங்களம் வேற்கரணி மங்களம்
வல்லியாறும் மங்களம் வெற்றிவேலன் மங்களம்
கந்தனே மங்களம் குமரனே மங்களம்
முருகனே மங்களம் முத்துக் குமரனே மங்களம்
ஷண்முகா மங்களம் சரவணா மங்களம்
கதிர்காமா மங்களம் கதிர்வேலா மங்களம்
அமரர் குறைதீர்க்க அப்பன் கண்ணிலே பொறியாகி
சரவணத்தில் தோன்றியுமே சந்நிதிக்கு வந்தமர்ந்த
ஸ்ரீ செல்வச் சந்நிதியின் வேலவர்க்கு மங்களம்
சாமி ஐயா மங்களம் சற்குருவே மங்களம் !

சிவநெறியும் அடியவரும் சேர்ந்து வாழி,
திருமறையும் செந்தமிழும் சேர்ந்து வாழி
புவனமெலாம் அந்தணரும் ஆவும் வாழி,
போற்றுமுயர் சேவலொடு மயிலும் வாழி
நவவீரர் நலம் வாழி வடிவேல் வாழி
ஞான குஞ்சரி வள்ளி வாழி வாழி
தலமோங்கு தொண்டைமான்ஆற்றூர்ச் செல்வ
சந்நிதி வேலவர் திருத் தாள் வாழி !

ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறு செய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்சை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீர் அடியாரெல்லாம்!!!

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலா(து) உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்தவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம் !

*****************

சந்நிதி வேலே சஞ்சலம் தீர்ப்பாய்
சந்நிதி வேலே சங்கடம் தீர்ப்பாய்





## சந்நிதியான் கூட்டுப் பிரார்த்தனை மலர்

**பிள்ளையார்**

ப்ரபோ கணபதே ! பரி
பூரண வாழ்வருள்வாயே
சார்ந்து வணங்கித் துதி பாடி யாடி உந்தன்
சன்னிதி சரணடைந்தோமே.
சாந்த சித்த சௌபாக்கியம் யாவையும்
தந்தருள் சற்குரு நீயே.
ஆதி மூலகணநாத கஜானன
அற்புத தவள ஸ்வரூபா
தேவ தேவ ஜய விஜய விநாயக
சின்மய பரசிவ தீபா

தேடித் தேடி எங்கோ ஓடுகின்றார் - உன்னை
தேடிக்கண்டு கொள்ளலாமே - உள்ளே
தேடிக்கண்டு கொள்ளலாமே.
கோடி கோடி மதயானைகள் பணிசெயக்
குன்றென விளங்கும் பெம்மானே
ஞான வைராக்ய விசார ஸார ஸ்வர
ராக லய நடன பாதா
நாம பஜன குண கீர்த்தன நவவித
நாயக ஜய ஜகன்னாதா !

பார்வதி பால அபார வார வர
பரம பகவ தவதரணா
பக்த ஜனசுமுக ப்ரணவ வினாயக
பாவன பரிமள சரணா **(அகஸ்தியர் பாடல் )**

***************

**கைத்தல நிறைகனி யப்பமோ** டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
கற்பக மெனவினை கடிதேகும்

மத்தமும் மதியமும் வைத்திடு மரன் மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே !
**(அருணகிரிநாதர் திருப்புகழ் )**

*************

**தச்சகொல்லை நாயகா என் அச்சம் தீர் விநாயகா**
மிச்சமான வாழ்நாளில் உன்னை நான் உணர்வதற்கு

மாயையும் ஐம்புலனும் சிந்தையைக் கலக்குதய்யா
கடமைதனை முடிக்க காலம் தான் காத்திடுமோ
அத்தனையும் முடிந்தபின்னே உண்மைதனை உணர
உன் துணை முன் நின்றால் என் வினை அகலாதோ

வேதாந்தம் படித்ததினால் உண்மை நிலை புரிந்திடுமோ
உணர்ந்த பின்னாலே இங்கே உரைப்பதற் கெவருமுண்டோ
உரைப்பவர் எல்லாம் இங்கே உண்மைதனை உணர்ந்தவரோ
உன் தாள் பணிந்து நின்றேன் குருவாக வந்திடையா

தச்சகொல்லை நாயகா என் அச்சம் தீர் விநாயகா
தொண்டைமானாற்றிலே தம்பியோடு துணைநிற்கும்

******************



**மாணிக்க விநாயகப் பெருமானே** - எங்கள்
காணிக்கை ஏற்று அருள்வாயே
ஆழி சூழ் இலங்கையின் வட கரையில்
அழகாய் சந்நிதியில் அமர்ந்தவரே

கணநாதன் தன்னை அடியவர்கள்
கண்களில் கண்டு களித்தனரே
கானமும் வீணையும் இசைத்தனரே
காப்புக் கடவுளைப் பணிந்தனரே

வள்ளியை வேலவன் மணமுடிக்க
ஆனையாய் வந்து அருள்பவரே
உன்னருள் வேண்டி அடி பணிந்தோம்
உவந்ததை அளிப்பாய் உமைமகனே

**********

**விக்னேஸ்வரா எங்கள் வினைதீர்க்கவா**
ஆதியே ஜோதியே மூலப்பரம் பொருளே

கடைக்கண் பார்வையொன்றால் கர்ம வினை தீருமென்றார்
நீ சிரித்து விட்டாலோ செல்வமெல்லாம் சேருமென்றார்
விதியென்றார் மதியென்றார் வேதனைக்கோ முடிவில்லை
கதியாக நீ வந்து கருணை மழை பொழியாயோ

ஓம் என்ற மந்திரத்துன் உருவாக வந்தாயே
பிரணவத்தின் உட்பொருளே சரவணன் மூத்தோனே
முன் வணங்கும் தெய்வமய்யா மூத்தவனே கணேசா
விக்கினங்கள் தனைக்களைந்து சொப்பனத்தைக்கலைத்து விடு

உச்சிமலைக்கோட்டையிலே உன் விளையாடல் கண்டோம்
கமண்டல நீரையே காவேரியாய் ஓடவைத்தாய்
மாம்பழத்துப் போட்டியினால் சண்முகனைப் பழமாக்கும்
ஞானப்பழமே உன் கால் பிடித்தேன் காத்தருள்வாய்

கலியுகத் தெய்வமே கந்தனுக்கு மூத்தோனே
மூஷிக வாகனனே மூலப்பொருளோனே
சித்தி விநாயக ஜெயமருள் போற்றுகிறேன்
சிற்பர கணபதே நற்கதியும் தந்தருள்வாய்

************

**வைகுண்டப் பிள்ளையார்**

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்
நோக்குண்டாம் மேனி நுடங்காமல்
வல்வைவாழ் வைகுண்டப் பிள்ளையாரை
வணங்கி நின்றால் வினை பறந்தோடுமே!

சைவமும் வைஷ்ணவமும் ஒன்றென்பதை
இந்து மதத்தின் இரு கண்ணென்பதை
எடுத்து இயம்பத் திருவுள்ளம் கொண்டோ
நீ வைகுண்டப் பிள்ளையாராய் மாறினாயோ!

சிவலோக நாயகனின் சிரேஷ்ட மைந்தா
நீ வைகுண்டம் போன மர்மம் ஏதையா
மாயவனை வணங்கமுன் உன்னைத் துதித்தால்
மாயையெல்லாம் போக்கிடுவாய் என்று கொள்ளவோ!

பிள்ளையாரோ பிள்ளையாரோ வல்வைவாழ் பிள்ளையாரோ
வல்வினைகள் தீர்க்க வந்த வைகுண்டப் பிள்ளையாரே
எல்லையுண்டோ அன்பினுக்கு வைகுண்டப் பிள்ளையாரே
எம்மையாளும் பிள்ளையாரோ வைகுண்டப் பிள்ளையாரே!

***************

**வேவில் பிள்ளையார்**

வேவில் பிள்ளையாரே கோவில் கொண்ட தேவா
வாழ்வில் வளம் தந்து சாவிலும் துணை நிற்பாய்!

விநாயகன் துணை நின்றால் வினைப்பயன் தீருமென்றார்
வினாக்களே விடை பகரும் கனாக்களும் கரைந்துவிடும்
அனாத ரக்ஷசகனின் கடைக்கண் பார்வையினால்
அறம் பொருள் இன்பம் வீடு அத்தனையும் வந்து சேரும்!

இளமையிலே நாம் விளையாடும் பொம்மையன்றோ
காளைப் பருவத்தில் வேளையோ போதவில்லை
முதுமை வந்தடைந்தால் ஏக்கத்தால் சாகின்றோம்
உன்னை நினைப்பதற்கு எங்கெமக்கு நேரமையா

இப்படியான இப் பூவுலக வாழ்வினிலே
பருவங்கள் மாறிடவே கோலங்கள் மாறிடுமே
முதுமைப் பருவத்தில் உன் நினைவு முன்னிற்க
இப்போதே கேட்டு விட்டேன் எந்தனுக்கு வரம் தருவாய்!

************

**நெடியகாட்டுப் பிள்ளையார்**

நெடியகாட்டையா நின் அருள் வேண்டினேன்
நெஞ்சகத்தே தோன்றும் நெடியகாட்டைக் கடக்க
( நெடியகாட்டையா)

உன்னை அடைவதற்கு கண் மூடி தியானித்தால்
நெடியகாடொன்று நெஞ்சத்தினுள் தெரியுதையா
நம்பிக்கை ஒன்றே தான் நல்லவழி காட்டுமென்றார்
தும்பிக்கை ஆண்டவனே துணை நிற்பாய் நெடியகாட்டில்

மாயாத மாயையை மாய்த்து வழி காட்டவும்
ஓயாத தொல்லைகள் ஓய்ந்த நிலை அடையவும்
சொப்பனம் தனைக் கலைத்து நித்திய நிலை பெறவும்
உன்னையே நம்பி வந்தேன் வல்லை வாழ் பிள்ளையாரே!

**********

**கப்பலுடைப் பிள்ளையார்**

கப்பலுடைப் பிள்ளையாரே தெப்பமாக வந்திடையா
பிறவிக் கடலினிலே தவிக்கின்றேன் காத்திடையா

வல்லை நகரையே வளமாக்கி வைப்பவனே
பாலத்து அருகில் நின்று பார் காக்கும் பாலகனே

கடலில் தொழில் செய்வோருன் கருணையை வேண்டியதால்
கரையில் நின்றாயோ காலமெல்லாம் காத்து நிற்க
இக்கரையில் நின்று நீ அக்கறையும் கொண்டதினால்
அக்கரையில் சேர்ப்பாய் என்று ஓடோடி வந்தேனையா

முன் வணங்கும் தெய்வமையா மூத்தவனே கணேசா
மேலாக நின்றதினால் வினாயகர் என்றாரோ
ஓம் என்றபிரணவத்தின் உருவே உனதையா
ஓம் என்று ஒலிப்பதினால் யானைமுகம் கொண்டாயோ

பிரமாண்டம் அத்தனையும் உன்னுள்ளே இருப்பதினால்
தொப்பை வயிறொன்றை உன்னுடையதாக்கிவிட்டார்
உன் முன்னே இருக்கின்ற மோதகங்கள் உலகங்களாம்
அத்தனையும் உண்பதினால் நீயே முதல்வனாம்

இத்தனை பெரிய உருக் கொண்ட நீ எப்படியோ
மூஞ்சூறை வாகனமாய்க்கொண்டாயோ - இது தகுமோ
மூஞ்சூறு மேலே நீ ஏறிய போதினிலே
இலேசாகவும் இருப்பாய் என்பதுவோ தத்துவம்!

ஓங்காரத்தில் மூலாதாரம் குண்டலினி சக்தியாகி
குடுகுடு குறுகுறென்று மேலே எழும்புவதால்
மூஞ்சூறின் ஓசையும் அதுபோல் இருப்பதினால்
மூஞ்சூறை வாகனமாய்க் கொண்டாரோ உந்தனுக்கு

*************************

**நறுவிலடிப் பிள்ளையார்**

நறுவிலடியானே நலங்கள் கொடுப்போனே
நானோ உன் காலடியில் காலமெல்லாம் காத்திருப்பேன்

வல்வையம்பதியிலே வீதியெல்லாம் கோவில் கட்டி
உன்னையே முன் வைத்ததால் இடரெல்லாம் தீர்க்கின்றாயோ

அலை அலையாய் வரும் அத்தனை துன்பங்களும்
சிலைபோல நிற்கின்ற உன்னைத் துதிப்போர்க்கு
வலையிலே அகப்படா வண்ண மீன் போல
நழுவியே போய்விடுதே நாயகா நின் கருணையால்

சோமர் வளவிலே நான் வாழ்ந்த காலத்தில்
உன்னையே வணங்கிடவே ஓடோடி வருவேனே
அப்போது யான் செய்த அர்ச்சனைக்குப் பதிலாக
எல்லாமே தந்தாயே உன் கருணை என்னென்பேன்

எல்லாமே தந்தாலும் உன்னை நான் மறவேனையா
எப்படியோ இருந்த என்னை இப்படி நீ ஆக்கிவிட்டாய்
மூத்தவனே கணேசா! வரம் ஒன்று வேண்டுமையா
இறக்கும் தறுவாயில் உன் நினைவே தரவேண்டும்!

************

**கைதடிப்பிள்ளையார்**

கைதறிப் பிள்ளையோ நீ மெய்யறிவின் எல்லையோ
காலத்தின் கோலத்தால் கைதடிப் பிள்ளையான

வைத்தடி பணிவோரின் வல்வினையைத் தீர்ப்பதற்கோ
கைதடி ஆகினாயோ கைதறிப் பிள்ளையாரே

கள்வர்கள் கவர்ந்து உனை மண்ணில் மறைத்தனரோ
திரும்பி வந்துனைத் தேட விரும்பி நீ மறைந்தாயோ
குடிகொண்ட இடத்திலே மண் வெட்ட வந்தவனின்
மண்வெட்டியால் உன் கைதறிபட்டதோ . . .
குருதி வழிந்தோடிடவே உன் முழு உரு கண்டனரோ
கும்பிட்டு நின்றவரின் குறை தீர்க்க நின்றாயோ

உன்கையே துணையென்று உன்னடி துதிக்கையிலே
கைதறிப்பிள்ளையென்றால் கலங்கிடுவார் என்றெண்ணியோ
கைதடி என்றால் மனத்தே வைத்தடி பணிதலென்று
சொல்லாமல் சொல்லி நின்றாய் வீரகத்தி விநாயகனே

அற்புதம் தனைக்கூற சொற்பதம் எனக்கேது
உப்பிட்டோர் குறைகளை நீ தப்பாது காப்பாயே
உப்பெடுத்து உண்ட உன் அடியவர் தப்பதனை
வந்தவர்க்கு மறைப்பதற்கு மழையாகிக் கரைத்தனையோ!
******************

**ஔவையார் அருளிய ஸ்ரீ விநாயகர் அகவல்**

சீதக்களபச் செந்தாமரைப் பூம்
பாதச் சிலம்பு பல இசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வண்ண மருங்கில் வளர்ந்தழகேறிப்பப்
பேழை வயிறும் பெரும் பாரக் கோடும்

வேழமுகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சுகரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்

இரண்டு செவியும் இலங்கு பொன்முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழ் ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!

இப்பொழு(து) என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந்(து) அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல் ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து

குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம் இது பொருள் என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டி என் செவியில்

தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்(து)
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து

தலமொரு நான்கும் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறாதாரத்(து) அங்குச நிலையும்

பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுந் தறிவித்துக்
கடையில் சுழிவினைக் கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணுன்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்

குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழ மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்து மூண்டெழ கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறிவித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்

குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற் சக்கரத்தின் உறுப்பையும் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூட்சமும்
எண்முக மாக இனிதெனக்(கு) அருளிப்

புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரி எட்டு நிலையும் தெரிசனப் படுத்தி

கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக்(கு) அருளி
என்னை அறிவித்(து) எனக்கருள் செய்து

முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி இரண்டுக்கும் ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்(து) அழுத்தி என் செவியில்

எல்லை யில்லா ஆனந்தம் அளித்(து)
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்க்

கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும் பொருள் தன்னை
நெஞ்சக் கரத்தின் நிலையறிவித்துத்

தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக! விறைகழல் சரணே!

***************

**சிவன்**

வல்வையம்பதி வாழ் வைத்தீஸ்வரனே
தொல்லையெலாம் தீர்க்கும் தென்னாடுடை சிவனே!

எல்லையில்லாப் பேரின்ப வீட்டை அளிப்பவனே
வல்லமை யெலாம் தந்து ஒளியூட்டி வழிகாட்டும்

மாதங்களில் சிறந்த மார்கழித் திங்களிலே
திருவாதிரை நாளில் வல்வையில் நடராசன்
திருநடனக் கோலம் செப்புதற்கு வார்த்தையுண்டோ
வேறெங்கும் காணா திவ்ய தரிசனம் வல்வையிலே

ஆறுகாலப் பூசை இங்கு அயராது நடப்பதாலும்
ஆகம விதிமுறைகள் அத்தனையும் அனுஷ்டிப்பதால்
சிவபுரம் என்று வல்வைக்கோர் சிறப்புப் பெயருண்டு
அம்மையும் அப்பனும் (இங்கே) அருகிருந்தருளுகின்றார்

பவசாகரக் கடலில் தத்தளித்துத் தவிக்கின்றோம்
மாயையின் பிடியினாலே பித்துப்பிடித் தலைகின்றோம்
சித்தம் தெளிய ஓர் வைத்தியம் செய்வாயோ
சிற்றம்பலத்தவனே வைத்தியநாதனே!





## சிவபுராணம்

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமமாகி நின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவனடி போற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பன்யான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்

பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்கு
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி

நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேசஅருள் புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே
காக்கும் எங்காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணார் அமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி யறுப்பானே ஓவென்று

சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

**திருச்சிற்றம்பலம்**

***************

**ஈழத்து ஈஸ்வரங்கள்**

முன்னேஸ்வரா! கோணேஸ்வரா! நகுலேஸ்வரா!
பக்த ஜனப்பிரிய கேதீஸ்வரா! . . .திருக்கேதீஸ்வரா
பாலாவி சஞ்சாரா . . .பரமேஸ்வரா
கௌரி அம்ப நேசா கேதீஸ்வரா . . .

****************

**சர்வம் சிவமயமே** சர்வம் சிவமயமே சர்வம் சிவமயமே

சச்சிதானந்தமாய், சிந்தையில் நிறைந்த, சர்வேஸ்வர சிவனே
கச்சி ஏகம்ப கருணாகரனே கனக சபைக் கரசே
சிற்பர வியூக பொற்பதம் காட்டும் பொன்னம்பலவாணா
அற்புதமே அமுதானவனே எங்கள் அண்ணாமலையரசே!
(சர்வம் சிவமயமே)

ஆதியந்தமில்லா ஆண்டவனே எங்கள் ஆதி அருணாசலா
ஜோதியே ஜோதிப் பிழம்பானவனே ஜம்பு லிங்கேஸ்வரா
நாதியில்லாதவர் நயந்து உறவாடும் நாகலிங்கேஸ்வரா
பாதியில் சக்திக்கு இடமளித்தவா இமயமலைவாசா
(சர்வம் சிவமயம்)

சிற்றம்பலத்திலே பொன்னம்பலம் காட்டும் சின்மய
சிவபெருமானே
காளகஸ்தியில் காற்றோடு உறவாடி காட்சியும் தருபவனே
காஞ்சி புரத்திலே அன்னை மகிழ்ந்திட மண்ணைப்
பொன்னாக்கினாயே
மதுரையில் அமுதைப் பொழிந்திடும் சோமசுந்தரேசா
(சர்வம் சிவமயம்)

இசையால் மகிழ்ந்து இராவணனை நீ ஈஸ்வரன் ஆக்கினாயே
இசைந்து அசைந்த தென் கயிலாயமாம் கோணமாமலையானே
சிவபுரமான இலங்கையிலே ஆயிரம் கோயில் கொண்டவனே
தவத்தால் மகிழ்ந்து கேட்டவரம் கொடுக்கும் தென்னாடுடை
சிவனே
(சர்வம் சிவமயம்)

**************

**வேலவன் பூஜிக்கும் வேதப் பொருளோனே**
ஆற்றங்கரை அமர்ந்த அண்ணாமலை அரசே!

மூலவர் ஸ்தானத்தில் லிங்கோற்பவமோ
நலம் தர அருகமர்ந்த நமச்சிவாயமே!

தூது செல்லும் வழியினிலோர் சந்திகாலப் பூசையோ
வீரபாகு தேவருக்கோர் வல்லியாற்றம் கரைஓரமோ
தென்பதி ஏகமுன்னே தேவருக்கோர் அபயகரம்
தொண்டைமான் ஆற்றருகே தொழுவழி தோன்றிடுமோ

தூது நீங்கி வாது செல்லும் வழியிலும் இத்தலத்தில்
வேலவனை தேவர்கள் வேண்டி நின்ற வேளையிலும்
அசுரரின் அழி வுதனை அவன் அறிவிக்கு முன்னே
அப்பனை வேலன் இங்கே பூஜித்து நின்றானே!

நான் வணங்கும் ஸ்தலத்திலே என்னை வந்தடைவோர்க்கு
நான் என்ற அகங்காரம் தானாக அழியுமென்றாய்
மான் வள்ளி வாசலருகே திருமாலுடன் இணைந்து
சிவநாக தம்பிரானாய் திருக்கோலம் தனைக்காட்டும் . . .
**************

**லிங்காபிஷேகம்**
இமயமலை உச்சியிலே இன்பமயமானவனே!
சமயமறிந்தெம்மை சிவமாக்க வந்த சர்வேஸ்வரனே!
ஆதி சிவமாகி அருள வந்த பரம்பொருளே
ஏதினிப் பயம் எமக்கு உன்னைத் துதிப்போர்க்கு
அபிஷேகித்து ஆராதிக்க வரும் எம்மை
ரக்ஷித் தருள்வாயே சிவலோக நாயகனே.

முன்னேஸ்வர முதல்வனுக்கு முதலாம் ஜாமம் பூசை கண்டு
கேதீஸ்வரக் கோமானுக்கு இரண்டாம் ஜாமத்தில் அபிஷேகம்
கோணேஸ்வர நாதனுக்கே மூன்றாம் ஜாமத்தில் தீபாஞ்சலி
நகுலேஸ்வரத்தானுக்கு நாலாம் ஜாமத்தில் நாமாவளிஎல்லாம்
பாடிப்பாடி
வைத்தீஸ்வர நாதன் வைகறைப் பூசை கண்டால்
தம் வாழ்வு சிவபதமாகுமென்ற எண்ணமோ உன் அடியருக்கு

காளகாஸ்தி அமர்ந்தவனே அடியர் கவலையெலாம் காற்றாக...
அண்ணாமலைத் தீபம் காட்டி அஞ்ஞான இருளைப் போக்கி...
பொன்னம்பலக் காட்சியெல்லாம் சிதம்பரத்தில் சித்திக்க
வைத்து...
ஆனைக்காவில் அருளையெல்லாம் ஜலக்கிரீடை ஆடவைத்து
காமாட்சி உனை வணங்க மண்ணையே சிவமாக்கி
காசியிலே நேசமுடன் எம்மை கட்டி அணைக்க வந்தவனே!

லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனின்
லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்

ஹரஹர சம்போ சிவ சிவ சம்போ
ஹரஹர சம்போ சிவ சிவ சம்போ

திவ்யமான தீர்த்தமெல்லாம், தினமும் தேடும் அடியவர்க்கு
கிட்டவேண்டும் என்றோ கங்கையை ஜடாமுடியில்
கொண்டபின்னே
பாலித்தருள வேண்டுமென்றோ பாலாவிக்கரையானாய்
பாலாவிக்கரையினிலே பக்தரெல்லாம் கூடுகின்றார்

லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனின்
லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

மங்களங்கள் தருபவனே சர்வ மாங்கல்யேயின் சரிபாதியே
மஞ்சலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
மஞ்சலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தஞ்சைக் கோவில் வாழ்பவனே தணித்திடுவாய் வினை வேட்கை
தண்ணீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தண்ணீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பாலாவிக்கரையினிலே பக்தரெல்லாம் கூடுகின்றார்
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பாலாகும் மனத்தில் நெய்யூட்டி மெய்காட்டி மிளிர்பவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பாபிகளைக் காக்கவென்றோ பாலில் குளிக்க வந்தவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தனித்து நின்ற இனியவனே தக்கனின் மருகோனே
தயிரால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தயிரால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

நெக்குருகும் அடியவரின் நெஞ்சமதில் நிறைந்தவனே
நெய்யாலபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
நெய்யாலபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தித்திக்கும் செந்தமிழாய் தென்னகத்தில் மிளிர்பவனே
தேனால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தேனால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தஞ்சமென்ற அடியவரின் நெஞ்சமதோ நின் கோவில்
பஞ்சாமிர்தபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பஞ்சாமிர்தபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

இளகுதப்பா கல்மனசு இனியவனே உனைக்காண
இளநீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
இளநீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

கைலயங்கிரியினிலே கனக ஊஞ்சல் ஆடிடுவாய்
கரும்பால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
கரும்பால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

விபூதியிடும் அடியவரின் வினைகளெல்லாம் தீர்ப்பவனே
விபூதி அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
விபூதி அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

சந்திரனும் சூரியனும் தந்த நிறம் சந்தணமோ
சந்தணாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
சந்தணாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

அன்னையின் குங்குமத்தால் மாங்கல்யம் தழைப்பதினால்
குங்குமாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
குங்குமாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தீபச்சுடராய் தெரிசனம் தந்து, தீர்க்கமான முடிவைத் தந்து
திருவண்ணாமலை மேலே கார்த்திகைத் தீபமான
தீபாராதனை காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தீபாராதனை காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பஞ்சபூத அதிபதியே பத நிலையைத் தருவாயே
பன்னீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பன்னீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

வாசனைத் திரவியத்தில் வந்து மனம் லயிப்பவனே
வாசனாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
வாசனாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

******

**சித்தத்துள் சிவமுமாகியே**
சத்தத்துள் ஓங்காரமாய்
சச்சிதானந்தமான பெருமானே
அணுவுக்குள் அணுவுமாகியே
அண்டங்களில் இயக்கமாகியே
நின்ற எங்கள் நிர்மலனே லிங்கேஸ்வரா
எங்கும் நிறைந்தவனே
எல்லாம் அறிந்தவனே
எல்லாமாய் ஆனவனே ஆதிசிவமே
கல்லினுள் தேரைக்கும்
கருப்பை உயிருக்கும்
கனிந்து அருள் புரிபவனே சதாசிவமே
சுடலை ஆண்டி ஆனவனே
கடலில் வந்த விஷமும் உண்டாய்
கவலை எல்லாம் தீர்ப்பவனே கைலாசவாசா
இமயமலை இருப்பிடமோ
பார்த்து அங்கே வதியணுமோ
பார்வதியாள் நாயகனே பரமேசா
கங்கையைத் தலையில் கொண்டு
கங்காபிஷேகம் கொண்டு
கற்பூரமாயுருகும் கருணாகரனே
பார்க்க வந்த பாருலகில்
பாவி யான் சிக்கிவிட்டேன்
மீட்டெனக்கு பரமபதம் தந்தருள்வாயே
******

**சிவன் ஆராதனை**

சிவ சிவ சிவ சம்போ ஹர ஓம் ஹர ஹர ஹர சம்போ
சிவ சிவ ஹர ஹர ஹர ஹர சிவ சிவ சம்போ சங்கரா

தென்னாடுடை சிவனே நீஎந் நாட்டவர் இறைவா
தென்றலாய் வந்து தெரிசனம் தந்து பேரின்ப வீடருள்வாய்!

இமயமலை தன்னில் இறைவா இன்பமயம் ஆனவனே
சமயமறிந்து தடுத்தாட்கொள்ள வந்தவனே இறைவா!

சிவாயநம என்று தினம் உனை சிந்தையில் கொண்டார்க்கு
அபாயமேதும் அணுகாதிருக்க அனுக்கிரகம் செய்பவனே!

அண்ணாமலையருகே தீப ஜோதியாய் காட்சி தந்து
காளகாஸ்தியிலே இறைவா காற்றினில் கலந்தாயே

தில்லையம்பதியினிலே நீ சிதம்பர ரகசியமானாய்
தொல்லையெலாம் தீர்க்க வல்வையில் வைத்தீஸ்வரன் ஆனாய்!

திருவானைக்காவினிலே நீஜலக்கிரீடை செய்து
காஞ்சித் தலத்தினிலே நீ மண்ணாய் மிளிர்ந்தாயே!

பாலாவிக் கரையினிலே பாபம் தீர்க்கும் கேதீஸ்வரத்தானே
முன்னேஸ்வரத்தினிலே சிவனே முன் நின்று அருளுகின்றாய்!

நகுலேஸ்வரத்தினிலே நடராஜ நர்த்தனம் ஆடிவிட்டு
கோணமாமலைதானே சிவனே தென் கயிலாயம் என்றாய்!

அடியவர் மனங்களிலே நித்தம் ஆனந்த தாண்டவனே
சிவராத்திரி நந்நாளில் எங்கள் சிந்தையில் நிறைந்தவனே!

மங்கள ஆராத்தியில் நீ மகிழ்வுடன் அருள் தரவே
தங்கிட வந்திடுவாய் சிவனே மங்களம் தந்தருள்வாய்!

சிவ சிவ சிவ சம்போ ஹர ஓம் ஹர ஹர ஹர சம்போ
சிவ சிவ ஹர ஹர ஹர ஹர சிவ சிவ சம்போ சங்கரா
******

**சக்தி**
**ஸ்ரீ லலிதா நவரத்தின மாலை**
ஞான கணேசா சரணம் சரணம்
ஞான ஸ்கந்தா சரணம் சரணம்
ஞான சற்குரு சரணம் சரணம்
ஞானா னந்தா சரணம் சரணம்

ஆக்கும் தொழில் ஐந்து அரன் ஆற்ற நலம்
பூக்கும் நகையாள் புவனேஸ்வரிபால்
சேர்க்கும் நவரத்தின மாலையினைக்
காக்கும் கண நாயக வாரணமே

கற்றும் தெளியார் காடே கதியாய்
  கண்மூடி நெடுங்கன வானதவம்
பெற்றும் தெரியார் நிலை எண்ணில் அவம்
  பெருகும் பிழையேன் பேசத் தகுமோ
பற்றும் வயிரப் படைவாள் வயிரப்
  பகைவர்க்கு எமனாக எடுத்தவளே
வற்றாத அருட்சுனையே வருவாய்
  மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

மூலக் கனலே சரணம் சரணம்
  முடியா முதலே சரணம் சரணம்
கோலக் கிளியே சரணம் சரணம்
  குன்றாத ஒளிக் குவையே சரணம்

நீலத் திருமேனியிலே நினைவாய்
   நினைவற் எளியேன் நின்றேன் அருள்வாய்
வாலைக் குமரீ வருவாய் வருவாய்
   மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

முத்தேவரும் முத்தொழில் ஆற்றிடவே
   முன்னின் றருளும் முதல்வீ சரணம்
வித்தே விளைவே சரணம் சரணம்
   வேதாந்த நிவாஸினியே சரணம்
தத்தேறிய நான் தனயன் தாய் நீ
   சாகாத வரம் தரவே வருவாய்
மத்தேறு ததிக்கிணை வாழ்வுடையேன்
   மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

அந்தி மயங்கிற வான விதானம்
   அன்னை நடம் செய்யும் ஆனந்த மேடை
சிந்தை நிரம்ப வளம்பொழி வாளோ
   தேம் பொழிலா மிது செய்தவளாரோ
எந்த இடத்தும் மனத்தும் இருப்பாள்
   எண்ணுபவர்க்கருள் எண்ணமிகுந்தாள்
மந்திர வேத மயப் பொருள் ஆனாள்
   மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

காணக் கிடையா கதியானவளே
   கருதக் கிடையாக் கலையானவளே
பூணக் கிடையாப் பொலிவானவளே
   புனையக் கிடையாப் புதுமைத்தவளே
நாணித் திருநாமமும் நின் துதியும்
   நவிலாதவரை நாடாதவளே
மாணிக்க ஒளிக்கதிரே வருவாய்
   மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

மரகத வடிவே சரணம் சரணம்
மதுரித பதமே சரணம் சரணம்
சுரபதி பணியத் திகழ்வாய் சரணம்
சுதி ஜதி லயமே இசையே சரணம்
அரகர சிவ என் றடியவர் குழும
அவர் அருள்பெற அருள் அமுதே சரணம்
வரநவ நிதியே சரணம் சரணம்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

பூமேவிய நான் புரியும் செயல்கள்
பொன்றாது பயன் குன்றா வரமும்
தீமேல் இடினும் ஜெய சக்தி எனத்
திடமாய் அடியேன் மொழியும் திறனும்
கோமேதகமே குளிர்வான் நிலவே
குழல் யாழ் மொழியே வருவாய் தருவாய்
மாமேருவிலே வளர் கோகிலமே
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

ரஞ்சனி நந்தினி அங்கணி பதும
ராக விகாஸ வியாபினி அம்பா
சஞ்சல ரோக நிவாரணி வாணீ
சாம்பவி சந்திர கலாதரி ராணி
அஞ்சன மேனி அலங்கிருத பூரணி
அம்ருத சொரூபிணி நித்திய கல்யாணி
மஞ்சுள மேரு சிருங்க நிவாஸினி
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

வலை ஒத்த வினை கலை ஒத்த மனம்
மருளப் பறையாறு ஒலி ஒத்த விதால்
நிலையற் எளியேன் முடியத் தகுமோ
நிகளம் துகளாக வரம் தருவாய்
அலையற் அசைவற் றனுபூதி பெறும்
அடியார் முடிவாழ் வைடூரியமே

மலையத்துவசன் மகளே வருவாய்
மாதா ஜெய ஓம் லலிதாம்பிகையே

எவர் எத்தினமும் இசைவாய் லலிதா
நவரத்தின மாலை நவின்றிடுவார்
அவர் அற்புத சக்தி எலாம் அடைவார்
சிவரத்தினமாய் திகழ்வார் அவரே
ஜெயசிவ ரமணி குருகுகஜனனீ ஜெயமனவன ஹரிணி
ஜெய ஓம் ஸ்ரீ மாதா ஜெய ஜெய ஜெகன் மாதா
மாதா ஜெய ஓம் ஸ்ரீ மாதா - மாதா
ஜெய ஜெய ஜெகன் மாதா ******

**சரஸ்வதி**

அம்மா உன்னடி போற்ற அழியாத கவி தந்து
அறிவுக்குள் அருளேற்றுவாய்
அகரமாய் வந்தென்னுள் அனுபவத் தெளிவீந்து
ஆட்கொண்டு வழி காட்டுவாய்

சும்மா யிருக்கின்ற சுகமான சுகமீந்து
சுழி முனையில் நின்றாடுவாய்
சுத்தமாய்ச் சுடர்கின்ற சூரியக் கவியாக்கி
ஜோதியென் றெனை யாக்குவாய்

இம் மாநிலத்திடை எனை ஈன்ற கலைவாணி
என்னுள் இருந்தொளிருவாய்
என் நாவிடைத் தங்கிப் பண்ணாயிரம் கூட்டி
இதயாசனம் அமருவாய்

இம் மாயை நீங்கவே பொன்வீணை மீட்டவா
இரு புருவ மத்தி தன்னில்
என்றும் நிலைக்கின்ற ஞானக் கலைவாணி
என்ஜீவ சரணங்களே

நற்கோல வாணியே சொற்கோலமாய் உனை - நான்
பாட வேண்டுமம்மா
நாதாந்த வீட்டினுள் நான் வாழும் இடமொன்றை
நீ காட்ட வேண்டுமம்மா

பொற் பாத கமலங்கள் பணிகின்ற நன்நேரம்
புகழ் வந்து சேர வாழ்த்து
பூக்கின்ற பொழுதெல்லாம் கவியோடு புலர்கின்ற
புலமையைத் தந்து வாழ்த்து

விற்பன்னராக்கி என் விரலிடையில் நின்றாடி
வீரியக் கவியருளுவாய்
வெட்ட வெளிதன்னில் ஒரு சுத்த வெளி காட்டியே
வெற்றிக்கு வழியருளுவாய்

சிற்றறிவில் உழலும் என் சித்தமதை மாற்றிடும்
சீர்குணச் செல்வி உமையே
சிற்றின்ப சேற்றினுள் சிக்காத பேரின்ப
ஜீவநன்மை நல்கவா

முன்னூறு ஜென்மமோ பின்னூறு ஜென்மமோ
முன் செய்த வினை என்னவோ
மூலமே நின்ற நின் முகவரியும் இல்லாது
மூழ்கிறேன் மூழ்குகின்றேன்

பொன் வீணை ஏந்தி நற் பூவாசனம் கொண்ட
பூங்கழல் தேடுகின்றேன்
புரியாது அறியாது பூமியின் புழுதியில்
பொலிவின்றி வீழுகின்றேன்

எவை வந்த போதிலும் எனையாளும் அம்மையே
எழில் வீணை தாங்கும் அம்மா
ஏற்றி வை போற்றி வை பூர்த்திவை தேற்றிவை
என் ஞானம் உன் ஞானமே

இவை தந்து அவையேற சுவையுள்ள தமிழ் ஈய்ந்து
எனையீன்ற வாணியம்மா
எனையாண்டு ஆண்டாண்டு காலங்கள் நான் ஆள
என் உள்ளம் நின்ற ஒளியே

புத்தகத் துள்ளுறை பூமகள் பாமகள்
புத்தியுள் பூத்த சித்தே
புகழோடு பூத்த நூறு தலமேவி நிற்கின்ற
பொற்பாத கமல சரணே

அத்தனாய் அம்மையாய் ஆனந்த குருவுமாய்
ஆன என் தெய்வ தேவி
அண்ட பகிரண்டமாய் ஆண்டாண்ட கோளமாய்
அமரு மென்றான தாயே

பந்தமும் சொந்தமும் பக்க துணையாகுமா பரி
தவித்தேன் அம்மையே
பரிசுத்த மில்லாத பாழ் நரகக் குழி மீள
பாமகள் பாத சரணே

அந்தமும் ஆதியும் எந்தனுக்கேது என்று
ஆதாரமாய் காட்ட வா
ஆனந்த பரமான மோனமே ஞானமே
அற்புதக் கலைவாணியே ---- (3) ( யாரோ )
*************

**சந்நிதியான் சரஸ்வதியாள்**

ஆக்கும் தொழிலரசி ஆனந்தக் கலைமகளே
வாக்கும் வளமருளும் வாணியே சரஸ்வதியே!
போக்கும் வரவுமில்லா புண்ணியமே பொற்பதமே
காக்கும் கணநாயக வாரணத்துடன் இணைந்து
ஆற்றங்கரை தனிலே அறுமுகனுக்கு உறுதுணையாய்
வீற்றிருக்கும் வெண்டாமரைச் செல்வியே - நீ
சந்நிதியான் வீதியோரம் சரஸ்வதி மண்டபத்தில்
காத்திருந்து அடியருக் கருளும் சகலகலாவல்லியே!
அபயகரம் காட்டும் அப்பன் சந்நிதியில்
உதயம் ஆகிடுமே உன் கருணை ஊற்றம்மா!
ஏட்டையும் மாலையையும் ஏந்தி நீ நிற்பதெல்லாம்
பாட்டையும் பொருளையும் பாவி யான் உணரவோ?
ஐங்கரனும் நல்வாணியும் இருபுறமும் இருக்கையிலே
சண்முகர்க்குத் தயக்கமேன் - சங்கரனும் நாரணனும்
தந்திடும் அருளெல்லாம் தேடி வரும் அடியர்க்கு
பாடிவரும் பாவலர்க்கு சங்கநிதி பதுமநிதி ஆகும்!
அடியவர் நாவிலே அரங்கேறும் வாணியம்மா!
என் நாவிலும் நீ என்றென்றும் என்னோடு!
தங்கிடம்மா தயாபரியே! வேலன் புகழ் யான் பாட!
பூக்கும் மலரிதழ்கள் பூமகளின் பூரிப்பால்
பாமலராய் மாறிடுமே பூவரச மரத்தடியில்!
*******

**ப்ரம்மனால் வந்த ஓர் எண்ணத்தை**
கிரமமாய் ஓர் வகைப்படுத்தியே
கவியாக்கி என்னையும் பாட வைத்தாய்
நாவிலே நிற்கும் என் நாயகியே!



வெள்ளைக் கமலத்தில் வீற்றிருக்கும் வாணி என்
உள்ளக் கமலத்தில் வீற்றிருந்தால் போதுமம்மா
கள்ளச் சிரிப்பொன்றை களிப்புடனே நீ உதிர
வெள்ளப் பெருக்குபோல் கவி பாடமாட்டேனா?

வீணையை மீட்டிவிட்டால் வேதனைகள் தீருதம்மா
சோதனையின் முடிவினிலே சாதனைகள் தோன்றுதம்மா
அக்கரையில் எனைக்காக்க அக்கறை நீ கொண்டுவிட்டால்
இக்கரையில் உன் துணை உள்ளவரை உண்டம்மா!

வாணி கலைவாணி ஞானத்தைத் தந்திடம்மா
பேணி நீ வளர்க்க வயதினிலே முதிர்ந்தாலும்
சேயாக நிற்கின்றேன் தாயன்பு தனை நாடி
கனியாக்க நின் கருணை நாயேனுக்கில்லையோ?

அறிவையும் ஞானத்தையும் அள்ளி நீ வழங்குதற்கு
ஏட்டையும் மாலையையும் ஏந்தி நீ நின்றபோதும்
வீணையின் நாத ஒலி கேட்டுவிட்டால் போதுமம்மா
வேறாக நின்றதெல்லாம் தானாகக் கூடுமம்மா.

இதயக் கமலத்தை மலராக்கிச் சாற்றிவிட்டால்
உதயம் ஆகும் அங்கே உன் கருணை ஊற்றம்மா
நாவிலும் பூவிலும் நிற்பவளே வாணியம்மா
சாவிலும் துணை நிற்க இப்போதே கேட்டுவிட்டேன்!

***********

**சர்வம் சிவமயமே அது சக்திமயம்**
சர்வம் சுபமயமே அது குகமயமே

பிள்ளையைத் தோற்றி காவலாய் வைத்தாள் அன்னையே
அவனை கஜமுகனாக்கி கணபதி ஆக்கினான் தந்தையே
அன்னை தந்தையை வலம் வந்து பழம் பெற்றானே-இவன்
ஞானப் பழமாகிப் பழனியில் நின்றெமைக் காத்தானே

ஓங்காரமாகி முன் வணக்கத்தைப் பெற்றானே-அவன்
ஓங்காரத்தையே அப்பனுக்கே உபதேசம்

ஆங்காரத்தை அழிக்க இருவருமே அவதாரம்
இருவரை வணங்கி சிவ சக்தியை நீ உணர்வாயே

சிவமும் சக்தியும் காலகாலமாய் இணைந்திருக்கும்-அதுபோல்
குகனும் சக்தியும் எந்நாளுமே பிரிவதில்லை
மூன்றும் இணைவது சோமாஸ்கந்த மூர்த்தமோ
இதை உணர்ந்தால் வாழ்வில் சோகங்கள் இனி ஏது

காமத்தை அடக்க நின்றவள் காமாட்சி காஞ்சியிலே
கண்பார்வை ஒன்றாலே சகலதும் கொடுப்பாய் மீனாட்சியே
நவயுக சக்தியாய் காக்க வந்தாய் முத்துமாரியே
அதன் பாதியாய் என்றும் பார்ப்பவன் தான் ஆதி சிவமே

மனத்தையும் சிவத்தையும் இணைக்க வந்தது மனித இனம்
அவன் மனத்தை அறுத்தால் மீண்டும் சிவமயம் ஆவானே
மாயையைக் காட்டி மனத்தை ஆள்பவள் சக்தியே
அந்த மனத்தையே சவமாய் ஆக்கிடுமே அந்த சிவமயமே

குகனுக்கு வேலைக் கொடுத்தாள் அன்னை, சிக்கலிலே
அதை மக்கள் வாழ வேலன் வைத்த இடம், செல்வச் சந்நிதியே
சக்தி தந்த தன் அன்னைக்கு சூட்டினான் புகழாரம்
அந்த லலிதா நவரத்ன மாலையை ஏற்றாள், அன்னையே
*************



**வீரமாகாளி வேண்டி நின்றேன் தாயே**
வேதனைகளைப் போக்கி வேண்டுவோரைக் காத்திடம்மா

தொண்டைமான் ஆறென்றால் முருகவேல் முன் நிற்கும்
முன் நிற்கும் அந்த வேல் நீ தந்த வேலன்றோ
வேலாயுதம் இங்கே வேதனையெலாம் போக்க
சூலாயுதத்தோடு சுற்றி நின்று காத்தருளும்

திரை கடலோடியும் திரவியம் தேடுகின்றார்
கடல்தனை நம்பியே கடும் தொழில் புரிகின்றார்
அலைவீசும் கடலிலே புயல்வீசும் போதெல்லாம்
தென்றலாய் வரவேண்டும் நம்பினோர் துயர் தீர்க்க
*******

**சந்நிதி தீரத்தில் ருத்ராபிஷேகம் காண**
வந்தவளே ஆதிபராசக்தி உமையே-நீ
ஆதி சிவனோடு ஆடிய ஆட்டத்தால்
அண்டங்கள் அனைத்துமே இயங்குதம்மா !

வேற்படை அருகினில் லிங்கோற்பவமாகி
நிற்பவளே காமாட்சி உமையவளே
நீ சிவனோடும் வேலோடும் இணைந்ததினால் இங்கு
மூலத்தில் முதல்வனோடு அமர்ந்தாயே

ஹோமத்தை கும்பத்தில் வேலவன் வைத்ததால்
வேண்டும் அடியவர்க்கு வழி காட்டவோ
ருத்ராபிஷேகத்தை நீ ஏற்க அடியரின்
குறைகளெல்லாம் இங்கே மறையுதம்மா !

மாம்பழப் போட்டியினால் பழனிக்கு வந்தவன்
மீண்டும் பெற்றோர்களின் ஆசி பெறவே
செந்தூரில் படைத்தளம் அமைத்த சேனாபதி
சந்நிதி தீரத்தில் வணங்கி நின்றான்

நின்றவனோடு நிரந்தரமாகவே
அருளை அள்ளித்தர வந்ததினால்
பெற்றவரை வணங்கிய வேலன் -- தேவர்க்கு
அபயகரம் இங்கே காட்டி நின்றான்

அன்னையிடம் வேலைப் பெற்றதினால் வேலன்
வேலாயுதனாய் இங்கே மாறினானோ
சூலாயுதம் இங்கே வேலாயுதமாய் மாற
அவுணரின் அழிவங்கே அம்பலமோ

அம்பலத்தரசனும் அரசியும் அமர்ந்ததினால் , நந்தி
தேவரும் வந்து பலிபீடத் தருகே
அமர்ந்தவரின் பக்திப் பரவசத்தால் அங்கு
படையோடு வந்தவன் வேற்படையாகினான்

அன்னையும் அப்பனும் அருளாசி வீசிட
தெய்வயானையோடு வேலன் தெரிசனமோ
தெவிட்டாத வேற்படைக் காட்சி யெல்லாம் காண
வாருங்கள் ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கே
*******************




**நயினை நாகபூஜணி**
**சிவத்தின் நெற்றியிலே** கனிந்து சிவந்தவளே
பார்த்து வதியவரும் பார்வதியே உமையே

நெஞ்சகத்தில் நினைத்திட புத்தியில் உறைபவளே
நயினையின் நாயகியே நாகபூஜணியே அம்மா!

நயினாதீவோரம் நீலத்திரைக் கடலோரம்
தக்கனின் யாகத்தீக்கு தன்னையே தந்த பின்னே
அறுபத்தி நாலு துண்டாய் ஆனவளே உமையவளே
நயினையில் ஓர் துண்டால் எமக்கருள நின்றவளே!

பாரதத்திலுன் சக்தி பீடங்கள் அறுபத்தி மூன்றிலே
அற்புதங்கள் ஆடல்கள் தினம் தினம் நடந்தாலும்
கடைக்கண் பார்வை ஒன்றால் எம்மையும் மறவாமல்
நயினையில் அரசாளும் நாயகி நாகபூஜணியே!

கைலாயக் காட்சி ஒன்றால் காலமெலாம் காக்க
காமாட்சியே உன் தவத்தால் மண்ணெல்லாம் பொன்னாக
எம்மைக் காக்க வென்றே நயினையில் நின்றவளே
நாகலிங்கேஸ்வரனின் பாதியே நாகபூஜணியே!

**சுட்டிபுரம்**

சுட்டிபுரத்தாயே எட்டி நிற்பதேனோ
கண்ணகையம்மா நின் புன்னகை காண வந்தேன்

மதுரைமா நகரையே எரித்த என் அன்னையே
என் வினை எரிப்பதற்கு ஏன் இந்தத் தாமதமோ!

கோவலன் வாழ்வினிலே விதி விளையாடியதால்
உன்னை மறந்து அவன் மாதவியைத் துணை கொண்டான்
மாயை அகன்றபோது கோவலன் தவறுணர்ந்து
மாதரசி உன்னோடு மீண்டும் வாழ வந்தான்.

செல்வமெல்லாம் அழிந்தபோதும் சித்தம் தெளிந்து நிற்க
நடந்த நாட்டினிலே தவழ மனம் இல்லாமல்
பாண்டிய நாடு சென்று மீண்டும் தொழில் புரிந்து
புது வாழ்வு தொடங்க என்ற சிந்தனைத் துணிவோடு

வறுமைக்கொடுமையால் உன் சிலம்பொன்றை விக்க என்று
கடைதனை அடைந்த போது காவலாளர் கைப்பற்ற
மாமன்னன் மயக்கத்திலே கள்வனென்று தீர்ப்புக் கூறி
சிரம் தனைக் கொய்தனரே அறம் தனை அழித்தனரே

செய்தி கேட்டதுமே செந்தணலாய் நீ மாறி
கள்வனோ என் கணவனென்று மன்னனோடு வாதிட்டு
தவறை உணர்ந்த மன்னன் தானாக மாண்டபோது
அரசியும் மாண்டாளே மாநகரையும் எரித்தாயே!
கற்புக்கரசியே கண்ணகியே உந்தனுக்கு
கோவில் கட்ட ஓர் மாமன்னன் கல் சுமந்தான்
உத்தமியே உன் நினைவால் சிலப்பதிகாரம் என்றோர்
காப்பியமும் கிடைத்ததம்மா உன் பெருமை எடுத்தியம்ப!



**தெல்லிப்பழை துர்க்கா**

துர்க்கையம்மா நானுன் பாதாரவிந்தத்தில்
நர்க்கதியைத் தந்தருள நாயகியே தாமதமேன்

தெல்லிப்பளையில் இன்றோர் புத்தொளி வீசிடவே
எல்லையில்லா மாந்தரின் இன்னல்களைத் தீர்க்கின்றாய்

உண்டு உடுத்துறங்க என்று நீபடைக்கலையே
என்றும் தனை உணர்ந்து உன்னை வந்தடைவதற்கே
சுயசக்தியும் கொடுத்தாய் நவசக்தியும் அளித்தாய்
அத்தனையும் பெற்றுவிட்டு தனக்கென வாழ்கின்றாரே!

நீயே நான் என்ற உண்மை நிலை உண்ராமல்
நானென்ற ஒன்றைத் தானாக ஏற்படுத்தி
அழியா உன் தன்மை தன்னுடைய தென்றெண்ணி
தனக்கே வாழ்கின்றார் தானே அழிகின்றார்

அசுரத்தன்மை இங்கு தாண்டவமாடுதம்மா
திரிசூலத்தால் இந்தக் கொடுமையை அழித்திடம்மா
பொய்மையைப் போக்கிடம்மா உண்மைநிலை காட்டிடம்மா
அதர்மம் மலியுதம்மா அமைதியைத் தந்திடம்மா!

*********

**வல்வை முத்துமாரி**

எங்கிருந்தாலும் என்னை மறப்பதில்லை - அன்னை
ஏற்றிய விளக்கென்னுள் அணையவில்லை
அன்னையே உன்னையே நம்பினேன் தாயே மகமாயியே

ஆனந்த மகமாயி ஆதி பராசக்தி
வல்வையின் முத்துமாரி வந்தருள்வாய் தாயே

காதோரம் ஓர் மொழியைக் கனிவுடன் நீ தரவே
பாதாரம் நான் பணிய பக்குவமும் நீ தரவே

ஆதி சக்திஇங்கோர் அன்னை முத்துமாரியாய்
அகிலாண்டேஸ்வரியாய் அள்ளித் தரும் தாயாகி
ஆதியந்தமில்லா அருட் பெரும் ஜோதி - உன்
உதயத்து மணியோசை இதயத்தை ஈர்க்குதம்மா
*******************

**ஆடல் காணும் இடமெல்லாம் அன்னையைக் கண்டேன்**
பாடல் கேட்கும் இடமெல்லாம் ஓர் பாவையைக் கண்டேன்
அங்கே அன்னையே நின்றாள் நான் என்னை மறந்தேன்

அன்னைக்கும் அன்னையான ஆனந்த மகமாயி
வல்வையின் முத்துமாரி வந்தருள்வாய் தாயே

கோடிக்கரையிருந்து குடி பெயர்ந்து வந்து
நாடி வந்து வல்வையில் நலம் தர அமர்ந்தவளே
தேடிக்கொடுப்பாயே தெவிட்டாத தேனமுதே
பாடிப் பணிகின்றேன் பதநிலை தருவாயே
************

**வல்வை மாரியே எங்கள் தொல்லை தீர்க்கவா**
ஆதியே ! ஜோதியே ! அகிலாண்டேஸ்வரியே !

வல்வை நகர் வளம் பெறவே ஓடத்தினில் வந்தாயே
கிழவிபோல் வேடம் பூண்ட கன்னியவள் நீயம்மா
அடித்தாலும் அணைத்தாலும் அம்மா நீயே கதி
இகபர சுகம் வேண்டி இறைஞ்சுகின்றோம் தாயே

பக்கத்தில் சிவனார் கோவில் கொண்டு அருள் கொடுக்க
இடப்பக்கம் இருந்து கொண்டு கேட்பதெல்லாம் கொடுப்பாயே
பயத்தால் பலர் வணங்க பக்தியால் சிலர் நெருங்க
பயபக்தி நிலை கடந்த சுயசக்தி அளித்தீடேற்றும்

குமரிமுனைத் தென் கரையில் கன்னியா குமரியம்மா
ஈழத்து வட கரையில் வல்வை முத்து மாரியம்மா
தென்னகத்தே இருந்து நீ எம்மகத்தே வந்தாயே
சமயபுரத் தாயே நீ சங்கடங்கள் தீர்ப்பாயே

அண்டசராசரங்கள் அத்தனையும் உன் செயலே
இத்துணை படைப்புகட்கும் அன்னையவள் நீ யன்றோ

எங்கள் குறை எடுத்துரைக்க வேறெங்கு செல்வதம்மா
உன் மலரடி தொழுதேற்றும் அடியரைக் காத்தருள்வாய்

சளைக்காமலே அருளும் வல்வை முத்துமாரியம்மா
தளைத்த பின்னாலும் எம் தவறுகள் குறையவில்லை
ஐம்புலனாம் நாகம் இன்று படமெடுத்தாடுதம்மா
ஆட்டத்தை அடக்கி அதன் நஞ்சினை அழிக்காயோ

உலகத்து நாயகியே ஊருக்கு நீ காவலம்மா
உன் முகத்தில் சிரிப்பென்றால் எம் வாழ்வு சிறப்பம்மா
தேரில் நீ வரும்போதுன் காலடியில் நானம்மா
மகமாயியே எங்கள் மனமாயை அகற்றாயோ
உன் அருளாலே நாம் உன் தாள் பணிகின்றோம்
எம் மனம் களிப்பதற்கு உனக்கபிஷேகம் அம்மா
திக்குத் தெரியாமல் திரிகின்றோம் கானகத்தே
பதநிலை தருவதற்குப் பக்குவம் அருள்வாயே

************

**ஆனைமுகம் ஆறுமுகம் அங்கே ஐந்து முகம் தோன்றும்**
மாசிமகம் தேவிமுகம் அங்கே ஆறுதலும் தோன்றும்

ஏது பயம் தேவி சுகம் என்றென்றும் இருக்கையிலே
யாமிருக்க ஏதுபயம் என்பான் வேலன் அன்னை மடியிருந்து

மங்களம் பொங்கிட மழையாய்ப் பொழிவாள் மஞ்சள்
நிறத்தவளே
நினைத்தால் நெஞ்சில் நிறைவாய் நிற்கும் நீல நிறத்தவளே
பசுமையை வாழ்வில் பகின்றிட வந்த பச்சை நிறத்தவளே
செந்நிற வானம் செம்பவளம் போல் உயிருக்கு பயிரானாள்

வானத்தில் தோன்றும் வர்ண ஜாலங்களில் அன்னையைக் கண்டேனே
வர்ண ஜாலங்கள் இணைந்த வெண்மையில் தூய்மை துலங்கிடுமே
வல்வையில் நின்று வாழ்பளிப்பவள் எங்கள் முத்துமாரி
அபயமளிக்கும் சமயபுரத்துத் தாயும் அவள் அன்றோ

கொவ்வை இதழ்ச் சிரிப்பும் கடைக்கண் பார்வையும் என்றும் வேண்டுமம்மா
கோடி கிடைத்தாலும் உனை மறவாத வரம் தர வருவாயே
பாடிப்பாடி யான் என்றென்றும் உனையே பார்த்திருப்பவன் தாயே
தேடித்தேடி என் இதயக் கமலத்தில் ஒளியாய் வருவாயே




**மாரி புகழ்**

ஓசைக்குள் ஒலியுமானவள்
மாயைக்குள் மருவி நிற்பவள்
ஆசைக்குள் உருவமானவள் சமயபுரத்தாள்

சமயபுரம் இருந்தாலும்
கோடிக்கரை குடிபுகுந்து
தேடி வந்து தெரிசனம் தந்த முத்துமாரியே

கோடிக்கரை குடிபெயர்ந்து
ஓடத்திலே தேடி வந்து
நாடி வல்வை குடிபுகுந்த மாரியவளே

நேர்த்தியாக நெற்றியின் நடுவே
பார்த்து வதியும் பார்வதியாக
நெஞ்சகத்தில் நிறைந்தவள்தான் வல்வைமாரியே

தில்லையம்பதிக் கிணையாய்
வல்வையம்பதி வாழ
வந்த வடிவாம்பிகையே முத்துமாரி

வலமிருந்து வரமருள
சுயம்புவாக லிங்கேஸ்வரரும்
நின்றதினால் சிவபுரமாகும் வல்வையம்பதியே

அன்னையும் அப்பனுமே
அருகிருந்து அருள வந்தால்
வல்வையே வானுலகாக மாறிவிடாதோ

பூவுலகில் வானுலகொன்று
பூசிக்க தேவர்கள் வந்தால்
இந்திர விழா இங்கு நடக்க ஏது தடை

சித்திரையில் ஊறணியில்
அன்னை தீர்த்தம் ஆடிய பின்
ஆறியமர்ந்த இடம் தான் நெடியகாடே

நெடியகாட்டில் நெடுநேரமாய்
மூத்தவனைப் பார்த்த பின்னே
சிந்தனையில் சிறகடிப்பான் சேவற்கொடியான்

சேவற் கொடி பறந்தடிக்க
வேலும் மயிலும் துணை நிற்க
நிற்பவன் தான் செல்வச் சந்நிதி வேலழகன்

அன்னைக்கு காவலனாய்
அழக்கடவை சடையாண்டி
நெற்கொழுவில் நிற்பவந்தான்    வைரவனே

அவனை வணங்கி அன்னை அருளை
அடி பணிந்து கேட்பவர்க்கு
அள்ளி அள்ளித் தருபவள்தான்    வல்வைமாரி

வாரி அதை நீ பற்ற
மாரி என்றும் உன்னுடனே
பாரி வள்ளல் போலே உலகில்    வாழ்ந்திடலாம்

**************

**ஊரணியில் நீராடி ஊர் கோலம் வருபவளே**
வாஞ்சையுடன் யான் வணங்கும் வல்வை மாரியம்மா
மகமாயி எனும் மாரியாத்தா நீயம்மா - அம்மா
மகமாயி எனும் மாரியாத்தா நீயம்மா
அம்மா  அம்மா அம்மா

வாரி வழங்கிய பின் நீ வாசல் வருகின்றாய் - அந்த
வைகையில் மாரி தலை முழுகி வந்த வாசலிதோ
பொய்கையில் மாரி தலை முழுகி வந்த வாசலிதோ
கோடிக்கரை விட்டு மாரி குதித்து வந்த வாசலிதோ
வாசலிதோ! முத்துமாரியம்மா! மகமாயியம்மா!

கங்கையில் மாரி தலை முழுகி கிளி மொழியாள் வருகின்றாள்
ஆயிரம் மாரி கண்ணுடையாள் அலங்காரி வருகின்றாள்
பூசை பண்ணித் தினமும் புகழும் வாசலிதோ
அம்மன் சித்திரையில் நீராடி வருகின்ற வாசலிதோ
வாசலிதோ! முத்துமாரியம்மா ! மகமாயியம்மா!

**************

## ஸ்ரீ முத்துமாரி ஊஞ்சல்

பாக்குநீரிணையினிலே பாய்ந்து வரும் அலை நடுவே
நோக்கெமக்கு நலமருள வல்வை நகர் வந்தவளே
கோடிக்கரை குடிபெயர்ந்த சமயபுரத் தாயவளே
கோடி செல்வம் எமக்கருள ஓடத்தினில் வந்தாயே!
நாடிவரும் அடியருக்கு தேடி வந்து அருள் புரிய
தாயன்பைத் தந்தருளும் முத்துமாரி தயாபரி!
வெள்ளையுடை தானணிந்து வெண்மணலில் தான் நடந்து
கிழவிபோல் வேடம்பூண்டு குழவிகளைக் காத்தருள
கோவில்கொள்ள ஓரிடத்தைக் குறியாக்கிப் பின்னாலே
மறைந்ததன் மர்மமென்ன மறைகளின் உறைவிடமே!
வேதங்கள் பீடமாக இருவினையும் கயிறாக
நாதங்கள் கைகளாக நாமுன்னை ஆட்டிடவே
ஊஞ்சலுக்கு வந்திடம்மா வாஞ்சையுடன் அழைக்கின்றோம்
வந்தமர்ந்து எம்வாழ்வை வளமாக்கித் தந்திடம்மா!
உள்ளமென்னும் கோவிலிலே உணர்வென்னும் ஊஞ்சலிலே
மெள்ளமெள்ள ஆடிடுவாய் மேன்மையெல்லாம் நிறைந்தவளே!
துள்ளிவரும் எழில் உருவே தொடர்ந்துவரும் நல்லிசையே
அள்ள அள்ளக் குறையாத ஆனந்தமே வந்திடுவாய்!
ஐந்துபெரும் தொழில் வல்ல ஆதிசக்தி உமையவளே
நெய்வேத்யம் காட்டிடுவோம் நாமுமக்கு அடிமையம்மா!
கற்ப கோடிக்காலமெல்லாம் கருணைவெள்ளம் ஆனவளே
சொற்பூவால் அர்ச்சனைகள் தோத்திரங்கள் பாடிடுவோம்!
பற்பலவாய் எண்ணமிடும் பாவி மனச் சிந்தனையை
கற்பூரமும் ஆக்கிடுவோம் கர்வமதில் எரிந்திடுமே!
அம்மா .......அம்மா .......அம்மா .......



**ஸ்ரீ முத்துமாரி தீபஆராத்தி**

ஞான சக்தியாய் ஞானாம்பிகையாய்
ஞாலம் உய்ய வந்தவள் சரணம்
கோடிக்கரை விட்டு வல்வைக்கு வந்தெம்
வாழ்வு வளம் பெறச் செய்தவள் சரணம்!

மாறிவந்த மாரியாத்தா உந்தன்
மக்கள் குறை தீர்ப்பாய் சரணம்
ஆயி மகமாயியான ஆதிபரமேஸ்வரி சரணம்!
கூறுமடியார் குறைகள் தீர்ப்பவளே சரணம் சரணம்
நாடுவிட்டு வாழ்பவர் மனதில் வாழ்பவளே சரணம் சரணம்!

ஓம் என்றொலிக்கும் மணியோசை
உள்ளே எம்மை அழைத்துச் செல்ல
வா என்றழைக்கும் தாயாகி வாசலிலே நிற்பாயே
வாசலிதோப் பாடலை நாம் வாயாரப் பாடி நிற்க
காவலாய் எம் வாழ்வின் எல்லைவரை நிற்பாயே!
மனதில் தோன்றும் எண்ணங்களை மலர்களாக்கி சூட்டியபின்
தூபதீபம் ஏற்றியுமே தோத்திரங்கள் பாடிடுவோம்
பாடப்பாட பாபி எந்தன் பழவினைகள் தீர்ந்தபின்னே

ஜோதியிலே உன்னுரு காட்டும் கற்பூரமாய் ஆக்கிவிடு
அம்மா . . .எமைக் கற்பூரமாய் ஆக்கிவிடு . . . . . .
***************



**நவராத்திரி – பக்திமாலை**

வாழ்வு ஆனவள் துர்க்கா வாக்குமானவள்
வானில் நின்றவள் இந்த மண்ணில் வந்தனள்
தாழ்வு அற்றவள் துர்க்கா தாயும் ஆனவள்
தாபம் நீக்கியே என்னைத் தாங்கும் துர்க்கையே (துர்க்கை சித்தர்)

அன்னலக்ஷ்மி வா ஆனந்த லக்ஷ்மி வா
அம்ருத கலசி வா பவஸ்ரீ லக்ஷ்மி வா



ஆதி லக்ஷ்மி வா ஜோதி லக்ஷ்மி வா
அனந்த லக்ஷ்மி வா வசந்த லக்ஷ்மி வா

ஞானி ஆனவள் கலைவாணி ஆனவள்
பேணி வளர்ப்பவள் என்னைத் தாங்கி நிற்பவள்
சிருஷ்டிக் கானவன் பக்கத் துணையுமானவள்
ஞான திருஷ்டியாய் என்றும் காட்சி தருபவள்

உலகையீன்றவள் துர்க்கா உமையுமானவள்
உண்மையானவள் எந்தன் உயிரைக் காப்பவள்

நிலவில் நின்றவள் துர்க்கா நித்யை ஆனவள்
நிலவி நின்றவள் எந்தன் நிதியும் துர்க்கையே

பாற்கடல் மீதினிலே ஆதிசேஷன் மடியினிலே
பள்ளி கொள்ளும் அந்தப் பரந்தாமன் நெஞ்சினிலே
வீற்றிருந்தாலும் என்றும் தாயே நீ என்னை மறப்பதில்லை
நலமெல்லாம் தந்தருளும் நவராத்திரி நாயகியே

வீணை ஏந்தியே என்னை மீட்டிவிட்டவள்
கானமாகவே என்னுள் கலந்து நின்றவள்
மாலை ஏந்தியே என்னைக் காட்டிக் கொடுத்தவள்
காலை வந்ததும் என்னுள் காட்சி தருபவள்

செம்மையானவள் துர்க்கா ஜெபமுமானவள்
அம்மையானவள் அன்புத் தந்தையானவள்
இம்மையானவள் துர்க்கா இன்பமானவள்
மும்மையானவள் என்றும் முழுமை துர்க்கையே

அலைகடல் உதித்தவளே அமரர்கள் துதிபாடும் அமுதமம்மா
விலையில்லா மாணிக்கமே வேதாந்த மந்த்ர சொரூபிணியே
பாற்கடல் கடைந்த போது மீண்டும் நீ தோன்றியும் இணைந்தாயே
பார் காக்க வந்தவளே அஷ்டமா சித்திகள் தந்தருள்வாய்



கல்விக் கென்றுமே அதிபதியுமானவள்
சொல்லுக் கென்றுமே சரஸ்வதியுமானவள்
கவிதை தருவதில் அவள் மழையுமானவள்
காலைப் பற்றினால் அருட் கவியுமாக்குவாள்

உயிருமானவள் துர்க்கா உடலுமானவள்
உலகமானவள் எந்தன் உடமையானவள்
பயிருமானவள் துர்க்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னுள் பழுத்த துர்க்கையே

பார் காக்க வந்தவனின் சக்தியாகி பக்கத்தில் அமர்ந்தவளே
கடைக்கண்ணின் பார்வையொன்றால் ஏழையை செல்வத்தின் உச்சியிலே
வைக்கவல்ல அந்த வைகுண்ட வாசனின் மனையாளே
கைக்கெட்ட வைத்ததெல்லாம் வாய்க்கு எட்டினால் போதுமம்மா

ஞானம் வேண்டினால் அதை தானம் ஆக்குவாள்
மோனம் வேண்டினால் அவள் மாலையாகுவாள்
ஏட்டை ஏந்தியே உன்னை உணரவைத்துமே
பாட்டைக் காட்டியே பயனாகி நிற்பவள்

துன்பமற்றவள் துர்க்கா துரிய வாழ்பவள்
துறையுமானவள் இன்பத் தோணியானவள்
அன்பு உற்றவள் துர்க்கா அபய வீடவள்
நன்மை பொங்கிட என்னுள் நடக்கும் துர்க்கையே

ஈழத்தின் வடகிழக்கில் மக்கள் பசியாலே வாடுகின்றார்
நாட்டு நிலமையினால் வீடுகளில் வாழ்வும் வளமுமில்லை
பஞ்சங்கள் தீர வேண்டும் நாட்டிலே பசிப்பிணி ஓடவேண்டும்
கெஞ்சி நின்றோம் தாயே நீ கேட்கும் வரம் அருள்வாய்

கௌரி ஆகவே சிவராத்திரி கண்டவள்
காயத்ரி ஆகவே நவராத்திரி வருபவள்
கோலங்கள் மாறினாலும் உனை என்றென்றும் நான் மறவேன்
காலன் அணுகும் வேளை எந்தன் கருத்தினில் நின்றிடம்மா

குருவுமானவள் துர்க்கா குழந்தையானவள்
குலமுமானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவுமானவள் துர்க்கா திருசூலி மாயவள்
திருநீற்றில் என்னிடம் திகழும் துர்க்கையே ( துர்க்கை சித்தர் )

சித்த லக்ஷ்மி வா சிருங்கார லக்ஷ்மி வா
சிறீம் லக்ஷ்மி வா சௌம் லக்ஷ்மி வா
யோக லக்ஷ்மி வா போக லக்ஷ்மி வா
சந்தான லக்ஷ்மி வா சம்பூர்ண லக்ஷ்மி வா

ஒன்பது இராத்திரியும் உன்னை மனத்திருத்தி
ஒன்பது கிரகங்களின் அருட்பார்வையை பெற்றுநிற்க
ஆதிபராசக்தியாய் அடியர் சீரும் சிறப்புடனே
வாழ வழிகாட்டு எமை வாழ்விக்க வந்தவளே!



**சந்நிதி முருகா**

ஓம் சரவணபவ சண்முகா ஓம் சரவணபவ சண்முகா
ஓம் சரவணபவ சண்முகா ....
மாயவன் மருகா சந்நிதி முருகா
சடுதியில் அருள் தர வா ...

வள்ளி மணாளா புள்ளி மயில் வாகனா
குஞ்சரி நாயகா குருகுகனாய் வந்து நீ
எம் வினை தீர்த்திடையா ...

தேவர் குறை தீர்க்க சக்தி வேல் கொண்டவா
அசுரர் படை அழிக்க அப்பன் கண்ணில் வந்தவா
ஆனைமுகன் தம்பியே ...

வேலாக நின்றவா வல்வினை தீர்க்க வா
காலடி தந்த உன் சந்நிதியில் காத்திருப்பேன்
காத்தருள வந்திடையா ...

சந்நிதி வேலவா வா மாவைக் கந்தா வா
நல்லூரின் குமரா வா கதிர்காமத் தெய்வமே வா
கருணைக் கடலே வா ...

கலியுக வரதா வா கண்கண்ட தெய்வமே வா
சரணாகதி அடைந்தேன் பாதாரவிந்தத்தில்
காத்தருளத் தாமதமேன் . . .

அஞ்சுதலை அறுத்து ஆறுதலைக் கொடுத்து
ஆள வந்த தெய்வமே நீ வா . . .

*************

**சரவணபவ என்று பாடு - ஓம்**
சரவணபவ என்று பாடு - நிதம்
சரணாகதி என்று சந்நிதியை நாடு

சக்தி உமை பாலன் எங்கள் அழகன்
சக்தி வேல் கொண்ட எங்கள் குமரன்
புத்திக் கெட்டாத ஒரு நிலையில்
நித்தியமாய் நிற்கும் எங்கள் குமரகுருபரன்

அன்னதானக் கந்தனாக இங்கு
அடியர் பசி போக்கும் அப்பன்
அடியரோடடியராய் நின்று
அருளமுதம் தனை அள்ளித்தரும் வேலன்

நீ தான் என்ற நிலை காட்டி
நிதான மனநிலை தந்து - சந்
நிதானத்தில் குறை தீர்க்க - அன்ன
தானக் கந்தனான அப்பனே சண்முகா

**சண்முகா வா சுந்தரா வா**
சக்திகள் சூழ எங்கள் சந்நிதிவாழ் வேலவா

ஓம் சரவணபவ என்று ஓதியே நின்றாலே
உள்ளொளி பெறவே நின்னருள் தருவாயே

வேலாக நின்றவனே காலடி தந்தவனே
கலியிலே குறை தீர்க்க சந்நிதி நின்றவனே

தேவர்கள் குறை தீர்க்க திருவுள்ளம் கொண்டவனே
அசுரர்களை அழிக்க அறுமுகம் ஆனவனே

கதிர்காமம் தென்பதியாம் சந்நிதி உன் வடபதியாம்
ஈழத்தில் நீ வாழ்கின்ற இன்ப மலர்ச்சோலைகளாம்

கதிரமலை தன்னில் மோட்ச நிலை காட்டுகின்றாய்
கண்கண்ட தெய்வமய்யா கலியுக வரதனைய்யா

சந்நிதியில் கண் கலங்கி கதறியே நின்றாலோ
கதிர்காமம் சென்று வந்த பாக்கியம் கிட்டுமன்றோ!

*************

**சரவணபவகுக சண்முகா சரணம்**
சரவணபவகுக சண்முகா சரணம்

தேவர் குறை தீர்க்க வந்தவா சரணம்
வேலவா சரணம் கோலமயில் வாகனனே

அசுரர் படை அழித்த ஐயனே சரணம்
அப்பனே சரணம் சுப்ரமண்யா சரணம்

கந்தா கடம்பா கார்த்திகேயா சரணம்
கதிர்காமா சரணம் கதிர்வேலா சரணம்

சக்திகள் சூழ சந்நிதி வந்தவா சரணம்
சண்முகா சரணம் வேலவா சரணம்

நல்லூரின் நாயகனே குமரா சரணம்
வல்வினைகள் தீர்க்க வந்த வள்ளலே சரணம்

மாயவன் மருகா மாவைக் கந்தா சரணம்
தெய்வயானை சரணம் வள்ளியம்மா சரணம்

ஆதிசிவன் முக்கண்ணில் உதித்தவா சரணம்
ஆனைமுகன் தம்பியே ஆறுமுகா சரணம்

கலியுக தெய்வமே கந்தா சரணம்
காத்தருள வேண்டுமே உன் காலடியே சரணம்

******

**சந்நிதியைத் தோற்றுவித்தாய் எங்கள் வடிவேலா**
சஞ்சலங்கள் தீர்ப்பதற்கோ எங்கள் வடிவேலா

தொண்டைமானாற்றருகே எங்கள் தங்கவேலா
தொண்டர்களைக் காக்க வந்தாய் எங்கள் தங்கவேலா

புள்ளிமயில் வாகனனே எங்கள் வெள்ளிவேலா- வள்ளி
தெய்வானையுடன் வருவாய் எங்கள் வெள்ளிவேலா

நானற்ற நிலைபெறவே எங்கள் கதிர்வேலா
நாடிவந்து வேண்டிநின்றேன் எங்கள் கதிர்வேலா

ஞானத்தின் மறுவடிவே எங்கள் வடிவேலா
ஆழ்ந்தகன்று ஓங்கி நின்றாய் எங்கள் வடிவேலா

சிவசக்தி தத்துவமே எங்கள் வடிவேலா
சுயசக்தி தந்தருள்வாய் எங்கள் வடிவேலா

உன்னையே வணங்கி நின்றால் எங்கள் வடிவேலா
பேரின்ப வீடருள்வாய் எங்கள் வடிவேலா

உருவற்ற பெயரற்ற வேதாந்தப் பெருவெளியில்
நாதாந்த மழைபொழிய வருவாயே வடிவேலா

ஆதியந்தமில்லா இன்பப் பெருவெளியில் வடிவேலா
அணைத்து நீ சுகம் தருவாய் எங்கள் வடிவேலா

காலடியே தந்த இந்தச் சந்நிதியில் வடிவேலா
காத்துநின்றால் காப்பதுன்கடன் எங்கள் வடிவேலா

******

**சரணமென்றடியவர் சந்நிதியில் நின்றாலோ**
சாயுச்யம் தந்தருளுவான்
சக்தி உமை மைந்தனவன் சக்திக்கு எட்டாத
செயலுமோர் உலகிலுண்டோ

உடற்பசி போனாலே அருட்பசி வருமென்ற
உண்மையை மென்மையாக
உணர்த்தவோ ஆற்றருகே அன்னதானக்கந்தன்
ஆக அவன் அமர்ந்து கொண்டான்

ஆலம் இலைமீது அமுதாக நீ வந்தால்
உடற்பசி அழிந்திடாதோ
வந்த களை வயிறார உண்ட களை போக்கவோ
மடங்களோ பல அமைத்தான்

பசிபோன பின்னாலே களைதீர ஆற்றங்
கரை ஒன்றைத் தேடினானோ
நிழல் தேடி பூவரச விருக்ஷத்தின் அருகிலே
நின்றவன் வேலாகினானோ

வேறுருக் கொள்ளாமல் வேலாகி வந்ததன்
விந்தைதான் என்ன முருகா
அறிவைக் கொடுக்கவோ ஆறுருக் கொண்டவன்
வேறாகி வேலாகினானோ

மலைதனை விரும்பிடும் மாயவன் மருகனே
ஆற்றருகே வந்ததேனோ
மாமலை ஒன்றிங்கு ஜீவ சமாதியில்
மண்ணுள்ளே இருப்பதாலோ

குகைதனை விரும்பிடும் குகனார் பூவரச
மரத்தருகே வந்ததேனோ
பலகோடி அடியரின் இதயக்குகையெல்லாம்
இங்கு வரும் என்பதாலோ

வடகோடி எல்லையில் ஞான உருக்கொண்டு
வேலாக நீ நின்ற பின்னே
மாணிக்க நதிஓர கதிர்காம ஷேத்திரத்தில்
அன்பாலே சுடராகினாயோ

பொறியாக வந்த நீ சுடராக மாறியே
மோனநிலை கொள்ளமுன்னே
எந்தனைக் காக்கவோ எத்தனை உருக்கொண்டு
ஆடல்கள் காட்டினாயோ - திருவிளை
ஆடல்கள் காட்டினாயோ - சந்நிதியில்
ஆடல்கள் காட்டினாயோ
****************

**சந்நிதி வேலனின் சன்னிதியில் வந்து யார் நின்றவரோ-** அவன்
ஆட்டத்திலே மனஓட்டத்தின் எல்லையை யார் கண்டவரோ
யார் நின்றவரோ . . . . . . அருள் தான் கண்டவரே . . . . . .

சின்னஞ் சிறு வேலன் மெல்லமாய் வந்துந்தன் சிந்தையில்
நின்றிடுவான்
பென்னம் பெரியதாய் சோதனைகள் பல தந்துமே வாட்டிடுவான்
வந்ததைக் கண்டுமே வாடி வதங்கியே ஓடி ஒதுங்கிடாமல்
நின்றவர் வாழ்வில் சாதனைகள் பல நித்தமும் தந்திடுவான்
சக்தி உமை மைந்தன் - எங்கள் சந்நிதி வேலழகன்

ஆடி முடிந்தபின் ஆற்றங்கரை தன்னில் ஆறத்தான் வந்தானோ-
அன்றி
ஆலமிலையினில் அமுதுண்டு அவன் பசி ஆறத்தான் நின்றானோ
அன்னதானக் கந்தன் ஆகவே நிற்பது அவன் பசி தீர்ப்பதற்கோ-
அன்றி
ஆற்றருகே நின்றால் ஆறாத பசி எல்லாம் ஆறிடும் என்பதாலோ
ஆறாகி வந்தவனோ - இங்கே ஆறாகி நின்றானோ

பூவரச மரத்தடியினிலே என்னைப் பூவாக மாற்றிடவோ
பா ஒன்றைத் தந்துந்தன் பக்கத்திலே என்னைப் பாடவும்
வைக்கின்றாயோ
வேலாக நெஞ்சத்தில் தோன்றியுமே எங்கள் வேதனை
தீர்ப்பதற்கோ
தொண்டைமானாற்றம் கரையினிலே நீ வீற்றிருக்க வந்தாய்
வந்தவன் ஆறுமுகன் - அவன் தந்தது ஆறுதலை
******

**சந்நிதி வேலழகன் சந்நிதியில் நின்றால் வினை வருமா**
எந்நிதி கொடுத்தாலும் அவன் நிதி என்னாளும் குறைந்திடுமா

அள்ளி அள்ளிக் கொடுப்பதற்கோ இங்கு அன்னமலை மீது
நின்றான்
அன்னமலை ஆறயிலே அடியர் பசியெல்லாம் ஆறுதையா

துள்ளித் துள்ளி விளையாட ஓர் வள்ளிக் குறமாதைக் கொண்டான்
தள்ளித்தள்ளி வைத்திடாதே எனக்குந்தன் தயை என்றும்
வேண்டுமையா

வெள்ளிமயில் மீதினிலே நீ விழாக்கோலம் கொண்ட நாளில்
கள்ளத்தனமாகவே வள்ளியை நீ கண்டுவிட்டுச் செல்லும் மர்மம்
என்ன

தீர்த்தத் திருவிழாவிலே வெகுநேரம் வள்ளியோடு தங்கிவிட்டதால்
திரும்பி நீ சென்றபோது தெய்வானை கதவையும் பூட்டினாளோ

பலமுறை வந்தபோதும் கதவங்கே திறக்கவில்லை - பின்
தைப்பூச நிதி தருவேன் என்றாயே கதவங்கே திறபட்டதோ

பழம் ஒன்றால் கோபம் கொண்டு நீ பழனிக்கு வந்த முருகா - உன்
தெய்வானை பூட்டிய கதவருகே திரும்பவும் வந்த மர்மம் என்ன

சக்திகள் இரண்டுக்குமே நீ சரிபாதி தந்ததினால்
இரண்டுக்கும் மத்தியிலே நீ சிவமாகி நிற்கின்றாயோ

சிவமாகி நின்றதினால் உனக்கு தனியாக இடம் இல்லையோ
சக்திகள் தனைவேண்ட உன்னருளும் தன்னாலே வந்திடுமோ

தனியாக வேலாக நின்ற இடம் பூவரச மரத்தடியோ
பூவாக நான் வருவேன் உந்தன் பொன்னடியில் இடம்தேடி

பாமலை நான் படைப்பேன் நீஏறி விளையாட வருவாய்
ஆடிய பின்னாலே உன் காலடியில் பூமலையாய் நான் குவிவேன்

**********************



**சந்நிதி வேலா சந்நிதி வேலா சரவணபவகுக நாதா** - ஓம்
சந்நிதி வேலா சந்நிதி வேலா சரவணபவகுக நாதா

அண்ணாமலையின் ஜோதிப்பிழம்பில் அவதரித்தவா போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
ஆறு பொறிகளாய் சரவணப்பொய்கையில் அமர்ந்த சிவமே போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
ஸ்ரீ செல்வச் சந்நிதி சரணம்! மாணிக்கவிநாயகர் சரணம்!
ஆற்றங்கரையோனே சரணம்! எமை ஆள வந்தவா சரணம்!
ஆறெழுத்தாலே அபயம் தந்த அருட்குருநாதா போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
வேறெழுத்தெல்லாம் வேலும் மயிலும் ஆக நின்றவா போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
பூவரச விருக்ஷம் சரணம்! புண்ணியனார் சமாதி சரணம்!
ஆலமிலை அமுதும் சரணம்! திருவேற்கரணி சரணம்!

கந்தபுராணத்துக் காலத்தில் இருந்தே காத்து நின்றவா போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
கலியுக வரதனாய் காலடி தந்தெமைக் காத்து நின்றவா போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
ஆறுபடை வீடும் சரணம்! பின் ஆறி அமர்ந்த இடம் சரணம்!
தேடி வரும் அடியவர் சரணம்! தேனார் அமுதனே சரணம்!
தூதுசெல்ல வந்த வீரபாகுதேவரின் சந்திகாலப்பூசை போற்றி!

சந்நிதி அருளே போற்றி!
வாதுசெய்ய வந்த குமரனே சிவனை வணங்கிய ஸ்தலமே போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
நமச்சிவாயம் சரணம்! நாராயணமும் சரணம்!
ஆறெழுத்துமே சரணம்! சுப்ரமண்யம் சரணம்!

காக்க என்றுமே கல்லோடைக் கரையில் காலடி தந்தவா போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
தேவர்க்கெல்லாம் அபயகரம் காட்டும் விண்ணோர் தலைவா
போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
தச்சகொல்லை விநாயகர் சரணம் அன்னை வீரமாகாளி சரணம்!
வீதியோர மடமெல்லாம் சரணம் நிதம் தோன்றும் அன்னமலை
சரணம்!
மாணிக்க விநாயகர் காணிக்கை ஏற்று கருணை புரிவார் போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
சங்கர நாரண அபிஷேகம் காட்டி அருளைக் கூட்டுவாய் போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
ஆலும் அரசும் சரணம்! வேம்பும் பயறியும் சரணம்!
வள்ளி தெய்வானை சரணம்! வைரவ சுவாமியே சரணம்!

தேவரும் மனிதரும் தினம் பூசை செய்ய ஸ்தலம் ஒன்றைத் தந்தாய்
போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
வரமுன்னே வரம் தரும் வள்ளலாய் அங்கே வீற்றிருந்தவா
போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
சரவணப் பொய்கை சரணம்! சரஸ்வதி மண்டபம் சரணம்!
ஷடாக்ஷர மந்திரம் சரணம்! சரவணபவமே சரணம்!
தொண்டைமானாற்றம் கரையில் தோன்றிய ஸ்ரீசெல்வச் சந்நிதி
போற்றி!
சந்நிதி அருளே போற்றி!

அங்கே அண்ணனும் அம்மையும் அப்பனும் மாமனும் அமர்ந்த எழிலே போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
வேலும் மயிலும் சரணம்! வேற்படை ஆனாய் சரணம்!
நந்தி வாகனம் சரணம்! நாரதாதி முனிவர்கள் சரணம்!

மருதர் கதிர்காமரை ஆட்கொண்டு மௌனப் பூசை ஏற்றவா போற்றி!
சந்நிதி அருளே போற்றி!
ஈழத்தில் எமக்கோர் கைலாச வைகுண்டக் காட்சி தந்தவா போற்றி!
எம்நிதி ஆனாய் போற்றி!
அண்ணாமலையும் சரணம்! உன் அன்னமலைகளும் சரணம்!
எண்ணமலைகளும் சரணம்! உன் சொர்ணமலைகளும் சரணம்

*****************

**சங்கநிதி பதுமநிதி எந்தநிதி கேட்டாலும்** அள்ளி அள்ளி வழங்கவோர் சந்நிதியைத் தோற்றுவித்தாய்

கேட்பதற்கோர் தலம் அமைத்து
கேட்பதெல்லாம் கொடுத்தாலும்
வாய் கட்டுமோர் பூசை முறையால்
மனத்துள்ளே போக வைத்தாய்
மனத்துள்ளே நிதியெல்லாம்
மலை போலக் கிடப்பதாலோ
மனத்துள்ளே எமை நுழைக்க
மௌனப் பூசை விரும்பி நின்றாய்

மனத்துள்ளே மனம் திரும்ப
நின் அருள் வேண்டுமையா
செல்வம் எல்லாம் மலையாய் உள்ளே
செல்லச் செல்லப் பெருகுதையா

செல்வத்தின் நடுவினிலே
செல்வனைக் காணலாமே
செல்வனைக் கண்டவர்கள்
செல்வத்தைத் தேடுவாரோ?
அள்ளித்தரும் அப்பன் ஐயா
சந்நிதி வேலவனே
சொல் எழா நிலை பெற்றால்
தன்னையுமே தருவானே .....

பிறவிக் கடலிலே கதிர்காமர் நின்றாரே
கரை சேர்க்கவே அப்பன் திருவுள்ளம் கொண்டானே
கறை எல்லாம் கரைத்தபின்னே துயரெல்லாம் துடைத்தானே
தூயவனாய் மாற்றுதற்கு மாயமெல்லாம் புரிந்தானே
ஆறுதல் கொடுக்கவென்று ஆற்றங்கரை மீதினிலே
அன்னமும் அளித்துப் பின் தன் வண்ணமும் காட்டிநின்றான்
வண்ணத்தை வணங்கி நின்றால் எண்ணமும் மேலோங்கவே
பொன்னடிக்கே பூசை செய்து பொன்னுலக வாழ்வு பெற்றார்!

**சந்நிதியே செல்வச் சந்நிதியே சஞ்சலம் தீர்க்கும் சந்நிதியே**
எந்நிதியும் தரும் சந்நிதியே எம் குறை தீர்க்கும் சந்நிதியே

அகரம் ஆதி போல் சந்நிதியே
சிகரம் ஆனதோர் சந்நிதியே
இகபர சுகம் எல்லாம் சந்நிதியே
இன்பத்தின் இருப்பிடம் சந்நிதியே
அன்னமலை எல்லாம் சந்நிதியே
ஆற்றம் கரையோர சந்நிதியே
தொண்டைமானாறோடும் சந்நிதியே
தொண்டரைக் காக்கும் சந்நிதியே (சந்நிதியே)

கந்தனும் கடம்பனும் சந்நிதியே
கதிர்காம வேலனும் சந்நிதியே
உதிர்கால உணர்வும் சந்நிதியே

எதிர்கால இன்பமும் சந்நிதியே
மறைகளின் உறைவிடம் சந்நிதியே
கறையெல்லாம் களையவோர் சந்நிதியே
திரையேழும் தீர்ந்தபின் சந்நிதியே
கரைஓரம் காணவோர் சந்நிதியே (சந்நிதியே)

சிவனார்க்குப் பூசையும் சந்நிதியே
மகனாரின் மலரடி சந்நிதியே
ஆறு பொறியெல்லாம் சந்நிதியே
ஆறுதல் தரவோர் சந்நிதியே
காலடி பதித்ததும் சந்நிதியே
காவடி ஆடுவதும் சந்நிதியே
பாவடி உதித்ததும் சந்நிதியே
சேவடி சேர்ப்பதும் சந்நிதியே (சந்நிதியே)

ஓதி உணர்ந்தார்க்கு சந்நிதியே
ஓங்கார உட்பொருள் சந்நிதியே
ஆங்கார அழிவிற்கோர் சந்நிதியே
அமர வாழ்வு பெறச் சந்நிதியே
இருளையும் அகற்றும் சந்நிதியே
ஒளியையும் ஊட்டும் சந்நிதியே
அருளையும் காட்டும் சந்நிதியே
ஆனந்த அமைதிக்கோர் சந்நிதியே (சந்நிதியே)

அன்பே சிவமாம் சந்நிதியே
அறிவே வேலாம் சந்நிதியே
ஆலமிலை அமுதும் சந்நிதியே
அமரர்க்கு அபயகரம் சந்நிதியே
பூவரசு தோன்றியதும் சந்நிதியே
பாவரசு பாடியதும் சந்நிதியே
தேவரசு பூஜிப்பதும் சந்நிதியே
ஆலரசுச் சோலையெல்லாம் சந்நிதியே (சந்நிதியே)

ஆறுபடை வீடுவிட்டுச் சந்நிதியே
ஆற வந்த இடமிந்தச் சந்நிதியே
வேலாக நின்ற இடம் சந்நிதியே
வேற் படைக்கு ஏற்ற இடம் சந்நிதியே
கர்மவினை தீரச் சந்நிதியே
பக்தி நெறி நாடச் சந்நிதியே
ஞானம் பழம் ஆகச் சந்நிதியே
மோன நிலை காணச் சந்நிதியே (சந்நிதியே)

**********

**சந்நிதி வேல் என்ற ஆறெழுத்தில் இங்கு சாம்ராஜ்யம்** ஒன்று நடக்குதையா
சரிபிழை பாரா சரண் அடைந்தோர்க்கு சங்கடம் வாழ்வில் இனியேது

ஆள்பவன் படைகளின் குண்டுகளெல்லாம் ஆற்றினைக்கடந்து வந்தாலும்
அப்பனின் வேற்படை அடியரைக்காத்திடும் அற்புதக்காட்சியும் கண்டேனே

அண்ணனும் காத்தான் அப்பனும் பார்த்தான் அடியரும் மடத்தினில் எதிர்பார்த்தார்
தீப ஒளியிலே தெரிசனம் காட்டி அன்னம் படைக்க என்னை அனுப்பிவைத்தான்

வேற்படைக்கிணையாக ஓர் காற்படை உலகில் உண்டோ
வேளையும் வந்துவிட்டால் அசுரர் வேரோடு அழியாரோ

கலியிலே அதர்மங்கள் மலிவதைக்கண்டு கவலை கொள்வது ஏன் மனமே
தேவர் குறை தீர்த்த சேனாபதியே ஆற்றருகே வந்தான் அறியாயோ

அக்கரை நின்ற அடியவனை அவன் இக்கரை அழைத்ததை
அறியாயோ
அக்கரை நின்ற ஆள்பவனில் அவன் அக்கறை
இல்லைப்புரியாயோ

அன்று கொல்வது அரசனென்றால் என்றும் நின்று கொல்பவன்
ஆண்டவனே
வேலையே வணங்கி நின்று கொள் அந்த வேளையும் வரும்
ஆற்றங்கரையருகே

வினைகளும் மாயும் மனைகளும் சாயும் காலத்தின் கோலம்
உணராயோ
வேதனை விழிம்பில் வேலவன் வருவான் கனவில் சொன்னதை
மறந்தாயோ

( சந்நிதிவேல் என்ற)

*************

**சக்தி வடிவேலவா சத்ரு சம்ஹாரா**
சஞ்சலம் தீர்க்க சந்நிதி வந்த வெள்ளி வேலவா
(சக்தி வடிவேலவா)

கவலைகள் போக்கவே கவிபாடச் சொன்னவா
கவிபாட கவிபாட மலராய் விழுவாய் (சக்தி வடிவேலவா)

அப்பன் கண்ணில் அறு பொறியாய் வந்தவா
அன்னை தந்த வேலுக்கு ஸ்தலம் தந்தவா
அன்னை தந்தை அருளும் இங்கு தந்தவா
அண்ணன் மாமன் சக்திகளுடன் நின்றவா
இந்த ஸ்தலம் வேண்டியே வரும் அடியார்களை
தேடித் தேடி நாடி அருளும் சந்நிதி முருகா
(சக்தி வடிவேலவா)

கதிர்காமருக்கும் காட்சி தந்தவா
பின் கதிரமலையில் பூசை முறை தந்தவா
அந்தப் பரம்பரையில் வந்த எல்லோரையும்
கண்ணின் இமை போல என்றென்றும் காத்தவா
உந்தன் கருணைபாட சந்நிதி வந்திடணும்
என்றென்றும் உந்தனைப் பூஜிக்கும் வாழ்வைத் தந்திடு வேலா
(சக்தி வடிவேலவா)

*******

**சந்நிதிவாசாவா சஞ்சலங்கள் தீர்த்திடவா..**
ஆற்றங்கரை ஓரமாய் அன்னதான மடங்களில்
அருளமுதம் தந்தருள வா...

தொண்டைமான் ஆற்றருகே தொண்டரெல்லாம் கூடிவிட்டார்
ஆற்றங்கரை வேலன் என்றும் கல்லோடைக் கந்தன் என்றும்
நாமங்கள் ஓராயிரத்தால் அழைக்கின்றார்..

ஓடிவர மனம் இல்லையோ ஓராயிரம் முறை அழைக்கவோ
தேடிவரும் அடியரை நாடி வந்து அருள் சுரக்கும்
தேனமுத சுரபி அல்லவா..

நினைத்தாலே வரம் அருளும் அந்த அண்ணாமலைக் கிணையாக
மனத்தாலே கொண்டவுடன் மனை தேடிவரமருளும்
வள்ளலே நீ அல்லவா..

அன்னதான மடங்களிலே அடியரோடு அடியவராய்
ஆலமிலை அமுதையும் சோலைதரும் சுகத்தையும்
சாலை வரும் காவடியின் ஆட்டத்தின் அழகையெல்லாம்
ரசிப்பவன் நீ அல்லவோ..

பூவரச மரத்தருகே உந்தன் புகழ் பாடும் அடியவரை
பார் புகழும் பாவலராய் பாசமுள்ள நேசகராய்
மாற்றிவிடும் வேலன் அல்லவா..

சிவனாரின் ஆட்டத்தை யெல்லாம் காண காலடியைக் காட்டுகின்றாய்
காவடியை தூக்கிவிட்டால் மகனாரின் ஆட்டத்தை
காலமெல்லாம் கண்டு களிப்பேனே...

வா என்று ஒருமுறையே கூப்பிட்டால் காலமெல்லாம் கூட வருவான்
காலமெல்லாம் காவலனாய் என் சுமையை தான் சுமந்து
வந்தவன் தான் வடிவேலனோ...

******

**சர்வம் ஸ்கந்தமயம் சர்வம் முருகமயம் சர்வம் சந்நிதிவேலே**

கலியுக தெய்வம் கந்தன் என்றால் அது யுகநியதி
மாறி மாறி அந்த மாலும் மருகனும் யுகம் பகிர்ந்தார்
சட்டியில் இருந்தால் அகப்பையில் வருவது இயற்கையே
கந்த ஷஷ்டி விரதத்தால் அகப் பையில் குழந்தை கந்தனருள்
(சர்வம் ஸ்கந்தமயம் )

ஆவணி மாசத்து விநாயக சதுர்த்தியில் விடை பெற்று
அந்த ஆறுமுகனை அடிமனதில் நீ இருத்திவிட்டு
கந்த ஷஷ்டியை முறையாய்ப் பிடித்தால் முருகனருள்
கடல் மடையாகி திருவேற்கரணியாய் மாறிவிடும்
(சர்வம் ஸ்கந்தமயம் )

குணங்கள் பேதத்தால் மனங்கள் மாறுவது மாயையினால்
அந்த மாயையினால் அதர்மம் மலிவதும், இயற்கையே
அந்த இயற்கையை மாற்ற இறையருள் தருவது அவதாரம்
சூர பத்மனை ஒழிக்க சிவனார் முருகனைத் தந்தாரே
(சர்வம் ஸ்கந்தமயம் )

******

## ஸ்ரீ செல்வச் சந்நிதிக்கந்தன் திருவிருத்தம்
## (இயற்றியவர்: அளவெட்டி அருட்கவி வினாசித்தம்பி)

பரமசிவன் மைந்தனே கணபதியின் தம்பியே பார்வதி அணைத்த குகனே
பகவனின் மருகனே பண்பார் விசாகனே பன்னிரு கரத்தழகனே
மரகத மயூரத்த சச்சிதானந்த சிவ மங்கள சொரூபத்தனே
வான் தந்த குஞ்சரியும் மான் தந்த வள்ளியும் வந்து மருவும் செல்வனே
அரஹரா குருபரா அப்பனே முருகனே ஆறுமுக வேலரசனே
ஐயனே என ஓதும் அடியார்கள் முன் தோன்றி அபயவரதம் கொடுக்கும்
சரவணபவா நினது சரணமலர்ச் சந்ததம் தமியேன் நினைக்க அருள்வாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

வளர்மதிய ஒருகோடி பிரகாச மேனிதிகழ் வள்ளி மகிழும் செல்வனே
வண்ண மயிலேறி நற்புண்ணியர் மனதிலே ஆடும் சிவச் செல்வனே
ஒளிர்வதன மோராறு முறுவலுற வந்தின்பம் ஊட்டியருளும் செல்வனே
ஓங்குபரமானந்த பாங்குமிளிர் சிவஞான உத்தமி தரும் செல்வனே
கிளர் முதிய சூராறு அவுணரைப் பொடி செய்த கிரணவடிவேற் செல்வனே
கீரனுடன ருணகிரி குறுமுனிவ ரெளவை தமிழ் கேட்டு மகிழும் செல்வனே
தளர்வுடைய சிந்தையொரு நிலைபெறு மனோலய சாந்த சுகம் ஈர்ந்தருளுவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

ஆதிகுமரா மயிலில் ஆடும் குமரா அன்னை அம்பிகை நயந்த குமரா
அகிலாண்ட கோடிகளை ஆண்டகுமரா நித்தம் அன்பர் மனம்
மேவு குமரா
சோதி குமரா அமிர்த வல்லிசுந்தர வல்லி துணைவனாய் வந்த
குமரா
சூரகுல சம்ஹார வீரகுமரா தமிழ் சொற்புலவனான குமரா
நீதி வடிவேல் கொண்ட வேத குமரா கல்வி நிதியருளும் முதிய
குமரா
நித்ய கல்யாண குமரா அன்ன தானத்தின் நெறிபயனுரைத்த குமரா
சாதி குல பேதமெனும் சந்தேகம் தெளிவுபெற சன்மார்க்க
நிலையருளுவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக்
கந்தவேளே

மங்கள மிகுந்தவேல் வானவர் துதித்தவேல் மாமலை கடைந்த
வடிவேல்
வரை மேலமர்ந்த வேல் மந்த்ரவடிவான வேல் மண்டல நிறைந்த
நெடுவேல்
சிங்கமா சூரனொடு கஜமுகன் கொண்ட நாற் சேனையைத் துகழ்
செய்த வேல்
சேவலொடு மயிலான காவலர் போற்றிடும் சிங்கார வைர
மணிவேல்
மங்கைகுற வள்ளிதனை மங்கலம் பூணவரு வனவேடன் கொண்ட
கைவேல்
மாகடல் குளித்தவேல் மாமரமறுத்தவேல் மறைதந்த அருணகிரி
வேல்
சங்கரன் தந்தவேல் சக்திவேலே நினது தாடலை சுமக்க அருள்வாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக்
கந்தவேளே

பண்டை வினைதீர்த்துனது பக்தரைக் காக்கும் மயில் பஞ்ச வர்ணங்களெங்கும்
பரவுமோங்கார மயில் பன்னகமிதித்த மயில் பகைவரை யடக்க வீசும்
தண்டமாருத நிகர தாவிப்பறக்கும் மயில் சச்சிதானந்த நிலையை
தன்வடிவில் காட்டும் மயில் பொன்னுலக ஆட்சி மயில் சலியாத நிருதரழிய
பண்டு பெரு போர்க்கோலம் கண்டுநடமாடும் மயில் மதுரஒரு கனி கிடைக்க
தருகோடி கோடிபல அண்டங்கடந்துவரும் மயிலேறு முருகேசனே
தண்டமொரு நிலையமனு தாதுனைத் தரிசிக்க தங்கமயிலேறி வருவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

ஒருமுகம் கதிர்விரித்துலகெலாம் காத்தருளும் உண்மைதரு மன்புடையவர்க்கு
ஒருமுகம் களிகொண்டு வரநலம் செய்திடும் ஓதுமறை வேதியர்தமை
ஒருமுகம் வேள்வி விதி வழுவாது கவனிக்கும் ஒண்களைத் திங்களைப் போல்
ஒருமுகம் வேதசாஸ்திரனுட்பம் தெரிவிக்கும் உக்கிர மனத்துடனே
ஒருமுகம் மருவு போற்களவேள்வி அது நுகரும் உள்ளமிக நகை அமர்ந்தே
ஒருமுகம் வள்ளியுடன் உல்லாச வாழ்வுகொளும் ஓராறுமுகமு மொத்து
தருமுகம் கொண்டமது வறுமைபிணி துயரகல தண்முறுவல் பூத்து வருவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

ஒருகரம் தேவரைப் பாதுகாத்தேந்திட ஒருகரமதிடையில் வைக்க
ஒருகரம் அங்குசமோட்ட ஒருகரம் கலிங்கத்தின் உயர்குலங்கிற் பொருந்த
ஒருகரம் கேடயமும் ஒருகரம் வேலுங் கொண்டுற்றுவலமாய் சுழற்ற
ஒருகரம் சொல்லாமல் சொல்லுநெறி மாற்றுகொள ஒருகரம் தாரொரொடொளிர
ஒருகரம் தொடியுடன் மேன்மேலும் சுழற்றிட ஒருகரம் மணியிரட்ட
ஒருகரம் மழைபொழிய அருளமுத குஞ்சரியை ஒருகரம் மாலைசூட்ட
தருகரம் பன்னிரண்டும் கொண்ட முருகனே தளராதவாழ்வு தருவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

திருமகள் தருவள்ளி செய்யுமாலோலமெனும் தேவாம்ச தோணியுணர்ந்து
செந்தினை வனந்தோடி திருமணம் செய்யென்ற சிவவேடனான முருகா
விரவுகாம் போதிநிலை மெய்யன்பு மாதரொடு விளையாடும் கண்ணன் மருகா
மெய்யுருகு வார் பாடும் ஹரஹரப் பிரியனே மேவு சக்கர வாகனே
அருமறை தந்தவா ஆனந்த பைரவி அணைக்கும் ஸ்ரீ சண்முகா
அங்கையினில் ஓடேந்தி தன்ஜாதிப் பாலிந்த அண்டங்கள் காக்கும் ஈசன்
தருமழலை குருபரா தமிழ்மோகனா நினது தாழிணைத் தேனருளுவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

அவமருவு மூவாசை ஆற்றினைத் தாண்டிமன அமைதிதரு மினிமை பெறவும்
அருளொழுகு தெய்வீக அறிஞரைப் பின்பற்றி ஆனந்த நிலைகொள்ளவும்

பவமருகு வினைகோடி ஓட முருகா என்று பகலிரவு கவி பாடவும்
வந்தனை அளித்துனது சிந்தனைமிகுந்து வர பரவெளிச் சிரம் நாடவும்
சிவமருகு மந்திர செம் புரியவும் தூய திருநீறணிந் துருகவும்
சீரடியர் குழுவிலே ஓரடியனாகி மிகு தேவார இசை பாடவும்
தவமருகு முறையினால் கவலைகள் ஒழிக்கவும் தந்திரம் தந்தருளுவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

அதுநல்ல திதுதீய தவர்பெரியர் இவர் சிறியர் அது உண்மை இது பொய்யென
அஞ்ஞான இருளிலெது சரியென்று தெரியாமல் ஆடும் குரங்காகினேன்
பதிமனைவி உறவுகளும் அதிகார உரிமைகளும் பாங்காக வரும்நிதிகளும்
பட்டங்கள் பதவிகளும் திட்டங்களும் பாரில் பலவசதி சுகமனைத்தும்
நதியருகு மரமாக அதனுணியில் ஒருகூட்டை நாடிவரும் பறவையானேன்
நலிவுதரு மோரைந்து புலவேடரின் துணையை நம்பி ஏமாப்படைந்தேன்
சதியுடைய இருகொள்ளி யுள்ளெறும்பான எனை தள்ளாது காத்தருள்வாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

ஆவகை வதைத்திடுதல் அந்தணரை வைதிடுதல் அரிவையரை நெறியழித்தல்
அறிஞரைத் தூற்றிடுதல் ஆகமம் மாற்றிடுதல் ஆயகுருவைப் பழித்தல்
மேவு கொலை களவு பொய் சூதுமது கொள்ளுதல் மெய்யுருகு தந்தை தாயை

வேதனைப் படவைத்தல் சூதுவினை செய்திடுதல் விளைபயிரை அழிவுசெய்தல்
தேவருறை ஆலய குறைபுரிதல் அறியாத சிறுமையரை ஏமாற்றுதல்
தீய இத்தகைய பாவம் எத்தனை செய்தேனோ சிறுமையேன் பிழைபொறுத்து
காவு திரிசூல மொடு காசமொடு காலனெனைத் தாக்காமல் வந்தருளுவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

கருணைமுருகா சோதி ஞானமுருகா ஆதி கைலேசன் தந்த முருகா
கற்றவர் விளங்கிடும் வெற்றி முருகா அன்பர் கருத்திலே இருக்கும் முருகா
அருணகிரி நாதனுக் கருளும் முருகா படைகள் ஆறில் விளையாடும் முருகா
அசுரனைக் கூறிட்ட நெடிய முருகா வேத ஆகமம் சொன்ன முருகா
மருநெறி ஒழித்துனது பெருநெறி பிடித்தொழுக வரமுதவும் பரம முருகா
வல்ல முருகா வள்ளி குஞ்சரி மகிழ்திடும் மயிலேறும் அழகு முருகா
தருணமழை யாகிவரும் சக்தி முருகா எங்கள் சஞ்சலம் தீர்க்கவருவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

சிவயோக வெள்ளமே அருளூறும் வெல்லமே தேவரறியாத பழமே
சிவயநம நமசிவய மந்திர நலந்திகழும் சிவசுப்ர மண்ய குருவே
பவளமலை மீதுமரகத நிலவெறிப்பனடை பழகுமொரு மழலை வடிவே
பரவுமறை யாகம புராணமொடு திருமுறைகள் பாடிப் படைத்த முடிவே
புவியாதி பூதமே விந்துகலை நாதமே பொருளான சுகபோகமே

பொற்புடைய கற்புமணம் களவுமணம் விளைவுதரும் புனிதம் விளக்கும் அரசே
தவியாத உள்ளமுண ரவிரோத ஞானத்தின் தத்துவமுணர்த்த வருவாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

எண்ணும் சுகங்கள் வரும் ஏகாந்த வாழ்வுவரும் இருள்போக்க அருளும் வரும்
இறவாத பிறவாத பெருவாழ்வு வருமென்றும் இகழிலாப் புகழும் வரும்
திண்ணமிகு மன உறுதி திகழட்ட சித்திகளும் தெய்வீக வடிவும் வரும்
சித்த சுத்தானந்த பக்தி வரும் முக்தி வரும் சீவகாருண்யம் வரும்
பண்ணுடைய கலைகள்வரும் விண்ணவரின் நிலைகள்வரும் பாக்கியமனைத்தும் வரும்
பரநலம் செய்யவரும் பார்க்குமிடமெங்குமுன் மயிலழகு தெரியவும் வரும்
தண்ணருள் முருகனே எண்ணிவந்துன் செல்வச் சந்நிதியைத் தொழுதவர்க்கே
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

கொந்தார் கடம்பனே தந்தைநீ தாயும்நீ குலவுமுறவோர்களும் நீ
கூடுமனை மக்கள் நீ நாடுமுயர் செல்வம் நீ குறைதீர்க்கும் அரசனும் நீ
செந்தாமரைச் செல்வி வெண்டாமரைச் செல்வி செய்கருணைக் கதிபனும்நீ
சிந்தனைக் கெட்டாத குமரன் நீ அன்பரின் சீரான தோழனும் நீ
நொந்தாரின் நோய்தீர்க்கும் சஞ்சீவிநீ சகல நூலறியும் புலவனும்நீ
நுவலறிய எங்கள்துரை நீயென்று பவமான நோய்போக்க உனை நாடினேன்

சந்தேகமான இத்தேகத்தினாலமுத தவமுத்தி பேண வைப்பாய்
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

சிங்கார மனையுண்டு குறையாத நிதியுண்டு சீர்பூத்த மைந்தருண்டு
செழுமைதரு நிலமுண்டு வழுவாத குலமுண்டு திருவருளும் வாழ்க்கையுண்டு
மங்காத புகழுண்டு வாடாத மனமுண்டு மாண்பான கலைகளுண்டு
மதியுண்டு பரவுசிவ கதியுண்டு மனுநீதி வயல் பூத்த அருளுமுண்டு
வங்கார தொகையுண்டு வண்ணவுடை உணவுண்டு மட்டிலாச் சித்தியுண்டு
மலையுண்ட வேலவா நினதடியை நெஞ்சினில் வைத்துண்டு வாழ்பவர்க்கே
சங்கீத ஆலோல வள்ளிதரு தினையமுது தலையசைத்துண்ட முருகா
தண்பரவை தொண்டைமான் ஆறுதழுவும் செல்வச் சந்நிதிக் கந்தவேளே

சேவடியார் திருவீதி சிறக்க ஆடி, தீக்குளிப்பார் புரண்டழுவார் மனத்தில் ஆடி
காவடியைத் தூக்குமவர் உடலில் ஆடி, கற்பூர கரகமொடு கலந்தங்காடி
ஆவணிசேர் பூரணையில் தீர்த்தம் ஆடி, அத்தீர்த்தமாடுவார் தம்மோடு ஆடி
தாவலைவாய் தொண்டைமான் ஆற்றூர்ச்செல்வ
சந்நிதிவாழ்வேலவரே ஆடிர்ஊஞ்சல்
சிவநெறியும் அடியவரும் சேர்ந்து வாழி, திருமறையும் செந்தமிழும் சேர்ந்து வாழி
புவனமெலாம் அந்தணரும் ஆவும் வாழி, போற்றுமுயர் சேவலொடு மயிலும் வாழி
நவவீரர் நலம் வாழி வடிவேல் வாழி ஞானகுஞ்சரி வள்ளி வாழி வாழி

தலமோங்கு தொண்டைமான் ஆற்றூர்ச் செல்வ சந்நிதி வேலவர் திருத்தாள் வாழி



************************************

## ஓம்

## சத்ரு சம்ஹார சந்நிதி கவசம்



சந்நிதித் தெய்வங்களின் அருட்பெருங் கருணையால்
சத்ரு சம்ஹார சந்நிதி கவசத்தால்
சுப்ரமண்யனைத் துதிக்க
குருநாதன் தந்தவற்றை குறைவற யான் கூற
மாணிக்கப் பிள்ளையாரே நின்
மலரடி போற்றி - அருளுக

அன்னமலை அரசே சரணம்
ஆற்றங்கரை அழகே சரணம்
இன்பருலகு தரும் இனியவனே சரணம்
ஈகையின் சொரூபா சரணம்
உண்மைப் பொருளே சரணம்

ஊனில் கலந்தவா சரணம்
என் தாயும் தந்தையும் குருவுமானாய் சரணம்
ஏரகப்பதி வாழும் எங்கள் சந்நிதி வேலா சரணம்
ஐயங்கள் அகல்விக்கும் ஐயனே சரணம்
ஒன்றாகி நாமெல்லாம் உனைத்
துதிக்க அருள்வாய் சரணம்
ஓலங்களைப் பாவோதலாய் மாற்றும் மாமலையே சரணம்
ஔஷதமாய் எமக்குள்ளே அனைத்தும்
கூட வைப்பாய் சரணம்
அருளதனை அள்ளித்தர ஆனைமுகன் தம்பியே
ஆதி செல்வச் சந்நிதி வாழ்
ஞானக் கனிவுடைய நாயகா சரணம் சரணம்

கந்தா போற்றி கடம்பா போற்றி
கருணாகரனே போற்றி கார்த்திகேயா போற்றி
கதிரமலையில் வேலாகக் காட்சி தந்தவா போற்றி
ஏழுதிரைக்கப்பால் ஏகாந்த நிலைகாட்டும்
கதிர்காமக் காட்சியிலே சாட்சியாய் நின்றாய் போற்றி
வேற்படைக் கோலமெல்லாம் வேண்டுவார்க்கு
வேண்டுவன தரவல்ல வேதநாயகனே போற்றி
வேதங்கள் காட்டும் அந்த வேதாந்த மறைவடிவம்
வேலாகும் என்றுணர்த்த வேலாக நின்றாய் போற்றி
ஆறுபடை வீடெல்லாம் ஆற்றங்கரை காட்டுமென்றோ
தொண்டைமான் ஆற்றருகே
கோவில் கொண்டாய் போற்றி
சந்திகால வந்தனத்திற்கோர்
சந்நிதியைத் தோற்றுவித்தாய் போற்றி
சார்ந்த தேவருக்கோர் அபயகரம் காட்டமுன்
தந்தையைப் பூஜிக்க கோவில் அமைத்தாய் போற்றி
அழைத்துவந்த அறுபத்தி மூவர்க்கு
ஆலமிலையில் அமுதளிக்க வைத்தாய் போற்றி
ஆதி அருணாசலமாக அன்னமலை

அமைத்தாய் போற்றி
காலடி தானும் தந்து காலமெல்லாம்
காக்க வந்தாய் போற்றி
எந்நிதியும் தரவல்ல சந்நிதி என்றாய் போற்றி
அபயகரம் அளித்ததினால் சத்ரு சம்ஹாரனாய்
ஆனவா போற்றி
ஆலமிலை அமுதளித்து அடியர்
பசியினைத் தீர்த்தவா போற்றி
அருட்பசிதனைப் போக்க அறிவின் ரூபமான
வேலாக நின்றவா போற்றி
புண்ணியனை அடங்கவைத்து அதன்மேல்
பூவரசைத் தோற்ற வைத்தாய் போற்றி
பூவரசை தல விருக்ஷமாக்கி அதன் அருகே
பாடுவோரையெல்லாம் பாவரசாக்கியவா போற்றி
பூவாக்கி எனை உந்தன் பொன்னடி
சேர்ப்பாய் போற்றி
சத்ரு சம்ஹாரத்துக்கோர் சரவணப் பொய்கையில்
உதித்தவா போற்றி
சத்ரு சம்ஹாரனாய் சந்நிதியில் நின்றாய் போற்றி
அடியனை ஆட்கொண்டு பூசைக்கு
அழைத்தவா போற்றி
அன்னவனாம் மருதர் கதிர்காமரின்
மனமாயை அகல்வித்தவா போற்றி
மந்திரம் அறியாக் கதிர்காமரின் மௌனப் பூசையில்
மகிழ்ந்தவா போற்றி
மௌன அன்புப் பூசையின் மகத்துவம்
உணர்த்தியவா போற்றி
பூசைமுறை காட்ட கதிர்காமம் அழைத்துச் சென்று
காட்டியவா போற்றி
அங்கே தங்க வேலொன்றைக் கதிர்காமர்க்கு
தந்தவா போற்றி
காட்டுவழி திரும்பிவரும் கதிர்காமரின் மனப்பயம்

போக்க  வெள்ளி வேலாக மாற்றியவா போற்றி
பூசைக்கு வந்த வேலை மறையவைத்து
மாயம் காட்ட மனம் வருந்திய மருதருக்கு
"நானே உன்னுடன் இருக்கிறேனே"
என்று நயந்துரைத்த புண்ணியவா போற்றி
உள்ளத்துறையும் தன்மையை உணர்த்தியவா போற்றி
கள்ளப் புலன் ஐந்தையும் கரையவைக்கும்
காருண்யா போற்றி
நினைத்தவர்க்கருளும் கருணையால்
சந்நிதி ஆனாய் போற்றி
மனத்துள்ளே மறைபொருளாய்
உறைந்தாய் போற்றி போற்றி

ஆகம விதிக்கப்பால் சந்நிதியை
அன்புத்தலமாக ஆக்கியவா போற்றி
ஆறெழுத்து மந்திரத்தை மனத்திலே இருத்தியபின்
கும்பத்தில் ஹோமத்தைக் கொணர்ந்தவா போற்றி
வித்து வாங்கலில் விளைபொருளானாய் போற்றி
வேதாந்த சாரமெல்லாம் விளங்க வைத்தாய் போற்றி
சரவணப் பொய்கைதனை சந்நிதிக்குக் கொணர்ந்துமே
தீர்த்தத்திற்கோர் திருவேற்கரணி தந்தாய் போற்றி
ஆலரசுச் சோலையெல்லாம் சந்நிதியில் தான் தோன்ற
வேங்கைக் கிணையாக அங்கே
வேப்பமரம் தந்தாய் போற்றி
நந்திகேஸ்வரரின் நாதாந்த நாதத்தில்
நயந்துறவாட வந்த நாயகா போற்றி
அன்னமலை படைக்கும் மடங்களில் தினம்
தினம் நடமாடும் நாயகா போற்றி
சொர்ணமலைதனைப் படைக்கும்
சுப்ரமண்யா போற்றி போற்றி

பூவரச மரத்தடியில் நின் புகழ் பாடும்
அடியரோடு ஆட வந்தவா போற்றி
என்னையுமோர் பொருட்டாக்கி வரும் வார்த்தைகளை
ஏற்க வந்தவா போற்றி
ஓம் சரவண பவ குகாய சந்நிதி வேலாய சரணம்
என்றவர்க்கெல்லாம் அருளும் திருவே போற்றி
கதவில்லா வாசலிலே காத்து நின்று
அடியரைக் காக்க வந்தவா போற்றி
விலையில்லா மாணிக்கமே வேதாந்த
விழுப்பொருளே போற்றி போற்றி
அப்பன் கண்ணிலே ஆறு பொறியானாய் போற்றி
அப்பனையே ஆறுமுகமாக்கி
அனைத்தின் முக்கண்ணில்
பொறியாக வந்த புண்ணியவா போற்றி
அப்பன் தந்த வேலுக்கு அன்னை சக்தி தந்தருள
அசுரரை அழிக்க வந்தவா போற்றி
அழிவிலே ஆக்கத்தைத்தர சேவல் மயிலாக்கிய
காங்கேயக் கடவுளே போற்றி
மனம் என்ற மாயை தன்னை
ஓய வைக்கும் உணர்வே போற்றி
குணம் கடந்த கோவே
குன்றிலாடும் குமரா போற்றி
இச்சா கிரியா ஞான சக்திகளோடு
இலங்கும் ஆதி சிவமே போற்றி
பிச்சையென்று வருவோர்க்கெல்லாம், பசிப்
பிணி தீர்க்கும் பிரபுவே போற்றி
அவர் எடுக்க நீ போடும் திருநீற்றால்
வினைகளெல்லாம்
வெருண்டோட வைத்த வித்தகா போற்றி

சந்நிதி தீரத்திலே நீ ஆடும் ஆட்டமதை
கண்டும் கேட்டும் தேவர்களும்

மனிதர்களும் இங்கே தினம் தினம் பூஜிக்க
வருகின்றார் - பெறுகின்றார்
பற்றற்றான் பாதத்தை பற்றவைக்கும்
நல்லறிவை, நல்லுணர்வை நாயகா
நீ எந்தனுக்குத் தந்தருள வேண்டும்!
நாயகா நானுனக்கு அடிமை
நாயாக நின் சேவடியில் நாளும் கிடப்பேன்
நயந்துரைக்கும் நாள் வரை - பின்
நானும் நீயும் என்ற வரம்பினுக்கப்பால்
தானாகி நிற்கும் தத்துவ நிலையெல்லாம்
தந்தருள்வாய்! தத்பரமே! - சித்பர வியூகமே!
சிற்றம்பலத்தாடும் சின்மயமே சச்சிதானந்தமே!

சந்நிதித் தெய்வங்கள் போற்றி
ஐங்கரன் முதலாய் சங்கரன் சண்முகன் சக்திகளோடு
சரவணப் பொய்கையான
திருவேற்கரணியைத் தீர்த்தமாக்கி
சங்கர நாராயணம் சிவநாகதம்பிரானாக
பூவரச மர நிழலை ஆதிஷேசனாக்கி
நவக் கிரகங்கள் சுற்றி நின்று சாமரை வீச
வள்ளி வாசலுக்கு முன்னே நிதம் தீர்த்தாபிஷேகம்
காணக் கண்ணாயிரம் வேண்டுமே!
அபிஷேகம் - அது தலவிருக்ஷத்திற்கும்
மரத்தடியே மௌனமாய்
சமாதி நிலையில் வாழும் புண்ணியா உந்தனுக்கும்!
எந்தனுக்கும் ஏதுவாக இறையருளை நாட
திருவேற்கரணித் தீர்த்தத்தை இங்கே ஊற்ற
சந்நிதித் தெய்வங்களின் அருட்கரங்களெல்லாம்
உயர்ந்து கருணை மழை பொழிந்து
காலத்தாலும் கர்மத்தாலும்
விளையும் வினைகளெல்லாம்
ஆற்றோடு கரைய வைக்கும்

அற்புதக்கோவே போற்றி போற்றி!
லிங்கோற்பவமே போற்றி
அர்த்தநாரீஸ்வரனே போற்றி
பாற்கடல் பள்ளி கொள்ளும்
பரந்தாம நாராயணா போற்றி
மூலஸ்தானத்திலுறையும் முதல்வி
தெய்வயானையாள் போற்றி
அருகே தனியாக அடியார்க்கருள ஆலயம்
அமைத்த வள்ளிநாச்சியார் போற்றி
கூடவே நாகபடமான அனந்தநாராயணமே போற்றி
தல விருக்ஷம் பூவரசம் தினம் தினம் போற்றி
அதனடியே வாழும் புண்ணியா நின்
பொன் கழல்கள் போற்றி
திருவேற்கரணி போற்றி
வேற்படையே போற்றி வேதநாயகமே போற்றி
எழுந்தருளும் எழில் மிகு வேலே போற்றி
எத்திக்கும் அருளீட்டும் அறுமுகவா போற்றி
காவலுக்காய் வீதி ஓரத்தில் அமர்ந்த
வித்தகா வைரவா போற்றி
வீதியை அலங்கரிக்க வந்த விதவிதமான
விருக்ஷங்கள் வாழ்க
ஆலும் அரசும் பூவரசும் வாழ்க
வேம்பும் பயறியும் வாழ்க
வல்லியாறான தொண்டைமான் ஆறு வாழ்க
கல்லோடைக் கரையே வாழ்க
அங்கு தந்த நின் காலடியே வாழ்க
அடியார்க்கு ஆறுதல் அளிக்கும்
அன்னதான மடங்கள் வாழ்க
ஆலமிலை அமுதும் போற்றி
திருநீறும் தீர்த்தமும் தினம் தினம் போற்றி
பூவரச இலையும் போற்றி
புண்ணியனார் சமாதி சரணம்!

அன்னதான மடங்களிலே அடியரோடு அடியராய்
அமரவரும் அற்புதா சரணம்!
கந்த சஷ்டி முடிவிலே சூர சம்ஹார நேரத்தில்
வீதியில் விளையாட வரும் வித்தகா சரணம்!
தேர்த்திருவிழா இரவில் காவடிகள் மத்தியில்
காட்சி தரும் கந்தா சரணம்
பாடும் அடியவரின் பக்கத்திலே நிதம்
ஆடவரும் அப்பனே சரணம்
சந்நிதியை நினைத்தாலே அனைத்தையும்
அள்ளித் தரும் ஆறுமுகா சரணம்!
வந்தாலோ வரமதனை வாரி இறைக்கும்
வள்ளலே கதவில்லா வாசலிலே
காத்து நிற்கும் கந்தக்கடவுளே சரணம்!
தேவரும் மனிதரும் தினம் உனைப் பூஜிக்க
பூலோகத்தில் ஓர் புண்ணிய ஸ்தலமாக
ஸ்ரீ செல்வச் சந்நிதியை தெய்வ சங்கல்பமாக
தொண்டைமானாற்றம் கரையிலே தோற்றுவித்த
கலியுக தெய்வமே! கற்பகத் தருவே!
இங்கே உனை நாடி வந்து தம்
குறையையெல்லாம்
கண்ணீரில் கலந்து முறையிடுவோர்களின்
வினைகள் ஆற்றோடு கரைவதெல்லாம்
அன்று நீ கொடுத்த வரம் என்று கொள்ளவா?
கோவணாண்டியாக அன்று பழனியிலே
குண்டலினியின் முதல் சக்கரத்திலிருந்து புறப்பட்டு
ஆறுபடை வீடுகளில் ஆடிவிட்டு
அமிர்த ஸ்தலமான சந்நிதியில் நின்றவனே
இங்கே "ஓம்சரவணபவ குகாய சந்நிதிவேலாய சரணம்"
என்றோரின் குறைகளெல்லாம்
சத்ரு சம்ஹாரமாகி மறைவதெல்லாம்
அன்று தேவர்க்கு அபயகரம் காட்டி
அசுர அழிவை அறிவித்த

அபய ஸ்தலமாகையால்
இங்கு சத்ரு சம்ஹாரனாய்
சுப்ரமண்யன் வீற்றிருந்து
வேண்டுவார்க்கு வேண்டுவன
ஈயும் அதிபதியாய் அன்னமலை
சொர்ணமலை அமர்ந்த சுப்ரமண்யா!
சுகப் பிரம்மமே! சுந்தரா நின்
பாதார விந்தங்கள் போற்றி போற்றி!
நின் பொற்பாத கமலமதைத்
தஞ்சமென வந்தோம்
ஏற்றருள்க! எந்தையே தந்தையே
எனையீன்ற அன்னையுமாய் அருட்குருவாய்
வந்தவனே கந்த வனத்தவனே சரணம்
ஷட்கோண இறைவா சரணம் சரணம்
முருகா சரணம் முத்துக்குமரா சரணம்
குமரகுருபரா சரணம் குருகுகா சரணம்
சந்நிதி வேலா சரணம் சரணம்
சங்கரி பாலா சரணம் சரணம்
சரவணபவமே சரணம் சரணம்
சந்நிதி வேலே சரவணபவமே
ஷட்கோணத்துள்ளிருக்கும் செல்வமே போற்றி
சரணம் சரணம் சண்முகா சரணம்
சந்நிதி வேலா சரணம் சரணம்
சரவணபவமே சரணம் சரணம்
சத்ரு சம்ஹாரனாய் சந்நிதி அமர்ந்த
சந்நிதி வேலா சரணம் சரணம்
சரவணபவமே சரணம் சரணம்

இதைப் பாடிப் படிப்பவரும்
தேடித் துதிப்பவரும் சந்நிதியான்
தண் கருணையால் சகல சம்பத்தும் கிட்ட
அஷ்ட ஐஸ்வர்யங்களுக்கு அதிபதியாகி

அருளால் அமரருலகு பெறுவர்!
பொய்யான இவ்வுலக வாழ்விலும்
மெய்ஞ்ஞான அறிவு பெற்று
உண்மையை இதயத்தில் காண்பர்!
இது சத்தியம் சத்தியம் என்று
சந்நிதி வேலன் சொன்னதைக் கேட்டவர்
கூறியதை நம்பி கூறுகிறேன்.
மனித வாழ்வுக்கு இது கவசமாக
அமைந்து ஆறறிவில் சித்திக்கும்!
எத்திக்கும் கந்தனைக் காண்பாய்!
கந்தனே எல்லாம் என்றுணர்வாய்!
அதுவே மூலத்தின் மூலம்
அனாதியாய் அதுவுமாய் நின்ற சிவம்
ஆடிய ஆட்டங்களில் இது அனந்தம்!
ஆனந்த சிவமே ஆதி அருணாசலமாகி
காசி விஸ்வேஸ்வரராகி மூலமந்திரத்தை
முன்னின்றருளும் முதல்வனாகி
தகப்பன் சுவாமியான சண்முகா!
உனைப் போற்ற என் ஏழ்மை அகல
எத்திக்கும் எனைக் காக்க நீ கவசமாக
எனைக் காப்பாய் கலியுகத் தெய்வமே!

மூத்தவனும் முருகனும் முன்நின்று காப்பர்!
ஐந்தெழுத்தும் ஆறெழுத்தும் அனைத்தையும்
அள்ளித்தர சங்கர நாராயணமே தஞ்சம்
என்றார்க்கு சேவலும் மயிலுமாகி, சக்திகளாகி
செவ்வேளாகி, சந்நிதியானாகி
சங்கடங்கள் தீர்க்கும் தயாபரனே
நின் பாதார விந்தம் போற்றி!
சரணம் சரணம் சண்முகா சரணம்
ஷட்கோண இறைவா சந்நிதிவேலா சரணம்!
சுபம் - சர்வம் - சந்நிதி



**வேண்டும் வரம் தருவான் வெங்கடேஸ்வரன்**

வித்தகா நர்த்தகா வைகுண்ட நாயகா

தத்தளிக்கும் கடல் போன்ற மாந்தரின் உள்ளத்திலே
அனந்த சயனம் செய்து காக்கும் எம் காவலனே

மலையேறி வந்தவரின் மனமேறும் ஸ்ரீநிவாசா
நேர்த்திக்கடன் தீர்த்தவர்க்கு நேர்த்தி உடன் கொடுப்பவனே
திருப்தியைக் கொடுப்பதற்கோ திருப்பதியில் நின்றாய்
திருமலை வாசா மங்கை அலமேலு நேசனே

வேலவனைப் போலவே மலைதனை விரும்பியவா
வேதாந்த விழுப்பொருளே நாதாந்த நாயகனே
ஏழுமலை வாசா நீ ஏழுகடல் நாயகா
ஏழேழு உலகத்திலும் வேண்டுமய்யா உன் துணை
*************

**காளீய மர்த்தனா கம்ச நீசூதனா**

கனகாம்பர தாரி கண்ணா மணிவண்ணா வா

காண்பவர் கண்களுக்கு கருமை நின் நிறமோ கண்ணா
ஆயிரம் சூரியரை அஸ்த மிக்கும் பேரொளியே
பார்க்கும் இடம் எல்லாம் நின் கோலம் தெரியுது கண்ணா
பார் காக்கும் தெய்வமே காத்திட நீ வந்திடப்பா

பக்தவத்சலனே கண்ணா பரம தயாளனே
பன்னக சயனா நீயே பாகவதப்பிரியா கண்ணா

ஜமுனா நதி தரத்திலே கோபியர்கள் கூட்டத்திலே
மதுராவின் மன்னவன் நீயே மாடுகள் மேய்த்தவனே

மாடுகள் மனிதர்களோ கோபியர்முனி புங்கவரோ
ஜெகமெல்லாம் பிருந்தாவனமோ ஜமுனா நதி தீரமோ
கோலேந்தி ஆவினத்தை மேய்த்தவனும் நீயே கண்ணா
கோலோச்சி மதுராவை ஆண்டவனும் நீயே கண்ணா
(காளீய )

ஆண்டவனும் நீயே கண்ணா ஆண்டவனே நீயே கண்ணா
ஆண்டவனும் நீயே கண்ணா ஆண்டவனே நீயே கண்ணா
(காளீய )
******************



**கிருஷ்ண கிருஷ்ணா முகுந்தா** ஜனார்த்தனா
கிருஷ்ண கோவிந்த நாராயணாஹரே
அச்சுதானந்த கோவிந்த மாதவா
சச்சிதானந்த நாராயணா ஹரே (கிருஷ்ண )

வண்ணக்குழலூதி கான மழை தந்தவா
எந்தன் கருத்தினிலே என்றுமே நின்றவா
உன்னை நினையாத நாளும் இனி வேண்டுமோ
என்னை உணராத ஜீவனாக வாழவோ

என்றும் மறவாமல் நான் உன்னை வணங்குவேன்
நீயும் தவறாமல் நின் அருளைத்தரவேண்டும்
நீயும் தந்தாலே உன் பின்னாலே வருவனே
இல்லை நின் அடியில் என்னையே தருவனே

வானத்தைப்பார்க்கையிலே கண்ணா உன் நிறம் கண்டேன்
உன் கானத்தைக்கேட்டபின் என்னையே மறந்தேனே
என்றும் என்னோடு நீ வாழ வேண்டுமே
அந்த நாள் வந்தால் என் வாழ்வு நிறையுமே

அந்த நாளை நான் தேடி அலைந்தேனே
என்னை அலையாதே உள்ளே பார் என்றவா (கிருஷ்ண )
*****************

**கண்ணனின் குழலோசை இதயக்கோவிலின்** மணியோசை
கேட்டுவிட்டால் தினமே இனி வாட்டமுண்டோ மனமே

வெண்ணையுண்ட கண்ணனவன் இந்த மண்ணையுண்ட
மன்னனவன்
தன்னை யார் என்று கூற வாயினுள் அத்தனையும் காட்டி
விட்டவன்
கோலோச்சி ஆண்டவன் அவன் ஆவினத்தைக்கோலேந்தி
மேய்த்தவன்
குழலேந்தி நின்று கொண்டே அவன் குறும்புகள் செய்வானே

உறியேறி வெண்ணைத் திருட்டு அடியர் மனமேறி உள்ளத்திருட்டு
குடியேற வந்திடுவான் அவனை அன்பாலே அணுகி நின்றால்
என் இதயக்கருமையெல்லாம் உன் நிறமாய்க் காண்கின்றேன்
தியான நிலை தந்தால் நீ ஜோதி மயமன்றோ கண்ணா

மலைதனைக்குடையாக்கி மாயப்பாம்பின்மேல் ஆடிடுவாய்
மாயவனும் நீயே கண்ணா எனைக்காப்பவனும் நீயே

**ஓம் நமோ நாராயணாய** ஓம் நமோ நாராயணாய
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நாராயணாய

பிறவிதோறும் வினைமிகுந்து பெருகுகின்ற இருளினை
அகலவைக்கும் அருணதீபம் ஓம் நமோ நாராயணாய

ஊறு துன்பம் உடல் வியாதி ஊழ்விடாத வறுமையும்
ஆறவைக்கும் அருள் மருந்து ஓம் நமோ நாராயணாய

ஏக்கமாம் குழிக்குள்ளே இருண்டுருண்ட வேளையில்
தூக்கிடும் துணைக்கரங்கள் ஓம் நமோ நாராயணாய

சோகமோக தாகமீறிச் சோர்வுவிஞ்சும் வேளையில்
கருணையான புனிதகங்கை ஓம் நமோ நாராயணாய

ஜனன மரண பயதரங்க ஸாகாரம் கடத்தியே
உடனுவந்து காக்கும் ஓடம் ஓம் நமோ நாராயணாய

கடுகடுத்து முனைதொடுத்த காலசூலம் சீறினால்
உயிர் தடுத்த கவசமாகும் ஓம் நமோ நாராயணாய

ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நாராயணாய
உலகெலாம் முழங்கவேண்டும் ஓம் நமோ நாராயணாய

***************

**ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நாராயணாய**
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நமோ

சகலலோக சாட்சியாகி சகல வேத சாரமாகி
சகலயோக சித்தியாகி நின்ற மூர்த்தியே
சகல தத்துவங்களாகி பரம ஞான வித்தையாகி
சகல சப்த வடிவமாகி வந்த மூர்த்தியே

அகுண சகுண நிலையிலாகி அசர சரவி பாகமாகி
அதிலுமாகி இதிலுமாகி அமையும் மூர்த்தியே
அணுவுளே அகண்டமாட அணுவினால் அனைத்துமாட
அபர நாத வடிவிலாடும் அகுண மூர்த்தியே

எனது நானெனச் செருக்கில் மமதை உற்றலைந்த என்னை
இனியனாக்கி இணைய வைத்த இன்ப மூர்த்தியே
எனதுளத்தில் உனது நாமம் எழுதிவைத்து நடனமாடி
ஏகமாய் எனைக் கவர்ந்த யோக மூர்த்தியே

படியெலாம் கடந்த சுத்த பிரம்ம வஸ்துவாய் இருந்தும்
பஜனையால் மகிழ்ந்து தோன்றும் கருணை மூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுளத்தை உருகவைத்த உனதுநாமம்
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நமோ

அளவிலாமல் எழு விசார அலையடித்த மருளகற்றி
அமைதிபெற்றடங்க வைத்த அன்பு மூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுளத்தை உருகவைத்த உனதுநாமம்
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நமோ

**********************************

**ஆதி அயனெடு தேவர் முறையிட ஆசி தருவது ஹரிநாமம்**
ஆவிபிரிவுறும் வேளைவிரைவினில் ஆளவருவது ஹரிநாமம்
ஓதும் அடியவர் நாவில் அமுதென ஊறிநிறைவது ஹரிநாமம்
ஓலமிடு கஜராசன் விடுபட ஓடி அருள்வது ஹரிநாமம்

வேதமுடிவிலும் வேள்வி முடிவிலும் மேவி உறைவது ஹரிநாமம்
வீசும் அலைகடல் சேஷன் நிழல்செய நீடுதுயில்வது ஹரிநாமம்
நாதஜயஜகந்நாத நாமமென நாளும் அவனடி பணிவோமே
நாமபஜனையில் நாமமகிமையால் நாதனவனருள் பெறுவோமே
( யாரோ )

**சுத்தப் பிரம்ம பராத்பர ராமா**
காலாத் மக பரமேஸ்வர ராமா
சண்ட கிரணகுல மண்டன ராமா
ஸ்ரீமத் தசரத நந்தன ராமா

தண்டகா வனஜன பாவன ராமா
துஷ்டவிராக வினாசன ராமா
இதஹர லக்ஷ்மண சம்யுத ராமா
சீதாப் பிரிய ஹரி நானுத ராமா

அனுமத் சேவித நிஷபத ராமா
நவ சுக்ரீவா வீஷ்டித ராமா
ஸ்ரீராம ஜெய ராம ஜெய ஜெய ராம
ஸ்ரீராம ஜெய ராமஜெய ஜெய ராம

ஸ்ரீராம் ஜெய ராம் ஜெய ஜெய ராம்
ஸ்ரீராம் ஜெய ராம் ஜெயஜெய ராம் ( யாரோ )
***********

**தலையில் பீலி அசையக் கண்டேன் குருவாயூரப்பா**
முகத்தில் முறுவல் தவழக் கண்டேன் குருவாயூரப்பா
கெண்டை எங்கும் முழங்கக் கண்டேன் குருவாயூரப்பா
சந்தனமெங்கும் மணக்கக் கண்டேன் குருவாயூரப்பா
பக்தர் பதினாயிரவர் வந்தார் குருவாயூரப்பா
ஓடக் குழலின் ஓசையைக் கேட்டேன் குருவாயூரப்பா
தூலாபாரம் பலபேர் செய்தார் குருவாயூரப்பா
தூய உள்ளம் வேண்டும் என்பாய் குருவாயூரப்பா
கொஞ்சம் என்னை திரும்பிப் பார்ப்பாய் குருவாயூரப்பா
தஞ்சம் தந்தேன் என்றே சொல்வாய் குருவாயூரப்பா
பகவானே குருவாயூரப்பா குருவாயூரப்பா
பகவானே குருவாயூரப்பா குருவாயூரப்பா

போலோ ப்ருந்தாவன விஹார லால கீ - ஜெய்! ( யாரோ )



**அயோத்யவாசிராம் ஆனந்தரூபாராம்**
தசரத நந்தன ராம ஜெய ஜெய ஜானகி ஜீவனராம்

அகல்ய உத்தனராம் ஆரண்ய வாசிராம் (தசரத)

லக்ஷ்மண சேவித்தராம் லக்ஷ்மி மனோகரராம்(தசரத)

பக்த ரக்ஷசகாராம் பதித பாவனராம் (தசரத) ( யாரோ )

********
**வல்லிபுரத்தானே! திருவேங்கடத்தோனே!**
ஸ்ரீ ரங்கநாதனே! ஆளவந்த ஆள்வாரே!

அலைமகள் அருகிருக்க ஆதிசேஷன் நிழல் கொடுக்க
அனந்த சயனம் செய்யும் வல்லிபுர ஆழ்வாரே!

பிறவிக் கடலிலே தத்தளிக்கும் எமைக்காக்க
பாற்கடல் தனை மறந்து , வல்லிபுர வெண்மணலில்
ஐம்புலனாம் நாகம் இங்கே அடங்கிய நிலையிலே
பள்ளிகொண்டு பார் காக்கும் பெருமையை என்னென்பேன்

ஞாயிறு தோறும் இங்கே நாயகா உனைக்காண
ஞாலமே திரண்டிடுமே ஞாலத்தைக் காப்பவனே
நாராயணா என்று பாராயணம் செய்தால்
கண்ணனாய் வருவாயே கவலைகள் தீர்ப்பாயே!

************



**அனுமன் என்றொரு தெய்வம்** - அவன்
அண்டினவர்க்கென்றும் அபயம்
இதயத்தில் கொண்டான் ராமனை
இருந்தார் அவர் அங்கு சீதையுடன் . .

அடக்கமும் அன்பும் அருளும்
பொறுமையும் அமைதியும் கொண்டு
வானவர் போற்றும் வீரனவன் - இந்த
வையகம் வாழ்த்தும் தெய்வமவன்

அஞ்சனை என்றவோர் அழகி - அவள்
வானர வம்சத்தில் வந்தாள்
கண்டான் வாயு பகவான்
கொண்டான் அவள்மேல் மையல்

காமன் ஏவிய கணைகள் - வாயு
தேவனை வாட்டிய போதும்
கற்புக் கரசியின் முன்னால் - அந்தக்
கணைகளுக்கும் அருகதையுமில்லை

தழுவ வந்தான் தவறுணர்ந்தான்
மனத்தால் நினைத்தேன் என்றான்
மகனொன்றைப் பெற்றெடுப்பாயே
அவனால் உன் புகழ் வாழும் என்றான்

வாயுதேவன் மகன் மாருதி
பிறப்பால் விலங்கினமாயிலும்
ஞானமும் வீர பராக்கிரமும் பெற்ற
ராம பக்த ஹனுமானே யன்றோ

பண்புகளால் அவன் உயர்ந்து
ஓர் ஒப்பற்ற மனிதனும் ஆனான்
ஆற்றல்கள் எல்லாம் மிகுந்த
ஓர் ஞான சித்தனும் ஆனான்

ராம நாமம் அவன் நாவிலே
என் நாளும் ஒலிக்கணும் என்றான்
ராம காதை கூறும் இடமெல்லாம்
நாமும் அனுமனைக் காண்போமே

அஞ்சனைச் செல்வா போற்றி
அனுமனே ஜெய ஜெய போற்றி
நெஞ்சினில் இராம நாமம்
நிறைந்திடும் நிமலா போற்றி
சஞ்சலம் தவிர்ப்பாய் போற்றி
சற்குருநாதா போற்றி
தஞ்சமென்றடைந்த பேரை
முப்போதும் காப்பாய் போற்றி போற்றி



**மகர ஜோதியாய் வருவாய்**
மலைமகனே ஐயன் திருமகனே - நீ (மகர )

உனதருள் உளதேல் உலகாம் - இன்றேல்
உலக வாழ்வு கொடும் நரகாம்
தன தானிய சௌபாக்கியம் தருவாய் (மலைமகனே)

வீரத்திருமகனின் நோக்கம் - எல்லா
வெற்றி அளிக்கும் மன ஊக்கம்
சீரும் சிறப்பும் மனத்திறமையும் தருவாய் (மலை )

கமலநயனமிடும் கருணை - எந்தன்
கவிகள் பாடுமிடம் பொழிவாய்
வம்சமுழுதுமெனக் கருள் வரம் தருவாய் (மலை )

அண்ணாமலை வளர் ஒளியே - ஐயன்
அரங்கநாதன் தந்த அமுதே
சபரிமலை தன்னில் பொன்னுலக வாழ்வருள்வாய்(மலை)

பம்பா நதிக்கரையோரம் -ஐயன்
பழவினை தீர்த்தருள வேண்டும்
இருமுடி கொணர்ந்தார்க்கு இகபரசுகம் அருள்வாய்(மலை)

நெய்யால் அபிஷேகம் செய்வோம் -ஐயன்
பொய்யாயின வெல்லாம் போக்க
மெய்ஞான சிவோகம் சித்திக்க அருள்வாயே (மலைமகனே)

பந்தள ராஜ குமாரா - உந்தன்
பதம்பணிந் தருள் வேண்ட வந்தோம்
மணிகண்ட மகாப்பிரபு மனமாயை போக்கிடுவாய் (மலை)

தோகை நினதருளின் துணையால் - யான்
தொட்டதனைத்தும் பயன் அளிக்கும்
யோக போக சுக வாழ்க்கையும் தருவாய் (மலைமகனே )

*****************

**வைரவா சந்நிதி வைரவா**
காவலாக வந்து நின்ற வைரவா
காக்கவா . . தீயவை அழிக்க வா
கட்டிவைத்துக் காவல் செய்யும் வைரவா

அன்னைக்கு அருகிருக்கும் வைரவா - நீ
அப்பன் வாசல் நிற்கும் மர்மம் ஏதையா
அன்னை தந்த வேலைப் பார்க்க நின்றாயோ - அன்றி
அன்னை சொன்னதாலே இங்கு வந்தாயோ . . .

இணையாத மரங்கள் இங்கு இணைந்து வளர்வதாலோ
அத்தனைக்கும் அடியினிலே கோயில் கொண்டு நின்றாயோ
இடும்பனுக்கு வழிவிட்டு அருகினிலே அமர்ந்தாயோ
கடம்பனின் வீதியெல்லாம் காக்கும் ஞான வைரவா! . .

**சந்நிதி திருப்புகழ்**
ஓடி வரு கங்கை பாதி மதி கொன்றை
ஓர் மிடறில் நஞ்சம் இவை சூடி
ஊழி நடனம் செய் நாதனுனை நண்ணி
ஓது பொருள் என்ன விடையாக
ஈடிணையிலாத வேத முதல் மந்த்ரம்

ஈசனும் விளங்க அருள் பாலா
ஏழை அடியோமைச் சூழும் வினை மாள
ஈழ முழுதாள வரவேண்டும்
வேடவர் மடந்தை காடுபடு கொம்புத்
தேனொடு பிசைந்த தினைமாவை
தேடி முள் நிறைந்த கானிடை நடந்து
சேவடி சிவந்த பெருமாளே
ஆடி வரு தொண்டைமான் நதி மருங்கில்
ஆயிரம் அறங்கள் வளர் கோயில்
ஆடும் எழில் கொஞ்சு காலடி யுகந்த
ஆறுமுகனே சந்நிதியானே - (சோ. பத்மநாதன்)

*******************

**சந்நிதி திருப்புகழ்**
வள்ளியோடு கூடி வாழ் சுவையை நாடி
வளரு தமிழ்க் காதற் - பெருமான் நீ
வாடும் அடியார்கள் கோடி முறை பாடித்
தேடி உனைக் கூடும் - பெருமான் நீ
புள்ளி மயில் மீதில் பொலிய வரு போதில்
புலவர் விளையாடும் - பெருமான் நீ
பொன்மலையில் அன்னை புதல்வன் என உன்னை
சந்நிதி வைத்தேத்தும் - பெருமான் நீ
கொள்ளை பசியாற குவியும் அன்ன தான
குன்றி வளை வேற்கைப் - பெருமான் நீ
குற்றுயிரில் வைத்து கொடிய பிணி தீர்க்கும்
குறையினரைக் காக்கும் - பெருமான் நீ
துள்ளி வரு வேலைத் தொட்டழகு சொட்டித்
தோகை மயிலாடும் - பெருமான் நீ
துங்கமுற யார்க்கு தோன்றி அருள் ஈயும்
தூய சந்நிதியிற் பெருமான் நீ - (சோ. பத்மநாதன்)

******************

**தீபாராதனை**

தேவரும் மனிதரும் தினம் உனைப்பூஜிக்க
ஸ்ரீ செல்வச் சந்நிதியோ - அங்கே
வேலவன் வேற்படையாயிருந்தே - சத்ரு
சம்ஹாரம் செய்து நின்றான் - அடியர்க்கு
சரணாகதி ஆனான் . . .

நினைத்தார்க்கு நெஞ்சத்தில் நிதம் இருந்தே
அவன் - வரமுன்னே வரம் தருவான்
வள்ளலவன் - வாரி இறைத்தருள்வான்
கதவில்லா வாசலில் காத்திருந்தே - உந்தன்
கவலையெலாம் களைவான் - கருணையின்
பிறப்பிடம் அவன் ஆவான் . . .

காலமெல்லாம் அவன் காலடி துணையென்று
காத்து நின்றவர்க்கெல்லாம் கந்தனவன்
தொண்ணூற்றி ஒன்பதாம் படிதனில் நின்று
தூக்கியும் துணை புரிவான்
குறும்புகள் புரிந்துமே குறை தீர்ப்பான் . . .

குன்றத்தில் ஆடிடும் குமரேசனை
எங்கள் மன்றத்தில் வரவழைத்தால்
வந்தங்கே - வள்ளலவன் வீற்றிருப்பான்
வீற்றிருந்தே விளையாடும் ஆட்டமெல்லாம்
வினைகளை மாற்றிடுமே வந்த நோய்களைப்போக்கிடுமே

வேண்டுவன தந்தருளும் வேலவன் உனக்கு
தாண்ட வழியும் தருவான்
தந்தவன் தாழினைத் தப்பாமல் பற்றி நின்றால்
தயை என்றும் உன்னிடமே - என்பதினால்
வேண்டுவாய் வேலன் அருளே . . .

வேல் முருகா வேல் முருகா வேல் முருகா வேல் முருகா
வேண்டும் வரம் தந்தருள வா - சந்நிதியில் (வேண்டும்)
மால் மருகா மால்மருகா மால்மருகா மால்மருகா
தாண்டும் வழி தந்தருள வா - சந்நிதியில் (தாண்டும் )
*********

**ஓம் மங்களம்**

விபூதி

பரமம் பவித்ரம் சந்நிதி வேலன் திருக்கரம்
பரமம் விசித்ரம் அவன் அருளும் ஒளிக்கரம்
பரமார்த்த நிஷ்டார்த்த மோட்சப் பிரதானம்
வேலன் விபூதிம் இதமாஷ்டயாமி!

**சந்தணம் / குங்குமம்**

ஸ்ரீ ஸ்கந்தராஜா ஸ்ரீ சுப்ரமண்யா
ஸ்ரீ செல்வச் சந்நிதி வாழ் திருமகளார் துணைவா
ஆற்றம் கரையமர்ந்த அன்னமலை அரசே
பூவரசத் தருகமர்ந்து அடியவரைக் காப்பாய்!



குரு தோத்திரம்

தெளிவு குருவின் திருமேனி காண்பது
தெளிவு குருவின் திருநாமஞ் செப்புதல்
தெளிவு குருவின் திருவாக்கைக் கேட்பது
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே !

முருகேசம் பரம ஹம்சம்
முருகேசம் பரி பூர்ணம்
முருகேசம் பரப் ப்ரம்மம்
முருகேசம் நமோ நமக!

எங்கும் நிறைந்தவனே
எல்லாம் அறிந்தவனே
எல்லாமாய் நின்றவனே
என் குருவே நீ வாழ்க!

எங்கும் நிறைந்தவனே
எல்லாம் உணர்ந்தவனே
என்னுள்ளே அமர்ந்தவனே
என் குருவே நீ வாழ்க!
ஓம்
சாந்தி! சாந்தி! சாந்தி!

**சந்நிதி வேலே சஞ்சலம் தீர்ப்பாய்**
**சந்நிதி வேலே சங்கடம் தீர்ப்பாய்**



# இணைப்புகள் : சாமி ஐயாவும் அன்னை மலரும்

தவத்திரு. வே . முருகேசு சுவாமிகள்( சாமி ஐயா )



**பற்றிய பாதக்கமலங்கள் பற்றி . . . . .**

வாழ்க்கையின் தத்துவத்தை அறியவேண்டும் என்று சிறு வயசிலிருந்தே ஓர் துடிப்பு என்னை வாட்டியபோதெல்லாம் என் அருட்குருநாதனாகிய சந்நிதியானிடம் "சற்குருவாய் வருவாயே சந்நிதி வேலே" என்று யான் கேட்காத நாளில்லை . கேட்டது மட்டுமல்ல யான் தென்

இந்தியாவிலும் இலங்கையிலும் குருவைத் தேடி அலையாத இடமுமில்லை . என் உள்ளக் கிடக்கை அறிந்த செல்வச் சந்நிதியான் எங்கோ இருந்தவனை தன் இடத்தே வர வைத்து , ஒரு வாழ்க்கைத் துணையையும் தந்தபின் , தன் வாசலிலே ஓர் குருநாதனையும் 1985ம் ஆண்டு கந்த சஷ்டி காலத்தில் காட்டி விட்டதில் விந்தை என்ன? . . .அன்று முதல் "சாமி ஐயா" என்றுஅடியவர் கூட்டம் செல்லமாக அழைக்கும் தவத்திரு வே. முருகேசு சுவாமிகளை என் குரு நாதனாகவும் , ஞானத்தந்தையாகவும் கொண்ட என்னை , பிற்காலத்தில் துறவு வாழ்க்கையிலும் , என்னைத் தன் மூத்த மகன் என்று பாசத்தோடு ஏற்று , என்னோடு பிற நாட்டிலும் சில காலம் வாழ்ந்து , எனக்கென்று ஒரு தனிப் பூசை முறையையும் காட்டி , 12 வருடங்கள் பிற நாட்டில் சந்நிதியான் திருவிழாப் பூசைகளைச் செய்ய வைத்து , என் வாழ்க்கையின் முக்கிய கட்டங்களைத் தாண்ட வைத்த அருட் பெருங் கருணையைக் கூற வார்த்தைகளைத் தேடுகின்றேன்! எம்பெருமான் ஸ்ரீ செல்வச் சந்நிதியான் தன் வாசலிலே காட்டிய என் ஞானத் தந்தை தவத் திரு வே . முருகேசு சுவாமிகளைப் பற்றி சந்நிதியான் எனக்குத் தந்த சொல்லமுதத்தால் போற்றிப் புகழாத நாவும் ஓர் நாவோ? . . . என்பதற்கிணங்க ஓர் சிலவற்றை என் குருநாதனைப் பற்றி எழுதுவதிலும் படிப்பதிலும் , பாடுவதிலும் ஆனந்தக் கடலில் மிதக்கின்றேன் அந்த ஆத்ம அனுபவத்தை அறிய வேண்டின் , புரிய வேண்டின் , உணர வேண்டின் என்னோடு வாருங்கள்! . . . . . .பூவரச மரத்தடியில்
"சும்மா இருந்து" பாருங்கள்! . . . . . . புரியும் .

உ

குகமயம்

ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலழகன் துணை

தவத்திரு வே. முருகேசு சுவாமிகள், தும்பளை பருத்தித்துறை

கலியுகத்திலே இந்து மதத்தில் இறைவனின் அவதாரத் திருவிளையாடலில் ஓர் மாற்றம்தான் மகான்களையும் மகனீயர்களையும் எம்மிடையே உலாவ விடுவது. ஆறாவது அறிவைக் கொடுத்து, ஐந்து அறிவுகளின் அவஸ்தையையும் சொல்லி மனம் என்ற ஒன்றால் படைக்கப்பட்ட மனிதனுக்கு அதை வெல்லும் மார்க்கத்தையும் சொல்லி, கர்ம வினையென்றும், விதி என்றும் நடப்பனவற்கு காரணத்தையும் காட்டி - என்னதான் சொன்னாலும் அதை உணர மறுக்கும் மனித மனத்தைப் பண்படுத்தவே நல்லவர்களை உலகில் இறைவன் நடமாட விடுகிறான் என்றால் அது அவனின் கட்டுக்கடங்கா கருணையின் நிமித்தமே. மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதை எடுத்துக்காட்டவே இறைவன் கண்ணனாகவும், ராமராகவும் பிறந்து வாழ்ந்து காட்டினான். ஆதி சங்கரராகப் பிறந்து தாயின் ஆசியுடன் துறவறத்தையே மேற்கொண்டான். ராமகிருஷ்ணராகப் பிறந்து சாரதா தேவியை மணம் புரிந்தும் இல்லறத்தை விடுத்து துறவியானான் - தேவியில் சக்திப் பிரவாகத்தை அறிந்ததும் - காதலுண்டு அங்கே காமமில்லை. இதெல்லாம் மனிதனைத் தேவனாக்கும் பணியில் இறங்கியதால். இருந்தும் மனிதன் எதையுமே சரியாகப் புரியாததாகவோ அல்லது புரிந்தும் புரியாதமாதிரி நடப்பதாலோ உலகில் அஞ்ஞானம் மிகுந்து அதர்மம் தலை விரித்தாடுகிறது. ஆகவேதான் மகான்களை உருவாக்கி அவர்கள் மூலம் இறைவன் மனிதர்களைக் கரை சேர்க்கும் மார்க்கத்தைத் தொடர்கிறான்.

இந்தவகையில் வந்தவர்களில் ஒருவர்தான் எங்கள் முருகேசு சுவாமிகள். இறைவழிக்கு இவரைத் திருப்ப ஆண்டவன் ஆடிய நாடகம் ஒரு திருவிளையாடல். வாழ்க்கையின் உண்மையை உணர்ந்தபின் மனிதன் எப்படி மாறுவான் என்பதற்கு இவர் ஓர் உதாரணம். உள்ளத்தால் துறவியாக மாறினாரே அன்றி இவர் காட்டுக்கு செல்லவில்லை, காவி உடை உடுக்கவில்லை. இவர் காட்டிய வழியிலே ஒரு புதுமை. ஞானம் என்ற தேனை பக்தி யோகத்தால் பெற்றது. அன்றியும் எங்களில் ஒருவனாக மாறி எம்முடன் இருந்து புதிய உறவுகளை ஏற்படுத்தி எம்முடைய பிரச்சனைகளை எம்முடன் பகிர்ந்து பற்றற்றான் முறையிலே சரியான முடிவுகளை எடுத்து அதை எம்மையும் ஏற்க வைத்து இறைவனார் துணை நிற்பதன் மூலம் வரும் விளைவுகளை நல்லதாகவே மாற்றி எமக்கு நன்மை பயக்க வைத்து எம் சிரிப்பிலே இறைவனைக் காணும் மார்க்கத்தைத் தான் அவர் கடைப்பிடித்தார். தன்னை சாமியார் என்று அழைப்பதையே விரும்பாத இவரை நாங்கள் செல்லமாக "சாமி ஐயா" என்றழைப்போம். இப்படி அழைப்பதற்கு மட்டும்தான் எங்களுக்கு உரிமை உண்டேயன்றி இவர் வாழ்ந்த வாழ்க்கையையும் இறையருளால் பெற்ற மறுபிறப்பையும் பற்றி அலசி ஆராய எமக்கு என்ன வல்லமையும் தகுதியும் உண்டு. ஆலயதரிசனங்கள், ஆன்ம ஈடேற்ற மார்க்க நாட்டம், அதனால் ஏற்பட்ட மகான்களின் தொடர்பு, ஆராய்ச்சிகள், அனுபவங்கள் இவைகளினால் கிடைத்த பெறும்பேறுகளால் ஏதோ முயற்சிக்கிறேன். திருவருளும் குருவருளும் கூட நின்று என்னை இயக்கட்டும்.

மனிதனில் மூன்று நிலை - ரோக நிலை, போக நிலை, யோக நிலை. மனிதனில் சிறந்தவன் யோகி என்றுதான் கிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையில் பிரகடனப்படுத்துகிறார். மனித வாழ்க்கையில் நான்கு கட்டங்களை கடக்க முடியும். பிரம்மச்சார்யம், கிரகஸ்தம், சந்நியாசம், வானப்பிரஸ்தம் என இவற்றுள் இல்லறத்திலிருந்து துறவறத்தைக் கடைப்பிடிக்கும்

மார்க்கம்தான் சாலச் சிறந்தது என்று சொல்லப்படுகிறது - வாழ்ந்து பார்க்கக்கூடிய மார்க்கம். மனிதன் என்பவன் சத்வ, ரஜோ, தாமச குணச் சேர்க்கையோடு மனத்தால் இயங்குபவன். ஒவ்வொரு நாளும் மூன்று அறிவு நிலைகளில் வாழ்ந்து கொண்டிருப்பவன். நான்காவது நிலையான துரியத்தை அடையும் போதுதான் மூன்று நிலைகளிலும் பெற்ற அறிவில் அஞ்ஞானம் தொக்கி நிற்பதை உணர்பவன். அஞ்ஞானம் அகன்றதுமே அவன் காலத்தை உணர்கிறான், கால வரம்புகளைக் கடக்கிறான். நேற்று, இன்று, நாளை அவனை வந்து சேர்கிறது. இயற்கையையும் இயற்கை நியதிகளையும் அறிகிறான், அதனோடு இணைகிறான். அன்பே சிவம் என்பான். அன்பாகவே மாறுகிறான். கர்மவினைகளும், விதியின் விளையாடல்களும் அவனை இனித் தொடர்வதில்லை. தொடர்ந்தாலும், பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் பெற்ற இந்த உடலைத்தான் அவை பாதிக்குமேயன்றி தன்னை இல்லை என்று சொல்கிறான். இந்த நிலையில்தான் எங்கள் சாமி ஐயாவை யான் கண்டேன்.

உலகத்திற்கே ஞானபூமியாக விளங்கும் இந்திய துணைக்கண்டத்திலே எத்தனையோ மகான்கள் தோன்றி மக்களை இறைவழி இட்டுச் சென்று பெறுபேற்றைப் பெற்றுக் கொடுத்திருக்கிறார்கள். இவர்கள் பரம்பரையிலே ஒருவரை ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலழகன் எங்களுக்கு கொடுத்த பெருமைதான் வேலுப்பிள்ளை முருகேசு சுவாமிகள். கலியுகத்திலே அவதாரங்கள் எல்லாம் மகான்கள் ரூபமே என்று ஓர் ஞானியர் சொன்னது சிந்தையில் வருகிறது. அதர்மங்கள் மலிந்த கலியுகத்திலே இறைவனை அடைய சிறந்த மார்க்கம் - கூட்டுப்பிரார்த்தனையே என்று கூறி பூவரச மரத்தருகே பாடலும் தந்து பாடவும் வைத்து ஆண்டவன் அருட்பெருங்கருணை என்றென்றும் நிலைக்க வழி செய்த தவத்திரு வே. முருகேசு சுவாமிகளின் பாதாரவிந்தங்களுக்கு அனேக கோடி வணக்கங்கள் கூறி அந்த மகானின்

வரலாற்றைப் பொன்னேட்டில் பதிக்க முனைகிறேன், மூத்தவனும் சந்நிதியானும் முன் நின்று காக்க வேண்டும். ஸ்ரீ செல்வச் சந்நிதியில் முருகன் ஏன் வேலாக வீற்றிருக்கிறான். ஞானத்தின் மறுவடிவமே வேல். சத்ரு சம்ஹார தோற்றமே வேற்படை. சூரபத்மனோடு போருக்குச் செல்லும் வழியில் இத்தலத்திலே சந்திகால பூசை செய்த வீரபாகு தேவரும், முருகனும் தந்தையை லிங்கோற்பவ மூர்த்தத்தில் வழிபட்டுவிட்டு தேவர்களுக்கு முதன்முறையாக அசுரரை அழிப்பேன் என்று அபய கரம் காட்டிய இடம் ஸ்ரீ செல்வச் சந்நிதி. தானத்தில் சிறந்த அன்னதானத்தை அடியருக்கு அள்ளி அள்ளி வழங்கி பசியாறிய பின் ஞானதானம் வழங்கும் ஸ்தலமே ஸ்ரீ செல்வச் சந்நிதி. இதனால்தான் என்னவோ இந்தப் புண்ய பூமியிலே ஞானியரும், யோகியரும், சித்தர்களும், முக்தர்களும் காலமெல்லாம் காணக்கூடியதாக உள்ளது. பசிபோக்க அன்னதானம், வாழ்ந்து பார்க்க சொர்னதானம் பின், வந்த வழியைத் தேட ஞான தானம் - இதுதான் சந்நிதிவேலன். இந்தப்பணிகளையெல்லாம் நிறைவேற்ற எம்பெருமான் சந்நிதியான் நல்ல ஜீவன்களைத் தேர்ந்தெடுத்து, திருவிளையாடல்கள் காட்டிப் பின் ஞானத்தை ஊட்டி நல்ல குருநாதனாக்கி நாமெல்லாம் ஈடேற வழி காட்டுகிறான். இந்த வகையில் வந்தவரே வே. முருகேசு என்ற அன்பர். சாத்திரியார் பரம்பரையில் வந்தவர். இறையருள் கூட்டி சாத்திரம் சொல்பவர். மதவாச்சி என்ற சிங்கள ஊரில் பெரிய கடை வைத்து வியாபாரம் செய்து செல்வந்தராக வாழ்ந்தவர். காலம் கனிந்தது. சந்நிதிக்கு துணைவியாரோடு வரும்போதெல்லாம் "இறைவா இன்கம்டாக்ஸ்காரர்கள் எனக்கு தொல்லைதராமல் பாரப்பா" என்று மட்டுமே கேட்டுவந்தவர். வயிற்றில் புற்றுநோய் வரவழைக்கப்பட்டதும் 1960ல் நோயுற்றார். நோய் முற்றியது. தெல்லிப்பளை ஆஸ்பத்திரியில் ஆரம்ப வைத்தியம். மகரகமையிலுள்ள புற்றுநோய்ஆஸ்பத்திரியில் பல தடவை எக்ஸ்-ரே எடுத்தது. நோய்மாறும் அறிகுறியே இல்லை.

நோய்க்கொடுமையால் ஆலயதரிசனம் அடிக்கடி வந்தது. ஒரு நாள் சந்நிதி வீதியில் ஒருவர் இவரைப் பார்த்து " நீ புளியம் இலை அவித்து திருநீறோடு சேர்த்துக்குடி. நோய் மாறும்" என்று சொன்னது. அப்போகூட நின்ற இவர் நண்பர் அளவெட்டி அருளம்பலம் கந்தையாவும் இவர் மனைவியாரும் அந்த அறைகூவலை ஆண்டவன் அருள்வாக்கு என்று கொண்டனர். மனைவியார் இவரை சந்நிதியானுக்கே விற்றுவிட்டு, இவர் குணமடைந்தால் இவர்கட்டிய தாலிக்கொடியை விற்று அடியவருக்கு அன்னதானம் செய்வேன் என்றும் மறுவாழ்வு பெற்றவர் சந்நிதியான் அடிமையே என்று வேண்டுதல் வைக்க, காலம் மாறுகிறது. மூன்று நாட்களில்நோய் முற்றாக மாற ஆண்டவர் அற்புதத்தை எல்லோரும் உணர முடிந்தது.

வே. முருகேசு என்பவர் முருகேசு சுவாமிகளாக மாறும் நிலை ஆரம்பம். மனமாற்றத்தால் ஆத்மீகம் அவரை ஆட்கொள்ள வீட்டையும், மனையாளையும் துறந்து மடத்திலே தங்க ஆரம்பித்து ஆண்டவனின் ஆணையைத் தலைமேற் கொண்டு வாழ ஆரம்பித்தார். இல்லறம் மறந்து துறவறம் ஆரம்பம். துறவறத்திலே ஓர் புதுமை. காவி உடுக்காமல் கானகம் செல்லாமல் எம்மோடேயே இருந்து எமக்காக பெருமானை வேண்டி எமக்கு வேண்டியவற்றையெல்லாம் பெற்றுத்தந்து, எங்கள் சிரிப்பிலே ஆண்டவனைக் காணும் ஓர் அற்புத மார்க்கத்தை உருவாக்கினார் வே. முருகேசு சுவாமிகள். "சாமியார்" என்று அழைப்பதையே விரும்பாதவர். ஆகவேதான் நாங்கள் செல்லமாக "சாமி ஐயா" என்று அழைப்போம். பூசைகள் புனஸ்காரங்கள், நேர்த்திக் கடன்கள் இப்படி எத்தனை எத்தனை; விளைவு - சந்நிதியான் அடியவர் பலருக்கு இவரின் சேவையால் நல்ல பலன்கள் சித்தித்தன.

அடியவர் கூட்டம் பெருகியது. சந்நிதியான் மடங்களிலே அன்னதானங்கள் அடிக்கடி நடைபெற்றன. அன்னதானத் திருப்பணியை பெரிய அளவில் நடாத்திக்கொண்டு ஆலய திருப்பணி வேலகளிலும் நாட்டம் திரும்பியது.

வேலவன் அடியராக இருந்து ஆலயத்திருப்பணியிலும் அன்னதானத் தொண்டிலும் இவர் ஆற்றிய சேவை என்றென்றும் அடியவர் மனத்தில் நிலைத்திருக்கும்.
ஆத்மீகக் கண் கொண்டு இவரது வாழ்க்கையை ஆராய்ந்து பார்க்கும்கால் கர்ம யோகியாகி இவர் ஆற்றிய தொண்டுகளே கண்முன்னே நிற்கும். தள்ளாத வயதிலும் மக்கள் சேவையே மகேசன் சேவையென்று இவர் பணியாற்றிய விதம் வார்த்தைகளிலே அடங்காது. இவர் ஓர் ஞான சித்தராகி எத்தனை சித்துவிளையாட்டுக்களைக் காட்டியுள்ளார். உதாரணத்திற்கு ஒன்று - பருத்தித்துறை டாக்டர் பத்மநாதன் வீட்டுக்கு முன்னே இருக்கும் அம்மன் மாடத்தில் உள்ள சிலை இவர் எடுத்துக் கொடுத்தது. சித்துக்களை இவர் விரும்பாவிட்டாலும் அடியவரின் ஆவலைப் பூர்த்தி செய்ய இவர் செய்த சித்து வேலை. சந்நிதியான் வீதி மண்ணை திருநீறாக்கிப் பூச வைத்தவர். அடியவர் திருப்திக்காக இவர் புரிந்த சித்துக்களோ ஏராளம், ஏராளம்.
பக்தி நெறியைப் பரப்புவதற்கு இவர் செய்த தொண்டு இன்று சாம்பியா, கனடா ஆகிய நாடுகளில் வெகுவாகப் போற்றப்பட்டு வருகிறது. வெளிநாடுகளில் வாழும் தனது அடியவர்களை சந்திக்க 1991ம் ஆண்டு புறப்பட்டுச் சென்றவர், 1992ம் ஆண்டு நடுப்பகுதியில்தான் ஊருக்குத் திரும்பினார். 1991ம் ஆண்டு ஆவணி மாதம் இவர் சாம்பியா நாட்டிற்கு வரவேண்டிய சூழல். சந்நிதியான் திருவிழாப்பூசைகளை அடியேன் வீட்டில் ஆரம்பித்து வைத்தார். அது ஆலமரம் போல் வளர்ந்து இன்றும் தொடர்ந்து 12ம் வருடங்களாக சாம்பியா நாட்டில் கொண்டாடப்பட்டது.

திருவிழாக் காலங்களில் அங்கே நடக்கும் எம்பெருமான் திருவிலையாடல்கள் கணக்கிலடங்காது. இதே பூசை 1996ம் ஆண்டு கனடா நாட்டிலும் ஆரம்பிக்கப்பட்டு தொடர்ந்து ஒவ்வொரு வருடமும் மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

கர்ம யோகியாகி அடியவர்கள் பக்தி நெறியை நாட வைத்து அவர்களின் மனங்களை பதப்படுத்தி ஞானயோகத்தால் நல்லறிவு புகட்டி அடியவர்களின், ஆத்ம தேவைகளையும் பூர்த்தி செய்து, யோகியாகி வாழ்ந்த காலத்தில் எம்பெருமான் அவரை அழைத்துக்கொண்டார். உடலால் அவர் இன்று இம்மிடையே இல்லாவிட்டலும், ஞானத் தந்தையாகி எத்தனையோ அடியவர்களை வழி நடாத்திக் கொண்டிருக்கிறார். புறத்தையே நம்பி வாழும் சாதாரண மனித வாழ்வைத் துறந்து 1960ம் ஆண்டுமுதல் அகத்திலே ஆண்டவன் அருளையறியவும் ஆன்மீக வாழ்வில் கலந்து நிஷ்டையிலும் யோகத்திலும் பலகாலம் மூழ்கியிருந்து பின் தன் கர்மத்தை முடிப்பதற்காக 37 ஆண்டுகள் எம்மோடு வாழ்ந்து ஒரு புதிய ஞான மார்க்கத்தைக் கையளித்து விட்டு 1997ம் ஆண்டு எம்மை விட்டு இறைவனடி சேர்ந்தார்.

எம்மிடையே வாழ்ந்த ஓர் தலை சிறந்த, முக்காலமும் உணர்ந்த மகானுக்கு கூடிய விரைவில் சந்நிதியில் குருபீடம் அமைத்து அவர்விட்ட பணியைத் தொடர எத்தனையோ அடியவர்கள் காத்திருக்கின்றனர்.



ஓம்

சிவமயம்

சந்நிதி வேலே சஞ்சலம் தீர்ப்பாய்

## ஸ்ரீ சற்குரு முருகேசு சுவாமிகள் திருவடி தியான ஸ்லோகம்

சத்ரு சம்ஹார சொரூபத்தின் சாயலே போற்றி போற்றி.
சகல பரிபூரணமாம் சொரூபம் போற்றி.
நித்ய சச்சிதானந்த சொரூபம் போற்றி போற்றி.
நிரஞ்சன நிர்க்குணமான சொரூபம் போற்றி போற்றி.
இந்துவித லேசமிலாச் சொரூபம் போற்றி போற்றி.
யோக சிதாகல்ய பர சொரூபம் போற்றி போற்றி.
அத்துவிதமான பர சொரூபம் போற்றி போற்றி.
ஆழ்ந்தகன்று ஊன்றியதாம் சொரூபச் சாயலே போற்றி போற்றி.
சங்கரன் மரபில் வந்த சற்குருதேவா போற்றி.
ஐங்கரன் முதலாம் சந்நிதித் தெய்வங்கள் போற்றி போற்றி.
அன்பினால் ஆட்சி செய்யும் அருந்துவரரசே போற்றி.
அம்பிகை இருவரோடு வந்து அருள் தரும் சந்நிதியான் போற்றி.
ஆருயிர்க் கண்ணா போற்றி அலர்ந்தவர்க்கப்பா போற்றி.
பூரணப் பொருளே போற்றி கருணையாம் வேற்கரணி கொண்டாய் போற்றி.
எம்குலத் திருவே போற்றி ! சந்நிதிச் சுடரே போற்றி.
தஞ்சமடைந்தோர் தங்கள் சஞ்சலம் தீர்ப்பாய் போற்றி.
ஆடிய அப்பன் பாதம் போற்றி ! அருள் நடத்தரசே போற்றி.
வாடிய முகங்கள் உன்னைப் பாடிட வைத்தாய் போற்றி.
ஞானமாம் சுடரே போற்றி! மோன மெய்ப் பொருளே போற்றி.
தீனரைக் காக்க வந்த தெய்வமே போற்றி போற்றி
பக்தர் தம் பதியே போற்றி! முக்தர் தம் முதல்வா போற்றி.

பாவியேன் என்னை வந்து வலிய ஆட்கொண்டாய் போற்றி.
பவப்பிணி தீர்க்கும் வைத்ய நாதனே போற்றி போற்றி.
தும்பளையில் தோன்றி சந்நிதியில் அமர்ந்த சற்குருவே போற்றி.
கற்பனை கடந்த உன்னை கருணையாம் உருவில் கண்ட
அற்பனின் சொல்லணிந்த தற்பரா போற்றி போற்றி.
ஆற்றங்கரை வேலவனின் அடியவா போற்றி போற்றி.
இன்பத்தை எமக்கருள வந்தவா போற்றி போற்றி.
ஈதலும் கோலால பூசையும் என்றுமே தந்தவா போற்றி.
உண்மைப் பொருளுணர்ந்தும் ஓதியே நின்றவா போற்றி.
ஊனங்கள் தான்மறைய உதவிய உத்தமா போற்றி.
எந்தனையும் ஓர் பொருட்டாய் ஏற்றவா போற்றி போற்றி.
ஏற்றங்களையும் மாற்றங்களையும் எமக் கருளும் குருவே போற்றி.
ஐயங்கள் பார்வை ஒன்றால் அகல வைத்த திருவே போற்றி.
ஒன்றாகி நாமெல்லாம் உன்புகழ் பாடவைத்தாய் போற்றி.
ஓலங்கள் குறைந்து பாஓதலே நிறைய வைத்தாய் போற்றி.
ஔசதமாய் நின்றெமக்கு அருள வந்த குருவே போற்றி.
ஆதியே ஜோதியே போற்றி! சுப்ரமண்ய அருட்குரு வழிவந்தாய் போற்றி.
நாதியற்றோர்க்கெல்லாம் நலமருள நின்றாய் போற்றி.
கல்லோடைக் கரையமர்ந்த கார்த்திகேயன் அருளே போற்றி.
தொண்டைமான் ஆற்றருகே தொண்டர் குறை தீர வைத்தாய் போற்றி.
அன்னமலைக் கந்தனின் அடியனாய் அமர்ந்தவா போற்றி.
ஆத்மஞானம் பெற்றும் மடங்களிலே அப்பனைக் காணவிரும்பியவா போற்றி.
அடியரில் தெய்வத்தைக் காணும் அற்புதா போற்றி போற்றி.
பக்தையின் புற்றுநோயை சந்நிதியான் மாற்ற உதவியவா போற்றி.
மாயையை வெல்லும் மார்க்கம் பகர்ந்தவா போற்றி போற்றி.
அடியரின் கிரக சாந்திக்காக நின் உடலை வாட்டியவா போற்றி.

எந்தையே போற்றி! எம் ஞானத்தந்தையே போற்றி போற்றி.
அன்னையாய் தந்தையாய் ஞானகுருவாய் ஆனவா போற்றி போற்றி.
ஆருயிராய் நின்றெம்மை என்றும் வழிநடத்த வந்தவா போற்றி.
ஆறெழுத்தில் எழுகோடி மந்திர அடக்கத்தைச் சொன்னவா போற்றி.
ஈரேழு உலகத்தின் ஈர்ப்பெல்லாம் சந்நிதி என்றவா போற்றி.
நாவேறி நாலு வார்த்தை உனைப் போற்றத் தந்தவா போற்றி.
நாயேனுக்கு நல்ல நிழலைத் தந்தவா போற்றி போற்றி.
பாமலைகள் தான் படைக்க வைத்தவா போற்றி போற்றி.
பூமலைகள் நின் காலடியில் யான் படைக்க அருளியவா போற்றி.
பூதங்கள் ஐந்தையும் அடக்கும் விதம் சொன்னவா போற்றி.
பூதலத்தில் நாம் வாழ வழி தந்தவா போற்றி போற்றி.
பாபங்கள் எனைத் தொடரா பாதி வழி நின்றவா போற்றி.
போதனையை அருளிச் சாதனையில் வைத்தாய் போற்றி.
சோதனையும் வேதனையும் சாதனையின் விளிம்பில் என்றாய் போற்றி.
சிந்தனையைச் சிவமாக்கும் விதம் தந்தாய் போற்றி.
சத்தியத்தின் சாயலெல்லாம் நித்தியத்தின் நிழல் என்றாய் போற்றி.
அத்தனையும் சரவணத்தில் அடக்கம் என்றாய் போற்றி.
விளிகாட்டி அருள்கூட்டி வழியில் நின்றாய் போற்றி.
ஆலமிலை அமுது அப்பனின் பிணிதீர்க்கும் மருந்தாக,
வேற்கரணித் தீர்த்தமதை பூவரசில் ஊற்றவைத்து,
வேற்கருணை வீடுவரை வரவைத்த வள்ளலே போற்றி.
பூவரச நிழலிலே நோயெல்லாம் ஆறவைத்து, இவரெடுத்து அவர் போடும்
திருநீற்றை மருந்தாக்கி, பூவரச இலைதனை பொருளாகவும் மாற்றி,
ஆலகாலவிஷமெல்லாம் ஆலமிலை அமுதில் அடங்க, கும்பத்திலே ஹோமம் காட்டி,விற்று வாங்கலில் வினையையே விரைவில் போக்கி,

தேவரும் மனிதரும் தினம் தினம் வணங்கும் செல்வச் சந்நிதியிலே வந்தவர்க்கு வாழ்வைக் காட்டி, வேண்டுவார்க்கு வேண்டுவன வாங்கித் தந்த தயாபரனே குருநாதா போற்றி.
பூசத்தில் பிறந்த புண்ணியா போற்றி போற்றி.
பாசத்தில் எமை நனைத்த பரமாத்மனே போற்றி போற்றி.
நேசத்தால் நெஞ்சம் நிறை நிர்மலனே போற்றி - சத்ரு நாசத்தால் அடியரைக் காத்த அற்புதா போற்றி.
அன்னதானப்பிரியா போற்றி போற்றி.
சந்நிதித் திருப்பணிக்காய் அர்ப்பணமானவா போற்றி.
இகபர சுகங்களை இங்கேயே தருவாய் போற்றி.
சந்தான விருத்திக்கு சந்நிதியே கதி என்பாய் போற்றி.
மறைகளெல்லாம் கடந்த மகாத்மனே போற்றி.
இலைமறை காயாய் என்றும் வாழ்ந்தவா போற்றி.
அரிசி கற்கண்டாய் மாறியது கண்டாய் போற்றி.
சந்நிதி வீதி மண்ணை திருநீறாய் மாற்றியவா போற்றி.
கோவில் விக்கிரகத்தைக் கொணர்ந்தவா போற்றி.
நீர் நிலையற்ற நிலப்பரப்பில் வற்றாக் கிணறு கண்டாய் போற்றி.
சந்நிதியை உலகமெங்கும் கொணர்ந்தவா போற்றி.
சந்நிதியே தன்நிதியாய் கொள்வாய் போற்றி.
கால் நடைக்கதிர்காமப் பயணத்தில் கந்தனருள் கண்டவா போற்றி.
கற்பூரமாயுருகும் தன்மை கொண்டவா போற்றி.
அடியவரின் ஏச்சிலும் பேச்சிலும் இன்பம் காண்பாய் போற்றி.
சித்துகள் பல புரிந்தும் கர்மயோகம் தனில் நின்றாய் போற்றி.
சத்தத்தினுள் சதாசிவம் கண்டவா போற்றி.
தஞ்சமென்று நின் காலடியில் நின்றார்க்கு உன்னையே தந்த உத்தமா என் குருவே போற்றி.
கோடானு கோடி வணக்கங்களை தங்கள் திருவடிக்கு, இதயத்தை மலராக்கிச் சாற்றுகின்றோம். ஏற்றருளும் குருபெருமானே போற்றி.

சந்நிதி வாழ் எங்கள் ஞான குருவே ஸ்ரீ முருகேசா! . . .ஐயா போற்றி.
சரணம் சரணம் சண்முகா சரணம்.
சரணம் சரணம் சற்குருவே சரணம்.
குருவாய் வருவாய் சரணம் சரணம் குறியாய் வரும் பரம்பொருளே சரணம்.
குருவருள் காட்டும் திருவே சரணம் திருவருள் கூட்டும் குருவே சரணம்.
சரணம் சரணம் சந்நிதியே சரணம்.
சரணம் சரணம் சற்குருவே சரணம்.
சரணம் சரணம் கருணைமாக் கடலே சரணம்.
சரணம் சரணம் கல்லோடைக் கரையே சரணம்.
திருவேற்கரணியாய் வந்த சரவணப் பொய்கையே சரணம்.
சரணம் சரணம் சாமி ஐயா சரணம்.
சரணம் சரணம் எமைக்காக்க வந்த நின் பாதார விந்தம் சரணம்.
சேவடி சரணம் திருவடி சரணம்.
சந்நிதிதாசன் அடியவர்நேசன் அருள்மிகு தவத்திரு முருகேசம் போற்றி.
அவரடி சரணம் குகனடி சரணம்.
ஐயா சரணம் எங்கள் சாமி ஐயா சரணம்.
சந்நிதி சரணம் சரணம் சற்குரு பாதம்!
ஓம் சரவணபவகுகாய சந்நிதி வேலாய சரணம்!
ஓம் சரவணபவகுகாய சற்குரு தேவாய சரணம்!

உ

குகமயம்

ஆற்றங்கரையிலே அன்னமலைகள் படைத்துமே
தாவி வரும் வேலன் அடியர் குறைகள் தீர்க்கவே
இருள் அகற்றவே ஞான ஒளியாய் நின்றுமே
ஆள வந்தவா எங்கள் சாமி ஐயா சரணம்

வேலவன் அடிமையாய் வந்த அருட்குருநாதன் ஐயா
வேலவன் அடிமையாய் வந்த அருட்குருநாதன் ஐயா

இசையின் அசைவுகள் ஏதும் புரியாமல்
இதயக் கோடியில் எழும் ஓர் அசைவின் துணையோடு
வரும் வார்த்தைகள் எல்லாம் நீ தரும் மலர்களே
பூஜிக்க வந்தேனே எனைக் காத்தருள்வாயே
(வேலவன் அடிமையாய்)

செல்வங்கள் சேரவேண்டும் செழிப்பான ஓர் வாழ்வு
வேண்டும்
தந்தவை எல்லாமே நின் அருளால் என்று நான்
கொள்ளவேண்டும்
கலியிலே அதர்மங்கள் அழிய நின் அருள் என்றும் வேண்டும்
ஆட்டம் முடியும் வேளை நீ ஆள வரவேண்டும்
(வேலவன் அடிமையாய்)

அப்போதைக்கிப்போதே கேட்டுவிட்டேன் தப்பாமல்
தந்தருள்வாய்
அப்போதைக்கிப்போதென்றால் இனி தப்பாதே
எப்போதுமே
அப்பனாய் நீயிருந்து பின்னே...அடிமையாய் வந்தவிதம்
சிந்திக்கச் சிந்திக்கவே எந்தன் சித்தம் தெளியுதப்பா
(வேலவன் அடிமையாய்) * * *

பூவரச மரத்தருகே வேலனுக்கு
பாமாலை சூடவைத்தாய்
தாவென்று வருவோர்க்கு தயைபுரிய
தாயாகித் தருகின்றாயே...

அன்னமலை நீ படைப்பாய் - எந்நாளும்
அடியவர் பசி தீர்ப்பாய்
அமைதி கொண்ட பின்னும் வேலனோடு
அமுதுண்ண வருவாயே....

ஓடி வருகையிலே எங்கள் ஐயா
ஓம் என்ற ஒலி கேட்குமே
வாடி நான் நிற்கக் கண்டால் - என்னை நீ
வாரி அணைப்பாயே...

என் கண்ணில் நீர் வழிந்தால்
ஐயா நீ உன்னையே தருவாயே
என் துயர் தீர்ப்பதற்கோ உலகில்
உருவற்ற நிலை கொண்டாய்

வந்தோரை வாழ வைத்தாய் - உன்னை
நினைத்தோரின் நினைவில் நின்றாய்
எந்நாளும் எம் குருவாய் - என்னுள்ளே
இருந்துவிட்டால் போதுமே

* * *

ஸ்ரீ முருகேசனே வா... எங்கள் ஐயா (ஸ்ரீ)

ஞானத் தந்தையாய் வந்து ஞாலம் வாழ வந்தவரே
எங்களைக் காத்தருள எழுந்தருள்வீரே...ஐயா... (ஸ்ரீ)

வேலவன் திருவருளை வேண்டும்வரை எமக்கருளி
சீர் மேவும் ஓர் வாழ்வை எமக்களித்தீரே

பரமஹம்ச பரி பூர்ண கிருபாகரா
பரமனின் மகன் கருணைப் பாலாறு ஓடவைத்தாய்...     (ஸ்ரீ)

பூவரச மரத்தடியில் புண்ணியனார் சமாதி மேலே
வேலன் திருப்புகழை எமை என்றும் பாட வைத்தாய்
ஆலம் இலை தன்னில் அமுதுண்ணும் குமரனாம்
குகனோடு என் இதயக் குகையினில் வாழ்பவனே....     (ஸ்ரீ)

*        *        *

**வாழ்வு தந்தாய்** துன்பத்தில் ஈடு நின்றாய்
நாடி வந்தேன் என்னோடு கூட நின்றாய்
அறம் தந்தாய் பின் பொருள் தந்தாய்
இன்பம் தந்தாய் இனி வீடுதரும் நாள் எப்போ...

உயர்வு தந்தாய் ஞான அறிவு தந்தாய்
பக்தி தந்தாய் உனைப்பாடும் சக்தி தந்தாய்
காடு கண்டு நான் கலங்கி நின்றேன்
ஒளி கண்டேன் வேலன் வழி கண்டேன்..

அன்னையென்பார் உன்னைத் தந்தை என்பார்
ஐயா என்பார் சாமி அப்பா என்பார்
வாழ்வைத் துறந்து வேலன் அடிமையானாய் - பின்
அவன் அடியரையே உந்தன் உறவாக்கினாய்...

ஆராத இன்பம் அருளுமலை போற்றி
நீராயுருக்கி என் ஆருயிராய் நின்றாயே
வேலானந்த வெள்ளத்தில் நாம் திளைப்பதற்கு
குருநாதன் திருவடியே சரணம் ஐயா!

*        *        *

**குருதேவ தேவா நின்** புகழ் பாடவா
வேதாந்த ஞான வெள்ளப் பிழம்பல்லவா
வேலானந்த அருள் நதியில் நான் நீந்தவா
பேரானந்த அருள் நிதியே சரணம் ஐயா...

கந்தன் கருணைக்கிங்கோர் அந்தமில்லையே
பின் சாமி ஐயாவைத் தந்ததாலே
நின் மூச்சை அவர் பேச்சில் கேட்டோமய்யா
என் நாவில் நின் நாமம் என்னாளுமே...

ஆற்றம் கரையருகே பூவரசச் சோலை
என்னை ஈடேற்ற வள்ளி ஆலயச் சாலை
தன்னை உணர்ந்தவன் சமாதியின் மேலே
என்னை நான் உணர புகழ்பாட வைத்தாய்....

வாவி அருகே எம் வள்ளலின் கோவில்
காவி உடுக்காத நின் தவக்கோலம்
தாவி வருகின்ற அடியார்கள் கூட்டம்
நாவினால் நான் சொல்ல வார்த்தையில்லையே...

நின் துணையின்றி வாழ்வொன்று இங்கில்லையே
நின் அருளன்றி வாழ்வெமக் அங்கில்லையே
பின்னாலே என் அறிவு மங்கும் வேளையில்
நின் நாமம் நான் மறவா வரம் வேண்டுமே...

* * *

**எத்தனை எத்தனை** துன்பங்களை நாம் மேதினியில்
படுகின்றோம்
எப்படி அப்பனே பார்த்து நீ இன்னமும்
பாராமுகமாயிருக்கின்றாய்
அத்தனை அத்தனை துன்பங்கள் தீர்க்கத் தாமதம் ஏன் ஐயா
வேலவன் தந்த வள்ளலே எங்கள் அப்பனே சாமி ஐயா...
..அப்பனே சாமி ஐயா...

ஆண்டியும் அரசனும் அத்தனை பேரும் அலைந்து திரிகின்றார்
வேலனைத் தேடும் வேதாந்த வழியால் உன்னைத் தேடுகின்றார்
...ஐயா உன்னைத் தேடுகின்றார்..

தேடித் தேடித்தாம் கண்டதை எல்லாம் சொல்லாமல் சொல்கின்றாய்
தாம் பெற்ற இன்பம் வையகம் பெறவே தவியாய்த் தவிக்கின்றார்
..அவர்கள் தவியாய்த் தவிக்கின்றார்..

அவர் சொல்லை மக்கள் கேட்டால் அமைதி தானக வந்திடுமே
சந்நிதி காட்டும் சாயுச்ச மார்க்கம் தானாகத் திறக்குமே
வேலன் வழியில் நாம் இறங்கிவிட்டால் துன்பங்கள் தொலைந்திடுமே
வேலானந்தமாய் நாம் வாழ்வதற்கு வேதாந்தம் தாருமைய்யா..

..குருநாதா வேதாந்தம் தாருமைய்யா..

வேதாந்தமே இன்று நாதாந்த ரூபமாய் ஐயாவாய் வந்ததோ..
..சாமி ஐயாவாய் வந்ததோ..

என்னுள்ளே இருக்கும் வேலவன் என்னை பேசவைக்கட்டும் என்றார்
என்ற ஐயாவின் கூற்றின் அர்த்தம் இன்று புரியுதய்யா
ஐயாவை எங்கள் குறை தீர்க்கத் தந்த சந்நிதி வேலே சரணம்
..செல்வச் சந்நிதி வேலே சரணம்...

*   *   *

ஐயா சாமி ஐயா யானுனைக் கண்ட பின்னே
பொய்யா யினவெல்லாம் போயகலக் கண்டேன் ..
(ஐயா)
அன்னையின் வேண்டுதலால் உந்தன் வேதனை
தீர்ந்ததெல்லாம்
அஞ்ஞானம் அழிந்ததுமே மெய்ஞ்ஞானம் மிளிர்ந்ததெல்லாம்
சந்நிதியான் உந்தனையே ஆட்கொள்ள விதமெல்லாம்
நோய் மாற நீயே அவரின் அடிமையாய் ஆனதெல்லாம்
. (ஐயா)
வேற்கரணித் தீர்த்தத்தை பூவரசில் ஊற்றவைத்து
வேற் கருணை எனைத் தேடி வீடுவரை வந்ததெல்லாம்
செல்வச் சந்நிதியானின் தண்கருணை எனைக்
காத்துநின்றவிதம் எல்லாம்
சொல்லச் சொல்ல நாவினுக்கும்
மெல்ல மெல்ல மனம் இனிக்கும்
(..ஐயா சாமி ஐயா)
போற வழி புரியாமல் யான் புலம்பிய போதெல்லாம்
வந்த வழி உணராமல் யான் வதங்கிய நாளெல்லாம்
நீ வந்தால் எங்கள் வாழ்வினில் நிம்மதி வந்தவிதம் எல்லாம்
நல்ல வழியைக் காட்டி விட்டு - எமை
தவிக்க விடுதல் முறையோ ஐயா
(..ஐயா சாமி ஐயா)

எம்மோடு என்றென்றும் இருப்பேன் என்றதினால்
கவலை தனை மறந்து களிப்புடன் உனைத் துதிப்பேன்
குருவருள் திருவருள் இரண்டுமே எம்மோடு என்றென்றும்
கூட நிற்க
கோடி கோடி வணங்கங்கள் - நிதம்
தேடித் தேடி வணங்கி நிற்போம்
(..ஐயா சாமி ஐயா)

சாமி ஐயா சாமி ஐயா முருகேசா குகநேசா

ஐயாவோர் அருளாலயம் சந்நிதியே அவர் நினைவாலயம்
அதுவே என் ஆத்மாலயம் அடியார்க்கு சரணாலயம்

சாமி ஐயா சாமி ஐயா முருகேசா குகநேசா
வருவாயே தருவாயே...

*********

நீயே என் நினைவாலயம் நிதம் சூடும் பாவாலயம்
பாதங்கள் கருணாலயம் எனைப்பாடவைக்கும் கீதாலயம்

சாமி ஐயா சாமி ஐயா முருகேசா குகநேசா
வருவாயே தருவாயே...

சத்ரு சம்ஹாரனாய் சந்நிதியில் நின்றவன் தான்
ஜெகத்குரு என்றாயே ஐயா எந்தன்
சஞ்சலங்கள் போக்கினாயே - எனக்கோர்
சற்குரு ஆகினாயே அடியவர்
சங்கடங்கள் நீக்கினாயே..

யாரெதைக் கேட்டாலும் அள்ளித் தரும் வள்ளலிடம்
வாரிப் பெற்று வழங்குவாயே அவர் சிரிப்பில்
ஆண்டவனை நீ காணுவாய்

பாடுங்கள் கீர்த்தனம் ஆடுங்கள் நர்த்தனம்
எண்ணுங்கள் ஐயாவை எல்லாமே கூடிடுமே..

*********

**அன்றலர்ந்த தாமரையோ** - ஐயா
இன்றிணைந்த இன்சுவையோ

வேலவன் திருவடியில் வேண்டி நீ சென்றாயோ
வேண்டும் அடியவரின் வேதனைகள் தீர்ப்பதற்கோ

உடலோடு நீவாழ்ந்து உழன்றது போதும் ஐயா
அருளோடு நீ இணைந்து ஆதரித்தால் அடியவர்கள்
குருபீடம் தனை அமைத்து கும்பிட்டு நிற்பாரே
அருளாற்று சந்நிதியில் ஆடல் கண்டு களிப்பாரே

ஈழத்தமிழர் வாழ்வில் இன்னல்கள் மறையவேண்டும்
இழந்த நம் உரிமைகளை இனி நாம் பெறவேண்டும்
களபூமியான எங்கள் ஈழத்தமிழ் மண்ணெல்லாம்
விளைபூமியாய் மாற விக்கினங்கள் தீரவேண்டும்

மூலஸ்தானத்தில் வேலன் அருள் சுரக்கின்றது
வேற்படையே ஓர் காற்படையாய் வருகின்றது
சத்ரு சம்ஹார வேளையங்கு தெரிகின்றது
வேலனருள் கடல் மடையாய் சந்நிதியில் பாய்கின்றது

விக்கினங்கள் தனைப்போக்கும் வேழமுகம் வருகின்றது
வேதங்கள் பீடமாக வேலன் அங்கே வீற்றிருக்க
அன்னையர் இருவருமே அணிகலன் ஆகின்றார்
அன்னமலை அருகினிலே வேலன் விளையாடுகின்றான்

*********

**அன்னமலைக் கந்தனல்லோ** சந்நிதி முருகா
அடியனாகி அருள முருகேசனாகினாய்
ஆறுமுகன் அல்லல் தீர கண்டம் கடந்தே
அனுப்பினாயே அருள லிவிங்ஸ்டன் நகரைத் தேடியே
கந்தன் அருள் கடல்மடைதான் எங்க வீட்டிலே

ஈழத்தின் வட கரையிருக்கும் தொண்டைமானாறும்
தென்னிலங்கைக் கதிரமலையின் மாணிக்க நதியும்
இணைந்து இங்கே இருக்கின்றதோர் சம்பேசி நதியே
வளைந்து விழும் விக்டோறியா நீர் வீழ்ச்சியாக
சம்பியாவில் சந்நிதியின் சாயலைக் காட்டி
சாலையோர மலைகளெல்லாம் கதிரமலையுமே
கதிர்காமத்தோற்றமே

சம்பியாக்கும் சந்நிதிக்கும் என்ன பொருத்தமோ
இங்கு வந்து உன்னைக் காண என்னை அனுப்பினாய்
இனியும் ஓர் மாற்றம் காண நேரம் வந்ததோ
என்றுணர்த்த எம் ஐயாவை அனுப்பி வைத்தாயோ
எத்தனை தான் மாற்றங்களை நீ தந்தாலுமே
சந்நிதியை நாம் மறவா வரமும் வேண்டுமே-ஆற்றங்
கரையும் வேண்டுமே

*********

**பாவாரம் தந்துந்தன் பாதாரம்** நான் காண
பக்க துணை நின்றவரை பறித்தல் தான் முறையாமோ
ஆறுபடை வீடெல்லாம் ஆடலைத்தான் காட்டினாலும்
ஆறுதல் எந்தனுக்கு ஆற்றங்கரை என்றாய்!
ஆறியமர வந்த ஆற்றங்கரை அருகே
வேலாடும் மயிலாடும் வேண்டும் நிலை தான் கூடும்!
தேவர்களும் மனிதரும் தினம் உன்னைப் பூஜிக்க
தேனமுதச் சுவை இங்கே தினம் தினம் சித்திக்கும்!
வந்த வினை தான் விலக வானுலகம் தான் கிட்ட
சொந்தம் கொண்டாடியபின் சுகம் தேட வருவோர்க்கு
அண்ணாமலை இங்கே அன்னமலை படைத்தார்க்கு!
நினைத்தவர்க்கு மோட்சமிங்கே மனத்துள்ளே தான் மலரும்!
உடற்பசி தனைப்போக்க அருட்பசி தான் பிறக்க
வேலாகி அறிவாகி வேண்டுமட்டும் பசி தீர்க்க
ஞானத்தின் தந்தையாய் யான் வணங்கி நின்றவரை

ஞாலத்தில் மறைத்ததுதான் உந்தனுக்கு முறையாமோ
அவர் பணியை யான் தொடர அடி எடுத்து வைத்தாலும்
தடை பல தந்தென்னை தண்டிப்பது ஏன் ஐயா!
நீ எந்தன் எல்லை அவர் உந்தன் பாதை
விழி அங்கு தங்கியதோ ஒளி அங்கு மங்கியதோ
சாதகமாய் இருக்கவென்று நீ தானே அனுப்பிவைத்தாய்
பாதிவழி நிற்கையிலே பறித்தல்தான் உனக்கழகோ
உடைமாற்றி நின்றாலும் தடை பல தந்தாலும்
விடையாக வேலவா நீ வேண்டுவதைத் தந்தருள்வாய்!

*********

**அன்புக்கு அன்னை** ஆனவன்
அறிவுக்கு தந்தை ஆனவன்
பரிவுக்கு குருவுமானவன் குகநேசனே

கருவாகா உருவுமானவன்
அறிவாகி அனைத்துமானவன்
அன்னவனாம் சந்நிதியான் அடிமையானவன்

புற்றுநோய் பற்றவைத்து
பற்றறுத்துப் பழுக்க வைத்து
தந்த ஓர் குருநாதன் எங்கள் ஐயா

காவியுடை தரிக்காமல்
கானகமே செல்லாமல்
தவிக்கும் அந்த அடியருக்கோர் ஆலமரமே

ஆலமிலை அமுதூட்டி
ஆனமட்டும் அருள் கூட்டி
பூவரசாய் பூத்தவர்தான் எங்கள் ஐயா

சந்நிதியே சிந்தனையாக
திருப்பணியே வந்தனையாக
நின்ற அந்தத் திரு உருவே முருகேசமே

உடலைவிட்டு அகன்றாலும்
கடலைத்தாண்டி நின்றாலும்
என் உயிரில் கலந்தவன் தான் எங்கள் ஐயா

முருகேசம் பரமஹம்சம்
முருகேசம் பரிபூர்ணம்
முருகேசம் பரப்பிரம்மம் அறிவாய் மனமே

*************

**எம் வாழ்வில் ஒளியாய்** வந்தாய் - எம்
துன்பத்தை பகிர்ந்து நின்றாய்
எமக்காக உடலை வாட்டி - மனம்
சலிக்காமல் வேண்டி நின்றாய்

குருவாகக் கிடைப்பதற்கு - முற்
பிறவியில் புண்ணியம் செய்தோம்
குழந்தையாய் தந்தையாய் பேரனாய் மாற
குகநேசா என்ன செய்தோம்?

தனக்காக வாழும் இப்பூமியில்
பிறர்க்காக வாழ்வையே தந்தவா
மணல்ச் சோறு உண்டதை மறப்பேனோ? - எங்கள்
மனைதேடி வந்ததை மறப்பேனோ?

ஒளியாக வந்த ஐயா - வேலன்
ஒளியாக மிளிர்வதற்கு
ஆயிரம் அகல் விளக்கேற்றி நின்றாய் -அதன்
ஒளி நெஞ்சில் தெரிகின்றதே!

மனதிலே ஒளி விளக்கேற்றி
மால் மருகேசனை வேண்ட
உனதருள் தன்னாலே வருமாம் - பின்னால்
வேலனருள் விரைந்தோடி வருமாம்!

விரைந்தோடி வரும் வேலன் அருளும்
தன்னாலே வரும் உந்தன் அருளும்
என்றென்றும் நிலைத்திட வேண்டும் - ஐயா
எம்மோடு கூட நின்றருள்வாய்

**நீராஞ்சலி**

**அன்னமலைச் செல்வத்தை திண்ணமாய்** மனதில் வைத்து
அன்னவர் செய்த பணி செப்புதற்கு வார்த்தையுண்டோ
சந்நிதித் தெய்வங்களை வணங்கிய ஒரு காரணத்தால்
எந்நிதி தரும் வள்ளல் ஐயாவை எமக்களித்தான்

சங்கடங்கள் தீர்த்து நிற்கும் சந்நிதி வேலனவன்
எங்கள் ஐயாவின் புற்றுநோயைப் போக்கி வைத்து
அவர் குடும்பம் துறக்கவைத்து தன்னடிமைதானாக்கி
தன்னடியார் துயர் தீர்க்க புது வாழ்வு அளித்து நின்றான்

அடியரின் துயரெல்லாம் தான் சுமந்து உடல்வாடி
அவர்களைத் தன் செல்லக் குழந்தைகளாய் பாவித்து
அன்னையிலும் மேலாக அன்பினை அள்ளித்தந்து
ஆதரவாய் தந்தையாய் வழிகாட்டி நின்றிட்டார்

ஒளி விளக்காய் எங்களுக்கு வழிகாட்டி நின்ற ஐயா
உடலால் எமை விட்டுச் சென்றுவிட்டார் என்று சொன்னார்-
கண்
மடலாய் எமைக்காத்த கருணாமூர்த்தியவர் - எமை
கடனாளியாக்கி விட்டு கந்தனடி சென்றாரோ

சொல்லியழ யாருமின்றி சந்நிதியான் முன் நின்றேன்
சொல்லாமல் கூட்டிச் செல்ல என்ன இது நியாயம் என்றேன்
மெல்லமாய் எனைப்பார்த்து புன்முறுவல் தான் பூத்தான்-
அதில்
துல்லியமாய் ஐயாவின் தண் கருணை தான் கண்டேன்

சந்நிதி வேலா நான் சரணம் என்றேன்
எந்நிதி கேட்டாலும் தருவேன் என்றான்
எங்களின் ஐயாவை என்றும் எம்மோடு
கூடவே வைத்திருக்க வேணும் தான் என்றேன்.

* * *

**கோழிதன் குஞ்சுகளை சிறகினுள்** காப்பது போல்
இக்குஞ்சுகளை காத்த எம் குருநாதா
இக்குஞ்சுகள் தாம் வளர்ந்ததென்று பாதி வழி
விட்டு விட்டு எங்குதான் ஐயா சென்று விட்டீர்
மீதி வழி செல்வதற்கு வழிதான் தெரியவில்லையே
மீண்டும் வழிகாட்ட ஐயா வந்திடுவீர்
எந்நாளும் துதிபாடி உம்மையே தொழுது நிற்போம்
இப்புவியினில் வாழ்வதற்கு ஐயா வேண்டும்
ஐயாவின் சிரித்தமுகம் கண்முன்னே நிற்குதையா
அது ஒன்றே எங்களுக்கு இவ்வுலகினில் போதுமையா

* * *

**உன்னைத் தானே எங்கள் குரு** என்றமைத்தான் வேலன்
குருவாக வந்தாய் தாயாகி நின்றாய் பின் தவிக்கவிட்டு
சென்றதேனோ

தாயின் மடியினில் குழந்தைகள் போல்
உந்தன் அரவணைப்பில் வாழ்ந்து வந்தோம்
தத்தித் தவழ்கின்ற நாளினிலே தவிக்க
விட்டு விட்டுச் சென்றதேனோ?... (உன்னை)

தத்தித் தத்தி பார்க்கின்றோம் நிற்க முடியவில்லை
நல்வழி காட்டிடையா?
நீயே வந்திடணும், அடியெடுத்து வைத்து
எங்கள் பாதையை காட்டிடையா (உன்னை)

அன்று உன் உடலைத் தான் காக்கவே
உன்னை சந்நிதிக்கு விற்றனரோ
இன்று எம் பாவத்தை தீர்ப்பதற்கோ
அந்த உடலை நீயும் வாட்டி நின்றாய்
உம்மைப் போல யார் தான் எம்மை இனி காப்பார்
உன்னை நம்பி வந்தோம்
என்றும் எம்மோடு கூடவே நின்று
எம்மை வழி நடத்துவாய் (உன்னை)

**நீறாஞ்சலி**

நீயே எனக்குத் துணை குகநேசனே
நினையாத நேரமில்லை நினதருளாலே.. (நீயே)

நிம்மதி தருவதற்கு நீ வந்தாய்
சந்நிதி வேலனும் சரி என்றால்
அன்னை முத்துமாரியின் அரவணைப்பிலிருந்து
அருட் குருவே உந்தன் மலரடி தொழுவேனே (நீயே)

பொருள் தேடி நின்றவர்கள் பொருளோடு செல்வதில்லை
அருள் தேடி நின்றவரோ அத்தனையும் பெறுகின்றார்
இருளான இதயத்தில் ஒளிபடர வேண்டின்
திருவருள் தனைக்காட்டும் குருவருளைத்தாராய் (நீயே)

இரை தேடும் ஜீவனுக்கு இன்பத்தைக் கொடுக்கின்றாய்
இறைதேடும் எந்தனுக்கு இன்னல்களைத் தருகின்றாய்
ஏன் இந்தச் சோதனையோ என் குருபெருமானே
நான் என்ற நிலை மாற்றும் நாடகத்தில் ஓர் அங்கமோ (நீயே)

திரு நீற்று மகிமையெல்லாம் திக்கெட்டும் பரவ என்றோ
தரு நூற்றுக் கதை மூலம் தத்துவங்கள் கூறி நின்றார்
வேலவன் வீதி மண்ணை திரு நீறாய் மாற்றியுமே
திரு நீற்று மகிமையினால் தீரும் உன் நோய் என்றாய் (நீயே)

*   *   *

**அருளாஞ்சலி**

***குருவருள் தருவாய் குருநாதா-நின்***
திருவடி சரணம் முருகேசா

பூவரச மரத்தடியில் புகழ் பாடவே
வேலன் அருள் வடிவில் அங்கு ஆடவந்தான்
ஆடவந்த வேலன் எனை நாடி வந்தான்
தேடி வந்த தேவனையும் காட்டி நின்றான் (குருவருள்)

கந்த ஷஷ்டி ஆரம்பத்தில் கந்தன் வந்தான்
காட்டி விட்டான் எங்களுக்கோர் அரும் துணையை
கந்தனருள் கலந்தவனே குருநாதா நின்
கழலடி சரணம் முருகேசா.. (குருவருள்)

குருவன்றி உலகிலே ஏதும் உண்டோ - அவன்
அருளன்றி ஆண்டவனின் அருளும் இல்லையே
குருவாக வரும் அந்தப் பெரும் பொருளே பின்
குறியாக வரும் என்று உணர் மனமே (குருவருள்)

குருவருள் தருவதும் திருவருளே - அந்தத்
திருவருள் சித்திப்பதும் குருவருளால்
குருவாய் வருவாய் குமரேசா குறைகள் தீர்ப்பாய் முருகேசா
குருவே திருவே அழகேசா அபயம் அளிப்பாய் ஆற்றருகே
(குருவருள்)

*   *   *

**அறிவாஞ்சலி**

எங்கிருந்தாயோ என் குருநாதா
இத்தனை நாளும் என் நினைவில் வாராமல்
(எங்கி)

இத்தனை நாளும் நான் இருளிலே வாழ்ந்திருந்தேன்
கர்ம வினை என்ற முகில் வெண்ணிலவை மறைத்ததுபோல்
உன்னையே அறியாமல் ஊழ்வினையால் வாடலுற்றேன்
இனி எந்தன் வாழ்வினிலே நிம்மதிக்கு பஞ்சமேது
(எங்கி)

வேற் கரணித்தீர்த்தமதை பூவரசில் ஊற்றவைத்தாய்
வேற் கருணை எனைத்தேடி வீடுவரை தான் வந்ததோ
வேலனும் வந்தானோ வேதமும் துணை நின்றதோ
குருவருட் கருணையையும் குறைவின்றித்தான் தந்ததோ
(எங்கி)

தீராத வினை எல்லம் தீர்க்கும் எங்கள் குருநாதா
மாறாத மனக்கவலை ஒளிகண்ட பனி உன் முன்னால்
சோராத மனத்தோடு வேலனையே சரண் அடைந்தால்
வாராது இடர் இங்கே வல்வினையும் வந்தடையா
(எங்கி)

ஜாதகத்தைப் பார்க்காமல் சாதகமாய் நிற்க வைப்பான்
பாதகங்கள் எனைத் தொடரா பாதிவழிதான் நிற்பான்
சாட்சி என்று நீ கேட்டால் பன்னிரண்டு பழம் என்பான்
எனக்காக நீ அழுதால் என் வினையைத் தானறுப்பான்
(எங்கி)

*　　*　　*

## நிழலாஞ்சலி

உன்னை நான் மறப்பதென்றால் - ஐயா
என்னை நான் மறப்பதன்றோ... (உன்னை)

என்னையே உணர வைத்துப் பின்னர்
உன்னையும் உணர வைப்பாய் - ஐயா (உன்னை)

அன்னை தந்தை கண்ட பின்னே
வாழ்வில் அத்தனையும் பெற்ற பின்னே
வந்த வழி தேட முனைந்தேன் - நீ
வந்தடைந்தாய் ஞானத்தந்தையாய் - ஐயா (உன்னை)

சற்குருவாய் உன்னைக் கொண்டேன் - எந்தன்
சஞ்சலங்கள் தீரக் கண்டேன்
சோதனையும் வரக் கண்டேன் நின்னருளாள்
சாதனையாய் மாறக் கண்டேன்... ஐயா (உன்னை)

என் அகத்துத் தலைவன் அன்றோ
நீ பொன்னகத்தைக் காட்ட வந்தாய்
அன்னையவள் என்னைத் தந்தாள் நீ வந்தாய்
அப்பனிடம் கூட்டிச் செல்லவா? ஐயா
(உன்னை)

*       *       *

**அமுதாஞ்சலி**

பாதாரம் கழுவிடவே பாபிகருள் தந்தாயே
ஆதாரம் தந்தெம்மை ஆளவந்த குருநாதா
காதோரம் ஓர் மொழியைக் கனிவுடனே தரும் நாளை
கதவோரம் தனில் நின்று களிப்புடனே காத்திருப்பேன்!

பஞ்சாராத்தியிலே உந்தன் பளிங்குமுகம் காணவேண்டும்
பஞ்சமா பாதகங்கள் பாரினிலே அழிய வேண்டும்
வஞ்சனை செய் ஐம்புலங்கள் புறநோக்கை மாற்ற வேண்டும்
தஞ்சமென நாம் கெஞ்ச தந்தருள்வாய் நின்னருளே!

அருகினிலே நிற்பதற்கோர் அருகதையும் தந்தாயே
விடுகதையால் வேதாந்த முத்தெல்லாம் தருபவனே
தருகின்ற முத்தெல்லாம் தமியேனைப் பண்படுத்த
அருகினிலே நிற்பதனால் அடுத்த நிலை சத்தியமோ!

ஆதிமூல வேலழகன் அருள வந்தான் உன் உருவில்
அருள வந்தாய் என்றும் என்னுள் இருந்தருள வருவாயே
இருந்தருள வந்து விட்டால் இருளுக்கோர் இடமுண்டோ
பேரின்ப ஒளிதோன்ற நானுமே கரைந்திடுமே!

குருவருளாம் திருவருளை குறைவின்றித் தடையின்றி
வருகின்ற அடியார்க்கு வாரி நீ இறைக்கின்றாய்
அன்பருக்கமுதூட்ட நின் உடலை நீ வாட்டி
ஞானதானம் செய்கின்ற நாயகா என் குருநாதா..

*    *    *

**கருணாஞ்சலி**

பாராமுகம் ஏன் ஐயா-நின்னருள்
தாராதிருப்பதேன் ஐயா

(பாரா)

வேலவன் திருவடியை வேண்டி நான் நின்றபோதும்
நாதனின் குருவருளை நாடி நான் வந்தபோதும்
பாடிப் பணிந்துமே பழவினை தர்த்தபோதும்
பாபச்சுமை தீராப் பாவி என்றெண்ணியோ நின்

(பாரா)

என்னை அழித்தாலே என்னிடம் வருவாயோ
தன்னை உணர்ந்தாலே உண்மையைத் தருவாயோ
முக்திக்கு வித்திட்ட வேலன் அருள் நிறைவே
எத்திக்கிலும் உனை நான் எப்போதும் காணவேண்டும்

(பாரா)

என் குறை தீர்க்க வந்த என் குருபெருமானே
எண்ணி எண்ணித் திரிந்தாலும் ஏதும் அறியேனே
விளங்கவும் இல்லையே துலங்கவும் இல்லையே
பற்றினேன் நின்பாதம் பற்ற வைப்பாயே

(பாரா)

*        *        *

**ஞானாஞ்சலி**

தாயுமானவர் இவர் தந்தையானவர்
ஞான குருவுமாகியே எமைக் காக்கவந்தவர்
ஞான பூமிக்கு வந்த ஞான சூரியர்
நம்பி நின்றவரை நாளும் கோளும் என் செய்யும்

வாருங்கள் சந்நிதிக்கே வேலவன் ஆலயம் தரிசிப்போம்
வாரி வழங்கிடும் வள்ளலோடு சாமி ஐயாவும் நின்றிடுவார்

ஆயிரம் சுட்டியேற்றி அவன் வீதியை அலங்கரிப்பார்
ஆயிரம் நாமங்களால் அன்னவனை அர்ச்சித்தும் பூஜிப்பாரே
கோடி கிடைத்தாலும் அந்தக் கோமகனை மறவார்
நாடி வந்தோர் குறையைத் தேடியே தீர்த்திடுவார்
(வாருங்கள்)

கிரகத்தின் கோளாறினால் அடியவர் பட்டிடும் கஷ்டங்களை
கிரமமாய் விரதமேற்று சாந்தியை பெற்றுமே தந்திடுவார்
வள்ளலின் வரமதனை தன்னுடலை வாட்டியும் பெற்றிடுவார்
அன்னமலை குவித்து அடியார் பசிதனைப் போக்கிடுவார்
(வாருங்கள்)

செல்லா நின்ற அந்தப் பொல்லாத வினைகளையும்
சொல்லின் திறமறிந்து செல்ல வழிவகுப்பார்
கல்லையும் கரையவைத்து உந்தன் கவலையை மாற்றிடுவார்
காலத்தின் கோலத்தையே யோக மாயத்தில் மறைத்திடுவார்
(வாருங்கள்)

ஞானத்தைத் தான் அறிந்தும் அவர் மோனத்தை நாடவில்லை
ஞாலத்தில் வாழ்ந்திருந்தும் கர்மயோகத்தில் தானிருந்து
நம்மையும் ஈடேற்ற வாய்த்த நல்லகுருநாதனாகி
வள்ளலின் சேவையிலே வானுலகையே காட்டி நின்றார்
(வாருங்கள்)

அன்னதானத்தினால் அன்றாடப் பசிதனைப் போக்கினாலும்
சொர்ணதானத்தினால் வாழ்வின் சுகங்களை பெற்றாலும்
ஞான தானத்தை நாங்கள் ஞாலத்தில் பெற்றிடவே
வாழ்ந்துமே காட்டிய எங்கள் ஐயாவை நாம் மறவோம்
(வாருங்கள்)

*        *        *

**பாதாஞ்சலி**

ஆற்றங்கரை வேலவன் அருகமர்ந்து
அடியாரின் குறை எல்லாம் தீர்ப்பவனே
ஆறெழுத்து மந்திரத்தின் அர்த்த மெல்லாம்
ஆனமட்டும் எமைக்காக்க வழி அமைத்தாய்!

எழு கோடி மந்திரத்தின் அர்த்த மெல்லாம்
ஆறெழுத்தில் அடங்கிய விதம் கூறி
வேறெழுத்தை நாடாத முறை காட்டி
சத்தத்தினுள் சண்முகத்தின் சாயலும் காட்டி!

வேதனையில் கூட நின்ற குருநாதா
சோதனையில் சுகம் காட்டும் குருதேவா
சாதனையில் வேலவனின் ஒளி கூட்டி
சஞ்சலங்கள் தீர்த்து நின்ற குகநேசா!

வேண்டுவார்க்கு வேண்டுவன தந்தருளும்
வேலவனின் பிரியமுள்ள அடிமையன்றோ
சார்ந்து நின்ற அடியரின் சங்கடங்களை
சம்ஹரித்து நின்ற சற்குருநாதா!
ஐயா என அங்கலாய்த்து நின்றவர்க்கெலாம்
பொய்யாயின வெலாம் போய் அகல
மெய்ஞான தத்துவத்தின் கருத்தையெல்லாம்
தந்த விதம் என்னவென்று யானுரைப்பேன்!

ஆழ்ந்தகன்று ஊன்றி நின்ற வேலவனின்
தாள் பணிந்து நின்று கண்ட கருணைதனை
யாம் பணிய எமக்குள்ளே கூடவைத்து
களைத்ததால் கூட்டிச் செல்ல நினைத்தானோ?

தொண்டைமானாற்றருகே தொண்டர் கூடி
தொலையாத பொருள் ஒன்றைத் தொலைத்தோமென்று
தேடுகின்றார் அன்னதான மடங்களிலே
வேலனோடு காட்சி தர வந்தருள்வாயே!

*        *        *

**கவிதாஞ்சலி**

எத்தனை துன்பங்கள் ஜெகமதில் வந்தாலும்
இன்பமாய் மாற்றிவைக்கும் எங்கள் ஐயா
ஏங்கித் தவிப்பதும் பின் பாடிக் களிப்பதுமே
எந்தனுக்கு இட்ட பணியோ குருநாதா
எந்தன் மனக் கோயிலிலே நீ வந்த பின்னாலே
வேண்டுதற் கேதுமுண்டோ முருகேசா
வேண்டாமை நிலைதந்து தாண்டு தற்கோர் வழிதந்து
தயை புரியாயோ குருநாதா

கோடானு கோடி ஜென்ம கர்மவினைப் பாரத்தால்
கூனிக்குறுகிறேனே எங்கள் ஐயா
உன் நாமம் என் நாவால் ஓர் முறை சொன்னாலே
பாபச் சுமை குறைந்திடாதோ குருநாதா
கூட்டினில் பல காலம் வாழ்ந்ததினாலே
குறைகளோ மலைபோல் குருநாதா
குருவருள் கண்டதுமே குறைகள் மறைந்திடாதோ
மன இருள் போக்கிடுவாய் எங்கள் ஐயா

நாடக மேடையிலே நடிக்கின்றேனே
நம்பிக்கைதான் துணையே குருநாதா
ஆடி முடிந்த பின்னே வேஷம் கலையுமுன்னே
கூட்டைக் கலைத்து விடு எங்கள் ஐயா

**ஆத்மாஞ்சலி**

தேவரும் மனிதரும் தினம் உன்னைப்பூஜிக்க
ஸ்ரீ செல்வச் சந்நிதியோ - அங்கே
அடியார்க்கு அன்னமும் ஆலயத்தின் திருப்பணியும்
ஆற்றவோர் முருகேசமோ!
அரூபமாயிருக்கும் ஆரமுதே ஆலமரமாகி
நிழலாகினாயோ - ஞான
சொரூபத்தின் சிகரத்தில் சுப்ரமண்ய குருவாகி
சுடரொளியால் இடர் நீக்கமோ!

சுடரொளியின் சூடெல்லாம் சூழ்ந்துவரும் அடியவரை
சுட்டெரிக்காமல் இருக்கவோ
சித்த சுத்தானந்த சின்மயமாய் நின்றவரை
சந்நிதியில் நிரப்பி வைத்தாய்!
அன்னவரின் வரிசையிலே சொன்னவர்க்கு அடிமையாகி
சூழ்ந்து நின்ற முருகேசமோ!
தன் உடலைத்தான் வாட்டி எம்மவர்க்கு அருள் கூட்டி
மெழுகாகித்தான் கரைந்ததோ!

புற்று நோயைப் பற்றவைத்து தன்னையுமே உணரவைத்து
அன்னவனை ஆட்கொண்டபோதும்
பற்றற்றான் பாதத்தைப் பற்றியுமே பணி புரிந்தும்
பாசத்தை துறக்கவில்லை
பூர்வஜென்ம சொந்தங்கள் துறந்தாலும் துறவாத
புதுப்பொலிவைத்தான் கண்டவா!
வந்தடைந்த அடியவரில் வாரீசைக் கண்டதுமே
சொந்தங்கள் உருவானதோ!

வினைஒட்டாக் கர்மமும் துணை ஒட்டாச் சொந்தமும்
வாழ்க்கையாய்க் கண்டபோதும்
வேலவனின் அடிமையாய் வேள்வியாய் அமைந்ததால்
அடியாரின் குறை தீர்ந்ததோ!
அன்னதானப் பெரும் பணியை அடிக்கடி நீ ஏற்றுமே
அடியாரின் பசி போக்கினாலும்
ஞானதானப் பணியெல்லாம் நாள்தோறும் நீ ஏற்று
நல்லவழி காட்டி நின்றாய்!

சித்தமலமடக்கி சிதானந்த நிலைகண்டு
சித்தராய் நின்றபோதும்
ஆத்ம ஈடேற்றத்தில் சாஸ்வதமாய் நிற்பதுதான்
சாலச் சிறந்ததென்றாய்!
பக்தியின் ஆழத்தை பலர் அறிய வேண்டுமென்று
இறைவனை ஏற்றிடுவாய்
ஞானத்தை நாமறிய வேலவனை மனதேற்றி
தியானத்தில் திழைத்திடுவாய்!

அருட்குருவாய் அவர் இருந்து - வரும் அடியார்களின்
குறையெல்லாம் தீர்த்த போதும்
குற்றேவல் புரிவதற்கும் கூடநின்று காப்பதற்கும்
உற்ற ஓர் துணை தந்தானே!
அன்னவனாம் முருகேசன் அவன் பாதம் பற்றியதும்
தன்னுடலை வாட்டியது எல்லாம்
சாயுச்ச நிலை காட்டும் சந்நிதியின் வேலவனின்
சன்மார்க்க நெறி என்பதோ!

குற்றேவல் புரிந்தவரை குன்றாக்கி குணமாக்கி
நல்ல குருநாதனாக்கி
அன்பினுக்கு அன்னையாய் அறிவினுக்கு தந்தையாய்
பரிவினுக்கோர் குருவுமாக்கி
உடல்வாடி நின்றதால் உதவாது என்றெண்ணி
புகழுடம்பில் புகுத்தி விட்டாயோ!

ஆத்மார்த்தமாகவே உன்னடியில் எங்கள் ஐயா
கூட இருந்தருள வேண்டும் - நின் அருளை
வாரி எமக்கருளவேண்டும்
-சந்நிதி வேலே சங்கடம் தீர்ப்பாய்!

## தீபாஞ்சலி

கந்தவேலன் அடிமையாகி
கர்மயோகம் தனில் ஏறி
ஞானப் பசியைப் போக்க வந்த
ஞானகுருவே சரணம் சரணம்
அடியார் குறையெல்லாம் போக்க எண்ணி
அன்னமலைகளை நீ படைக்க
அடியார் பசியங்கே ஆறயிலே
உந்தன் அருட்பசியைப் போக்கினாரே

தொண்டை மானாற்றம் கரையினிலே
தொண்டர் கூடித் திளைக்கின்றார்
சந்நிதியான் அருட் பெருங்கருணை
தந்ததோ ஓர் சாமி ஐயாவை
சந்நிதியே சிந்தனையாக
திருப்பணியே வந்தனையாக
பணிவும் அன்பும் சிறந்தோங்க
பணித்தான் எமக்கோர் குருவாக

ஞானகுருவாய் வந்தவனே ஞாலம் எல்லாம் உய்ய என
மோன குருவாய் வந்த எங்கள் தவத்திருவே சரணம் ஐயா
மனதில் தோன்றும் எண்ணங்களை மலர்களாக்கி
சூட்டியபின்
தூபதீபம் ஏற்றியுமே தோத்திரங்கள் பாடிடுவோம்
பாடப்பாட பாவி எந்தன் பழவினைகள் தீர்ந்தபின்னே
ஜோதியிலே உன் உருகாட்டும் கற்பூரமாய் ஆக்கிவிடு
ஐயா எம்மைக் கற்பூரமாய் ஆக்கிவிடு

**யோகத் தாலாட்டு**

அன்பர் உள்ளம் அமர்ந்திருக்கும் ஆரமுதே கண்வளராய்
ஆத்மானுபூதி நிலை அடைந்தவனே கண்வளராய்
இன்பதுன்பங்கள் மறந்த இன்னமுதே கண்வளராய்
ஈரேழு உலகம் போற்றும் எங்கள் ஐயா கண்வளராய்
உழலும் பிறவித் துன்பம் அற்றவனே கண்வளராய்
எங்கள் குறை தீர்க்க வந்த குருநாதா கண்வளராய்
ஏகாந்த வீட்டிலேநீ வேலனுடன் கண்வளராய்
ஒப்பில்லா உயர்ந்த ஞான தத்பரனே கண்வளராய்
கண்டவர்கள் விண்டில்லாத விண்டவர்கள் கண்டிலாத
காட்சிதனைக் கண்டுகொண்ட கண்மணியே கண்வளராய்
அற்புதமாய் எங்கும் பொங்கும் சுடரொளியில் ஸ்திரமுமாய்
ஆனந்த வெள்ளத்திலே ஆழ்ந்துமே நீ கண்வளராய்
சஞ்சலங்கள் தீர்க்கவல்ல சந்நிதியான் ஆற்று வெள்ள
அலை எழுப்பும் ஓசையிலே அமைதியாய் கண்வளராய்
சங்கடங்கள் தீர்த்துவைக்கும் சந்நிதியான் தண்கருணை
வேற்கரணித் தர்த்தமதில் தோய்ந்தெழுந்து கண்வளராய்
பூவரச மரத்தடியில் புத்தம் புதுக் கவிதையெல்லாம்
தென்றலோடு தேனாய் வரத் தேவா நீ கண்வளராய்
பூவரச மர நிழலில் பூக்கள் எல்லாம் சொரியுதையா
பாமலைகள் குவியுதய்யா பார் சிறக்கக் கண்வளராய்

**ஓம் மங்களம்**

தெளிவு குருவின் திருமேனி காண்பது
தெளிவு குருவின் திருநாமஞ் செப்புதல்
தெளிவு குருவின் திருவாக்கைக் கேட்பது
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே !

முருகேசம் பரம ஹம்சம்
முருகேசம் பரி பூர்ணம்
முருகேசம் பரப் ப்ரம்மம்
முருகேசம் நமோ நமக!

எங்கும் நிறைந்தவனே
எல்லாம் அறிந்தவனே
எல்லாமாய் நின்றவனே
என் குருவே நீ வாழ்க!

எங்கும் நிறைந்தவனே
எல்லாம் உணர்ந்தவனே
என்னுள்ளே அமர்ந்தவனே
என் குருவே நீ வாழ்க!
ஓம்
சாந்தி! சாந்தி! சாந்தி!

# அன்னை மலர்



**கதை கதையாம் காரணமாம் . . . . .**

பெற்றவள் எனைப் பிரிந்தபோது , புரியாத இருள் சூழ ,
மற்றவளை நினைத்தேன் , மயக்கத்தில் உறங்கிவிட்டேன்.
வற்றலே இல்லா வல்வை முத்துமாரி எனும் வெள்ளம் ,
பற்றலேதும் புரியாத பாபிக்குள் மெல்லெனப் பாய ,
நிற்றலேதுமில்லாமல் நிலை கொள்ள , கருணைமாக்கடல் -
வற்றலேதுமறியா காமதேனுவையும் , கற்பக
விருக்ஷசத்தையும் , சீற்றமேயறியா சிதானந்த நிலையையும்
கைகூட வைக்க , மாற்றங்கள் மாறி மாறி வாட்ட ,உணர்ச்சிப்
பிழம்பாக மாற , அன்னை மலர் தந்து அன்றுனக்கு அமைதி
தந்தேன் . . .
அதில் . . .உனக்கு அன்னையர் மூவர் என்றாயே!
கதை முடிந்ததா . . .தொடருமா . . .என்றாள்!

கண் விழித்தேன்! அதற்குள் எத்தனைஆண்டுகள்!
கனத்த மனக் கவலையையெல்லாம் கானல் நீராக்கி ,
எத்துணை அற்புதக் காட்சிகளைக் காணவைத்து ,
எனைப் பற்றிய கவலைதனைக் கனவாக்கி ,
நினைவலையில் நிம்மதியைத் தந்த ,
அப்பன் சந்நிதி வேலனையும் ,வல்வை முத்துமாரி
அம்பாளையும் ஓர் கணம் நினைத்தேன் !
அன்னை மலரிலிருந்து நறுமணம் மீண்டும் கமழ ,
சொர்ண மலர்கள் தான் படைக்க ,சுந்தரியாள்
செம்பவள வாயிதளிலிருந்து ஓர் அசைவு !
புன்னகையோ ! பண் இசையோ !
கடைக் கண் பார்வையிலிருந்து ஓர் ஒளி பட்டதும் !
விட்டதெல்லாம் விளையாட்டென்று உணரவைத்தாள் !
பாதம் பற்றவென்று சிரம் தாழ்த்தி கரம் குவித்தேன் !
காலம் சென்ற தவத்திரு முருகேசு சுவாமிகள்( சாமி ஐயா )
போட்ட முத்து மாலைதான் கண்ணில் படுகிறது !
மெய்யான சரணம் என்றேன் !
பொய்யாயின வெல்லாம் போயகல ,
மெய்ஞ்ஞானமாய் மிளிர்கின்ற ,வேதப் பொருளாய் -
பெற்றவளும் ,பிறந்த பொன்னாடும் ,மற்றவளாம்
முத்துமாரியுமே உந்தனுக்கு அன்னையர் மூவர் என்று அன்று
கூறிவிட்டு , அமைதி பெற்றபின் என்னையும் மண்ணையும்
மறந்தாயே ! என்றாள் - அன்னை மலர் மீண்டும் மலர்கிறது !
அன்னையர் பாமலராய் - வல்வையம்பதியிலே!

## ......காரணத்தால் போற்றுகின்றேன்!

வல்வையம்பதியே! வளர் கோகிலமே
குளிர் நிலவே கோமேதகமே வைரம் முத்து
நீலம் வைடூர்யம் கொண்ட மரகதமே மாணிக்கமே
பவளமும் பத்மராகமும் பதிந்தவளே! பார் சிறக்க
நவரத்ன மாலைதனை நயமாகச் சூட்டுவேன் பாமலராய்!
அன்று கிழவிபோல் வேடம் பூண்டு வெள்ளை உடையுடுத்து

கோடிக்கரையகன்று ஓடம் தனில் வந்து
வெண்மணலில் அடி வைத்து வல்வையம்பதி நாடி
வந்தவளாம் மாரியாத்தா கருணைவெள்ளம்
நாட்டையே வீடாக்கி கோயில் கொள்ள என
நாடிய பூமியாதலால் வல்வை ஓர் தில்லையே!
சின்னஞ் சிறு இடத்தில் பென்னம் பெரியவள் குடிவந்ததால்
மணத்தளவில் விஸ்வரூபமாகும் மல்லிகை மொட்டம்மா நீ!
வேலவனும் விரும்புவதால் அவன் ஒளியும் இணைவதால்
இருள் அகலும்! இத்தனைக்கும் மேலாக எண்ணிறைந்த
தெய்வ சந்நிதானங்களை இங்கமைத்தார் உன் மக்கள்.
ஆகவே இங்கு தெய்வ அருளும் அனுக்கிரகமும்
ஆறாக ஓடி கடலோடு இணைவதால் நாமும் வாழ்வோம்.
நானிலத்தில் நின்புகழ் என்றென்றும் நிலைக்கும்!
பக்தி வெள்ளம் பரிணமிக்க பாலாறு தான் பாய
சக்தியுகம் பிறக்குதம்மா! சங்கடங்கள் தீருமம்மா!
தன்மந்த காலம் தடை விதித்த நிலை நீங்கி
மாரியின் சக்தியால் நிம்மதி மீண்டும் வரும் நாளை
காத்திருப்போம்! காலம் வரும்! ஞாலம் உள்ளவரை
உன் புகழ் பூத்துக் குலுங்கும்!
வாழீ என் தாயே! வல்வையம்பதியே!
மற்றவளே பெற்றவளே மகமாயித்தாயே!

**அகவுரை**

பிறக்க ஓர் ஊர் - வல்வையம்பதி!
பிணைக்கவோர் தொண்டைமானாறு கோவிலடி!
அதுவும் ஸ்ரீ செல்வச் சந்நிதி பூசகர் குடும்பத்தில்!
அன்னை வல்வை முத்துமாரி ஏன் அங்கனுப்பினாள்?
அன்னதான ருசிக்காகவே அதுவரை சென்ற எனக்கு
சொர்ணதானமாக கவியூற்றை என்னுள் பாய்ச்சி
பாமலர் பூசைமுறையை விரும்பியோ இப்படி ஓர் ஏற்பாடு?
சிந்தனை அடங்கிய சிதானந்த நிலைதான் பதில் சொல்லும்!
இந்து மதத்தில் தெய்வ எண்ணிக்கைக்கு வரம்பு இல்லை

இது ஆதி சங்கரர் சமய எழிச்சிக்கு ஆற்றிய தொண்டு .
ஆகவே அப்பனைப் பாடும் வாயால் அன்னையைப் பாடுகிறேன்
மண்ணையும் அன்னையாக்கி பாட வைத்தான்!
வல்வை மக்கள் தேடித்திரியும் அத்தனை கோவில்களையும் பாமலருள் பக்குவமாய் பதுக்கிவிட்டான்!
அண்ணனை முன் வைத்தே பாமலர் ஆரம்பம்!
நெடியகாட்டினுள் தேட என்றான் - தேடுகின்றேன்!
எத்தனை தேனாரமுத தீஞ்சுவைப் பாமலர் இதழ்கள் விரிந்த வண்ணம் - புரியாத தத்துவங்கள்!
தான் தோன்றிய கோவில்கள் ,மக்கள் பக்திப் பரவசத்தால் தோற்றுவித்த கோவில்கள் - சந்நிதி , கந்தவனம் , நல்லூர் , மாவிட்டபுரம் , சுட்டிபுரம் , கதிர்காமம் நயினை நாகபூஜணி தெல்லிப்பழை ,வல்லிபுரம் , ஈழத்து ஈஸ்வரங்கள் அத்தனையும் இணைந்தே அன்னையர் பாமலர் மலர்கின்றது!
பாடிக்கொண்டே இருக்கிறேன் என்பாட்டில் - விரும்பினால் நீங்களும் பாடுங்கள் - பணியுங்கள் பதநிலை கிட்டட்டும்.

**என்னுரை**

1982 ம் ஆண்டு என்னைப் பெற்றவள் எனைவிட்டு உடலால் பிரிந்தபோது அன்னவள் நினைவாஞ்சலியாக வெளியிடப்பட்ட அன்னை மலரில் மலர்ந்த பாமலர்கள் பல வல்வையம்பதியை வாழவைக்கும் தெய்வங்களை ஏற்றிப்போற்ற வந்தவை .
அவற்றை 1987 ம் ஆண்டு அன்பன் பொன். வல்லிபுரத்தான் ஒலி நாடாவாக வல்வெட்டித்துறை இந்து கலாசார நலன்புரி மன்றத்தின் வெளியீடாக வந்து இன்று பல திசையில் ஒலித்தாலும் , புத்தம்புதுமலர்கள் பூத்த வண்ணமே உள்ளன!
அவற்றையெல்லாம் பாடிப் படித்தால் ஊரும் மக்களும் நிம்மதியான பெருவாழ்வு பெறுவர் என்ற பேராவலில் இந்த வெளியீடு உங்கள் கரங்களில் இந்நேரம். வல்வை முத்துமாரி அம்பாள் எழுந்தருளி விக்கிரகத்தை

இந்தியாவிலிருந்து கொண்டு வந்த என் பாட்டனார் ஆறுமுகம்
. நாகமுத்து முதலாளியாரையும் அவர் மகனும் என்
தந்தையுமான சிவப்பிரகாசம் முதலாளியாரையும் அன்னை
இராசரெத்தினத்தாள் ( கண்டக்கா ) ஆகியோருக்கு
உளங்கனிந்த கண்ணீர் அஞ்சலி
செலுத்தி ,அத்தோடு காலஞ்சென்ற என் சகோதரன் சிவ .
நாகமுத்து அவர் மனையாள் செல்லப்பாக்கியம் , மூத்த
சகோதரர் பசுபதி, மனைவி அன்னலட்சுமி , மாமனாய்
குருவாய் வந்த ஸ்ரீ செல்வச் சந்நிதி பூசகர் செல்லையா ஐயர் .
பொன்னுத்துரை ஐயரையும் அவரது மூத்த மகன் பாலேந்திரா
ஐயரையும் நெஞ்சார வாழ்த்தி வணங்குகிறேன்! எனக்கு
ஞானத் தந்தையாய் ,
குருநாதராய் யான் வரித்த தவத்திரு வே . முருகேசு
சுவாமிகளின் பாதார விந்தங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து
வணங்கி ஆசி பெறுகிறேன் . அத்தோடு யான் கொழும்பில்
வாழ்ந்தகாலை ஞானானந்த சேவா சமாஜத்தோடு ஏற்பட்ட
தொடர்பால்
ஜலசமாதி அடைந்த ஞானானந்த சுவாமிகளின் சீடரான
ஹரிதாச கிரி சுவாமிகளையும் , இந்திய யாத்திரைகள்
சென்றபோது சந்தித்த மகான்கள் , யோகிகள் , சித்தர்கள்
அனைவரையும் வாழ்த்தி வணங்கி வாழ்கிறேன்!
எனக்கு தவத்திரு வே . முருகேசு சுவாமிகளை
ஞானத்தந்தையாய் தந்த ஸ்ரீ செல்வச் சந்நிதி வேலனின் அருட்
பெருங்கருணை , பொன்னுத்துரை ஐயாவின் பூஜானுகூலம்
எனக்குக்கிட்டியதால் வந்த கவியூற்றை அடிமனத்தில்
ஆணிவேராகக் கொண்டு , இந்தப் புத்தம் புது அன்னையர்
பாமலரை , போற்றிப் புகழ்ந்திட , வாழ்த்தி வணங்கிட ,
பாடிப்பணிந்திட , உள்ளமெனும் கோவிலிலே
உணர்வென்னும் ஊஞ்சலிலே எந்தனையே தூங்கவைத்து ,
உன்னையே உணரவைக்கும் துரிய நிலை தாராயோ
தூயவளே! என

" வானளாவும் கோபுர வாசல்கள் வல்வையிலே
வாழவைக்கும் தெய்வங்கள் அதன் உள்ளே " -என்ற

பெயரில் மலர்ந்த பாமலரை அன்னை முத்துமாரியின் பாதார விந்தத்தில் படைக்கிறேன்! ஏற்றருள்க தாய்மாரே! பெற்றவளே! வல்வை முத்துமாரியே! வளர்த்தவளே வல்வையம்பதியே!

என்றும் உன் சிவ . ஆறுமுகம்





வல்வை நாகமுத்து. சிவப்பிரகாசம் (முதலாளியார் )
இராசரெத்தினத்தாள் ( கண்டக்கா )

**பிறந்த மண்**

தில்லையம்பதி போல் சேய்நாட்டில் ஓர் தலம் தேடின்
வல்வையம்பதி யன்றி வேறொன்றும் உளதோ?
வானளாவும் கோபுர வாசல்கள் இங்கே! எமை
வாழவைக்கும் தெய்வங்கள் அதன் உள்ளே!

சிவபுரம் என்று சொன்னார் சுத்தானந்தர் - இதைச்
சமயபுரம் என்றார் மாரியாத்தா சிறப்பறிந்தார்
நெடியகாட்டில் ஓர் பிள்ளை அவர் உச்சிமலைக்
கோட்டையார்
அவர் தம்பியின் வடபதியோ ஸ்ரீ செல்வச் சந்நிதியாம்!

அன்னை தந்தை கோயில் கொண்டார் அருகருகே! இதுபோல்
தான் தோன்றிய கோவில்கள் காண்பதும் அரிதரிதே!
நறுவிலடிப் பிள்ளையாரோ சிறுவயதில் எனைப்பார்த்தான்
கந்தவனத்து அறுமுகனோ சந்நிதியில் வேலானான்!

அன்னையின் சாம்ராஜ்யம் அழகாக நடக்கிறதே
கால பைரவரைத் திக்கெட்டும் காண்கின்றேன்
சித்திரையில் மாரியாத்தா நீராடி வரும் கோலம்
கண்டுவிட்டால் போதுமினிக் காண்பதற்கேதுமுண்டோ

கடலோரம் மாமதுரை நகராண்ட தாயிருந்து
கண்ணாட்சி புரிகின்றாள் மதுரைவீரன் முன்னிற்க
எல்லையில் அறுமுகனும் அரியதோர் வேலும் நிற்க
வல்வைதான் தில்லையே வேறு சொல்லே இல்லையே!

வயலூர் முருகனையே வாழ்த்தி வணங்கிய வாரியாரும்
பக்திக்கோர் வல்வையென்று பலமுறை கூறியுள்ளார்
இத்துணை சிறப்பையும் என்னுள்ளே இரை மீட்டேன்
நான் பிறந்த மண்ணுக்கிணை நானிலத்தில் இல்லையே!

அப்பனின் ஆனந்தத் தாண்டவ அழகு காண
ஆனியும் மார்கழியும் அடிக்கடி தான் வாராதோ
கோயில் திருப்பணியால் ஓர் நகரம் வாழும் எனில்
அது எனைப் பெற்ற வல்வையே! நீ வாழி என் தாயே!

*********



**வல்வை ஸ்ரீ முத்துமாரி போற்றி அகவல்**

காப்பு

ஆனைக் கணபதியே ஆதி வல்வையம்பதி வாழ்
ஞானக் கனிவுடைய நாயகனே! மோனக்கண் தந்துந்தன்
தாயாம் முத்துமாரி ஓடத்தில் வந்திறங்கி ஓரிடத்தில் மறைய
தான் தோன்றிய கோவிலுக்கு வந்த போற்றி அகவலை ஏற்க!

நின்னையும் தம்பி முருகனையும் உடன் வைத்து வலம் வரும்
தாயே போற்றி!
எண்ணிறைந்த கோவில்களை உனக்கமைத்த
வல்வையம்பதியே போற்றி!
நெடிய காட்டில் நீ அமர்ந்து நெஞ்சகத்து உள்ளிருக்கும்
நெடிய காட்டினை
நெகிழ வைத்து வழி காட்டும் வள்ளலே போற்றி!
கப்பலுடைப் பிள்ளையாகி கடலை நம்பி
வாழ்வோர்க்கெல்லாம் கரைசேர
வழிகாட்டும் காருண்ய மூர்த்தி போற்றி!

நறுவிலடிப் பிள்ளையாகி நலமெலாம் எமக்கருளி
சந்திக்கருகினிலே
நம்பிக்கை கொண்டோர்க்கு சித்தியை சந்திக்க வைக்கும்
சதாசிவன் மைந்தா போற்றி!
வேவில் பிள்ளையாகி சாவிலும் துணைநிற்கும் சக்தி உமை
மைந்தா போற்றி!
வைகுண்டப் பிள்ளையாகி சைவமும் வைஷ்ணவமும்
ஒன்றென்று
கூறாமல் கூறி சங்கர நாரண சொரூபமாய் ஓம் என்ற
ப்ரணவத்தின்
உருவமாய் அரூபமாய் வந்தவனே போற்றி!
ஓங்கார நாதத்தின் உட்பொருளே போற்றி போற்றி!
ஆங்கார அழிவிற்கோ ஆனைமுகம் கொண்டவா போற்றி!
வேழமுகங் கொண்டு வேலவனை வள்ளியோடு
இணைத்தவா போற்றி!
அன்னையவள் சிருஷ்டி நாடகத்தில் அசுர அழிவுக்காய்
ஆனைமுகம் கொண்டவா போற்றி!
பானை வயிறு பெற்று உலகங்களை உள் அடக்கி
அத்தனையையும் காக்க வந்த அருளே போற்றி போற்றி!
தாயாரின் கோவிலிலே கூட நின்று அருள் கூட்டி
வேண்டுவோர் விக்கினங்கள் போக்கும் விநாயகா
போற்றி போற்றி!
வல்வையம்பதி வாழும் முத்துமாரித்தாயே போற்றி!
எல்லையில்லா ஆனந்தம் எமக்கருளும் தேவி போற்றி!
வல்லமையெலாம் தந்து வாழ்வளிக்க வந்த வடிவாம்பிகையே
போற்றி!
தொல்லைகள் எமைத் தொடரா துஷ்ட நிக்கிரகி போற்றி!
தில்லையம்பலத்தரசனை தினம் தரிசிக்கவோ அருகமர்ந்தாய்
போற்றி!
வலமிருக்கும் வைத்தீஸ்வரன் கோவில் தான் தோன்ற நீ
ஓடத்தில் வந்திறங்கி மறைய உனது கோவிலும் தான்
தோன்ற ஊர் வாழ இருவருமே அருள் சுரக்க ஆடிய
நாடகத்தின் நாயகியே போற்றி!

சமயபுரத்தாளே போற்றி! சஞ்சலம் தீர்ப்பாய் போற்றி!
சமயம் பாராமல் அருள சமயபுர மாரியாய் வந்தவளே போற்றி!
முத்துமாரித்தாயாகி முத்தெல்லாம் விளையவைத்து சொத்தெல்லாம் எமதாக்கி சுகமளிக்க வந்தவளே போற்றி!
புவனம் முழுதாளும் புவனேஸ்வரித் தாயே போற்றி!
மகமாயியாய் எம் மனமாயை தீர்க்க வந்தவளே போற்றி!
முப்பெரும் சக்தியாகி சர்வம் சக்திமயமாக்கி சகலதையும் ஆளவந்த சர்வேஸ்வரியே போற்றி!
கிராம தேவதைபோல எம்முடனேயே இருப்பதற்கு கிழவிபோல் வேடம் பூண்டு ஓடம் தனில் வந்தவளே போற்றி!
சத்தியத்தின் சாயலாய் தூய்மைக்கு வெண்மையாய் வெள்ளை உடையுடுத்து வந்தவளே போற்றி போற்றி!
வெண் தாமரை அமர்ந்த வேதவல்லி போற்றி!
தனம் தரும் தாயே போற்றி! சிம்ஹ வாகினியே போற்றி!
தில்லைக்காளி போல் காட்சியும் தருவாய் போற்றி!
வல்வைக்கு வந்தெமக்கு வரமருளும் தேவி போற்றி!
ஆறுபொறியாகி வந்த ஆறுமுகனை அருகில் வைத்தாய் போற்றி!
கலியுகத் தெய்வமாக்கி கருணையும் பொழிய வைத்தாய் போற்றி!
சந்நிதியைக் காட்டி என்னைஆட்கொள்ள வைத்தாய் போற்றி!
அருட்குருவாய் அறுமுகனை ஆக்கி வைத்தாய் போற்றி!
அன்னமலை அரசே போற்றி! ஆற்றங்கரை வேலா போற்றி!
ஈழத்திலும் ஆறுமுகனை ஆறுபடை வீடு தன்னில் ஆடவைத்தாய் போற்றி!

கதிர்காம ஷேத்திரத்தில் மீண்டும் கதிர் ஒளியாக்கி கலக்க வைத்தாய் போற்றி!
நல்லூரில் யோகருக்கு நல்லவழி காட்ட வைத்தாய் போற்றி!

ஐந்தெழுத்து மந்திரமும் ஐங்கரனும் ஆறாகி ஆறுமுகமாகி
அருகிருத்தி அரசாளும் ஆதி பராசக்தியே போற்றி!
ஐந்தெழுத்தால் சிவலிங்கபூசை நிதம் செய்யும் நிரந்தரி போற்றி!
நமசிவாய போற்றி! நாதன் தாள் போற்றி!
சிவாயநம என்றிருப்பவர்க்கு அபாயமில்லை என அறிவித்தாய் போற்றி!
சிவலிங்க பூசைசெய்து காமாட்சியாகி வல்வையில் கைலாசக் காட்சிதனை கண்ணாரக் காண வைத்தாய் போற்றி!
தில்லைக்கிணையாய் ஓர் தேசம் தந்தாய் போற்றி!
அகிலாண்ட நாயகியே ஆதி பரமேஸ்வரியே போற்றி!
தொலைவிலிருக்கும் மக்களுக்கும் தொடரும் நின் கருணை போற்றி!
ஊரைவிட்டு வந்தாலும் உன்னை என்றும் மறவாமல் நெஞ்சகத்தில் நிறைந்திருந்து ஊனில் கலந்தவளே போற்றி!
தாயிற் சிறந்ததோர் கோவிலில்லை என்றார் தந்தை சொல் மந்திரத்தால் பூஜிக்கும் தெய்வமே எம் தாயே நின் மலரடி போற்றி!
அம்மா என்றழைக்க ஆறுதலைப் பெறுவதினால் தாயே என்றும் உந்தன் தாள் பணிந்தோம் போற்றி!
சேயாகி நிற்கின்றேன் சேருமிடம் அறிவிப்பாய் போற்றி!
தஞ்சமென்றோம் தாயாகி வந்தருள்வாய் போற்றி!
திக்கெட்டும் காலபைரவரை காவலாக வைத்தாய் போற்றி!
தில்லைக்கூத்தனுக்கு தினம் பூசை செய்பவளே போற்றி!
மாயி மகமாயி போற்றி! மணி மந்த்ர சேகரியே போற்றி!
ஆயிவுமை ஆனவளே ஆதிசிவன் தேவியே போற்றி!
மாயன் சகோதரியே மாரிமுத்தே போற்றி!
ஆயன் சகோதரியே ஆஸ்தான மாரிமுத்தே போற்றி!
தாயே துரந்தரியே சங்கரியே போற்றி! போற்றி!
திக்கெல்லாம் போற்றும் எக்கால தேவியரே போற்றி!
கன்னபுரத்தாளே காரண சவுந்தரியே போற்றி!
நாரணன் தங்கையம்மா நல்ல முத்துமாரி போற்றி!

கன்னனூர் மேடையிலே பிறந்த உன் கரகம் போற்றி!
விஜயநகர் பட்டணத்தில் பிறந்த உன் வேம்பு போற்றி!
துலங்கு மணி மண்டபத்தில் பிறந்த உன் சூலம் போற்றி!
அயோத்தி நகர் பட்டணத்தில் பிறந்த உன் அலகு போற்றி!
பிச்சாண்டி சந்நிதியில் பிறந்த உன் பிரம்பு போற்றி!
உத்திராட பூமியிலே பிறந்த உன் உடுக்கை போற்றி!
பளிங்குமா மண்டபத்தில் உதித்த உன் பம்பை போற்றி!
கஞ்சகிரி இந்திரபுரம் பிறந்த உன் கருத்து போற்றி!
சமயபுரத்தவளே சாம்பிராணி வாசகியே போற்றி!
திக்கெல்லாம் ஆண்டவளே திகம்பரியே போற்றி!
முக்கோணச் சக்கரத்தின் முதல்வியே போற்றி!
அடங்காத மனிதரையும் ஆட்டிவைக்கும் மாரி போற்றி!
துஷ்டர்கள் தெண்டனிட்டு துடுக்கடங்க வைத்தாய் போற்றி!
வேம்பு ரதமேறும் வித்தகியே போற்றி!
பச்சிலை ரதமேறும் பார்வதியே போற்றி!
போட்ட முத்தை இறக்கும் பூலோக மாரிமுத்தே போற்றி!
ஊட்டத்தைத்தான் கொடுக்கும் உத்தமியே போற்றி!
மூலக் கனலின் முதன்மையான சக்தி போற்றி!
நாற்கோணத் துள்ளிருக்கும் நல்ல முத்தே போற்றி!
பஞ்சாட் சரப் பொருளே பார்வதியே போற்றி!
அறுகோணத் துள்ளிருக்கும் ஆதி பரமேஸ்வரி போற்றி!
அஷ்டாக்ஷரப் பொருளே ஆனந்த மாரிமுத்தே போற்றி!
பேருலக ரக்ஷகியே பெருமாள் உடன் பிறப்பே போற்றி!
திரிகோணத் துள்ளிருக்கும் திரிபுர சவுந்தரியே போற்றி!
ஆறாதாரப் பொருளே அபிஷேகப் பத்தினியே போற்றி!
மூலாதாரப் பொருளே முன்பிறந்த தேவதையே போற்றி!
தாயே துரந்தரியே சர்வ லோகேஸ்வரி போற்றி!
அடியவர் செய் பிழைகள் பொறுப்பவளே போற்றி!
அடியார் தமைக்காக்கும் மந்த்ர நிரந்தரியே போற்றி!
தொழுத கரம் காக்கும் எங்கள் தூமணியே போற்றி!
ஆதி சங்கரரின் சக்தி பீடங்களிலெல்லாம் வியாபித்தருள
வந்தமர்ந்த லோகமாதா போற்றி!
சௌபாக்யம் தந்தருளும் சௌந்தர லஹரித்தாயே போற்றி!

இருளகற்றி ஒளியூட்டும் திருவிளக்கே போற்றி!
மருளகற்றி மனமாயை அகல்விக்கும் மகமாயி போற்றி!
சுடராகி இடர் தீர்க்கும் சூரியக் கதிரோய் போற்றி!
அண்ட சராசரம் அனைத்துக்கும் அரசியே போற்றி!
எம்மனக் கோவிலிலே வீற்றிருந்து வினை தீர்க்கும்
அறிவுக்கனலே அருட்புனலே போற்றி!
அம்மா என்ற சொல்லுக்குள்ளே அனைத்தையுமே அடக்கி
அன்பினால் ஆட்சி செய்யும் அன்புருவே போற்றி!
ஆதி பராசக்தி போற்றி! அகிலாண்டேஸ்வரி போற்றி!
ஊர் கோலம் தான் வந்து உன் மக்கள் இல்லமெல்லாம்
உறைவதற்காய் ஊறணிக்கு நீராட வருபவளே போற்றி!
தேர்க்கோலக் காட்சி கண்டால் தீராவினை தீருமென்றோ
சித்திரத் தேரேறி வீதிவலம் வருவாய் போற்றி!
இந்திர விழாக்கோலம் வல்வையில் காட்டியுமே இந்திர
லோகத்தையே இங்கு வர வைத்தாய் போற்றி!
இகபர சுகமெல்லாம் இனி எமக்கு அருள்வாய் போற்றி!
சரண் அடைந்தோம் தாள் பணிந்தோம் பிறவாப்
பெருவாழ்வைத் தந்தருளும் தாயே போற்றி!
லலிதா நவரத்னமாலை தனை நயமாகப் பாமலராய் சூடியே
வணங்க வந்தோம் ஏற்றருளும் ஞானாம்பிகையே
போற்றி!
ஏழேழு ஜென்மங்களிலும் எமைச் சூழ்ந்த வினையெல்லாம்
உனைப் போற்றப் பறந்திடுமே வல்வையம்பதிவாழ்
வளர் கோகிலமே போற்றி போற்றி!

*********

**மாரி புகழ்**

ஓசைக்குள் ஒலியுமானவள்
மாயைக்குள் மருவி நிற்பவள்
ஆசைக்குள் உருவமானவள் சமயபுரத்தாள்

சமயபுரம் இருந்தாலும்
கோடிக்கரை குடிபுகுந்து
தேடி வந்து தெரிசனம் தந்த முத்துமாரியே

கோடிக்கரை குடிபெயர்ந்து
ஓடத்திலே தேடி வந்து
நாடி வல்வை குடிபுகுந்த மாரியவளே

நேர்த்தியாக நெற்றியின் நடுவே
பார்த்து வதியும் பார்வதியாக
நெஞ்சகத்தில் நிறைந்தவள்தான் வல்வைமாரியே

தில்லையம்பதிக் கிணையாய்
வல்வையம்பதி வாழ
வந்த வடிவாம்பிகையே முத்துமாரி

வலமிருந்து வரமருள
சுயம்புவாக லிங்கேஸ்வரரும்
நின்றதினால் சிவபுரமாகும் வல்வையம்பதியே

அன்னையும் அப்பனுமே
அருகிருந்து அருள வந்தால்
வல்வையே வானுலகாக மாறிவிடாதோ

பூவுலகில் வானுலகொன்று
பூசிக்க தேவர்கள் வந்தால்
இந்திர விழா இங்கு நடக்க ஏது தடை

சித்திரையில் ஊறணியில்
அன்னை தீர்த்தம் ஆடிய பின்
ஆறியமர்ந்த இடம் தான்      நெடியகாடே

நெடியகாட்டில் நெடுநேரமாய்
மூத்தவனைப் பார்த்த பின்னே
சிந்தனையில் சிறகடிப்பான்      சேவற்கொடியான்

சேவற் கொடி பறந்தடிக்க
வேலும் மயிலும் துணை நிற்க
நிற்பவன் தான் செல்வச் சந்நிதி   வேலழகன்

அன்னைக்கு காவலனாய்
அழக்கடவை சடையாண்டி
நெற்கொழுவில் நிற்பவன் தான்   வைரவனே

அவனை வணங்கி அன்னை அருளை
அடி பணிந்து கேட்பவர்க்கு
அள்ளி அள்ளித் தருபவள்தான்    வல்வைமாரி

வாரி அதை நீ பற்ற
மாரி என்றும் உன்னுடனே
பாரி வள்ளல் போலே உலகில்   வாழ்ந்திடலாம்

*********

**வாழ்வு ஆனவா வல்வை** நகர் வளம் காணவே
தான் தோன்றியே வைத்தீஸ்வரன் ஆனவா
லிங்கோற்பவம் கண்ட பசு பால் சொரியவே
ஊர் மக்கள் உனைக்கண்டு தொழுது நின்றார்!

அந்த இடத்திலே கோவில் கட்டியே
வல்வை மக்கள் உந்தனை வாழ்த்தி வணங்கினரே

காசிக்குச் சென்றுமே கங்கை ஜலம் கொண்டுமே
அபிஷேகித்து உந்தனைப் போற்றி வணங்கினரே

வைத்தீஸ்வரன் என்று திருநாமம் தனைச் சூட்டி
உனை வாழ்த்தி வணங்கும் வல்வை மக்களை நீ
ரோக நிவாரணியாய் காக்கும் உன் கருணைவெள்ளம்
கடல் மடையாய்த் திறக்க அருகில் மாரி வந்தாளே!

வடக்கு வாசலருகே கோடிக்கரை பெயர்ந்தவள்
உன் ஆட்சி கண்டு அங்கே நிற்க மனம் கொண்டு
மறைந்தாள் அங்கே மறைபொருள் ஆகினாள்
அந்த இடத்திலே தனக்கு கோவில் கட்டு என்றாளே!

தான் தோன்றிய இருவருமே தளரா மனம் கொண்டு
தாங்குகின்றார் வல்வையை ஏது குறை இனி
ஒரு வீதி பொதுவாய் அமையும் புதுமையை என்னென்பேன்
அம்மையப்பன் அருட்கருணைக்கு இங்கு எல்லை ஏது?

கிழக்கிலே நெடியகாட்டார் நின்று காவல் புரியவே
மேற்கிலே சந்நிதியான் மேவி அருள் சுரக்கவே
வல்வைதான் தில்லையே வேறு சொல்லே இல்லையே
எல்லையிலா ஆனந்த அமைதி இலங்கும் வல்வையம்பதியிலே

ஆகம விதிமுறைகள் அத்தனையும் அனுஷ்டிக்கும்
வல்வை வைத்தீஸ்வரர் கருணையைச் சொல்ல வார்த்தை
இல்லை
ஆனியிலும் மார்கழியிலும் அவன் ஆட்ட அழகு காண
தில்லை மூவாயிரரே வரும் சிறப்பை என்னென்பேன்!

## நெடியகாட்டுப் பிள்ளையார்

நெடியகாட்டையா நின் அருள் வேண்டினேன்
நெஞ்சகத்தே தோன்றும் நெடியகாட்டைக் கடக்க

உன்னை அடைவதற்கு கண் மூடி தியானித்தால்
நெடியகாடொன்று நெஞ்சத்தினுள் தெரியுதையா
நம்பிக்கை ஒன்றே தான் நல்லவழி காட்டுமென்றார்
தும்பிக்கை ஆண்டவனே துணை நிற்பாய் நெடியகாட்டில்

மாயாத மாயையை மாய்த்து வழி காட்டவும்
ஓயாத தொல்லைகள் ஓய்ந்த நிலை அடையவும்
சொப்பனம் தனைக் கலைத்து நித்திய நிலை பெறவும்
உன்னையே நம்பி வந்தேன் வல்வை வாழ் பிள்ளையாரே!

*********

**விக்னேஸ்வரா** எங்கள் வினைதீர்க்கவா
ஆதியே  ஜோதியே மூலப்பரம் பொருளே

கடைக்கண் பார்வையொன்றால் கர்ம வினை தீருமென்றார்
நீ சிரித்து விட்டாலோ செல்வவெல்லாம் சேருமென்றார்
விதியென்றார் மதியென்றார் வேதனைக்கோ முடிவில்லை
கதியாக நீ வந்து கருணை மழை பொழியாயோ

ஓம் என்ற மந்திரத்தின் உருவாக வந்தாயே
பிரணவத்தின் உட்பொருளே சரவணன் மூத்தோனே
முன் வணங்கும் தெய்வமய்யா மூத்தவனே கணேசா
விக்கினங்கள் தனைக்களைந்து சொப்பனத்தைக்கலைத்து
விடு

உச்சிமலைக்கோட்டையிலே உன் விளையாடல் கண்டோம்
கமண்டல நீரையே  காவேரியாய் ஓடவைத்தாய்
மாம்பழத்துப் போட்டியினால் சண்முகனைப் பழமாக்கும்
ஞானப்பழமே உன் கால் பிடித்தேன் காத்தருள்வாய்

கலியுகத் தெய்வமே கந்தனுக்கு மூத்தோனே
மூஷிக வாகனனே மூலப்பொருளோனே
சித்தி விநாயக ஜெயமருள் போற்றுகிறேன்
சிற்பர கணபதே நற்கதியும் தந்தருள்வாய்

*********

**ஓம் என்னும்** ப்ரணவத்தின் உட்பொருளே நாயகா
ஓங்கார தத்துவத்தின் வித்தகா விநாயகா
நம்பிக்கை கொண்டழைத்தால் ஓடிவரும் நாயகா
தும்பிக்கை கொண்டெம்மைத் தூக்கிவிடும் தூமணியே

முன்வணங்கும் தெய்வமே மூஷிக வாகனனே
முத்திக்கு வித்தான மூலப் பரம் பொருளே
பாரதம் தருவதற்கு ஓர் தந்தத்தைக் களைந்தவனே
கோடாயுதம் கொண்டு கொடுவினைகள் தீர்ப்பவனே

ஒரு பிடி சாணத்தில் ஓர் அறுகம் புல்லுவைத்து
இரு கரம் கூப்பி நின்றால் அங்கு நின் அருள் சுரக்கும்
தோப்புக்கரணமிட்டு துதித்து நின்றவர்க்கு
தப்பாமல் நின் அருளை குறையாது கொடுப்பவனே

உன்னை அறிந்ததினால் உன்னையே துதிக்கின்றேன்
என்னை உணர வைத்தால் என்னையே தருவேனே
என் தாயும் தந்தையுமே என் குருவும் நீ யல்லவோ
தத்துவ நிலை தரவே தாமதமேன் தெய்வமே

மனதாலே இசைத்தேன் நீ மாலையாய் அசைந்தாயே
மாலயன் காணா மூலப் பொருளின் மூத்தவனே
எப்போது எந்தனுக்கு குருவாய் நீ வருவாயோ
இப்போதே வந்தேன் நின் மலரடி தஞ்சமென்று

**நறுவிலடிப் பிள்ளையார்**

நறுவிலடியானே நலங்கள் கொடுப்போனே
நானோ உன் காலடியில் காலமெல்லாம் காத்திருப்பேன்

வல்வையம்பதியிலே வீதியெல்லாம் கோவில் கட்டி
உன்னையே முன் வைத்ததால் இடரெல்லாம் தீர்க்கின்றாயோ

அலை அலையாய் வரும் அத்தனை துன்பங்களும்
சிலைபோல நிற்கின்ற உன்னைத் துதிப்போர்க்கு
வலையிலே அகப்படா வண்ண மீன் போல
நழுவியே போய்விடுதே நாயகா நின் கருணையால்

சோமர் வளவிலே நான் வாழ்ந்த காலத்தில்
உன்னையே வணங்கிடவே ஓடோடி வருவேனே
அப்போது யான் செய்த அர்ச்சனைக்குப் பதிலாக
எல்லாமே தந்தாயே உன் கருணை என்னென்பேன்

எல்லாமே தந்தாலும் உன்னை நான் மறவேனையா
எப்படியோ இருந்த என்னை இப்படி நீ ஆக்கிவிட்டாய்
மூத்தவனே கணேசா! வரம் ஒன்று வேண்டுமையா
இறக்கும் தறுவாயில் உன் நினைவே தரவேண்டும்!

**கப்பலுடைப் பிள்ளையார்**

கப்பலுடைப் பிள்ளையாரே தெப்பமாக வந்திடையா
பிறவிக் கடலினிலே தவிக்கின்றேன் காத்திடையா

வல்வை நகரையே வளமாக்கி வைப்பவனே
பாலத்து அருகில் நின்று பார் காக்கும் பாலகனே

கடலில் தொழில் செய்வோருன் கருணையை வேண்டியதால்
கரையில் நின்றாயோ காலமெல்லாம் காத்து நிற்க

இக்கரையில் நின்று நீ அக்கறையும் கொண்டதினால்
அக்கரையில் சேர்ப்பாய் என்று ஓடோடி வந்தேனையா

முன் வணங்கும் தெய்வமையா மூத்தவனே கணேசா
மேலாக நின்றதினால் வினாயகர் என்றாரோ
ஓம் என்றபிரணவத்தின் உருவே உனதையா
ஓம் என்று ஒலிப்பதினால் யானைமுகம் கொண்டாயோ

பிரமாண்டம் அத்தனையும் உன்னுள்ளே இருப்பதினால்
தொப்பை வயிறொன்றை உன்னுடையதாக்கிவிட்டார்
உன் முன்னே இருக்கின்ற மோதகங்கள் உலகங்களாம்
அத்தனையும் உண்பதினால் நீயே முதல்வனாம்

இத்தனை பெரிய உருக் கொண்ட நீ எப்படியோ
மூஞ்சூறை வாகனமாய்க்கொண்டாயோ - இது தகுமோ
மூஞ்சூறு மேலே நீ ஏறிய போதினிலே
இலேசாகவும் இருப்பாய் என்பதுவோ தத்துவம்!

ஓங்காரத்தில் மூலாதாரம் குண்டலினி சக்தியாகி
குடுகுடு குறுகுறென்று மேலே எழும்புவதால்
மூஞ்சூறின் ஓசையும் அதுபோல் இருப்பதினால்
மூஞ்சூறை வாகனமாய்க் கொண்டாரோ உந்தனுக்கு

**வைகுண்டப் பிள்ளையார்**
வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்
நோக்குண்டாம் மேனி நுடங்காமல்
வல்வைவாழ் வைகுண்டப் பிள்ளையாரை
வணங்கி நின்றால் வினை பறந்தோடுமே!

சைவமும் வைஷ்ணவமும் ஒன்றென்பதை
இந்து மதத்தின் இரு கண்ணென்பதை
எடுத்து இயம்பத் திருவுள்ளம் கொண்டோ
நீ வைகுண்டப் பிள்ளையாராய் மாறினாயோ!

சிவலோக நாயகனின் சிரேஷ்ட மைந்தா
நீ வைகுண்டம் போன மர்மம் ஏதையா
மாயவனை வணங்கமுன் உன்னைத் துதித்தால்
மாயையெல்லாம் போக்கிடுவாய் என்று கொள்ளவோ!

பிள்ளையாரோ பிள்ளையாரோ வல்வைவாழ் பிள்ளையாரோ
வல்வினைகள் தீர்க்க வந்த வைகுண்டப் பிள்ளையாரே
எல்லையுண்டோ அன்பினுக்கு வைகுண்டப் பிள்ளையாரே
எம்மையாளும் பிள்ளையாரோ வைகுண்டப் பிள்ளையாரே!

**வேவில் பிள்ளையார்**

வேவில் பிள்ளையாரே கோவில் கொண்ட தேவா
வாழ்வில் வளம் தந்து சாவிலும் துணை நிற்பாய்!

விநாயகன் துணை நின்றால் வினைப்பயன் தீருமென்றார்
வினாக்களே விடை பகரும் கனாக்களும் கரைந்துவிடும்
அனாத ரக்ஷகனின் கடைக்கண் பார்வையினால்
அறம் பொருள் இன்பம் வீடு அத்தனையும் வந்து சேரும்!

இளமையிலே நாம் விளையாடும் பொம்மையன்றோ
காளைப் பருவத்தில் வேளையோ போதவில்லை
முதுமை வந்தடைந்தால் ஏக்கத்தால் சாகின்றோம்
உன்னை நினைப்பதற்கு எங்கெமக்கு நேரமையா

இப்படியான இப் பூவுலக வாழ்வினிலே
பருவங்கள் மாறிடவே கோலங்கள் மாறிடுமே
முதுமைப் பருவத்தில் உன் நினைவு முன்னிற்க
இப்போதே கேட்டு விட்டேன் எந்தனுக்கு வரம் தருவாய்!

**ஈழத்து ஈஸ்வரங்கள்**

முன்னேஸ்வரா! கோணேஸ்வரா! நகுலேஸ்வரா!
பக்த ஜனப்பிரிய கேதீஸ்வரா! . . .திருக்கேதீஸ்வரா
பாலாவி சஞ்சாரா . . .பரமேஸ்வரா
கௌரி அம்ப நேசா கேதீஸ்வரா . . .

**வைத்தீஸ்வரன்**

வல்வையம்பதி வாழ் வைத்தீஸ்வரனே
தொல்லையெலாம் தீர்க்கும் தென்னாடுடை சிவனே!

எல்லையில்லாப் பேரின்ப வீட்டை அளிப்பவனே
வல்லமை யெலாம் தந்து ஒளியூட்டி வழிகாட்டும்

மாதங்களில் சிறந்த மார்கழித் திங்களிலே
திருவாதிரை நாளில் வல்வையில் நடராசன்
திருநடனக் கோலம் செப்புதற்கு வார்த்தையுண்டோ
வேறெங்கும் காணா திவ்ய தரிசனம் வல்வையிலே

ஆறுகாலப் பூசை இங்கு அயராது நடப்பதாலும்
ஆகம விதிமுறைகள் அத்தனையும் அனுஷ்டிப்பதால்
சிவபுரம் என்று வல்வைக்கோர் சிறப்புப் பெயருண்டு
அம்மையும் அப்பனும் (இங்கே) அருகிருந்தருளுகின்றார்

பவசாகரக் கடலில் தத்தளித்துத் தவிக்கின்றோம்
மாயையின் பிடியினாலே பித்துப்பிடித் தலைகின்றோம்
சித்தம் தெளிய ஓர் வைத்தியம் செய்வாயோ
சிற்றம்பலத்தவனே வைத்தியநாதனே!

*********

**சித்தத்துள் சிவமுமா**கியே
சத்தத்துள் ஓங்காரமாய்
சச்சிதானந்தமான பெருமானே
அணுவுக்குள் அணுவுமாகியே
அண்டங்களில் இயக்கமாகியே
நின்ற எங்கள் நிர்மலனே லிங்கேஸ்வரா
எங்கும் நிறைந்தவனே
எல்லாம் அறிந்தவனே
எல்லாமாய் ஆனவனே ஆதிசிவமே
கல்லினுள் தேரைக்கும்
கருப்பை உயிருக்கும்
கனிந்து அருள் புரிபவனே சதாசிவமே
சுடலை ஆண்டி ஆனவனே
கடலில் வந்த விஷமும் உண்டாய்
கவலை எல்லாம் தீர்ப்பவனே கைலாசவாசா
இமயமலை இருப்பிடமோ
பார்த்து அங்கே வதியணுமோ
பார்வதியாள் நாயகனே பரமேசா
கங்கையைத் தலையில் கொண்டு
கங்காபிஷேகம் கொண்டு
கற்பூரமாயுருகும் கருணாகரனே
பார்க்க வந்த பாருலகில்
பாவி யான் சிக்கிவிட்டேன்
மீட்டெனக்கு பரமபதம் தந்தருள்வாயே
*********

**தில்லையம்பதி வாழ்** லிங்கேஸ்வரனே
உயர் திரு கனக சபைக்கோர் அரசே!

தில்லையம்பதியிலே நந்தனுக்கு அருள் செய்ய
எல்லைவரை ஓடி வந்து ஜோதியில் கலக்க வைத்த

வந்தவன் நந்தன் தில்லை நாதன்முகம் காணாமல்
நந்தி மறைத்ததென்றும் பின்னர் வழிவிட்டதென்றும்
பலப்பல கதை கூறி சிந்தையைக் கலக்குகின்றார்
சாதிக் கொடுமைதனை சாகாமல் வித்திட்டோர்

தனை நாடி வந்தவரை தானே வந்து வரவேற்றல்
மனிதனின் பண்பென்றால் இறைவனின் குணமென்ன?
நந்தனும் நாடி வந்தான் இறைவனும் தேடி வந்தான்
கோவிலின் வாசலில் அணைத்தான் . . .கலந்தான்!

*********

**சிவாய நமசிவ** லிங்காய நமஓம்
பவாய நமபவ லிங்காய நமஓம்
ருத்ராய நமருத்ர லிங்காய நமஓம்
சர்வாய நமசர்வ லிங்காய நமஓம்
ஆத்மாய நமஆத்ம லிங்காய நமஓம்
நமஓம் நமஓம் நமஓம் . . .
கணாய கஜமுக லிங்காய நமஓம்
குகாய குருபர லிங்காய நமஓம்
ஆத்மாய ஸ்ரீ சக்ர லிங்காய நமஓம்
ராமாய ஸ்ரீ கிருஷ்ண லிங்காய நமஓம்
ஞானாய ஸ்ரீ ஹரிதாசாய நமஓம்
வேலாய ஸ்ரீ முருகேசாய நமஓம்
நமஓம் நமஓம் நமஓம் . . .

*********

**வேலவன் பூஜிக்கும்** வேதப் பொருளோனே
ஆற்றங்கரை அமர்ந்த அண்ணாமலை அரசே!

மூலவர் ஸ்தானத்தில் லிங்கோற்பவமோ
நலம் தர அருகமர்ந்த நமச்சிவாயமே!

தூது செல்லும் வழியினிலோர் சந்திகாலப் பூசையோ
வீரபாகு தேவருக்கோர் வல்லியாற்றம் கரைஓரமோ
தென்பதி ஏகமுன்னே தேவருக்கோர் அபயகரம்
தொண்டைமான் ஆற்றருகே தொழுவழி தோன்றிடுமோ

தூது நீங்கி வாது செல்லும் வழியிலும் இத்தலத்தில்
வேலவனை தேவர்கள் வேண்டி நின்ற வேளையிலும்
அசுரரின் அறிவுதனை அவன் அறிவிக்கு முன்னே
அப்பனை வேலன் இங்கே பூஜித்து நின்றானே!

நான் வணங்கும் ஸ்தலத்திலே என்னை வந்தடைவோர்க்கு
நான் என்ற அகங்காரம் தானாக அழியுமென்றாய்
மான் வள்ளி வாசலருகே திருமாலுடன் இணைந்து
சிவநாக தம்பிரானாய் திருக்கோலம் தனைக்காட்டும் . . .

*********

**சிவ சிவ சிவ சம்போ** ஹர ஓம் ஹர ஹர ஹர சம்போ
சிவ சிவ ஹர ஹர ஹர ஹர சிவ சிவ சம்போ சங்கரா

தென்னாடுடை சிவனே நீஎந் நாட்டவர் இறைவா
தென்றலாய் வந்து தெரிசனம் தந்து பேரின்ப வீடருள்வாய்!

இமயமலை தன்னில் இறைவா இன்பமயம் ஆனவனே
சமயமறிந்து தடுத்தாட்கொள்ள வந்தவனே இறைவா!

சிவாயநம என்று தினம் உனை சிந்தையில் கொண்டார்க்கு
அபாயமேதும் அணுகாதிருக்க அனுக்கிரகம் செய்பவனே!

அண்ணாமலையருகே தீப ஜோதியாய் காட்சி தந்து
காளகாஸ்தியிலே இறைவா காற்றினில் கலந்தாயே

தில்லையம்பதியினிலே நீ சிதம்பர ரகசியமானாய்
தொல்லையெலாம் தீர்க்க வல்வையில் வைத்தீஸ்வரன் ஆனாய்!

திருவானைக்காவினிலே நீஜலக்கிரீடை செய்து
காஞ்சித் தலத்தினிலே நீ மண்ணாய் மிளிர்ந்தாயே!

பாலாவிக் கரையினிலே பாபம் தீர்க்கும் கேதீஸ்வரத்தானே
முன்னேஸ்வரத்தினிலே சிவனே முன் நின்று அருளுகின்றாய்!

நகுலேஸ்வரத்தினிலே நடராஜ நர்த்தனம் ஆடிவிட்டு
கோணமாமலைதானே சிவனே தென் கயிலாயம் என்றாய்!

அடியவர் மனங்களிலே நித்தம் ஆனந்த தாண்டவனே
சிவராத்திரி நந்நாளில் எங்கள் சிந்தையில் நிறைந்தவனே!

மங்கள ஆராத்தியில் நீ மகிழ்வுடன் அருள் தரவே
தங்கிட வந்திடுவாய் சிவனே மங்களம் தந்தருள்வாய்!

சிவ சிவ சிவ சம்போ ஹர ஓம் ஹர ஹர ஹர சம்போ
சிவ சிவ ஹர ஹர ஹர ஹர சிவ சிவ சம்போ சங்கரா
*********

**சர்வம் சிவமயமே** சர்வம் சிவமயமே சர்வம் சிவமயமே

சச்சிதானந்தமாய், சிந்தையில் நிறைந்த, சர்வேஸ்வர சிவனே
கச்சி ஏகம்ப கருணாகரனே கனக சபைக் கரசே
சிற்பர வியூக பொற்பதம் காட்டும் பொன்னம்பலவாணா
அற்புதமே அமுதானவனே எங்கள் அண்ணாமலையரசே!
(சர்வம் சிவமயமே)

ஆதியந்தமில்லா ஆண்டவனே எங்கள் ஆதி அருணாசலா
ஜோதியே ஜோதிப் பிழம்பானவனே ஐம்பு லிங்கேஸ்வரா

நாதியில்லாதவர் நயந்து உறவாடும் நாகலிங்கேஸ்வரா
பாதியில் சக்திக்கு இடமளித்தவா இமயமலைவாசா
(சர்வம் சிவமயம்)

சிற்றம்பலத்திலே பொன்னம்பலம் காட்டும் சின்மய
சிவபெருமானே
காளகஸ்தியில் காற்றோடு உறவாடி காட்சியும் தருபவனே
காஞ்சி புரத்திலே அன்னை மகிழ்ந்திட மண்ணைப்
பொன்னாக்கினாயே
மதுரையில் அமுதைப் பொழிந்திடும் சோமசுந்தரேசா
(சர்வம் சிவமயம்)

இசையால் மகிழ்ந்து இராவணனை நீ ஈஸ்வரன் ஆக்கினாயே
இசைந்து அசைந்த தென் கயிலாயமாம் கோணமாமலையானே
சிவபுரமான இலங்கையிலே ஆயிரம் கோயில் கொண்டவனே
தவத்தால் மகிழ்ந்து கேட்டவரம் கொடுக்கும் தென்னாடுடை
சிவனே
(சர்வம் சிவமயம்)

லண்டன் மாநகரெங்கும் சிவத்தாண்டவம் சிந்தையல்
நிறைந்திடுமே
எங்கும் நிறைந்து எல்லாம் அறிந்து எல்லாமாய் ஆனவனே
பொங்கும் செந்தமிழால் போற்றிப் புகழ்ந்திட ஓடோடி
வருவோனே
எங்கும் மங்களம் தங்கிட அருள்வாய் என்னாட்டவர்
இறைவா
(சர்வம் சிவமயம்)

**சர்வம் சிவமயமே அது சக்திமயம்**
சர்வம் சுபமயமே அது குகமயமே

பிள்ளையைத் தோற்றி காவலாய் வைத்தாள் அன்னையே
அவனை கஜமுகனாக்கி கணபதி ஆக்கினான் தந்தையே

அன்னை தந்தையை வலம் வந்து பழம் பெற்றானே-இவன்
ஞானப் பழமாகிப் பழனியில் நின்றெமைக் காத்தானே

ஓங்காரமாகி முன் வணக்கத்தைப் பெற்றானே-அவன்
ஓங்காரத்தையே அப்பனுக்கே உபதேசம்
ஆங்காரத்தை அழிக்க இருவருமே அவதாரம்
இருவரை வணங்கி சிவ சக்தியை நீ உணர்வாயே

சிவமும் சக்தியும் காலகாலமாய் இணைந்திருக்கும்-அதுபோல்
குகனும் சக்தியும் எந்நாளுமே பிரிவதில்லை
மூன்றும் இணைவது சோமாஸ்கந்த மூர்த்தமோ
இதை உணர்ந்தால் வாழ்வில் சோகங்கள் இனி ஏது

காமத்தை அடக்க நின்றவள் காமாட்சி காஞ்சியிலே
கண்பார்வை ஒன்றாலே சகலதும் கொடுப்பாய் மீனாட்சியே
நவயுக சக்தியாய் காக்க வந்தாய் முத்துமாரியே
அதன் பாதியாய் என்றும் பார்ப்பவன் தான் ஆதி சிவமே

மனத்தையும் சிவத்தையும் இணைக்க வந்தது மனித இனம்
அவன் மனத்தை அறுத்தால் மீண்டும் சிவமயம் ஆவானே
மாயையைக் காட்டி மனத்தை ஆள்பவள் சக்தியே
அந்த மனத்தையே சவமாய் ஆக்கிடுமே அந்த சிவமயமே

குகனுக்கு வேலைக் கொடுத்தாள் அன்னை, சிக்கலிலே
அதை மக்கள் வாழ வேலன் வைத்த இடம், செல்வச்
சந்நிதியே
சக்தி தந்த தன் அன்னைக்கு சூட்டினான் புகழாரம்
அந்த லலிதா நவரத்ன மாலையை ஏற்றாள், அன்னையே

*********

**இமயமலை உச்சியிலே இன்பமயமானவனே!**
சமயமறிந்தெம்மை சிவமாக்க வந்த சர்வேஸ்வரனே!
ஆதி சிவமாகி அருள வந்த பரம்பொருளே
ஏதினிப் பயம் எமக்கு உன்னைத் துதிப்போர்க்கு
அபிஷேகித்து ஆராதிக்க வரும் எம்மை
ரக்ஷித் தருள்வாயே சிவலோக நாயகனே.

முன்னேஸ்வர முதல்வனுக்கு முதலாம் ஜாமம் பூசை கண்டு
கேதீஸ்வரக் கோமானுக்கு இரண்டாம் ஜாமத்தில் அபிஷேகம்
கோணேஸ்வர நாதனுக்கே மூன்றாம் ஜாமத்தில் தீபாஞ்சலி
நகுலேஸ்வரத்தானுக்கு நாலாம் ஜாமத்தில் நாமாவளி எல்லாம் பாடிப்பாடி
வைத்தீஸ்வர நாதன் வைகறைப் பூசை கண்டால்
தம் வாழ்வு சிவபதமாகுமென்ற எண்ணமோ உன் அடியருக்கு

காளகாஸ்தி அமர்ந்தவனே அடியர் கவலையெலாம் காற்றாக...
அண்ணாமலைத் தீபம் காட்டி அஞ்ஞான இருளைப் போக்கி...
பொன்னம்பலக் காட்சியெல்லாம் சிதம்பரத்தில் சித்திக்க வைத்து...
ஆனைக்காவில் அருளையெல்லாம் ஜலக்கிரீடை ஆடவைத்து
காமாட்சி உனை வணங்க மண்ணையே சிவமாக்கி
காசியிலே நேசமுடன் எம்மை கட்டி அணைக்க வந்தவனே!

**லிங்காபிஷேகம்** காண புண்ணியம் செய்தோம்-சிவனின்
லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
ஹரஹர சம்போ சிவ சிவ சம்போ
ஹரஹர சம்போ சிவ சிவ சம்போ

திவ்யமான தீர்த்தமெல்லாம், தினமும் தேடும் அடியவர்க்கு
கிட்டவேண்டும் என்றோ கங்கையை ஜடாமுடியில் கொண்டபின்னே

பாலித்தருள வேண்டுமென்றோ பாலாவிக்கரையானாய்
பாலாவிக்கரையினிலே பக்தரெல்லாம் கூடுகின்றார்

லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனின்
லிங்காபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

மங்களங்கள் தருபவனே சர்வ மாங்கல்யேயின் சரிபாதியே
மஞ்சலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
மஞ்சலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தஞ்சைக் கோவில் வாழ்பவனே தணித்திடுவாய் வினை வேட்கை
தண்ணீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தண்ணீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பாலாவிக்கரையினிலே பக்தரெல்லாம் கூடுகின்றார்
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பாலாகும் மனத்தில் நெய்யூட்டி மெய்காட்டி மிளிர்பவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பாபிகளைக் காக்கவென்றோ பாலில் குளிக்க வந்தவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பாலாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தனித்து நின்ற இனியவனே தக்கனின் மருகோனே
தயிரால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தயிரால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

நெக்குருகும் அடியவரின் நெஞ்சமதில் நிறைந்தவனே
நெய்யாலபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
நெய்யாலபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)
தித்திக்கும் செந்தமிழாய் தென்னகத்தில் மிளிர்பவனே
தேனால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தேனால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தஞ்சமென்ற அடியவரின் நெஞ்சமதோ நின் கோவில்
பஞ்சாமிர்தபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பஞ்சாமிர்தபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

இலகுதப்பா கல்மனசு இனியவனே உனைக்காண
இளநீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
இளநீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

கைலயங்கிரியினிலே கனக ஊஞ்சல் ஆட்டிடுவாய்
கரும்பால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
கரும்பால் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

விபூதியிடும் அடியவரின் வினைகளெல்லாம் தீர்ப்பவனே
விபூதி அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
விபூதி அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

சந்திரனும் சூரியனும் தந்த நிறம் சந்தணமோ
சந்தணாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
சந்தணாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

அன்னையின் குங்குமத்தால் மாங்கல்யம் தழைப்பதினால்
குங்குமாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
குங்குமாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

தீபச்சுடராய் தெரிசனம் தந்து, தீர்க்கமான முடிவைத் தந்து
திருவண்ணாமலை மேலே கார்த்திகைத் தீபமான
தீபாராதனை காண புண்ணியம் செய்தோம்-சிவனே
தீபாராதனை காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

பஞ்சபூத அதிபதியே பத நிலையைத் தருவாயே
பன்னீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
பன்னீர் அபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)
வாசனைத் திரவியத்தில் வந்து மனம் லயிப்பவனே
வாசனாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்-சிவனே
வாசனாபிஷேகம் காண புண்ணியம் செய்தோம்
(ஹரஹர ... சம்போ)

**முத்துமாரி சுப்ரபாதம்**

வல்வை நகர் வந்த முத்து மாரி
தொல்லை எல்லம் தீர்க்கும் தீனதயாபரி
வல்லமை எனக்கருளி வாழ்த்திடம்மா
வையகம் வாழும் நின் புகழை யான் பாட!

வேழமுகன் வாணி கூட நிற்க,
வேதவிசாரங்களை வேலவன் தர
வேண்டி நின் அருள் நாடி வந்தேனம்மா
தாண்ட வழி காட்டும் தயாபரியே!

வானம் சிவக்குதம்மா முத்துமாரி
கானம் பிறக்குதம்மா மகமாயி
தானம் என உந்தன் அருள் நாட
மோனம் தரும் சிம்ஹ வாகினியே

அரிதுயில் கொண்டது போதுமம்மா
அணைத்தருள உந்தன் தயை வேண்டும்
அனைத்தையும் காப்பவளே ஆதிசக்தியே-உன்
ஆடல் முகம் காண ஓடிவந்தோம்!

உடுக்கை ஒலி என்னுள் ஒலிக்குதம்மா
ஓங்கார மணி ஓசை கேட்குதம்மா
நந்தியும் நாரதாதி முனிவரெல்லாம்
நாத ஒலி முழங்க நாடி நின்றார்

கோடிக்கரை பெயர்ந்து வந்தவளே
வல்வை நகர் நலம்பெறவே நின்றவளே
கிழவி போல் வேடம் போட்டு ஓடத்திலே
வந்திங்கிறங்கிக் கோயில் கொண்டவளே!

வந்திங்கிறங்கி மறைந்த இடத்தருகில்
சுயம்பாகி சிவனாரும் தோன்றிடவே
சிவபுரமாகி வல்வை தில்லையாக
தில்லைக்காளியான சமயபுர மாரியே!!

கன்னபுரத்தவளே காரண சவுந்தரியே
நாரணன் தங்கையம்மா நல்ல முத்துமாரியே
கன்னனூர் மேடையிலே பிறந்ததுன் கரகம்
விஜயநகர் பட்டணத்தில் பிறந்ததுன் வேம்பு

துலங்கு மணிமண்டபத்தில் பிறந்த உன் சூலம்
அயோத்தி நகர் பட்டணத்தில் பிறந்த உன் அலகு
பிச்சாண்டி சன்னிதியில் பிறந்த உன் பிரம்பு
உத்திராட பூமியிலே பிறந்த உன் உடுக்கை

பளிங்குமா மண்டபத்தில் உதித்த உன் பம்பை
கஞ்சகிரி இந்திரபுரம் பிறந்த உன் கருத்தம்மா
சமயபுரத்தவளே சாம்பிராணி வாசகியே
வல்லை நகர் வந்தெம்மை வாழ்வித்து நின்றவளே

வேம்பு ரதமேறும் வித்தகியே போற்றி
பச்சிலை ரதமேறும் பார்வதியே போற்றி
சித்திரை மாதத்திலே சித்திரத்தேரேறி
சித்த சுத்தி தந்தருளும் முத்துமாரி போற்றி

போட்ட முத்திறக்கும் பூலோக மாரிமுத்தே
ஊட்டத்தைத்தான் கொடுக்கும் உத்தமியே
வாட்டத்தைப் போக்கும் வல்லை முத்துமாரி
நாட்டத்தை உன்மேல் வைத்தால் நானிலமும் வாழும்

ஆயன் சகோதரியே ஆஸ்தான மாரிமுத்தே
திக்கெல்லாம் ஆள்பவளே திகம்பரியே போற்றி
முக்கோணச் சக்கரத்தின் முதல்வியே போற்றி
மூலக்கனலின் முதன்மையான சக்தி போற்றி

வாசலிதோ வாசலிதோ என்றுபாட
உடுக்கையோடு நாம் ஓடி வர
வாசலிலே உந்தன் வாசம் புரியும்
ஆனந்த அமைதியெல்லாம் தெரியும்!

## ஸ்ரீ முத்துமாரி

**எங்கிருந்தாலும் என்னை** மறப்பதில்லை - அன்னை
ஏற்றிய விளக்கென்னுள் அணையவில்லை
அன்னையே உன்னையே நம்பினேன் தாயே மகமாயியே

ஆனந்த மகமாயி ஆதி பராசக்தி
வல்வையின் முத்துமாரி வந்தருள்வாய் தாயே

காதோரம் ஓர் மொழியைக் கனிவுடன் நீ தரவே
பாதாரம் நான் பணிய பக்குவமும் நீ தரவே

ஆதி சக்தி இங்கோர் அன்னை முத்துமாரியாய்
அகிலாண்டேஸ்வரியாய் அள்ளித் தரும் தாயாகி
ஆதியந்தமில்லா அருட் பெரும் ஜோதி - உன்
உதயத்து மணியோசை இதயத்தை ஈர்க்குதம்மா

*********

**ஆடல் காணும் இடமெல்லாம்** அன்னையைக் கண்டேன்
பாடல் கேட்கும் இடமெல்லாம் ஓர் பாவையைக் கண்டேன்
அங்கே அன்னையே நின்றாள் நான் என்னை மறந்தேன்

அன்னைக்கும் அன்னையான ஆனந்த மகமாயி
வல்வையின் முத்துமாரி வந்தருள்வாய் தாயே

கோடிக்கரையிருந்து குடி பெயர்ந்து வந்து
நாடி வந்து வல்வையில் நலம் தர அமர்ந்தவளே
தேடிக்கொடுப்பாயே தெவிட்டாத தேனமுதே
பாடிப் பணிகின்றேன் பதநிலை தருவாயே

******* ********

**வல்வை மாரியே** எங்கள் தொல்லை தீர்க்கவா
ஆதியே ! ஜோதியே ! அகிலாண்டேஸ்வரியே !

வல்வை நகர் வளம் பெறவே ஓடத்தினில் வந்தாயே
கிழவிபோல் வேடம் பூண்ட கன்னியவள் நீயம்மா
அடித்தாலும் அணைத்தாலும் அம்மா நீயே கதி
இகபர சுகம் வேண்டி இறைஞ்சுகின்றோம் தாயே

பக்கத்தில் சிவனார் கோவில் கொண்டு அருள் கொடுக்க
இடப்பக்கம் இருந்து கொண்டு கேட்பதெல்லாம் கொடுப்பாயே
பயத்தால் பலர் வணங்க பக்தியால் சிலர் நெருங்க
பயபக்தி நிலை கடந்த சுயசக்தி அளித்தீடேற்றும்

குமரிமுனைத் தென் கரையில் கன்னியா குமரியம்மா
ஈழத்து வட கரையில் வல்வை முத்து மாரியம்மா
தென்னகத்தே இருந்து நீ எம்மகத்தே வந்தாயே
சமயபுரத் தாயே நீ சங்கடங்கள் தீர்ப்பாயே

அண்டசராசரங்கள் அத்தனையும் உன் செயலே
இத்துணை படைப்புகட்கும் அன்னையவள் நீ யன்றோ
எங்கள் குறை எடுத்துரைக்க வேறெங்கு செல்வதம்மா
உன் மலரடி தொழுதேற்றும் அடியரைக் காத்தருள்வாய்

சளைக்காமலே அருளும் வல்வை முத்துமாரியம்மா
தளைத்த பின்னாலும் எம் தவறுகள் குறையவில்லை
ஐம்புலனாம் நாகம் இன்று படமெடுத்தாடுதம்மா
ஆட்டத்தை அடக்கி அதன் நஞ்சினை அழிக்காயோ

உலகத்து நாயகியே ஊருக்கு நீ காவலம்மா
உன் முகத்தில் சிரிப்பென்றால் எம் வாழ்வு சிறப்பம்மா
தேரில் நீ வரும்போதுன் காலடியில் நானம்மா
மகமாயியே எங்கள் மனமாயை அகற்றாயோ

உன் அருளாலே நாம் உன் தாள் பணிகின்றோம்
எம் மனம் களிப்பதற்கு உனக்கபிஷேகம் அம்மா
திக்குத் தெரியாமல் திரிகின்றோம் கானகத்தே
பதநிலை தருவதற்குப் பக்குவம் அருள்வாயே

*********

**ஆனைமுகம் ஆறுமுகம் அங்கே ஐந்து முகம் தோன்றும்**
மாசிமகம் தேவிமுகம் அங்கே ஆறுதலும் தோன்றும்

ஏது பயம் தேவி சுகம் என்றென்றும் இருக்கையிலே
யாமிருக்க ஏதுபயம் என்பான் வேலன் அன்னை மடியிருந்து

மங்களம் பொங்கிட மழையாய்ப் பொழிவாள் மஞ்சள் நிறத்தவளே
நினைத்தால் நெஞ்சில் நிறைவாய் நிற்கும் நீல நிறத்தவளே
பசுமையை வாழ்வில் பகின்றிட வந்த பச்சை நிறத்தவளே
செந்நிற வானம் செம்பவளம் போல் உயிருக்கு பயிரானாள்

வானத்தில் தோன்றும் வர்ண ஜாலங்களில் அன்னையைக் கண்டேனே
வர்ண ஜாலங்கள் இணைந்த வெண்மையில் தூய்மை துலங்கிடுமே
வல்வையில் நின்று வாழ்வளிப்பவள் எங்கள் முத்துமாரி
அபயமளிக்கும் சமயபுரத்துத் தாயும் அவள் அன்றோ

கொவ்வை இதழ்ச் சிரிப்பும் கடைக்கண் பார்வையும் என்றும் வேண்டுமம்மா
கோடி கிடைத்தாலும் உனை மறவாத வரம் தர வருவாயே
பாடிப்பாடி யான் என்றென்றும் உனையே பார்த்திருப்பவன் தாயே
தேடித்தேடி என் இதயக் கமலத்தில் ஒளியாய் வருவாயே
*********

**வந்தவள் நின்றவள்** அருளைத் தந்தவள் வல்வை முத்துமாரி
போற்றிட வாழ்த்தி வணங்கிட வந்தவள் வாசலில் நின்றேனே
சமயபுரத்தாயே அம்மா - கோடிக்
கரை விட்டு குடி வந்தாயே
வல்வைக்கு வந்து தொல்லைகள் தீர்த்து தொழ அருள்
புரிபவளே
எல்லையில் நின்றெமைத் தில்லைக் காளி போல் என்றும்
காப்பவளே
வடிவாம்பிகையே அம்மா - வல்வையின்
உயிரே உன் இடம் தானம்மா
ஆதியும் அந்தமும் இல்லா அந்த ஆதி சிவன் அருகே
ஆடிடும் ஆட்டத்தால் அண்ட பகிரண்டம் அனைத்தும்
இயங்கிடுதே
ஆனந்தத் தாண்டவம் காணவே - தாயே
ஆயிரம் கண் தந்தருள்வாயே
ஆயிரம் ஆயிரம் கண்கள் கிடைத்தும் அத்தனையும் போதாதே
ஊனத்தால் மோனத்தைக் கண்டிட அகக்கண் தந்தருள்
மகமாயி
அருள்மிகு முத்துமாரியே -உந்தன்
கடைக்கண்ணின் பார்வை எங்கே
பார்த்துவிட்டால் எந்தன் பாபம் பொடிபட சாபங்கள்
அழியாதோ
கர்மவினையெல்லாம் கருணை ஆற்றால் கருகிட மாட்டாதோ
பாக்கு நீரிணையில் பொங்கிடும் அலைகள் உந்தனை
வாழ்த்திடுமே
ஊரணியில் உந்தன் தீர்த்தம் கண்டிட ஊரே திரண்டிடுமே
கரை காணா கருணை வெள்ளம் - தாயே நின்
அருளே தான் மும்மாரியோ
மாதம் மும்மாரி பொழிந்திட வருவாய் அன்னை முத்துமாரி
பாதம் பணிந்திட வருமடியாரைப் பார்ப்பது உன் கடனே!

*********

**தினம் உனை வணங்க** நினதருள் அன்றி ஆகுமோ
மனம் நிறைந்த வல்வை முத்துமாரித் தாயே வா
வனம் தனில் நின்றாலும் மனப் பயம் எனக்கில்லையே
தனம் தரும் தாயே நின் தயை இருக்கையிலே

மாரியாத்தா வா உன் மகனுக்(கு) அருளைத்தா
மாரியாத்தா வா உன் மகளுக்(கு) அருளைத்தா

பெத்த மனம் என்றும் பித்து என்பாரே
பிள்ளை மனமோ என்றும் அது கல்லான தென்பாரே
கல்லான என் மனமோ கசிந்து கண்ணீராய் மாறியே - உனை
எந்நாளும் வேண்டுகிறேன் நின் அருள் முன்னாலே நிற்கிறதே

பிள்ளை மறந்தாலும் அன்னை மறப்பதில்லை
அன்னை மறந்தாலும் நான் உன்னை விடுவதில்லை
தவறு செய்தாலும் அதை மன்னிப்பதுன் கடனே
பாதை மாறாமல் எனைப் பார்ப்பதும் உன் கடனே

இயங்கும் உலகிலே உன்னையே காண்கின்றேன்
மயங்கும் வேளையில் எனைக் காப்பது உன் கடனே
தயங்கும் வேளையில் தாயே நீ என்னுடன் நின்றிடம்மா
மயக்கம் போக்கவே இனித் தயக்கம் ஏன் அம்மா
*********

**வாரி வழங்கும்** என் மாரியாத்தா
வகை தெரியாமலே வாடுகின்றேனே

வண்ணமுகம் காட்டிவிட்டால் வந்தவினை பறந்தோடும்
எண்ணமெல்லாம் உன்னிடமே ஏன் இந்தப் பாராமுகம்
அழுது தொழுதால்த்தான் அணைக்க நீ வருவாயோ
அனைத்தும் அறிந்தவளே என் தாயே மாரியம்மா
*********

**முத்துமாரியே எங்கள்** சொத்து நீ அம்மா
அல்லல் போக்கி தொல்லை நீக்கும் வல்வை முத்துமாரி

சங்கடங்கள் தீர்ப்பதில் நீ சமயபுரத் தாயல்லோ
சஞ்சலங்கள் தீர்க்கும் எங்கள் வல்வை முத்துமாரி

கஷ்டங்கள் களைவதில் நீகன்னியா குமரி அம்மா
கவலைகள் போக்கும் எங்கள் வல்வை முத்துமாரி

வடிவாம்பிகையே வல்வை முத்துமாரி
வல்லமை எல்லாம் தருவாய் எங்கள் முத்துமாரி

தில்லையில் சிவகாமி நீ எங்கள் முத்துமாரி
வல்வையில் முத்துமாரி காசி விசாலாட்சி

மதுரையில் மீனாட்சி நீ எங்கள் முத்துமாரி
மனமாயை போக்கும் எங்கள் மகமாயியே

உலகத்து நாயகியே எங்கள் முத்துமாரி
உன் தாள் பணிந்தோம் எமைக் காத்தருள்வாய் தாயே
*********

**நான் வேண்டுமோ** என் பாடல் வேண்டுமோ
இரண்டுமே அம்மா நின் ஆட்டத்தின் விளைவன்றோ

நான் என்ற ஒன்று இந்த நானிலத்தில் இல்லையே
நானோ பாடுகிறேன் . . .அது நின்னருளின் நாதமன்றோ

நானற்ற நிலை பெறவே தாயே நின் அருள் தேடி
நாடி நின்று பாடுகிறேன் என்வினை களைந்திடம்மா
உனைத்தேடி ஞாலமெல்லாம் ஓடி நான் திரிந்தேனே
எனக்குள்ளே இருப்பதை உணர்த்தவோ பாடல் தந்தாய்

மானிடப் பிறவி பெற்று ஞாலத்தில் பிறந்தவர்கள்
ஞானியாய்ப் போவதில்லை கர்மவினை தீரும் வரை
பொருள் தேடும் முன்னாலே நின்னருள் தேடிவிட்டால்
அத்தனையும் தந்திடுவாய் வல்வை முத்துமாரி அம்மா
*********

**மாரி பொழியுதையா** மார்கழியிலே - இந்த
மாநகரிலோ அன்னை அருளே தினம் தினமும்
மாரிபோல் பொழியுதையா வல்வையிலே
வாரி இறைத்த அந்தப் பாரி வள்ளல் கொடைபோலே

கார் கால மயிலின் ஆட்டத்தின் அழகுபோல்
கானக் குயிலின் இன்ப இசையின் இனிமைபோல்
அன்னையவள் ஆனந்தத் தாண்டவத்தின் எல்லையிலே
அருளே பொருளாகி எமைத்தேடி வருகின்ற

முத்துமாரியை மக்கள் உளமாரப் பூசிப்பதால்
திருப்பணித் தொண்டெல்லாம் திறம்பட நடப்பதாலும்
அன்னைக்கு அபிஷேகம் நிதம் பக்தர் செய்வதாலும்
மாறிவந்த மாரியாத்தா மனம் மகிழ தினமும்

*********

**மண்ணளக்கும் மாரியம்மா** என் மாளிகையில் வந்திடம்மா
மகனொருவன் குறைதீர்க்க மனமிரங்க மாட்டாயோ
ஆயிரம் கண்ணுடையவளே ஆதி பரமேஸ்வரியே
வல்வை முத்துமாரியம்மா ஆவதெல்லாம் நின் அருளால்

மண்ணான என் உடலை கண்ணீரால் நீராட்டி
பொன்னான உன் நினைவை ஆழமாக உரமிட்டு
முத்தாக நீ மாறி வித்தாக வந்துவிட்டால்
பித்தாகி அலையாமல் சித்தாக மாட்டேனா?

பாலாக ஓடிவரும் பாபியின் மனமதனை
ஆடாமல் அசையாமல் ஆக்கிவிடும் நின் கருணை
இசையோடு யான் பாட இசைந்து நீ கண்ணசைத்து
வேண்டாமை நிலை தரவே வேண்டுவது நின் அருளே

ஆதிபராசக்தி நீ ஆதி பரமேஸ்வரி நீ
ஆதியந்தமில்லா அந்த ஆண்டவனின் சக்தி நீ
ஆதி நீ ஜோதி நீ அன்னை நீ வந்திடம்மா
ஏதினி வேதனை மேதினியில் உண்டம்மா

*********

**காரிருளின் தீஞ்சுடரே** எங்கள் முத்துமாரியம்மா
காத்தருள வேண்டி நின்றேன் வல்வை முத்துமாரியம்மா

வல்வை நகர் செய் தவத்தால் எங்கள் முத்துமாரியம்மா
கோடிக்கரை பெயர்ந்து வந்தாய் எங்கள் முத்துமாரியம்மா

வல்வையில் உன் ஆட்சி எங்கள் முத்துமாரியம்மா
வளமாக்கி நீ கொடுத்த என் வாழ்வே சாட்சியம்மா

வல்லமை எல்லாம் தருவாய் எங்கள் முத்துமாரியம்மா
வல்வினைகள் தீர்த்தருளும் எங்கள் முத்துமாரியம்மா

சமயபுரத் தாயன்றோ எங்கள் முத்துமாரியம்மா
சங்கடங்கள் தீர்ப்பதற்கோர் வல்வை முத்துமாரியம்மா

கன்னியா குமரியன்றோ எங்கள் முத்துமாரியம்மா
கவலையெல்லாம் களைவதற்கோர் வல்வை முத்துமாரியம்மா

ஆதிபராசக்தியம்மா எங்கள் முத்துமாரியம்மா
ஜோதீஸ்வரூபிணியே வல்வை முத்துமாரியம்மா

உலகத்து நாயகியே எங்கள் முத்துமாரியம்மா
உன் தாள் பணிந்து நின்றோம் வல்வை முத்துமாரியம்மா

வேதாந்த விழுப்பொருளே எங்கள் முத்துமாரியம்மா
நாதாந்த நாயகியே வல்வை முத்துமாரியம்மா

அன்பருள்ளம் அமர்ந்தவளே எங்கள் முத்துமாரியம்மா
அன்பு மயமானவளே வல்வை முத்துமாரியம்மா

பக்தியோடு உனைப் பணிந்தால் எங்கள் முத்துமாரியம்மா
முக்திக்கு வித்திட்டோம் வல்வை முத்துமாரியம்மா

*********

**ஓம் த்ரயம் பகம்** யஜாமஹே
சுகந்திம் புஷ்டி வர்த்தனம்
உர்வாருகமிவ பந்தனான் மிருத்யோர்
மூக்ஷீய மாம்ருதாத் . . .ஓம்ஹ்ரீம் நமசிவாய

அதி மதுர சாப ஹஸ்தாம் . . .
அபரிமிதா மோத பாண செளபாக்யம்
அருணாம் அதிசய கருணாம்
அபினவ குல சுந்தரீம் வந்தே . . .

அன்னையே காப்பாய் என்னையே . . . .
ஆதிசிவன் பாதியே ஆதிபராசக்தியே
அகிலாண்டேஸ்வரியே வல்வை முத்துமாரியே
அருள் தாராயோ குறை தீராயோ
பவ சாகரத்தில் இருள் நீக்காயோ . . . .
அன்னையே காப்பாய் என்னையே . . .

*********

**வல்வை முத்துமாரி** மகமாயித்தாயே
தொல்லைகளைத் தீர்த்தருள ஓடிவாம்மா
சிவபுரத்துச் சிவனார்க்கு அருகிருப்பாயே
சமயபுரத் தாயே நீ சர்வேஸ்வரி!
வேதனையைச் சோதனையாய்த் தந்ததினாலே
தத்தளித்துத் தடுமாறி தவிக்கின்றோமே
தத்துவங்கள் பல பேசி நின்றபோதும்
உன் தாள் பணிய நானென்றும் மறப்பதில்லையே!

வீதியெல்லாம் கோவிலுள்ள வல்வை நகரிலே
ஜோதிப்பிழம்பான சிவன் வலம் இருக்கின்றார்
நெடியகாட்டில் பிள்ளையார் ஒருகரையிலே - சேவற்
கொடியுடையோன் சந்நிதியான் மறுகரையிலே
நடுவிருந்து நீ நடாத்தும் அரசாங்கம்
நம்பினோர்க்கு மோட்சம் இந்த நானிலத்திலே
கோடிக்கரையிருந்து ஓடி வந்து - எமை
நாடி வந்து கோடிதரும் வடிவாம்பிகை

நாடி வந்து சேவிக்கும் அடியவர்க்கு
கோடி செல்வம் வழங்குகின்ற புவனேஸ்வரி
உதயத்திலுன் மணியோசை நாதத்தினாலே
இதயமெல்லாம் தாயன்பால் திளைக்குதம்மா
நாயாக நான் இங்கு நடந்தபோதும்
தாயாக நீ எம்மை ஆதரிக்கின்றாய்
சின்னவனின் குரல் கேட்டுன் முகம் திருப்பு
சிரித்தபடி என்னைத் தினம் வழி யனுப்பு

கண்ணிரண்டும் காணவேண்டும் உன்னுருவே
காலிரண்டும் நாடவேண்டும் உன்னடியே
பண் அமைத்துப் பாடவேண்டும் நா உனையே
பக்தியோடு கூடவேண்டும் கையுனையே
எண்ணமெல்லாம் உன் நினைவே ஆகவேண்டும்
ஏக்கமெல்லாம் உனைநாடும் நோக்கம் வேண்டும்

பொன்னளக்கும் வல்வைநகர் முத்துமாரி
மகனுடைய குறைகளைத் தீருமம்மா

அன்புக்கே நானடிமை ஆகவேண்டும்
உன் நாமம் என்காது கேட்கவேண்டும்
வஞ்சத்தை என் நெஞ்சம் அறுக்கவேண்டும்
பண்புக்கே உயிர் வாழ ஆசை வேண்டும்
உன்மூச்சே என் பேச்சு ஆகவேண்டும்
தொடுவதெல்லாம் நீ என்ற உணர்வு வேண்டும்
என் பக்கம் இவையெல்லாம் இருக்கவேண்டும்
என்னோடு நீ என்றும் வாழவேண்டும்

கும்பிடவோ கையிரண்டு போதவில்லை
கூப்பிடவோ நாவொன்றால் முடியவில்லை
தாவுகின்ற மனக்குரங்கால் எங்கள் நிலமை
தாழாமல் பார்ப்பதற்கு சக்தியில்லை
செம்பவள வாயழகி உன்னெழிலோ
சின்ன இரு விழிகளுக்குள் அடங்கவில்லை
அம்பளவு விழியாளே உன்னை என்றும்
அடிபணியும் ஆசைக்கோர் குறைவுமில்லை

*********

**எங்கள் முத்துமாரியம்மா** வல்வையின் ஜோதியம்மா
உன் தாள் பணிந்திடவே ஓடோடி வந்திடுவேன்

ஓடோடி வந்த வேளை உன் முகம் நோக்கி நின்றேன்
ஒளிமுகம் காட்டுவாயே என் இதயம் குளிர்ந்திடுமே

எத்தனை துன்பங்களோ எத்திசையில் வந்தாலும்
எந்தனை அணுகிடுமோ நின் துணை முன் நிற்க

வல்வையில் உன் ஆட்சி எந்நாளும் தெரியுதம்மா
வளமாக்கி நீ கொடுத்த என் வாழ்வே சாட்சியம்மா

நெஞ்சார உனை நினைத்து வாயார பாடிடவே
நின் அருள் முன் நிற்க நித்தமும் கவி பொழிவேன்

பாடுவது நின் புகழை தேடுவது நின் துணையை
நாடுவது நின் அருளை கூடுவதுன் திருவடியில்
*********

**அன்னையே மகமாயி** - நான்
உன்னையே நம்பி வந்தேன் - நீ
என்னையும் காத்திடம்மா
மனமாயை போக்கும் தாயே!

அன்புக்கு அன்னையன்றி யாரிடம் நான் செல்ல
எல்லாமே நினதருளே எந்தனுக்கு
எல்லாமே நினதருளே!
அருளாட்சியே உதயமென்றால்
அன்னை ஆட்சியே அதுவாகுமே - நீ
என்னையும் காத்திடம்மா
மனமாயை போக்கும் தாயே

மும்மாரி பொழிவதுந்தன் முக்கோலத் திருவருளோ!
புவனேஸ்வரித் தாயே - ஸ்ரீ லலிதா
வாணி துர்க்கையளே! . . .
உந்தன் புன்னகை கண்டுவிட்டால்
வேண்டுதற் கேதுமுண்டோ - நீ
என்னையும் காத்திடம்மா!
மனமாயை போக்கும் தாயே!
*********

**அகிலத்தின் இயக்கமெல்லாம்** ஆதி சக்தி உந்தனின்
ஆடல் தான் என்றெனக்கு அறிய வைத்தாய் . . .
என் இதய மேடையிலுன் ஆடல் கண்டால்
ஆனந்தம் அடைவேன் என்பதை அறியாயோ!
கொண்டு வந்த சுமை என்னைக் கூனிக் குறுகவைக்க
கண்டும் நீ காணாமல் இருப்பதேனோ . . . .
ஏழேழு புவனமெல்லாம் இயங்கும் இவ்வேளையிலே
எந்தனை நீ ஏங்கவைத்தல் ஏன் தாயே!
நீ நிறைந்த நெஞ்சமதில் நிம்மதி வருவதற்கு
மதி ஒளி காட்ட நீ மறந்ததேனோ
அன்றொரு அமாவாசையில் முழுமதி தோன்றவைத்து
பட்டரைக் காத்து நின்ற அபிராமியே! . . . .
அன்னை என்ற சிறு உருவில் உன்னைவைத்து அன்புவைத்து
பூஜித்தல் தான் எந்தன் தவறாமோ! . . . .
அடியனின் சிறுமதியால் அறிந்திட முடியாத
ஆதி பராசக்திப் பெரும் பொருளே! . . .
வேதாந்தப் பெருவெளியில் நாதாந்த மழை பொழியும்
நாயகியே நான் வணங்கும் வல்வை மாரியே! . . . . . .
பாதாரம் பணிந்து நின்றேன் பக்தியோடு பாட வந்தேன்
பாலில் தோன்றும் வெண்ணையாக வந்திடம்மா!
வானமும் நீயே தாயே மதியும் நீயே அம்மா
முகிலாகவும் நின்று மறைப்பதேனோ! . . . .
கருமுகிலெல்லாம் எந்தன் கர்மவினை என்றுணர்ந்தேன்
உன் கருணையால் முகில்கள் கரையாதோ! . . . .
கருமுகில் மறைந்த பின்னே என்வினையும் கரைந்தபின்னே
மின்னொளிபோல் உன் ஒளியைக் காட்டாயோ! . . . .
புவனம் முழுதாளும் புவனேஸ்வரித் தாயே
சின்னவனுக்குந்தன் அருள் வேண்டுமம்மா! . . .

*********

**நீயே அதுவாய்** நெஞ்சினில் நிறைந்து நின்றவளே திரிசூலினி
தாயே உன்னையே தொழுதெழுவார்க்கினி தாரணியில் பயமேதினி
மாயே மாயவன் உறவே திருவே வருவாய் தருவாய் அருள் இனி
தாயே உன்னையே பாடிடவே என் நாவினில் வந்துறைவாய் இனி

வேலனுக்கருள் செய்து வேற்காடுறையும் அன்னையவள் கருமாரி நீ
மாங்காட்டினிலே மாதவம் புரிந்த மங்கையவள் காமாட்சி நீ
அதர்மம் அழிக்க எழுந்த நல்வடிவே மகிஷாசூரமர்த்தினி
ஆதிசிவனுக்கும் அருகிருந்த எங்கள் பெருவிருந்தே பராசக்தி நீ

தில்லையில் காளி நெல்லையில் மாயி எல்லையில் கன்யாகுமரி நீ
காசி விசாலாட்சி மதுரை மீனாட்சி கடவூர் அபிராமித் தாயும் நீ
துர்க்கா லக்ஷ்மி சரஸ்வதியும் நீ சமயபுரத்துச் சக்தி நீ
இச்சா கிரியா ஞான சக்தியாய் இலங்கும் வேலவன் சக்தி நீ

என்னைக் காக்கவே வல்வைக்கு வந்து வீற்றிருக்கும் முத்துமாரி நீ
உன்னை எண்ணித் துதிக்கும் அடியார் உள்ளத்தே மேவும் ஜோதி நீ
அம்மா தாயே மகமாயி ஏம்மா பாராமுகம் இனி
தஞ்சம் என்றேன் சரண் அடைந்தேன் தருவாய் உந்தன் அருள் இனி

*********

**வல்வையம்பதியில் வடிவ**ாம்பிகை என் தாயே
தில்லைஅரசன் துணையாய் நீதேடி அருள வந்தாய்
மாரியாத்தா மாயை தீர்ப்பாய்!
உன்னை எண்ணி உருகிடும் அடியார்
உள்ளக்குறை தீர்த்து வைக்கும்
எந்தன் தாயே உந்தனுக்கு
ஏங்கும் உள்ளம் தெரியாதோ!
உளலும் எந்தன் உள்ளம்
உன்னருளால் உய்வு பெறவே
உமையவளே நீயும் உந்தன்
கடைக் கண்ணால் பார்த்து அருள்வாய்! . . .

என்ன பிழை செய்தேனோ
எனக்கு இந்த சோதனை
என் தாயே எந்தன் மனம்
தெரியாமல் தவிக்கின்றதே
எதுவாகத்தான் இருந்தாலும் - அதை
தாயே நீயும் மன்னித்து
ஏற்றருளி எந்தன் வாழ்வில்
ஒளியூட்ட ஓடி வாராய்!

**ஸ்ரீ துர்க்கை - தெல்லிப்பழை (தெல்லிப்பளை )**
துர்க்கையம்மா நானுன் பாதாரவிந்தத்தில்
நர்க்கதியைத் தந்தருள நாயகியே தாமதமேன்

தெல்லிப்பழையில் இன்றோர் புத்தொளி வீசிடவே
எல்லையில்லா மாந்தரின் இன்னல்களைத் தீர்க்கின்றாய்

உண்டு உடுத்துறங்க என்று நீ படைக்கலையே
என்றும் தனை உண்ர்ந்து உன்னை வந்தடைவதற்கே
சுயசக்தியும் கொடுத்தாய் நவசக்தியும் அளித்தாய்
அத்தனையும் பெற்றுவிட்டு தனக்கென வாழ்கின்றாரே

நீயே நான் என்ற உண்மை நிலை உணராமல்
நானென்ற ஒன்றைத் தானாக ஏற்படுத்தி
அழியா உன் தன்மை தன்னுடைய தென்றெண்ணி
தனக்கே வாழ்கின்றார் தானே அழிகின்றார்

அசுரத்தன்மை இங்கு தாண்டவமாடுதம்மா
திரிசூலத்தால் இந்தக் கொடுமையை அழித்திடம்மா
பொய்மையைப் போக்கிடம்மா உண்மைநிலை காட்டிடம்மா
அதர்மம் மலியுதம்மா அமைதியைத் தந்திடம்மா

**வல்லிபுர ஆழ்வார்**

வல்லிபுரத்தானே! திருவேங்கடத்தோனே!
ஸ்ரீ ரங்க நாதனே! ஆள வந்த ஆழ்வாரே

அலைமகள் அருகிருக்க ஆதிசேஷன் நிழல் கொடுக்க
அனந்த சயனம் செய்யும் வல்லிபுர ஆழ்வாரே!

பிறவிக் கடலிலே தத்தளிக்கும் எமைக்காக்க
பாற்கடல் தனை மறந்து வல்லிபுர வெண்மணலில்
ஐம்புலனாம் நாகம் இங்கே அடங்கிய நிலையிலே
பள்ளி கொண்டு பார்காக்கும் பெருமையை என்னென்பேன்!

ஞாயிறு தோறும் இங்கே நாயகா உனைக் காண
ஞாலமே திரண்டிடுமே ஞாலத்தைக் காப்பவனே
நாராயணா என்று பாராயணம் செய்தால்
கண்ணனாய் வருவாயே கவலைகள் தீர்ப்பாயே!

*********

**சற்குருவாய் வருவாயே** சந்நிதி வேலே
சஞ்சலங்கள் தீர்க்கும் எங்கள் சந்நிதி வேலே
சரவணபவ சண்முகமே சந்நிதி வேலே
சந்தேகம் தீரும் உன்னைச் சரண் அடைந்தாலே
தொண்டை மானாற்றருகே சந்நிதி வேலே
தொண்டர் குறை தர்த்தருள்வாய் சந்நிதி வேலே
கண்டம் பல கடந்தாலும் சந்நிதி வேலே
என்றும் எங்கள் நினைவில் நிற்பாய் சந்நிதி வேலே
உள்ளம் தன்னில் குடியிருக்கும் சந்நிதி வேலே
உணர்வாகி உருவானாய் சந்நிதி வேலே
அனல் வடிவாய் வந்தவனே சந்நிதி வேலே
அருட்குருவே அனைத்தும் நீயே சந்நிதி வேலே

*********

**அன்றலர்ந்த தாமரையோ** - ஐயா
இன்றிணைந்த இன்சுவையோ

வேலவன் திருவடியில் வேண்டி நீ சென்றாயோ
வேண்டும் அடியவரின் வேதனைகள் தீர்ப்பதற்கோ

உடலோடு நீவாழ்ந்து உழன்றது போதும் ஐயா
அருளோடு நீ இணைந்து ஆதரித்தால் அடியவர்கள்
குருபீடம் தனை அமைத்து கும்பிட்டு நிற்பாரே
அருளாற்று சந்நிதியில் ஆடல் கண்டு களிப்பாரே

ஈழத்தமிழர் வாழ்வில் இன்னல்கள் மறையவேண்டும்
இழந்த நம் உரிமைகளை இனி நாம் பெறவேண்டும்
களபூமியான எங்கள் ஈழத்தமிழ் மண்ணெல்லாம்
விளைபூமியாய் மாற விக்கினங்கள் தீரவேண்டும்

மூலஸ்தானத்தில் வேலன் அருள் சுரக்கின்றது
வேற்படையே ஓர் காற்படையாய் வருகின்றது

சத்ரு சம்ஹார வேளையங்கு தெரிகின்றது
வேலனருள் கடல் மடையாய் சந்நிதியில் பாய்கின்றது

விக்கினங்கள் தனைப்போக்கும் வேழமுகம் வருகின்றது
வேதங்கள் பீடமாக வேலன் அங்கே வீற்றிருக்க
அன்னையர் இருவருமே அணிகலன் ஆகின்றார்
அன்னமலை அருகினிலே வேலன் விளையாடுகின்றான்
*********

**ஓடிவா முருகா** நீ ஆடிவா முருகா
ஏறுமயிலேறி வா முருகா சேவற் கொடியோடுவா
கதிரமலையோனே வா செல்வச் சந்நிதி முருகனே வா
மாவைக் கந்தனே வா தினைமாவை உண்ண ஓடிவா

நல்லைக்குமரனே வா எங்கள் தொல்லை தீர்த்தருள வா
வெருகல் முருகனே வா அசுரர் படை அழித்தவா வா
கந்தவனத்தோனே வா எங்கள் கருணை வள்ளலே வா
மண்டூர் வேலனே வா எழுவையில் விந்தை காட்ட ஓடிவா

பழனி உச்சியில் வா பழமுதிர்ச் சோலை நடுவினில் வா
தணிகைத்தலத்திலே வா செந்தூர்க் கடலின் அருகிலே வா
சுவாமி மலைதன்னில் வா பரங்குன்றம் தனில் ஏறி வா
ஆறுபடை வீட்டில் வா பின் இங்கு ஆறியமர ஓடிவா

குறிஞ்சிக் குமரனே வா விரும்பி அழைக்க ஓடி வா
உகந்தை மலையினில் வா என் அகந்தை அழிக்க ஓடி வா
வில்லூண்டி வேலா வா சித்தாண்டிச் செல்வனே வா
தேவன் துறை இறங்கி வா திசை மாறாமலே ஓடி வா

அஞ்சுதலை அறுக்க வா ஆறுதலை அளிக்க வா
ஆறுமுகத்தோனே வா இந்த ஏழைக்கருள ஓடி வா
சக்திகள் சூழ வா ஞான சித்திகள் அருள வா
செல்வச் சந்நிதியில் வா எங்கள் செல்வமே ஓடி வா
*********

**மங்கையர் வடிவழகா**--மாணிக்க கங்கைக்கரை அழகா
கதிரமலை அழகா--கதிர்
காமத்துறை முருகா
கண்டி கதிர்காமம் கொண்ட கோலமெல்லாம் கந்தபுராணம்
கூறும்
கூறும் அடியார்கள் நாடும் குறைதீர்க்க வீறு கொண்ட முருகா
ஆறுமுகமெல்லாம் ஏறுமுகமாகி ஏமகூடம் தன்னில்
மாறுமுகமாகி சேவல் மயிலாக்கி நின்ற கோலம்
என்னென்பேன்

செல்லக்கதிர்காமம் சொல்ல மனம் இனிக்கும் வல்ல
கணபதியார்
தானைத்தளபதிக்கு யானையாய் வந்து வள்ளியை
இணைத்தாரே
திருநீற்றுமலையிலும் வள்ளிக்குகையிலும் வள்ளலின்
விளையாட்டு
உகந்தை மலையிலே வேடருக்கருளிட ஒளியாய்ச்
செல்பவனே

ஆடிஅமாசை காடுகடந்து நீ கதிரமலை அருகே
ஆடிமுடிந்ததும் வீடு திரும்பிட விருப்பமும் கொள்பவனே
மாணிக்க கங்கையில் காணிக்கை ஏற்றபின் கதிரொளி
ஆகிடவே
பேரின்ப வீடருள் காட்டிடவோ அங்கே திரையினுள்
மறைகின்றாய்

ஏழுதிரைகளுக்குள் ஏனிந்த ரகசியம் எந்தையே திருமுருகா
வாழும் மனிதருக்கு ஏழு நிலைகாட்டத்தான் இந்த
விளையாட்டோ
மாணிக்க கங்கையில் தீர்த்தமும் ஆடி மாணிக்கமாகிடுவர்
வர இயலாதவர் தொண்டைமானாற்றில் காட்சியும்
கண்டிடுவர்
*********

**முருகா முருகா என்று** முன் மொழிந்து நின்றாலே
ஆறாக என் மனமே கண்ணில் நீராகப் பாய்ந்திடுமே

நல்லூரின் நாயகனே நல்லவையே தருவாயே
நல்லவையின் தாயகமே நல்ல சிந்தனை ஐயா
நல்ல சிந்தனை என்றால் கருமையெலாம் கரைந்திடுமே
நல்ல மனம் ஆகிடுமே வெள்ளை மனம் மலர்ந்திடுமே
வெள்ளை மனம் தோன்றிவிட்டால் வெண்மயிலில் நீ
வருவாய்
வல்லமையெலாம் தருவாய் வண்ண வண்ண கவி
பொழிவேன்

மாயையினால் கட்டுண்டு யான் தாயையே மறந்திருந்தால்
கூர் வேலால் குத்திக் கிளறி வேதனையைத் தந்திடையா
நான் வாழ மேதினியில் பாடுபட்ட அனைவரையும்
நல்லபடி வாழவைத்தென் நன்றிக்கடன் தீரய்யா . . .

நல்லூரன் ஆண்டவனே தொல்லையெலாம் தீர்ப்பவனே
வெல்லுகின்ற வேல் கொண்டு என் மனத்தில் வந்திடப்பா
சிந்தனைத் தெளிவுடனே சிந்தையில் நீ அமர
வந்தனையே செய்து நிற்க எந்தனுக்கு வரம் தருவாய் . . .

காதூரில் கேட்டு வந்தேன் கண்ணூரில் கண்டு கொள்ள
வாயூரில் பாடி நின்றேன் வயலூரில் நின்றவனை
காலூரால் நடந்து வந்தேன் கையூரில் வணங்கி நின்றேன்
மெய்யூரில் கண்டுகொண்டேன் பொய்யூரே போனதையா . .

**மாவைக்கந்தா நானுன்** மலரடியில் - ஓர்
பூவைப்போல் வந்தடைய என்ன வழி சொல்லையா

பூப்போன்ற பெண் ஒருத்தி உன்னையே சரண் அடைய
மாகுட்ட நோய் மாற்றி வண்ண முகம் கொடுத்தாயே

மாகுட்ட நோய் பெற்ற மாருதப் புரவீர
வல்லி என்ற சோழ மன்னன் மகளுக்கு அருள் செய்தவா
பூந்தோட்டத்தில் மங்கை கலைக்கோட்டு மாமுனிவர்
தவக்கோலத்தைக் கண்டு ஏளனமாய்ச் சிரித்ததினால்
மாமுனிவர் சாபத்தினால் குதிரை முகம் பெறவே
தான் செய்த பாபம் தீர ஏறாத கோயிலில்லை
ஈழமணித் திருநாட்டில் வந்தடைந்த வேளையிலே
கீரிமலைக் கேணியிலே தீர்த்தம் ஆடிய பின்
கந்தனைக் கண்டாளோ! காலடியில் விழுந்தாளோ!
காங்கேயன் அருள் சுரக்க வண்ண முகம் பெற்றாளே! . . .

மாகுட்ட நோய் தீர்ந்த காரணத்தினால் இத்தலம்
மாவிட்டபுரம் என்ற பெயர் பெற்ற தன்றுமுதல்
மனம் மகிழ்ந்த மங்கை கந்தனுக்கு கோயில் கட்ட
தந்தை உக்கிரசோழனோ விக்ரகங்கள் அனுப்பிவைத்தான்

ஆடி அமாவாசையில் தீர்த்தமாடும் காட்சி கண்டால்
வாடிய உன் பக்தர் உள்ளம் தாமரைபோல் மலர்ந்திடுமே
பாடிப் பரவசமாய் நானும் துதிக்கின்றேன்
பாராமுகம் ஏனோ மாவிட்டபுரத்தரசே! . . . . .

**கந்தவனம்**

கந்தவனக் கடவையிலே காட்சி தரும் ஆறுமுகா
சாட்சியாய் வந்தெனக்கு மோட்ச நிலை தருவாயோ

எந்தவனம் போனாலும் உந்தன் துணை உண்டென்றால்
கந்தவனம் ஆகிடுமே கவலைகள் தீர்ந்திடுமே

முற்றாகச் சரண் அடைந்தால் முன்னாலே நிற்பாயே
சற்றேனும் தாமதியா சரவண பவகுகனே

இதயக் குகையினிலே குகனாக வாழ்பவனே
உதயமாகி விட்டால் உள்ளதெல்லாம் நீ யன்றோ

நீயும் நானாகி நானும் அதுவாகி
நானற்ற நிலையினிலே நானும் தானாகி
நானற்ற நிலை பெறவே குருவாக வருவாயே
கலி தீர்க்க வந்தவனே பொலிகண்டி வாழ்பவனே

*********

**நாகபூஜணி**
சிவத்தின் நெற்றியிலே கனிந்து சிவந்தவளே
பார்த்து வதியவரும் பார்வதியே உமையே
நெஞ்சகத்தில் நினைத்திட புத்தியில் உறைபவளே
நயினையின் நாயகியே நாகபூஜணியே அம்மா!

நயினாதீவோரம் நீலத்திரைக் கடலோரம்
தக்கனின் யாகத்தீக்கு தன்னையே தந்த பின்னே
அறுபத்தி நாலு துண்டாய் ஆனவளே உமையவளே
நயினையில் ஓர் துண்டால் எமக்கருள நின்றவளே!

பாரதத்திலுன் சக்தி பீடங்கள் அறுபத்தி மூன்றிலே
அற்புதங்கள் ஆடல்கள் தினம் தினம் நடந்தாலும்
கடைக்கண் பார்வை ஒன்றால் எம்மையும் மறவாமல்
நயினையில் அரசாளும் நாயகி நாகபூஜணியே!

கைலாயக் காட்சி ஒன்றால் காலமெலாம் காக்க
காமாட்சியே உன் தவத்தால் மண்ணெல்லாம் பொன்னாக
எம்மைக் காக்க வென்றே நயினையில் நின்றவளே
நாகலிங்கேஸ்வரனின் பாதியே நாகபூஜணியே!

**சுட்டிபுரம்**

சுட்டிபுரத்தாயே எட்டி நிற்பதேனோ
கண்ணகையம்மா நின் புன்னகை காண வந்தேன்

மதுரைமா நகரையே எரித்த என் அன்னையே
என் வினை எரிப்பதற்கு ஏன் இந்தத் தாமதமோ!

கோவலன் வாழ்வினிலே விதி விளையாடியதால்
உன்னை மறந்து அவன் மாதவியைத் துணை கொண்டான்
மாயை அகன்றபோது கோவலன் தவறுணர்ந்து
மாதரசி உன்னோடு மீண்டும் வாழ வந்தான்.

செல்வமெல்லாம் அழிந்தபோதும் சித்தம் தெளிந்து நிற்க
நடந்த நாட்டினிலே தவழ மனம் இல்லாமல்
பாண்டிய நாடு சென்று மீண்டும் தொழில் புரிந்து
புது வாழ்வு தொடங்க என்ற சிந்தனைத் துணிவோடு

வறுமைக்கொடுமையால் உன் சிலம்பொன்றை விக்க என்று
கடைதனை அடைந்த போது காவலாளர் கைப்பற்ற
மாமன்னன் மயக்கத்திலே கள்வனென்று தீர்ப்புக் கூறி
சிரம் தனைக் கொய்தனரே அறம் தனை அழித்தனரே

செய்தி கேட்டதுமே செந்தணலாய் நீ மாறி
கள்வனோ என் கணவனென்று மன்னனோடு வாதிட்டு
தவறை உணர்ந்த மன்னன் தானாக மாண்டபோது
அரசியும் மாண்டாளே மாநகரையும் எரித்தாயே!

கற்புக்கரசியே கண்ணகியே உந்தனுக்கு
கோவில் கட்ட ஓர் மாமன்னன் கல் சுமந்தான்
உத்தமியே உன் நினைவால் சிலப்பதிகாரம் என்றோர்
காப்பியமும் கிடைத்ததம்மா உன் பெருமை எடுத்தியம்ப!

*********

**சிவயோக மாயையில்** சிக்கித் தவிக்கின்றேன்
சிந்தையில் தெளிவு தாம்மா
பவயோக மார்க்கங்கள் பல இன்று கண்டாலும்
வேண்டுவது திருவருள் தானே

அஞ்ஞானப் போர்வையிலே சுழன்றது போதுமே
மெய்ஞ்ஞானம் வேண்டும் தாயே
அறிவையும் ஞானத்தையும் அள்ளித்தரும் தாயல்லோ
கலைவாணி வந்திடம்மா

கலைகளின் பிறப்பிடமே விலையில்லா மாணிக்கமே
கற்பூரமாய் உருக வேண்டும்
அஞ்ஞான அழிவிலே மெய்ஞ்ஞானச் சுடராக நீ அங்கு
வீற்றிருக்க வேண்டும்

ஏட்டையும் மாலையையும் ஏந்தி நீ நிற்பதெல்லாம்
என்னை யான் உணர்வதற்கோ
நான் என்ற தொன்றை யான் நம்பியதால் வந்தவினை
நாயகியே காத்தருள்வாய்

வீணையை நீ மீட்க வேதனைகள் தான் அகல
வேதாந்த வெளி தெரியுமே
நாதத்தின் எல்லையிலே நாயகியே நின் அருளால்
ஏகாந்த நிலை தோன்றுமே

வெள்ளைக் கமலத்தில் வீற்றிருக்கும் வாணி என்
உள்ளக்கமலமே நின் கோவிலம்மா
கள்ளச் சிரிப்பொன்றை நீ உதிர்த்தால் போதுமே
வெள்ளப் பெருக்குபோல் கவியூறுமே

இதயக் கமலத்தை மலராக்கி யான் சாற்ற உதயமோ
உன் கருணை ஊற்றம்மா
நாவிலும் பூவிலும் நிற்பவளே வாணியம்மா சாவிலும்
துணை நிற்க வேண்டும்

சிருஷ்டிக்கு துணை நின்ற சக்தியே நீ அம்மா
சிருங்கார வாக்தேவியே
சரண கமலாலயத்தில் அரை நிமிட நேரமட்டில்
உனை வேண்ட அருள் சூழுமே

**நவராத்திரி - பக்திமாலை**

வாழ்வு ஆனவள் துர்க்கா வாக்குமானவள்
வானில் நின்றவள் இந்த மண்ணில் வந்தனள்
தாழ்வு அற்றவள் துர்க்கா தாயும் ஆனவள்
தாபம் நீக்கியே என்னைத் தாங்கும் துர்க்கையே

அன்னலக்ஷ்மி வா ஆனந்த லக்ஷ்மி வா
அம்ருத கலசி வா பவஸ்ரீ லக்ஷ்மி வா
ஆதி லக்ஷ்மி வா ஜோதி லக்ஷ்மி வா
அனந்த லக்ஷ்மி வா வசந்த லக்ஷ்மி வா

ஞானி ஆனவள் கலைவாணி ஆனவள்
பேணி வளர்ப்பவள் என்னைத் தாங்கி நிற்பவள்
சிருஷ்டிக் கானவன் பக்கத் துணையுமானவள்
ஞான திருஷ்டியாய் என்றும் காட்சி தருபவள்

உலகையீன்றவள் துர்க்கா உமையுமானவள்
உண்மையானவள் எந்தன் உயிரைக் காப்பவள்
நிலவில் நின்றவள் துர்க்கா நித்யை ஆனவள்
நிலவி நின்றவள் எந்தன் நிதியும் துர்க்கையே

பாற்கடல் மீதினிலே ஆதிசேஷன் மடியினிலே
பள்ளி கொள்ளும் அந்தப் பரந்தாமன் நெஞ்சினிலே
வீற்றிருந்தாலும் என்றும் தாயே நீ என்னை மறப்பதில்லை
நலமெல்லாம் தந்தருளும் நவராத்திரி நாயகியே

வீணை ஏந்தியே என்னை மீட்டிவிட்டவள்
கானமாகவே என்னுள் கலந்து நின்றவள்
மாலை ஏந்தியே என்னைக் காட்டிக் கொடுத்தவள்
காலை வந்ததும் என்னுள் காட்சி தருபவள்

செம்மையானவள் துர்க்கா ஜெபமுமானவள்
அம்மையானவள் அன்புத் தந்தையானவள்
இம்மையானவள் துர்க்கா இன்பமானவள்
மும்மையானவள் என்றும் முழுமை துர்க்கையே

அலைகடல் உதித்தவளே அமரர்கள் துதிபாடும் அமுதமம்மா
விலையில்லா மாணிக்கமே வேதாந்த மந்த்ர சொரூபிணியே
பாற்கடல் கடைந்த போது மீண்டும் நீ தோன்றியும்
இணைந்தாயே
பார் காக்க வந்தவளே அஷ்டமா சித்திகள் தந்தருள்வாய்

கல்விக் கென்றுமே அதிபதியுமானவள்
சொல்லுக் கென்றுமே சரஸ்வதியுமானவள்
கவிதை தருவதில் அவள் மழையுமானவள்
காலைப் பற்றினால் அருட் கவியுமாக்குவாள்

உயிருமானவள் துர்க்கா உடலுமானவள்
உலகமானவள் எந்தன் உடமையானவள்
பயிருமானவள் துர்க்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னுள் பழுத்த துர்க்கையே

பார் காக்க வந்தவனின் சக்தியாகி பக்கத்தில் அமர்ந்தவளே
கடைக்கண்ணின் பார்வையொன்றால் ஏழையை
செல்வத்தின் உச்சியிலே
வைக்கவல்ல அந்த வைகுண்ட வாசனின் மனையாளே
கைக்கெட்ட வைத்ததெல்லாம் வாய்க்கு எட்டினால்
போதுமம்மா

ஞானம் வேண்டினால் அதை தானம் ஆக்குவாள்
மோனம் வேண்டினால் அவள் மாலையாகுவாள்
ஏட்டை ஏந்தியே உன்னை உணரவைத்துமே
பாட்டைக் காட்டியே பயனாகி நிற்பவள்

துன்பமற்றவள் துர்க்கா துரிய வாழ்பவள்
துறையுமானவள் இன்பத் தோணியானவள்
அன்பு உற்றவள் துர்க்கா அபய வீடவள்
நன்மை பொங்கிட என்னுள் நடக்கும் துர்க்கையே

ஈழத்தின் வடகிழக்கில் மக்கள் பசியாலே வாடுகின்றார்
நாட்டு நிலமையினால் வீடுகளில் வாழ்வும் வளமுமில்லை
பஞ்சங்கள் தீர வேண்டும் நாட்டிலே பசிப்பிணி ஓடவேண்டும்
கெஞ்சி நின்றோம் தாயே நீ கேட்கும் வரம் அருள்வாய்

கௌரி ஆகவே சிவராத்திரி கண்டவள்
காயத்ரி ஆகவே நவராத்திரி வருபவள்
கோலங்கள் மாறினாலும் உனை என்றென்றும் நான் மறவேன்
காலன் அணுகும் வேளை எந்தன் கருத்தினில் நின்றிடம்மா

குருவுமானவள் துர்க்கா குழந்தையானவள்
குலமுமானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவுமானவள் துர்க்கா திருசூலி மாயவள்
திருநீற்றில் என்னிடம் திகழும் துர்க்கையே

சித்த லக்ஷ்மி வா சிருங்கார லக்ஷ்மி வா
சிறீம் லக்ஷ்மி வா சௌம் லக்ஷ்மி வா
யோக லக்ஷ்மி வா போக லக்ஷ்மி வா
சந்தான லக்ஷ்மி வா சம்பூர்ண லக்ஷ்மி வா

ஒன்பது இராத்திரியும் உன்னை மனத்திருத்தி
ஒன்பது கிரகங்களின் அருட்பார்வையை பெற்றுநிற்க
ஆதிபராசக்தியாய் அடியர் சீரும் சிறப்புடனே
வாழ வழிகாட்டு எமை வாழ்விக்க வந்தவளே!

*********

**ஊரணியில் நீராடி** ஊர் கோலம் வருபவளே
வாஞ்சையுடன் யான் வணங்கும் வல்வை மாரியம்மா
மகமாயி எனும் மாரியாத்தா நீயம்மா - அம்மா
மகமாயி எனும் மாரியாத்தா நீயம்மா
அம்மா அம்மா அம்மா

வாரி வழங்கிய பின் நீ வாசல் வருகின்றாய் - அந்த
வைகையில் மாரி தலை முழுகி வந்த வாசலிதோ
பொய்கையில் மாரி தலை முழுகி வந்த வாசலிதோ
கோடிக்கரை விட்டு மாரி குதித்து வந்த வாசலிதோ
வாசலிதோ! முத்துமாரியம்மா! மகமாயியம்மா!

கங்கையில் மாரி தலை முழுகி கிளி மொழியாள் வருகின்றாள்
ஆயிரம் மாரி கண்ணுடையாள் அலங்காரி வருகின்றாள்
பூசை பண்ணித் தினமும் புகழும் வாசலிதோ
அம்மன் சித்திரையில் நீராடி வருகின்ற வாசலிதோ
வாசலிதோ! முத்துமாரியம்மா ! மகமாயியம்மா!

**ஸ்ரீ ஜகதீஸ்வரி** வல்வை மகமாயியே !
சித்த மிரங்கி அருள் முத்துமாரியே...

பீஜாக்ஷர நிலையே சங்கரி
பீதிநாசினி பாப மோசனி

கோடிக்கரை பெயர்ந்து ஓடத்தினில் வந்தாயே
எம்மகத்தே நீ இருக்க என்னதவம் செய்தோமோ
உன்னையும் அறியாமல் தன்னையும் உணராமல்
இருக்கின்ற எங்களது மனமாயை போக்காயோ

கர்மவினைதீர்க்க என்று கர்மயோகம் கடைப்பிடித்தாய்
வினையோ வளருதம்மா பந்தபாசம் பெருகுதம்மா
பக்தியாய் வணங்குவதால் பதநிலை தருவாயோ
உண்மையை நாம் உணர குருவாக வருவாயோ

எனைநாடி வந்தவர்க்கு நின் புகழ் செப்புகின்றேன்
உனைநாடி வருபவரை காப்பதுன் கடனம்மா
வினைதீர்க்க நின்கையில் திரிசூலம் இருக்கையிலே
துணைநீயே அருள்செய்ய தாமதம் ஏன் அம்மா

திரைகடல் ஓடியே திரவியம் தேடுகின்றார்
கடல்தனை நம்பியே கடும்தொழில் புரிகின்றார்
அலைவீசும் கடலிலே புயல்வீசும் போதிலே
தென்றலாக நீ மாறி எம்துயர் தீர்க்காயோ..

*********

**கோடிக்கரை பெயர்ந்து** அன்னையவளே - நீ
தேடி வந்து அமர்ந்த இடம் வல்வை நகரோ
நாடி வரும் அடியவர்க்கு நலமருளும் தாயே
கூடி நின்று கும்பிட்டோம் குறைதீர்க்க தாமதமேன்

உலகத்தின் உற்பத்தியின் காரணமே - இந்த
அகிலத்தின் இயக்கம் எல்லாம் நினதருளே
உறங்காமல் உறங்கி நின்றால் உண்மை நிலையை
உன் மக்கள் உணர்கின்ற நாளுமெப்போ தாயே!

பஞ்ச பூதங்களின் சேர்க்கையினால் இந்த
பூமியையும் எங்களையும் படைத்துவிட்டாய்
ஐம்புலனைத் தந்தெம்மை ஆட்டுகின்றாய் - அந்த
ஆட்டத்தின் இடையில் உன்மேல் நாட்டம் வைத்தாய் தாயே!

நாட்டத்தைத் தந்ததினால் நாடி வந்தோம் - எம்
ஆட்டத்தை அடக்கி ஆள என்று வருவாய்
அன்றுதான் வாழ்க்கை நிலை உண்மை புரியும் அம்மா
அந்த நிலை தந்தருள தாமதமேன் தாயே!
*********

**சின்னஞ்சிறு உருவில்** வல்வையில் ஆட்சி செய்ய வந்தாய்
பென்னம்பெரு உருவை சிந்தையில் காட்டும் நாள்
எப்போதம்மா

வல்வையம்பதி அமர்ந்து வற்றாத தாகத்தைத் தீர்த்தாலும்
நிலையாக நெஞ்சுக்குள்ளே நின்றாடும் நாளுக்காய்
ஏங்குகின்றேன்

ஒன்றாக இருந்ததையே இரண்டாக்கிப் பார்க்க
நீஆசைகொண்டாய்
இரண்டாகி வந்தபின்னே ஆணவம் ஏனங்கு வந்ததம்மா
தானென்று என்ற தொன்றைத் தோற்றுவிக்க இடைவெளி
தோன்றியதால்
நீயென்ற நிலை தந்து நிம்மதியை நிலைபெறச்
செய்வதெப்போ

உலகையே காண்கின்றேன் உன்னையே நினைப்பதை
மறக்கின்றேன்
காட்சியில் மயங்குகின்றேன் பின் நிற்கும் சாட்சியை
மறக்கின்றேன்
மாயையில் மயங்கியதால் எந்தன் தாயையே மறக்கின்றேன்
விளையாட்டுப் போதுமம்மா எந்தன் வினை தீர்க்க
வந்திடம்மா!
*********

**சடையாண்டி வைரவா** வடைமாலை கொண்டுமே
மடை வைக்க நான் வருவனே!
தடைநீக்கி வல்வை வாழ் மக்களின் வாழ்வினில்
நிம்மதியைத் தந்திடையா!
கிடையாத பொருளான இதயத்தை மலராக்கி
கூடவே சாற்றிடுவேன்!

மடைபோல நின் அருள் வல்வைக்கு எந்நாளும்
    தடையின்றி வர வேண்டுமே!

சந்தியில் வந்திறங்கி என் தாயைக் காணமுன்
    சந்திக்கும் தெய்வமன்றோ!
சந்தியில் நிற்பவர்கள் சிந்தித்து வந்தித்தால்
    சந்திப்பர் சித்தியன்றோ!
சந்தியில் சடையாண்டி சற்றுபின் அழக்கடவை
    வைரவரை வணங்கிய பின்னே
சக்தியாம் மகமாயி முத்துமாரித் தாயை
    வந்தித்தால் சாயுச்யமே!

*********

**நெற்கதிர் தனைக்காக்கும்** நெற்கொழு வைரவா
உந்தனைத் தொழுது நின்றேன் எந்தனையும் காத்திடையா

சூலாயுதத்தினால் அதர்மத்தை அழிப்பவனே
நல்லோர்க்கு ஞானத்தை அள்ளி அள்ளிக் கொடுப்பவனே

அம்மனுக்கு உறுதுணையாய் அருகிலே நிற்பவனே
எந்தனுக்கும் உன் துண எப்போதும் வேண்டுமையா
உன்னைச் சுற்றி இருக்கின்ற வயல்களைக் காணும் போது
உன் கருணை தெரியுதையா நெற்கதிர்கள் கொழுக்குதையா

நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழி ஓடி
புல்லுக்கும் ஆங்கே பொசிகின்ற தன்மை போல்
நல்லவரைக் காக்கும் உன் வல்ல அருட் பார்வையால்
என்னையும் பார்த்துவிட்டால் அது ஒன்றே போதுமையா!

*********

**வேண்டுகின்றேன்!** ஆடுகின்றாய்!
வேண்டுவதை நீ தருவதெப்போ?

நான் மட்டும் வாழ என்று நான் கேட்க வரவில்லை
நலிவுறும் எம் இனம் விடிவெள்ளி காண்பதெப்போ
அகதியாய் அனாதையாய் எங்கெங்கோ வாழ்கின்றார்
சொந்த பந்தம் ஒன்றுகூடி விழாக்கோலம் காண்பதெப்போ

அகதி நிலைமாறி இனி எம்மகத்தில் நாம் வாழும்
நிலை தந்தால் போதும் தாயே! சுற்றங்கள் சூழ்ந்து வரும்
தன்மந்த நிலை மாறி உன் ஆட்சி நிலைக்கவேண்டும்
ஊரெல்லாம் கூடி உனக்கு எந்நாளும் திருவிழாவே!

*********

**ஆயி மகமாயி** ஆடுகின்றாள்
சித்திரத் தேர் மேலே சிங்காரமாய் அமர்ந்து . . .

அண்டசராசரங்கள் அனைத்திலும் சிலம்பொலிக்க
அகிலாண்டேஸ்வரி அருளுகின்றாள் வல்வையில் . . .

துணையென வருவாள் தோணியிலும் வருவாள்
கிழவிபோல் வேடம் பூண்டு வல்வையம்பதி வந்தாள்
வந்தவளோ வல்வையில் விந்தைகள் பல புரிந்து
துதிப்பவர் மனங்களில் ஆடுகின்றாள்

கனககுண்டலம் தன்னில் கனிந்த சிவப்பொருளை
கலந்து பேரின்பம் காட்டும் கனல் வடிவானவளாம்
நான் அற்ற நல்லோர்க்கெல்லாம் நான் இதோ என்று
தோன்றும்
ஞானப் பரமேஸ்வரி ஆடுகின்றாள் அகநித
தாரா கணங்களின் நடுவே!
*********

**சித்தார்த்தி வருடத்து** சித்திரை மாதத்தில்
சித்திரத் தேரேற சித்தம் இரங்கி வந்தாய்!

எட்டே மாதத்தில் எண் திசையும் போற்ற
எப்படித்தான் கட்டினரோ எல்லாம் உன் செயலம்மா!

ஏழு படி கட்டி ஏழேழு உலகமென்றார்
வாழும் மனிதரின் ஏழு நிலை என்றார்
அத்தனைக்கும் மேலே நீ ஒய்யாரமாய் ஊஞ்சலிலே
அமர்ந்த காட்சி காண ஆயிரம் கண் வேண்டாமோ

முன்னூறு ஆண்டுகளாக முன்வினை தீர்க்க என்று
எம்மோடு வாழ்கின்றாய் எங்கள் முத்து மாரியம்மா
பிறவிப் பயன் பெற்றோம் வல்வை ஓர் தில்லையம்மா
பிறவா வரம் அருளத் தாமதம் ஏன் தாயே!

**வல்வை மீனாட்சியம்மன்**

**வைகைக் கரையினிலே** வாழ்பவளே மீனாட்சி
வல்வைக் கரையினுக்கும் வந்திருப்பதேன் அம்மா
தொல்லை தீர்த்தருள திருவுள்ளம் கொண்டாயோ
வல்லமை தந்தெமக்கு வாழ்வளிக்க நோக்கமோ

அன்னையவள் அன்பைப்போல் அவனியில் வேறுண்டோ
என்னையும் உன் மகனாய் ஏற்றிடம்மா மீனாட்சி
கடம்ப வனத்தவளே காருண்ய நாயகியே
சோம சுந்தரரின் சுந்தர நாயகியே . . .

சோம சுந்தரரை லிங்கமாய் பூஜித்து
இந்திரன் இன்பம் கண்டான் அன்றொரு காலத்தில்
கடம்ப வனமாக திகழ்ந்த ஊரின் சிறப்பை
பாண்டிய மன்னன் குலசேகரன் கேட்டறிந்தான்

மாநகரம் ஒன்றமைக்க மாமன்னன் வழிசெய்ய
சிவலோக நாயகனோ அமிர்தத்தை தெளித்தானாம்
ஆகையினால் இந்நகரம் மதுரை என்று பெயர் பெறவே
இன்சுவை அள்ளித்தர அன்னை நீ வந்தாயோ

மதுரையில் உன் திருக் கல்யாணக் கோலம் கண்டால்
மாயைப் பிணி அழிய தானாக வழி வருமே
அற்புதங்கள் பல செய்து ஆட்சி நீபுரிந்த விதம்
கேட்டு உணர்வதற்கு ஓர் பிறவி போதாதே

உன் கருணை வெள்ளத்தில் ஊறித் திளைத்தவர்கள்
உந்தனுக்கோர் கோவிலை வல்வையில் உருவாக்க
மதுரை வீரனோடு மகிழ்வுடன் நீ வந்து
அருளை அள்ளித்தரும் அன்னையே மீனாட்சி

இத்தனை சக்தி கொண்ட என் தாயே மீனாட்சி
கிளிதனை விரும்பியவா கிளியனைக் காத்திடவா
மீனாட்சி நீ சாட்சி நானென்றது போயாச்சு
இப்பிறப்பில் என்றும் உன் பக்கத்தில் வைத்திடம்மா!

**ஸ்ரீ லக்ஷ்மி**

அன்ன லக்ஷ்மி வா ஆனந்த லக்ஷ்மி வா
அம்ருத கலசி வா பவஸ்ரீ லக்ஷ்மி வா

பாற்கடல் மீதினிலே ஆதிசேஷன் மடியினிலே
பள்ளி கொள்ளும் அந்தப் பரந்தாமனின் நெஞ்சினிலே
வீற்றிருந்தாலும் என்றும் தாயே நீ எம்மை மறப்பதில்லை
நலமெல்லாம் தந்தருளும் நவராத்திரி நாயகியே

அலைகடல் உதித்தவளே அமரர்கள் துதிபாடும் அமுதமம்மா
விலையில்லா மாணிக்கமே வேதாந்த மந்த்ர சொரூபிணியே
பாற்கடல் கடைந்தபோது மீண்டும் நீ தோன்றியும்
இணைந்தாயே
பார்காக்க வந்தவளே அஷ்டமா சித்திகள் தந்தருள்வாய்

பார்காக்க வந்தவனின் சக்தியாகி பக்கத்தில் அமர்ந்தவளே
கடைக் கண்ணின் பார்வை ஒன்றால் ஏழையைச்
செல்வத்தின் உச்சியிலே
வைக்கவல்ல அந்த வைகுண்ட வாசனின் மனையாளே
கைக்கெட்ட வைத்ததெல்லாம் வாய்க்கு எட்டினால்
போதுமம்மா!

**ஸ்ரீ முத்துமாரி தீபஆராத்தி**

ஞான சக்தியாய் ஞானாம்பிகையாய்
ஞாலம் உய்ய வந்தவள் சரணம்
கோடிக்கரை விட்டு வல்வைக்கு வந்தெம்
வாழ்வு வளம் பெறச் செய்தவள் சரணம்!

மாறிவந்த மாரியாத்தா உந்தன்
மக்கள் குறை தீர்ப்பாய் சரணம்
ஆயி மகமாயியான ஆதிபரமேஸ்வரி சரணம்!
கூறுமடியார் குறைகள் தீர்ப்பவளே சரணம் சரணம்
நாடுவிட்டு வாழ்பவர் மனதில் வாழ்பவளே சரணம் சரணம்!

ஓம் என்றொலிக்கும் மணியோசை
உள்ளே எம்மை அழைத்துச் செல்ல
வா என்றழைக்கும் தாயாகி வாசலிலே நிற்பாயே
வாசலிதோப் பாடலை நாம் வாயாரப் பாடி நிற்க
காவலாய் எம் வாழ்வின் எல்லைவரை நிற்பாயே!
மனதில் தோன்றும் எண்ணங்களை மலர்களாக்கி சூட்டியபின்
தூபதீபம் ஏற்றியுமே தோத்திரங்கள் பாடிடுவோம்
பாடப்பாட பாபி எந்தன் பழவினைகள் தீர்ந்தபின்னே

ஜோதியிலே உன்னுரு காட்டும் கற்பூரமாய் ஆக்கிவடு
அம்மா . . .எமைக் கற்பூரமாய் ஆக்கிவிடு . . . . . .

**ஸ்ரீ முத்துமாரி ஊஞ்சல்**

பாக்குநீரிணையினிலே பாய்ந்து வரும் அலை நடுவே
நோக்கெமக்கு நலமருள வல்வை நகர் வந்தவளே
கோடிக்கரை குடிபெயர்ந்த சமயபுரத் தாயவளே
கோடி செல்வம் எமக்கருள ஓடத்தினில் வந்தாயே!
நாடிவரும் அடியருக்கு தேடி வந்து அருள் புரிய
தாயன்பைத் தந்தருளும் முத்துமாரி தயாபரி!
வெள்ளையுடை தானணிந்து வெண்மணலில் தான் நடந்து
கிழவிபோல் வேடம்பூண்டு குழவிகளைக் காத்தருள
கோவில்கொள்ள ஓரிடத்தைக் குறியாக்கிப் பின்னாலே
மறைந்ததன் மர்மமென்ன மறைகளின் உறைவிடமே!
வேதங்கள் பீடமாக இருவினையும் கயிறாக
நாதங்கள் கைகளாக நாமுன்னை ஆட்டிடவே
ஊஞ்சலுக்கு வந்திடம்மா வாஞ்சையுடன் அழைக்கின்றோம்
வந்தமர்ந்து எம்வாழ்வை வளமாக்கித் தந்திடம்மா!
உள்ளமென்னும் கோவிலிலே உணர்வென்னும் ஊஞ்சலிலே
மெள்ளமெள்ள ஆடிடுவாய் மேன்மையெல்லாம்
நிறைந்தவளே!
துள்ளிவரும் எழில் உருவே தொடர்ந்துவரும் நல்லிசையே
அள்ள அள்ளக் குறையாத ஆனந்தமே வந்திடுவாய்!
ஐந்துபெரும் தொழில் வல்ல ஆதிசக்தி உமையவளே
நெய்வேத்யம் காட்டிடுவோம் நாமுமக்கு அடிமையம்மா!
கற்ப கோடிக்காலமெல்லாம் கருணைவெள்ளம் ஆனவளே
சொற்பூவால் அர்ச்சனைகள் தோத்திரங்கள் பாடிடுவோம்!
பற்பலவாய் எண்ணமிடும் பாவி மனச் சிந்தனையை
கற்பூரமும் ஆக்கிடுவோம் கர்வமதில் எரிந்திடுமே!
அம்மா .......அம்மா .......அம்மா .......

**மங்களம்**

தாழ்வில்லாத தன்மையும் தளர்ச்சியற்ற வன்மையும்
வாழ்வினால் பலன்களும் என் வாக்கிலே வரங்களும்
பக்தியிற் கசிந்தலைந்து பாடுகின்ற பான்மையும்
பாடுவோர்க்கனேக யோக பாக்கியங்கள் மேன்மையும்

என்றும் ஓங்க என் கரத்தினியற்கையான சித்தியைத்
தந்து ஞானமூர்த்தியாய்த் தனித்து வைத்த சக்தியாம்
அன்னை அன்னை அன்னை அன்னை அன்பினுக்கு
மங்களம்
ஆதி சக்தி அம்பிகைக் கனந்த கோடி மங்களம்
என்னுள்ளே விளங்கும் எங்கள் முத்துமாரி மங்களம்
இச்சையாவும் முற்றுவக்கும் சிற்சிவைக்கு மங்களம்
சற்குரு ஜெய சற்குரு ஜெய சற்குரு ஜெய மங்களம்
சற்குரு ஸ்ரீ ஞானானந்த சாமி ஐயா மங்களம்
சங்கராய சங்கராய சங்கராய மங்களம்
சங்கரி மனோகராய சாஸ்வதாய மங்களம்
கஜானனாய மங்களம் ஷண்முகாய மங்களம்
ஸ்ரீ வித்யாயை மங்களம் ஸ்ரீ முத்துமாரி மங்களம்
ரகுவராய மங்களம் வேணு கிருஷ்ணாய மங்களம்
சீதாராம மங்களம் வைரவாய மங்களம்
***
வாழ்க சுயம்பிரகாசம் வாழ்க வாழ்கவே
சூழ்க சுத்தாத்ம சக்தி சூழ்க சூழ்கவே
ஏழுலோகம் ஜீவன் முக்தி இன்பம் பொங்கவே
இதயமாகும் இறைவனாகி எல்லாம் ஓங்கவே
பாழ்மன அகந்தை வாழ்வு பாழ்பட்டொழியவே
பரம சச்சிதானந்தாத்ம பால் பொழிகவே
தட்டில்லாத நித்ய ஜீவ தத்வ மோங்கவே
தன்மயத்தில் சின்மயம் தழைத்திலங்கவே
எட்டுத் திக்கும் ஹம்ச சோகம் எதிரொலிக்கவே
எல்லாம் பிரம்மம் என்ற உண்மை இறைவகிக்கவே
***

எல்லோரும் நன்றாயிருக்க வேண்டும் - இதற்கு
ஈசன் கணேசன் அருளல் வேண்டும்
எல்லோரும் ஒன்றாயிருக்க வேண்டும் - இதற்கும்
ஈசன் கணேசன் அருளல் வேண்டும்

**பாடல் அட்டவணை**


பூவரச மரத்தடியில் .....
புண்ணியனார் சமாதி மேல் .......





**இணைப்புகள் - பாடல் அட்டவணை**

இடையனாய் வந்து கதிர்காமரை
இரட்சித்த முகமொன்று!
கதிர்காமம் தன்னில் பூசை முறைகாட்ட
அழைத்த முக மொன்று!
கதிரமலைக் கொடியேற்றம் காணச்
சென்ற முகமொன்று!
களைத்துத் துவையல் உண்ண
ஓடி வந்த முகமொன்று!
அடியவர்க்கு அன்ன தானம்
அளிக்கும் முகமொன்று!
புண்ணியனார் சமாதி கண்ட பூவரச மரத்தருகே
கோயில் கொண்டு வீற்றிருக்க வந்த முகமொன்று!
ஆறுமுகமாகி ஏறு மயிலேறி வள்ளி
தெய்வானை மங்கையுடன் வேலாகி நிற்க
அடியவரும் தேவர்களும் அகமகிழ்ந்துறவாடும்
செல்வச் சந்நிதிவாழ் வேலவா சரணம்!



**வேலன் அடிமை சிவ. ஆறுமுகம் அவர்களால் தொகுக்கப்பட்ட இம்மலர் அவரின் விருப்பப்படி அவர் வேலவன் பாதமடைந்த ஓராண்டு நினைவு நாளில் வெளியிடப்படுகின்றது. - (சித்திரை 2014)**

S.P.M பிறின்ரேர்ஸ், வி.எம்.றோட், பருத்தித்துறை. T.P.NO: 0774966997, 0212260055